உ

கணபதி துணை

எட்டுத்தொகையுள் நான்காவதாகிய

# பதிற்றுப்பத்து மூலமும் பழைய உரையும்

இவை

மகாமகோபாத்தியாய

**டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்கள்**

பரிசோதித்து எழுதிய குறிப்புக்களுடன்

அவர்கள் குமாரர்

**S. கலியாணசுந்தரையரால்**

சென்னை

கபீர் அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பெற்றன



நான்காம் பதிப்பு

தாரண ௵ மார்கழிமீ

 1945 [ விலை ரூ. 6-0-0

# இப்புத்தகத்தில் அடங்கியவை

# இப்பதிப்பில் எடுத்துக்காட்டிய நூற்பெயர்கள் முதலியவற்றின் முதற்குறிப்பகராதி

அகநா - அகநானூறு
அடிக் - அடிக்குறிப்பு
அடியார் - அடியார்க்குநல்லார்
அரும்பத - அரும்பதவுரை
இராசராச - இராசராச சோழ [னுலா
இ.வி-இலக்கணவிளக்கம்
இளம் - இளம்பூரணம்
இறை - இறையனுரகப்பொருள்
இனியவை - இனியவை நாற்பது
ஐங், ஐங்குறு - ஐங்குறுநூறு
ஒப்பு, ஒப்புமைப் - ஒப்புமைப் [பகுதி
கடவுள் - கடவுள் வாழ்த்து
கம்ப - கம்பராமாயணம்
கலி - கலித்தொகை
களவழி - களவழி நாற்பது
கிளவி - கிளவியாக்கம்
குற்ருலப் - திருக்குற்ருலப்புரா [ணம்
குறிஞ்சிப் - குறிஞ்சிப் பாட்டு
குறிப், கு - ரை - குறிப்புரை
குறுந் - குறுந்தொகை
சிலப் - சிலப்பதிகாரம்
சிற் - திருச்சிற்றம்பலக்கோவை [யார்
சிறுபாண் - சிறுபாணுற்றுப் [படை
சீவக - சீவகசிந்தாமணி
சுந்தர - சுந்தரமூர்த்தி நாயனுர்
தக்க - தக்கயாகப் பரணி
தண்டி - தண்டியலங்காரம்
தனிப் - தனிப்பாடற்றிரட்டு
திணை மொழி - திணைமொழி [ஐம்பது
திருவா - திருவாசகம்
தெய்வச்-தெய்வச் சிலையாருரை
தே - தேவாரம்
தொல் - தொல்காப்பியம்
ந - நச்சினுர்க்கினியம், நச்சினுர்க் [கினியர்
நற் - நற்றிணை
நெடுநல் - நெடுநல் வாடை
பட், பட்டினப் - பட்டினப்பாலை
பதி - பதிகம்
பதிற் - பதிற்றுப்பத்து
பரி - பரிபாடல்
பரிமேல் - பரிமேலழகருரை
ப - ரை - பழையவுரை
பழ - பழமொழி
பி - ம் - பிரதி பேதம்
பு - வெ - புறப்பொருள் வெண் [பாமாலை
புறநா - புறநானூறு
பெருங் - பெருங்கதை
பெரும்பாண் - பெரும்பாணுற் [றுப் படை
பேர் - பேராசிரியருரை
பொருந - பொருநராற்றுப் [படை
மணி - மணிமேகலை
மதுரைக் - மதுரைக்காஞ்சி
மலைபடு - மலைபடுகடாம்
மு - முற்றும்
முத் - முத்தொள்ளாயிரம்
முருகு - திருமுருகாற்றுப்படை
முல்லை, முல்லைப்-முல்லைப்பாட்டு
மேற் - மேற்கோள்
யா. வி - யாப்பருங்கல விருத்தி
விசேட - விசேடவுரை
வி. பா - வில்லிபுத்தூ ராழ்வார் [பாரதம்

# நான்காம் பதிப்பின் முகவுரை

---

தேவாரம்

திருச்சிற்றம்பலம்

"இழைக்கும் மெழுத்துக் குயிரே யொத்தியா
விலையே யொத்தியா லூளயே யொத்தியாற்
குழைக்கும் பயிர்க்கோர் புயலே யொத்தியா
லடியார் தமக்கோர் குடியே யொத்தியால்
மழைக்கு நிகரொப் பனவன் றிரைகள்
வலித்தெற்றிமுழங்கிவலம் புரிகொண்
டழைக்குங் கடலங் கரைமேன் மகோதை
யணியார் பொழிலஞ் சைக்களத் தப்பனே."

எட்டுத் தொகையுள் நான்காவதாகிய **பதிற்றுப்பத்து** என்னு மிந்நூலின் மூன்றும் பதிப்பை என் தந்தையாரவர்கள் 1941-ஆம் ஆண்டில் வெளியிட்டர்கள்.

சில அன்பர்கள் விரும்பியபடி இப்பதிப்பில் மூலம், பழைய வுரை, விசேஷக் குறிப்பு, மேற்கோளாட்சி, ஒப்புமைப் பகுதி என்பவை அடங்கிய குறிப்புரை, பிரதிபேதம் என்பன ஒன்றன் பின் ஒன்ருக அமைந்துள்ளன. இந்நூல் சம்பந்தமான விரிவான செய்திகளை மூன்றும் பதிப்பு முகவுரையிற் காணலாம்.

இப்பதிப்பு அச்சாகி வருகையில் ஒப்பு நோக்குதற்கு உதவி புரிந்த திருவல்லிக்கேணி தேசீயக் கலாசாலைத் தமிழாசிரியர் களான வித்துவான் ஸ்ரீ அ. **வைத்தியநாதையருக்கும்**, ஸ்ரீ T. K. **சுப்பிரமணிய ஐயருக்கும்** மிக்க நன்றி பாராட்டுகிறேன்.

'தியாகராஜ விலாசம்'
திருவேட்டீசுவரன்பேட்டை,
சென்னை, 10-1-45.

இங்ஙனம்,
S. கலியாணசுந்தரையர்.

உ

கணபதி துணை

# மூன்றும் பதிப்பின் முகவுரை

" சந்தனப் பொதியிற் றடவரைச் செந்தமிழ்ப்
பரமா சாரியன் பதங்கள்
சிரமேற் கொள்ளுதுந் திகழ்தரற் பொருட்டே."

தமிழில் இப்பொழுது கிடைக்கும் இலக்கிய நூல்களுள்ளே மிகப் பழையன எட்டுத் தொகை நூல்கள். கடைச்சங்கமருவிய நூல்களை, 'பாட்டு', 'தொகை', 'கீழ்க்கணக்கு' என்று மூன்று தொகுதிகளாக வகுத்துரைப்பர் உரையாசிரியர்கள். அவற்றுள் நடுநாயகமான எட்டுத்தொகை நூல்களின் பெயர்களை,

" நற்றிணை நல்ல குறுந்தொகை யைங்குறுநூ
றொத்த பதிற்றுப்பத் தோங்கு பரிபாடல்
கற்றறிந்தா ரேத்துங் கலியோ டகம்புறமென்
றித்திறத்த வெட்டுத் தொகை "

என்னும் பழைய வெண்பாவால் அறியலாம். அந்த நூல்வரிசையிலே நான்காவதாக உள்ளது பதிற்றுப்பத்து என்னும் இத்தொகை நூல்.

பத்துப்பத்து அகவற்பாக்களுள்ள பத்துப்பகுதிகள் சேர்ந்து அமைந்தமையின் பதிற்றுப்பத்து என்னும் பெயர் இதற்கு வந்தது. 'பதிற்றுப்பத்தென்பது இற்றுச்சாரியை வந்தது' (எழுத்து. 22, உரை) என்று இத்தொடருக்கு இலக்கணம் கூறுவர் நேமிநாத உரையாசிரியர். ஆசிரியப்பாவினால் புறப்பொருள் பற்றிய செய்யுட்கள் நூறு அமைந்தனவாயினும் ஒவ்வொரு பத்தும் தனித்தனியே ஒவ்வொரு புலவராற் பாடப் பெற்று ஒவ்வொரு சேர அரசரைப் பாராட்டுவதனால் இந்நூல் பத்து வேறு பகுதியாகியது. வெவ்வேறாகிய பத்துவகை யாப்பினால் அமைந்த ஒருவகை அந்தாதியைப் பதிற்றுப்பத்தந்தாதி யென்று வழங்கும் பிற்கால வழக்கு இங்கே நினைத்தற்குரியது. இந்நூலைத் தொகுத்தோரும் தொகுப்பித்தோரும் இன்னார் இன்னாரென்பது இப்போது விளங்கவில்லை.

மற்றத் தொகை நூல்களுள் புறநானூற்றைப் போல இது புறத்துறையமைதியையும் துறைக்குறிப்பையும் உடையது. ஆயினும் இதற்கென்று தனியே அமைந்த இயல்புகள் சில. அவை வருமாறு :—

(1) இந்நூல் முழுவதும் சேர அரசர்களைப் பாராட்டுவது. அவ்வரசர்களிற் சிலரைப் பற்றிய செய்யுட்களும் செய்திகளும் வேறு தொகை நூல்களில் வரினும் குறிப்பிட்ட ஓர் அரசரைக் குறித்துத் தொடர்ச்சியாகப் பத்துச் செய்யுட்கள் இதிலேதான் காணப்படுகின்றன.

(2) இவற்றைப்பாடிய புலவர்கள் பதின்மர்; ஐங்குறு நூற்றில் ஐந்து புலவர்கள் தனித்தனியே ஒவ்வொரு திணைபற்றி நூறு நூறு செய்யுட்களைப் பாடியது போல இதில் ஒவ்வொரு சேரரையும் பற்றிப் பப்பத்துப் பாடல்களைப் பதின்மர் பாடியுள்ளனர்.

(3) ஒவ்வொரு பாட்டின் இறுதியிலும் துறை, வண்ணம், தூக்கு, பெயர் என்பவற்றைப் புலப்படுத்தும் குறிப்புக்கள் அமைந்துள்ளன. துறையின் பெயர் பிறநூல்களிலும் இருப்பினும் மற்றவை பிற தொகை நூல்களிற் காணப்படவில்லை.

(4) ஒவ்வொரு பாட்டிலும் பொருளாற் சிறப்புடைய தொடர் ஒன்றே அவ்வப்பாட்டின் பெயராக இருக்கிறது. பத்துப்பாட்டுள் ஒன்றாகிய மலைபடுகடாம் என்னும் பெயர் இங்ஙனமே வந்தமை காண்க.

(5) இதில் உள்ள நாலாம் பத்துச் செய்யுட்கள் அந்தாதியாக உள்ளன.

(6) ஒவ்வொரு பத்தின் இறுதியிலும் அப்பத்தின் பாட்டுடைத் தலைவனுடைய பெயரும் செயல்களும் அவனைப் பாடினார் பெயரும் பத்துச் செய்யுட்களின் பெயர்களும் பாடிய புலவர் பெற்ற பரிசிலும் சேர அரசர் ஆண்ட கால அளவும் ஒவ்வொரு பதிகத்தாலும் தெரிகின்றன. அப்பதிகங்கள் ஆசிரியப் பாவாகத் தொடங்கிக் கட்டுரை நடையாக முடிகின்றன. சாஸனங்களிற் காணப்படும் மெய்க்கீர்த்திகளைப் போன்றனவாக அவற்றைக் கொள்ளவேண்டும்.

கிடைத்த இந்நூற் கையெழுத்துப் பிரதி ஒன்றிலேனும் கடவுள் வாழ்த்தும் முதற்பத்தும் பத்தாம்பத்தும் அவற்றின் உரையும் காணப்படவில்லை. காணப்பட்ட எட்டுப்பத்துக்களுள் **இரண்டாம்பத்து** இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனைக் குமட்டூர்க் கண்ணனாரும், **மூன்றாம்பத்து** இமயவரம்பன் தம்பி பல்யானைச் செல்கெழுகுட்டுவனைப் பாலைக்கௌதமனாரும், **நாலாம்பத்து** களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரலைக் காப்பியாற்றுக் காப்பியனாரும், **ஐந்தாம்பத்து** கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவனைப் பரணரும், **ஆறாம்பத்து** ஆடுகோட்பாட்டுச் சேரலாதனைக் காக்கைபாடினியார் நச்செள்ளையாரும், **ஏழாம்பத்து** செல்வக்கடுங்கோ வாழியாதனைக் கபிலரும், **எட்டாம்பத்து** தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும்பொறையை அரிசில்கிழாரும், **ஒன்பதாம்பத்து** குடக்கோ இளஞ்சேரலிரும்பொறையைப் பெருங்குன்றூர் கிழாரும் பாடியவை.

முதற் பத்தையோ பத்தாம் பத்தையோ சார்ந்த இந்நூற் பாடல்களிற் சில தொல்காப்பிய உரைகளாலும் புறத்திரட்டாலும் தெரியவந்தன. அவற்றை *இம்முகவுரைக்குப் பின்னே காணலாம்.

இந்நூலின் உரை பழமையானதென்றே தோற்றுகின்றது. உரையாசிரியர் இன்னுரென்றோ இன்னகாலத்தவரென்றோ தெரிந்து கொள்ள இயலவில்லை. 76-ஆம் பாட்டின் உரையில், 'சின்மையைச் சின்னூலென்றது போல ஈண்டுச் சிறுமையாகக் கொள்க' என்று இவர் எழுதியுள்ளார். சின்னூலென்பது குணவீரபண்டிதரால் இயற்றப் பெற்ற நேமிநாதத்துக்குப் பெயராக வழங்குகின்றது. அதனால் இவருடைய காலம் குணவீர பண்டிதர் காலத்திற்குப் பிற்பட்டதென்று நினைக்க இடமுண்டு. இவர் திருக்குறளையும் புறநானூற்றையும் மதுரைக் காஞ்சியையும் மேற்கோளாகக் காட்டுகிறார். இவ்வுரை சுருக்கமாக அமைந்துள் ளது. அங்கங்கே பொருளை முடித்துக்காட்டும் இயல்புடையவர் இவ்வுரையாசிரியர். செய்யுளுக்குப் பெயரமைந்ததற்குக் காரண மான நயத்தையும் தூக்கு, வண்ணம், துறை இவற்றின் பொருத் தங்களையும் இவர் எடுத்துக் காட்டுகிறார். ஒவ்வொரு பாட்டின் இறுதியிலும், 'இதனால் இன்னது பெறப்பட்டது' என்று செய்யு ளின் கருத்தை எடுத்துச் சொல்லுகிறார். இவர் சில விடங்களில் எழுதும் இலக்கணக் குறிப்புக்கள் பிற உரையாசிரியர்கள் எடுத் துக் காட்டாதன. இந்த உரையைக்கொண்டு பாட்டின் பொருளை ஒருவாறு அறிந்து கொள்ளலாம். புறநானூற்று உரையைப் போலப் பதவுரையாக அமையாமையின் தமிழ்மாணுக்கர்களுக்கு இந்த உரை மாத்திரம் போதியதன்று. இது பதவுரையைப் போன்று விரிவாகவும் குறிப்புரையைப் போன்று சுருக்கமாகவும் இன்றி இடைப்பட்டதாக உள்ளது. ஒவ்வொரு செய்யுட்கும் பின்னே உரை எழுதும் இயல்புடைய இவர் பதிகங்களுக்கு மாத் திரம் முன்னே குறிப்புரை எழுதுகின்றார். சரித்திரச் செய்திகள் நிரம்பிய பதிகங்களுக்கு விளக்கமான உரை எழுதாமையால் அச்செய்திகளைத் தெளிவாக உணரும் வாய்ப்பு இவருக்குக் கிடைத்திலதென்று தோற்றுகின்றது.

ஒவ்வொரு செய்யுளின் பின்னும் அமைந்துள்ள துறை, வண்ணம், தூக்கு, பெயரென்பன உரையில்லாத மூலப்பிரதிகளி லெல்லாம் இருத்தலின், அவை உரையாசிரியரால் எழுதப்பட்டன வல்ல வென்பதும், நூலாசிரியர்களாலோ தொகுத்தாராலோ எழு தப்பட்டன வென்பதும், பதிகங்கள் உரைப்பிரதிகளில் மாத்திரம் காணப்படுதலின் அவற்றை இயற்றினோர் நூலாசிரியரோ தொகுத் தோரோ அல்லரென்பதும் தெரிகின்றன. ஆயினும் பதிகங்களில் உள்ள சரித்திரச் செய்திகளையும் பாடிப் பெற்ற பரிசிலைப்பற்றிய குறிப்பையும் நோக்கும்போது இவற்றை இயற்றினோர் சேர அரசர்களுடைய வரலாற்றையும் பாடினோரைப் பற்றிய

* அவை இப்பதிப்பில் 247, 248-ஆம் பக்கங்களில் உள்ளன.

செய்திகளையும் நன்கறிந்தவரென்று புலப்படுகின்றது. இப் பதிகங்கள் ஆசிரியர் நச்சினார்க்கினியராலும் அடியார்க்கு நல்லாராலும் தத்தம் உரைகளில் எடுத்தாளப் பெறுகின்றன.

இந்நூலில் வந்துள்ள துறைகள் முதலியன வருமாறு :—

துறைகள் :—இயன்மொழி வாழ்த்து, உழிஞையரவம், ஒள் வாளமலை, களவழி, காட்சி வாழ்த்து, காவன் முல்லை, குரவைநிலை, செந்துறைப்பாடாண்பாட்டு, தும்பையரவம், நாடு வாழ்த்து, பரிசிற்றுறைப் பாடாண்பாட்டு, பாணாற்றுப்படை, பெருஞ் சோற்று நிலை, முல்லை, வஞ்சித்துறைப்பாடாண் பாட்டு, வாகை, வாகைத்துறைப்பாடாண்பாட்டு, விறலியாற்றுப்படை.

வண்ணங்கள் :—ஒழுகு வண்ணம், ஒழுகு வண்ணமும் சொற் சீர் வண்ணமும்.

தூக்குக்கள் :—செந்தூக்கு, செந்தூக்கும் வஞ்சித் தூக்கும்.

சங்கமருவிய நூல்களால் பண்டைக்காலத்திலிருந்த மக்களின் வாழ்க்கைநிலையும் கொள்கைகளும் வெளிப்படுகின்றன; அவற்றுள் புறத்துறை பற்றிய செய்யுட்களிலிருந்து பல சரித்திரச் செய்திகள் புலனாகின்றன. பதிற்றுப்பத்திலிருந்து பெறப்படும் சரித்திரச் செய்திகளும் அக்காலத்தில் இருந்த மக்களின் வாழ்க்கை நிலை அரசியல் முதலியவற்றைப் பற்றிய செய்திகளும் மிகப்பல. எல்லாவற்றிலும் சிறப்பாக அறியப்படுவன அரசியற் செய்திகளே. அரசரது ஆட்சிமுறையும், கொடைச் சிறப்பும் வீர மிகுதியும் பெரும்பாலும் ஒவ்வொரு பாட்டிலும் சொல்லப் பட்டுள்ளன.

அறிவும் வீரமும் பொருந்திய அரசன் உயர்ந்த உள்ளமும், கலைஞர்களையும் வித்துவான்களையும் பாதுகாக்கும் இயல்பும் உடையவனாக இருந்தான்; முன்னோர்கள் சென்ற நெறியில் நடந்து குடிகள் நன்மைபெற்று வாழும்பொருட்டு வாழ்ந்தான்; புலவர்களும் பெரியோர்களும் பாராட்டும் வண்ணம் குடிகளைப் பாதுகாத்து வந்தான். பஞ்சகாலத்திலும் பசியும் பிணியுமின்றி ஒருநாடு வாழ்வதற்கு அந்நாட்டு அரசனது செங்கோலே காரண மென்பது அக்காலத்தினர் கொள்கை. ஆதலின் கிரகநிலைகளால் உலகம்முழுவதும் பருவமாறித் துன்புற்றாலும் தன் நாட்டில் பொருள் நிறைந்திருப்பதால் குடிமக்கள் துன்புறாமலிருப்பது சாத்தியமாகும்படி அரசன் செய்தான்.

அவனுக்கு நல்ல அமைச்சர்களும் சான்றோர்களும் அர சாட்சியில் உதவி புரிந்தனர். புலவர்கள் அவன் புகழைப் பரப் பினர். வீரர்கள் அவனுக்கு வெற்றி தேடித் தந்தனர். பாண ரும், பொருநரும், விறலியரும் அவனது அவையை அலங்கரித்து இசையும் கூத்தும் விளங்கச் செய்தனர். அவன் பாணருக்குப் பொற்றாமரையும் களிறும் பாய்மாவும் கொடுத்தான்; விறலிய ருக்கு அணியிழையும் பிடியும் வழங்கினான்; புலவருக்கு நாடும் நாட்டு வருவாயும் காணமும் அளித்தான். அவன் எதை நினைத்

தானே அதனையே அவனைச் சேர்ந்த உறுதிச் சுற்றத்தார் செய்தனர்.

அரசியல் வாழ்க்கையைச் சிறப்பித்தற்குரிய கருவிகளெல்லாம் அவனுக்கு இருந்தன. அவனது இல்வாழ்க்கையும் அவனுடைய தேவியின் அழகினாலும் கற்பினாலும் பிற சிறப்புக்களாலும் விளங்கியது. அவன் நற்புதல்வர்களைப் பயந்து பிதிரர் கடனை நிறைவேற்றினான்; விருந்தோம்பி இன்புற்றான்; கடவுளை வணங்கி உயர்ந்தான்; அந்தணருக்கும் சான்றோருக்கும் அடங்கித் தலைமை பெற்றான்.

இவ்வளவு சிறந்த இனிய குணங்களும் சிறப்புக்களும் படைத்த அரசன் பகைவர்திறத்தில் மிக்க கொடுமை உள்ளவனாஜன். தன் கீழ் அடங்கி நில்லாத அரசரைக் கருவறுக்கும் விஷயத்தில் சிறிதும் கண்ணோட்டமில்லாதவன்; பகைவர் அரணங்களை அழித்தும், காவல் மரத்தை வெட்டி முரசு செய்தும், அவர்கள் நாட்டைப் பாழ்படுத்தியும், பகை வீரர்களைச் சிறை செய்தும், அவர் மனைவியரைப் பிணித்துக் கொணர்ந்தும், அப் பகைவர் தலையில் எண்ணெயிட்டுக் கையைப் பின்னே கட்டி நிறுத்தியும் பல வேறு வகையில் தன் சினத்தை வெளிப்படுத்தினான்.

பகைவர் நாடுகளின் பழைய நிலையையும் பாழ்பட்ட பின்னர் அவை இருந்த நிலையையும் விரிவாக எடுத்துரைக்கும் செய்யுட்கள் பல இந்நூலில் உள்ளன. அன்பும், அருளும், கல்வியும், மெய்ஞ்ஞானமும், நல்லொழுக்கமும் ஒருங்கே அமைந்து குடி மக்களால் தெய்வமாக எண்ணப்படும் ஓரரசன் பகைவரைப் பொரும் விஷயத்தில் காலனையேபோன்று கடுஞ்சினத்தோடு சென்று போரிட்டு அவர் வாழ்வையும் நாட்டையும் நாட்டு மக்களையும் சிதைத்துக் குலைத்து வெற்றிபெற்று அந்த வெற்றிக் களிப்பினால் தான் பெற்ற பொருளையெல்லாம் யாவருக்கும் வாரி வீசி மகிழ்கிறான். அரசியலில் குடிமக்களைப் பாதுகாக்கும் திறத்தில் அவன் செய்யும் செயல்கள் யாவும் சிந்தைக்கு இனிக்கின்றன. பகைவரைத் துன்புறுத்தும் திறத்தில் அவன் செய்யும் செயல்கள் உள்ளத்தை நடுங்கச்செய்கின்றன. போரினால் உண்டாகும் அழிவை அவ்வரசன் எண்ணி இரங்குவதில்லை. புலவர்கள் மாத்திரம் அதனைக் கூறி இரங்குகின்றனர். அவர்களுடைய இரக்கம் பின்னும் அரசனது பெருமிதத்தை வளர்க்க உதவுகின்றதே யன்றிக் குறைக்கப் பயன்படுவதில்லை. உலகத்து மக்களுக்கு இன்பந்தரும் பொருட்டு ஒரு செங்கோலைப் பிடிக்கும் கையினால் அம்மக்களை அழிப்பதற்குக் காரணமாகும் மற்றொரு செங்கோலை (சிவந்த அம்பை)ப் பிடிப்பதை அரசன் பெருமையாகக் கொண்டது காலத்தின் இயல்பு; உலகத்தின் இயல்பென்று கூடச் சொல்லிவிடலாம்.

சேர அரசர்கள் பெற்ற வெற்றிகளும் அவர்கள் மரபிற்கே உரிய தனிப்பெருமைகளும் சேரநாட்டின் இயல்புகளும் அந்நாட்டி

னுள்ள ஆறுகள் மலைகள் ஊர்கள் முதலியவற்றைப்பற்றிய செய்திகளும் இந்நூலில் அங்கங்கே வருகின்றன. தமிழ்நாட்டில் 'படைப்புக்காலந் தொடங்கி' இருந்து வருவனவாகச் சொல்லப் பெற்ற சேர சோழ பாண்டியரென்னும் முடியுடை மூவேந்தர் குலத்துள் முதல்வைத்தெண்ணப்பட்ட சேரர் குலம் இன்னும் சிறப்புடன் விளங்கிவருகின்றது. திருவனந்தபுரத்தில் இப்போது ஆட்சி புரிந்து விளங்கும் **ஸ்ரீ சித்திரைத் திருநாள் மகாராஜா வாகிய ஸ்ரீ பத்மநாபதாஸ வஞ்சிபால பாலராமவர்மா அவர்கள்** பண்டைச் சேரர்குலத் தோன்றலாகி அறிவிலும் கொடையிலும் அவர்களைப்போன்ற சிறப்பினர்களாகிப் புகழ்பெற்று அதி மேதாவிகளான **சசிவோத்தம ஸர். ஸி. பி. இராமஸ்வாமி ஐய ரவர்களை** அமைச்சராக அமைத்துக்கொண்டு அவர்களுடைய ஆலோசனையின்படி ராஜ்யபரிபாலனத்தைச் செவ்வனே நடத்தி வருதல் நம் நாட்டுக்கே பெருமையை அளிப்பதாகும்.

சீவகசிந்தாமணியிலிருந்து தொடங்கிய எனது பண்டைத் தமிழ்நூல் ஆராய்ச்சியின் பயனாக நான் அறிந்துகொண்ட நூல்க ளுள் பதிற்றுப்பத்தும் ஒன்று. எட்டுத்தொகை, பத்துப்பாட்டு என்பன இன்னவை என்று தெரியாத காலத்தில் இந்நூலைக் காணும் பேறு எனக்கு வாய்த்தது. முதல் முதலில் திருவாவடு துறை மடத்திலிருந்து கிடைத்த எட்டுத்தொகைப் பிரதியில் பரி பாடலும் கலித்தொகையும் காணப்படவில்லை. ஏனைய ஆறு தொகை நூல்களும் இருந்தன. சிந்தாமணியில் வரும் மேற் கோள்களைத் தெரிந்துகொள்வதற்காக வழி துறை தெரியாத சங்கநூற் காட்டுக்குள்ளே புகவேண்டிய அவசியம் நேர்ந்தது. சிந்தாமணியின் ஒளியினால் அதற்கும் முந்திய பழைய நூல்கள் பலவற்றின் அழகை உணரலானேன். எட்டுத்தொகை, பத்துப் பாட்டு என்பவற்றின் பழமைக் கோலத்தையும் 'என்றும் புலராது யாணர்நாட் செல்லுகினும், நின்றலர்ந்து தேன்பிலிற்றும் நீர்மை' யாகிய புதுமைச் சுவையையும் அறிந்து அறிந்து இன்புற்றேன். ஒவ்வொன்றாக அந்நூல்களையும் வெளியிடும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது. புறநானூற்றைப் பதிப்பிக்கையில் தமிழின் புறத் துறைகளைப் பற்றிய ஆராய்ச்சியில் ஈடுபட்டு உரம்பெற்றேன். பதிற்றுப்பத்தைப் பதிப்பிப்பதற்கு அவ்வாராய்ச்சியினாற்பெற்ற அறிவு அஸ்திவாரமாக உதவியது. இறைவன் திருவருளால் இந் நூல் முதல் முதலில் 1904-ஆம் வருஷம் ஜூன் மாதத்திலும், இரண்டாம் முறை 1920-ஆம் வருஷம் அக்டோபர் மாதத்திலும் வெளிவந்தன. இது மூன்றாம் பதிப்பாகும்.

இந்த நூலைப் பதிப்பிப்பதற்கு எனக்கு முதலில் உதவியாக இருந்த பிரதிகள் ஆறு. அவை வருமாறு:

(1) திருவாவடுதுறை ஆதீனத்துப் பிரதி;

(2) சென்னை இராசாங்கத்துக் கையெழுத்துப் புத்தக சாலைப் பிரதி;

(3) ஆழ்வார்திருநகரி, ஸ்ரீ தே. லக்ஷ்மண கவிராயரவர்கள் வீட்டுப் பிரதி;

(4) ஸ்ரீ ஜே. எம். வேலுப்பிள்ளை யவர்கள் பிரதி;

(5) ஸ்ரீ தி. த. கனக சுந்தரம் பிள்ளை யவர்கள் பிரதி;

(6) திருமயிலை வித்துவான் ஸ்ரீ சண்முகம் பிள்ளையவர்கள் பிரதி.

இவற்றுள் இரண்டில் மாத்திரம் உரை இருந்தது. இவற்றை யன்றி அவ்வப்பொழுது ஒப்பிடுதற்குக் கிடைத்த பிரதிகள் வேறு சில உண்டு.

முதற் பத்தும் பத்தாம்பத்தும் இவற்றிற் கிடையாமற் போனதன்றி உள்ள எட்டுப் பத்திலுங்கூடச் சில சில விடங்களில் மூலங்கள் குறைந்தும் உரைகள் சிதைந்தும் பிறழ்ந்தும் இருந்தன. அத்தகைய இடங்களில் என்னாற் செய்யத் தக்கது ஒன்றும் இல்லாமையால் அவற்றை இருந்தவாறே பதிப்பித்திருக்கிறேன். முதற்பதிப்பைக் காட்டிலும் இரண்டாம் பதிப்பில் சில திருத்தங்கள் அமைந்தன. நாளடைவில் செய்துவந்த ஆராய்ச்சியினாற் கண்ட சில புதிய திருத்தங்களை இப்பதிப்பிற் காணலாம்.

இந்நூற்பதிப்பைப்பற்றிய பிற செய்திகளை முதற்பதிப்பு இரண்டாம் பதிப்புக்களின் முகவுரைகளிற் காணலாம்.

இக்காலத்தில் தமிழ்க் கல்வி பயிலும் மாணுக்கர்கள் இந் நூலின் பழைய வுரையைத் துணைக்கொண்டு நூற்பொருளை அறிவது எளிதன்றென்று தெரிந்தமையின் இப்பதிப்பில் ஒரு குறிப்புரை எழுதி அடிக்குறிப்பாகச் சேர்க்கப்பட்டிருக்கிறது. அதன் கண் இயன்றவரையில் விஷயங்களை விளக்கியுள்ளேன்; ஆயினும் எனக்கே தெளிவாக விளங்காத சில பகுதிகள் உண்டு. அவ்விடங்களில் ஏதோ ஒரு வகையாகப் பொருள் எழுதி அமைத்திருக்கிறேன். பெரும்பாலும் பழைய உரையை அடியொற்றியே இக்குறிப்புரையை எழுதினேன். ஆயினும் சில இடங்களில் பழைய உரையினும் சிறந்ததாக இருக்குமென்ற எண்ணத்தினால் சில கருத்துக்களைக் குறித்திருக்கிறேன். சொற் பொருளொப்புமைக்கும் கருத்துக்களுக்கும் மேற்கோளாகப் பெரும்பாலும் சங்க நூல்களும் சிந்தாமணி முதலிய பழைய நூல்களுமே எடுத்துக் காட்டப் பெற்றுள்ளன.

இத்தகைய நூல்களோடு பழகுகையில் எனக்கு ஊக்கமும் உலகத்தை மறந்துவிடும் நிலையும் உண்டாகின்றன. நூலை விட்டு என் கண்களை எடுத்து நோக்கினால் உலகமும் என் தளர்ச்சியும் புலனாகின்றன. இந்நிலையில் அந்தத் தளர்ச்சியைப் போக்குவதற்குத் தக்க உபகாரிகளை இறைவன் அளித்திருப்பதை நினைந்து நினைந்து மகிழ்கின்றேன்.

செந்தமிழை வளப்படுத்திச் செந்தமிழ் பயில்வாரை நிரம்பிய வாழ்க்கையுடையவராகச் செய்தற்குரிய பலவகை முயற்சிகளிலே கண்ணும் கருத்துமுடைய பெருந்தகையும், முத்தமிழ்ப் புலமை பெற்று விளங்கிய கொட்டையூர் ஸ்ரீசிவக்கொழுந்துதேசிகர் பரம்பரையில் உதித்துத் தமிழ் நலமும் தவநலமும் ஒருங்கு வாய்ந்த ஸ்ரீ குமரகுருபர முனிவர் திருமரபிற்பொருந்தித் திருப்பனந்தாட் காசி மடத்தின் தலைவராக விளங்குபவர்களுமாகிய ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சாமிநாத ஸ்வாமிகளவர்கள் என்பாற் பேரன்பு கொண்டு புரிந்துவரும் உபகாரங்கள் மிகப் பல. எனது தமிழ்ப் பணிக்கு உதவி செய்பவர்களைத் தனித்தனியே இவர்கள் ஆதரித்து வருவதோடு அவர்களுக்கு மாதந்தோறும் நான் கொடுத்து வருதற்குதவும்படி தக்க பொருளுதவியும் செய்து வருகிறார்கள். எனது தேக ஆரோக்கியத்தில் மிக்க கருத்துடையவர்களாகி இன்னது வேண்டுமென்று தெரிந்து அவ்வப்போது அனுகூலமான பொருள்களை நல்கியும் வருகிறார்கள்.

இவர்களுடைய கொடைத்திறத்தை எண்ணுகையில் என் மனத்திற் பழங்கதைகளெல்லாம் நினைவுக்கு வருகின்றன. இந்தப் பதிற்றுப்பத்தினுற் பாராட்டப் பெறுகின்ற சேரமரபிற் பிறந்த ஒரு மன்னரை ஒளவையார் தமக்கு உபகாரம் செய்த காரியென்னும் தலைவனுக்கு உபயோகமாகும் பொருட்டு ஒரு கறவையாடு கேட்க அம் மன்னர், 'இம்மூதாட்டிக்கு வெறும் ஆடா கொடுப்பது?' என்றெண்ணி உடனே ஒரு பொன் ஆட்டைக் கொடுத்தார். அது கண்ட ஒளவையார் மகிழ்ச்சியும் வியப்பும் உற்று, "சேரா, உன்னுடு பொன்னுடு" என்றார். 'உன் ஆடு பொன் ஆடு' என்றும், 'உன் நாடு பொன்நாடு' என்றும் இருவகையாகப் பொருள்பட்டு உண்மையும் வாழ்த்தும் ஒருங்கே தோற்றும் வண்ணம் அமைந்தது அவரது இன்னுரை. அன்றியும் அந்தக் கொடைத்திறத்தை,

"சிரப்பான் மணிமவுலிச் சேரமான் றன்னைச்
சுரப்பாடி யான்கேட்கப் பொன்னுடொன் றீந்தான்
இரப்பவ ரென்பெறினுங் கொள்வர் கொடுப்பவர்
தாமறிவர் தங்கொடையின் சீர்"

என்ற அருமைச் செய்யுளால் தமிழர் உள்ளத்தே நிலவும்படி பொறித்துவைத்தார்.

கைம்மாறு கருதாமல் உபகரிக்கும் மகோபகாரிகளாகிய ஸ்வாமிகளுடைய அருமையும் பெருமையும் மிக விளங்கவும், அவர்கள் அரோகதிடகாத்திரத்துடன் பல்லாண்டு வாழ்ந்து தமிழ்ப்பயிர் விளையப் பண்ணவும் திருவருள் புரியும் வண்ணம் எல்லாம் வல்ல இறைவன் திருவருடியை இறைஞ்சுகின்றேன்.

இந்தப் பதிப்பு நடைபெறுகையில், என்னிடத்துள்ள குறிப்புக்களையும் தாம் படித்தபோது குறித்து வைத்திருந் தவற்றையும் ஒழுங்குபடுத்தி உபயோகமானவற்றை இணைத்து அமைத்துத் தந்து இப்பதிப்பு நிறைவேறும்படி ஓழிந்த நேரங்

களிலெல்லாம் வந்து உதவியவர்கள் சென்னைக் கிறிஸ்டியன் காலேஜ் ஹைஸ்கூல் தமிழ்ப் பண்டிதர் சிரஞ்சீவி வித்துவான் **வி. மு. சுப்பிரமணிய ஐயரும்**, 'கலைமகள்' ஆசிரியர் சிரஞ்சீவி வித்துவான் **கி. வா. ஜகந்நாதையரும்** ஆவர். என்னுடைய சக்திக்கு இயன்ற அளவு இவர்களுக்கு ஏதோ பொருளுதவி செய்து வருகிறேனேயன்றி இவர்களுடைய பேருழைப்புக்கு எவ்வளவு உதவினாலும் பற்றாதென்பது என் கருத்து. ஆதலின் இவர்கள் நல்ல நிலையைப்பெற்றுத் திட காத்திரத்துடனும் தீர்க்காயுளுடனும் இருந்து வரும்படி செய்வித்தருளும் வண்ணம் ஸர்வேசுவரனைப் பிரார்த்திக்கின்றேன்.

'தியாகராஜ விலாசம்'
திருவேட்டீசுவரன் பேட்டை
20—11—1941

இங்ஙனம்,
வே. சாமிநாதையர்.

# பாடினோர் வரலாறு

உ.—குமட்டூர்க் கண்ணனார் :—இவர் இமயவரம்பன் நெடுஞ் சேரலாதன்மீது இந்நூல் 2 - ஆம்பத்தைப் பாடி, உம்பற்காட்டு ருூ௦௦ - ஊர் பிரமதாயமும் ௩௮ - வருடம் தென்னாட்டுள் வருவத னிற் பாகமும் பரிசிலாகப் பெற்றவர்; அந்தணவருணத்தினர்; இது பிரமதாயம் பெற்றனரென்பதனால் தெரிகின்றது. கண்ணனா ரென்று ஒரு புலவர் உளர்; அவரினின்று வேறுபடுத்தற்கு இவர் இங்ஙனம் வழங்கப்பெற்றார்.

௩.—பாலைக்கௌதமனார் :—பல்யானைச்செல்கெழுகுட்டுவன் மீது இந்நூல் மூன்றாம்பத்தைப் பாடியவராகிய இவர் அவனை இரந்து அவனுதவியால் ஒன்பது பெருவேள்வி வேட்டுப் பத்தாம் பெருவேள்வி வேட்கையில் மனைவியுடன் சுவர்க்கம் பெற்றவர்; அந்தண வருணத்தினர். இவை இப்பத்தின் பதிகத்தாலும், "தொடுத்த பெரும்புலவன்" (௩௪௬) என்னும் பழமொழி வெண் பாவாலும், அதனுரையாலும், "நான்மறை யாளன் செய்யுட் கொண்டு, மேனிலையுலகம் விடுத்தோனாயினும்" (உ௮-ஆம் காதை, 137-8) என்னும் சிலப்பதிகாரத்தாலும், 'இதில் இமயவரம் பன் தம்பி பல்யானைச்செல்கெழுகுட்டுவனைப் பாலைக்கௌதமனார் துறக்கம் வேண்டினாரென்பது குறிப்புவகையாற் கொள்ளவைத்த லின், இது வஞ்சிப்பொருளில் வந்த பாடாணாயிற்று' (தொல். புறத். 25) என்னும் நச்சினார்க்கினியர் உரையாலும் விளங்கு கின்றன. கோதமனாரென்று ஒரு புலவர் உளர்; அவரினின்று வேறுபடுத்தற்கு இவர் இங்ஙனம் வழங்கப்பெற்றார். இவர் சுவர்க்கம் பெற்ற சரிதை மலைநாட்டிற் கர்ணபரம்பரையில் இக்காலத்தும் வழங்குகின்றது.

௪.—காப்பியாற்றுக் காப்பியனார் :—இவர் களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரலென்னும் அரசன்மீது இந்நூல் நாலாம்பத்தைப் பாடி நாற்பதுலக்ஷம் பொன்னும் அவன் ஆண்டதில் ஒரு பாதியும் பரிசிலாகப் பெற்றவர்.

ரு.—பரணர் :—இவர் கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன் மீது இந்நூல் ஐந்தாம்பத்தைப் பாடி அவனால் உம்பற்காட்டுவரு வாயையும் அவன்மகன் குட்டுவன்சேரலென்பவனையும் பரிசிலாகப் பெற்றவர். கபிலருடைய அருமைத்துணைவர்; இது பழைய இலக் கண நூல்களின் உரைகளில், 'கபிலபரணர்' என்று வழங்கும் தொகைநிலைத் தொடரால் விளங்குகின்றது. அதிகமான்நெடுமா னஞ்சி கோவலூர்த்தலைவனை வென்று அவ்வூரைக் கைக்கொண் டமை இவராற் புனைந்து கூறப்பெற்றுள்ளது. இது புறநானூற் றில், "அமரர்ப் பேணியும்" என்னும் பாட்டில், "பரணன்

பாடினன் மற்கொன் மற்றுநீ, முரண்மிகு கோவலூர் நூறிநின், னிரண்டு கிளரி யேந்திய தோளே" என ஔவையார் பாராட்டியிருத்தலால் நன்கு புலப்படுகின்றது. இருவகைத் திருவிளையாடற் புராணத்திலும் இவர் புகழப்பட்டிருக்கிறார். எட்டுத் தொகையில் இவர் செய்தனவாக ௮௦ -செய்யுட்கள் இப்பொழுது காணப்படுகின்றன: நற். ௧௨; குறுந். ௧௫; பதிற். ௧௦; அகநா. ௩௨; புறநா. ௧௩.

௬.—காக்கைபாடினியார் நச்செள்ளையார் :—ஆடுகோட்பாட்டுச் சேரலாதனென்னும் அரசன்மீது இந்நூல் ௬ - ஆம் பத்தை இயற்றியோராகிய இவர் அணிகலனுக்கென்று ௯-இலாம் பொன்னும் நூறுயிரம் பொற்காசும் அவனாற் பரிசுபெற்றவர்; பெண்பாலார்; நச்செள்ளையாரென்பது இவரது இயற்பெயரென்றும் குறுந்தொகை, ௨௧௦-ஆம் பாட்டில், காக்கை கரைந்தமையைப் பாராட்டிக்கூறிய அருமைபற்றிக் காக்கைபாடினியாரென்ற சிறப்புப் பெயரைப் பிற்காலத்தில் ஆன்றோரால் இவர் பெற்றனரென்றும் தெரிகின்றன. பாடினி-பாடுபவள்; செள்ளை யென்பது பெண்பாலார்க்கு இயற்பெயராகப் பண்டைக் காலத்து வழங்கி வந்ததுபோலும். இந்நூல் ௬-ஆம் பத்தின் பதிகத்தில் மையூர் கிழானுடைய மனைவியின் பெயர் அந்துவஞ்செள்ளையென்று வந்திருத்தல்காண்க. மறக்குடிமங்கையின் சிறப்பை விளக்கி இவர் பாடிய ௨௭௮-ஆம் புறப்பாட்டு பெண்பாலாருடைய பாக்களின் வரிசையிற் சேர்க்கப்பெற்றிருத்தல் இவர் பெண்பாலாராதலை வலியுறுத்தும். 'கலனணிக' என்று அரசன் பொற்காசு முதலியன கொடுத்தானென்றதும் ஈண்டு அறிதற்பாலது. எட்டுத்தொகையில் இவர் செய்தனவாக, ௧௨ செய்யுட்கள் காணப்படுகின்றன: குறுந். ௧; பதிற். ௧௦; புறநா. ௧.

௭.—கபிலர் :—இவர் செல்வக் கடுங்கோவாழியாதனென்னும் சேரவரசன்மீது இந்நூல் ஏழாம் பத்தைப் பாடி நூறுயிரம் பொற்காசும் அவன் ஒரு மலைமீதேறிக் கண்டு கொடுத்த நாடும் பரிசிலாகப் பெற்றவர். இஃது இந்நூல் ஏழாம் பத்தின் பதிகத்தாலும், ௮௫-ஆம் பாடலிலுள்ள, "கபிலன்பெற்ற வூரினும் பலவே" என்பதனாலும் விளங்குகின்றது. இவர் பிறந்தவூர் பாண்டிய நாட்டிலுள்ள திருவாதவூர்; இது பழைய திருவிளையாடற் புராணத்தில் உள - ஆவதாகிய ஞானோபதேசஞ் செய்த திருவிளையாடலிலுள்ள, "நீதியார் மதூக நீழ *னெட்டிலை யிருப்பை யென்றோர், கீர்தல்கூர் பனுவல் பாடுங் கபிலனார் பிறந்த மூதூர், சோதிசேர் வகுள நீழற் சிலம்பொலி துளங்கக் காட்டும், வேதநா யகனார் வாழும் வியன்றிரு வாத வூரால்" என்னும் நாலாம் திருவிருத்தத்

* "நெட்டிலை யிருப்பை வட்ட வொண்பூ, வாடா தாயிற் பிடிபைப் பிடியின், கோடேய்க்குய்மே வாடினோ னைந்தலைப், பரதர் மனைதொறு மூனைக்குங், செந்தலை பிறவின் சிரேப்க் கும்மே":—இச்செய்யுள் தமிழ்நாவலர் சரிதையிற்கண்டது.

தால் வெளியாகின்றது. இவர் அந்தணவருணத்தினர்; **புறநானூற்றில்,** "யானே, பரிசிலன் மன்னு மந்தணன்", "யானே, தந்தை தோழ னிவரென் மகளிர், அந்தணன் புலவன் கொண்டு வந்தனனே" (உ௦௦,உ௦க) எனத் தம்மைப் புலப்படுத்தற்காக இவர் கூறிய செய்யுட்களும், "புலனழுக் கற்ற வந்த ணாளன்" (கஉகூ) என **மாறோகத்து நப்பசலையார்** இவரைப் பாராட்டிக் கூறிய செய்யுளும் இதனைப் புலப்படுத்தும்.

வேள்பாரியினுடைய உயிர் நண்பரும் அவனுடைய அவைக்களத்துப் புலவருமாக இவர் விளங்கினார்; தமிழ்நாட்டு மூவேந்தரும் அழுக்காறுற்று அவனைக் கொல்ல நினைந்து நால்வகைச் சேனைகளோடும் அவன் மலையைச் சூழ்ந்த போது அவர்களைச் சிறிதும் மதியாது அவனுடைய அருமைக் குணங்களைப் புலப்படுத்திப் பாடினர்; அவ்வருமைச் செய்யுட்கள் **புறநானூற்றில்** காணப்படும். அவனிறந்த பின்பு, அவனது பிரிவாற்றாது மன முருகிப் பலசெய்யுட்களாற் புலம்பி, அவன் புதல்வியரை அழைத்துச் சென்று மணஞ் செய்துகொள்ளும்படி இருங்கோவேள், விச்சிக்கோனென்பவர்களை வேண்டி மறுத்தமை கண்டு அவர்களை வெறுத்துப் பின்பு அம்மகளிரைப் பார்ப்பார்ப்படுத்துத் தம்முடைய நட்புக் கடனைக் கழித்தனர்.

**ஆரியவரசன் பிரகத்தனைத்** தமிழறிவித்தற்குக் **குறிஞ்சிப் பாட்டை** இயற்றினர்; பதினெண் கீழ்க்கணக்கினுள் ஒன்றாகிய **இன்னாநாற்பதும்** இவர் இயற்றிய நூலே.

இவருடைய செய்யுட்கள் மிக்க இனிமையை யுடையன. பழைய உரைகளில் உதாரணமாகக் காட்டப்படும் '**கபிலரது பாட்டு**' என்னும் தொடர்மொழியே இதனை வலியுறுத்தும்.

இவரருளிச்செய்தனவாக உளஎ - பாடல்கள் இப்பொழுது கிடைக்கின்றன. அவற்றுள், அகவற்பாக்கள் உ௦எ [**நற்**. உ௦; **குறுந்**. உகூ; **ஐங்**. க௦௦; **பதிற்**. க௦; **அகநா**. ககூ; **புறநா**. ந௦; **குறிஞ்சிப்**. க; "நெட்டிலையிருப்பை" என்பது - க.] **கலித்தொகையி**லுள்ள கலிப் பாக்கள்-உகூ; **இன்னாநாற்பதி**லுள்ள பாடல்கள் சக.

இவரியற்றிய பாடல்கள் இவர் குறிஞ்சித்திணையில் மிகப் பயின்றவரென்றும் அதன் வளங்களை விளங்கப் பாடுதலில் மிக்க ஆற்றலுடையவரென்றும் தெரிவிக்கின்றன.

இவருடைய வாக்கில் முருகக்கடவுள், சிவபெருமான், பலதேவர், திருமால் இவர்களுடைய துதிகள் வந்திருக்கின்றன. இதனால் இவர் சமயக்கோட்பாட்டிற் **பாரதம் பாடிய பெருந்தேவனாரைப்** போன்றவராக எண்ணப்படுகிறார்.

எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, பதினெண்கீழ்க்கணக்கு என்னும் முத்தொகுதி நூல்களிலும் இவருடைய பாடல்களும் நூல்களும் கலந்திருத்தல் இவரது பெருமையை விளக்கும்.

"அரசவை பணிய வறம்புரிந்து வயங்கிய, மறம்புரி கொள்கை வயங்குசெந் நாவின், உவலை கூராக் கவலையி னெஞ்சின், நனவிற் பாடிய நல்லிசைக், கபிலன்" (பதிற்றுப்பத்து, அரு) எனப் பெருங்குன்றூர் கிழாரும், "வெறுத்த வேள்வி விளங்குபுகழ்க் கபிலன்" (புறநானூறு, ருரு) எனப் பொருந்திலிளங்கீரனாரும், "புலனழுக் கற்ற வந்த ணாளன், இரந்துசென் மாக்கட் கினியிட னின்றிப், பரந்திசை நிற்கப் பாடினன்" (கஉசு), "பொய்யாநாவிற்கபிலன்" (கஎச) என மாறோகத்து நப்பசலையாரும் பாடியவற்றைப் பார்க்கையில் இவருடைய மனம் வாக்குக்காயங்களின் தூய்மையும், அறம்புரி கொள்கையும், பெரும்புலமையும், அன்புடைமையும், நட்பின் பெருமையும் நன்கு விளங்குகின்றன.

இவராற் பாடப்பட்டோர்:—அகுதை, இருங்கோவேள், ஓரி, சேரமான் செல்வக் கடுங்கோவாழியாதன், நள்ளி, மலையமான் திருமுடிக்காரி, விச்சிக்கோன், வேள்பாரி, வையாவிக்கோப் பெரும்பேகனென்பவர்கள்.

கொல்லிமலை, பறம்புநாடு, பறம்புமலை, முள்ளூர்க்கானம், முள்ளூர் மலையென்பவைகள் இவராற் பாராட்டப் பெற்றிருத்தலின், அவைகள் இவர் காலத்தில் விளக்கமுற்றிருந்தனவென்றும் இவர் பழகிய இடங்களென்றும் தெரிகின்றன.

நட்பு, வண்மை, நன்றிமறவாமை யென்பவைகளை இவருடைய செய்யுட்களிற் பரக்கக் காணலாகும்.

'கபிலபரணர்' என்பதனால், பரணரென்பவருக்கும் பழைய திருவிளையாடற் புராணத்தில் வந்துள்ள, "பின்னமில் கபிலன் றோழன் பெயரிடைக் காட னென்போன்" என்னும் திருவிருத்தத்தால், இடைக்காடருக்கும் சிறந்த நட்பினராக இவர் எண்ணப்படுகிறார். இவர் வேறு; தொகை நூல்களிற் காணப்படும் தொல்கபிலரென்பவர் வேறு.

அ.—அரிசில்கிழார்:—இவர் தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும்பொறை யென்னும் அரசன்மீது இந்நூல் எட்டாம் பத்தைப் பாடி ஒன்பது நாறாயிரம் பொற்காசு பரிசில் பெற்றதன்றி அவன் கொடுத்த அரசாட்சிக்குரிய சிங்காதனத்தை அவனுக்கே மீட்டும் இரந்து கொடுத்து அவன்பால் அமைச்சுரிமை பூண்டு விளங்கினார்; 'கிழார்' என்பது வேளாளர்க்கேயுரிய சிறப்புப்பெயராக இருந்ததென்று தெரிதலின், இவரை. வேளாண்மரபினரென்று கொள்ளவேண்டும்; இதனை, தொல். மரபியல், எச-ஆம் சூத்திரத்தின் விசேடவுரையிற் காட்டிய பெயர்களாலும் திருத்தொண்டர் புராணவரலாற்றின் உ-ஆம் செய்யுளில் எடுத்துக்காட்டிய பெயர்களாலும் உணரலாம். அரிசிலென்பது ஈண்டு ஒரு நதியின் பெயரோ ஓரூரின் பெயரோ யாதும் விளங்கவில்லை. சோழநாட்டிலுள்ள நதிகளுள் அரிசிலென்று ஒரு நதியும் மைஸூரைச் சார்ந்த ஊர்களுள் அரிசிற்கரையென்று ஓரூரும் உள்ளன. கிழார்-உரியவர்.

*

வையாவிக்கோப் பெரும்பேகனால் துறக்கப்பட்ட கண்ணகியை அவனுடன் சேர்த்தல்வேண்டி அவனைப் பாடினர்; அதிகமான் தகடூரெறிந்து வீழ்ந்த எழினியென்பவனுடைய பிரிவாற்றாது வருந்திப் புலம்பினர்; தகடூர் யாத்திரை யென்னும் நூலில் அவ்வச்சமயங்களில் இவர் செய்தனவாகச் சில பாடல்களுண்டென்று தெரிகிறது [தொல். புறத். அ, கஉ, ந]

மேற்கூறிய சேரவரசனும் உக்கிரப்பெருவழுதியாரும் பேகனென்னும் வள்ளலும் அதிகமானும் இவர்காலத்துத் தலைவர்கள்.

இவர் மதுரையிலும் மலைநாட்டிலும் பெரும்பாலும் இருந்தாரென்று மேற்கூறிய செய்யுட்களால் தெரிகிறது.

இவர் செய்தனவாக இப்பொழுது கக செய்யுட்கள் கிடைக்கின்றன. **குறுந்.** க; **பதிற்.** க௦; **புறநா.** எ; **தகடூர்.** க.

கூ.—**பெருங்குன்றூர்கிழார்**:—இவர் குடக்கோ இளஞ்சேரல் இரும்பொறையென்னும் சேரவரசன்மீது இந்நூல் ஒன்பதாம் பத்தைப் பாடி ௩உ,௦௦௦-பொற்காசு முதலிய பலவகைப்பரிசில்கள் பெற்றவர்; வேளாளர்; கடைச்சங்கமிருந்து தமிழாராய்ந்தோருள் ஒருவர்; வையாவிக்கோப்பெரும்பேகனால் துறக்கப்பட்ட கண்ணகியென்பவளை அவனுடன் சேர்த்தற்கு அவனைப் பாடியவர்; இவராற் பாடப்பட்டோர்கள் மேற்கூறிய தலைவர்கள் இருவரும் உருவப்பஃறேரிளஞ்சேட் சென்னியும் ஆவர். இவர் காலத்துப் புலவர்கள் இறையனரகப் பொருளுரையால் தெரிகின்ற சிறுமேதாவியார், சேந்தம்பூதனர், அறிவுடையரனர், இளந்திருமாறனர், மதுரையாசிரிய னல்லந்துவனர், மருதனிளநாகனர், கணக்காயனர் மகனர் நக்கீரனர் முதலியோர்களும், வையாவிக்கோப்பெரும்பேகனைப் பாடிய பரணர்முதலியோர் களும் ஆவர். இவரியற்றினவாக எட்டுத்தொகையில் உக-செய்யுட்கள் இப்பொழுது கிடைக்கின்றன: **நற்.** ச; **குறுந்.** க; **பதிற்.** க௦; **அகநா.** - க; **புறநா.** ரு. இவற்றுள் அகத்திணைக்குரியன சு; புறத்திணைக்குரியன கரு.

---

உ

கணபதி துணை

# பதிற்றுப்பத்து

## மூலமும் பழைய உரையும்



*  *  *  *  *

### இரண்டாம் பத்து

(கக) **வ**ரைமருள் புணரி வான்பிசி ருடைய
வளிபாய்ந் தட்ட துளங்கிருங் கமஞ்சூல்
நளியிரும் பரப்பின் மாக்கடன் முன்னி
அணங்குடை யவுண ரேமம் புணர்க்கும்
சூருடை முழுமுத றடிந்த பேரிசைக்
கடுஞ்சின விறல்வேள் களிறூர்ந் தாங்குச்
செவ்வா யெஃகம் விலங்குந ரறுப்ப
அருநிறந் திறந்த புண்ணுமிழ் குருதியின்
மணிநிற விருங்கழி நீர்நிறம் பெயர்ந்து
மனாலக் கலவை போல வரண்கொன்று
முரண்மிகு சிறப்பி னுயர்ந்த வூக்கலை
பலர்மொசிந் தோம்பிய திரள்பூங் கடம்பின்
கடியுடை முழுமுத றுமிய வேஎய்
வென்றெறி முழங்குபணை செய்த வெல்போர்
நாரரி நறவி னார மார்பிற்
போரடு தானைச் சேர லாத
மார்புமலி பைந்தா ரோடையொடு விளங்கும்
வலனுயர் மருப்பிற் பழிதீர் யானைப்
பொலனணி யெருத்த மேல்கொண்டு பொலிந்தநின்

பலர்புகழ் செல்வ மினிதுகண் டிகுமே
கவிர்ததை சிலம்பிற் றுஞ்சுங் கவரி
பரந்திலங் கருவியொடு நரந்தங் கனவும்
ஆரியர் துவன்றிய பேரிசை யிமயம்
தென்னங் குமரியொ டாயிடை
மன்மீக் கூறுநர் மறந்தபக் கடந்தே.

**துறை - *செந்துறைப்பாடாண்பாட்டு. வண்ணம் - † ஒழுகுவண்ணம். தூக்கு - ‡செந்தூக்கு. பெயர் - புண்ணுமிழ் குருதி (8.)**

## (பழைய வுரை)

1. பிசிருடையவென்றது பிசிராக உடையவென்றவாறு.

2. கமஞ்சூல் - நிறைந்த நீர் ; சூல்போறலாற் சூலெனப்பட்டது.

5. சூருடை முழுமுதலென்றது சூரவன்மாத் தனக்கு அரணாகவுடைய மாவின்முத லென்றவாறு.

இனிச் சூரவன்மாத்தான் ஓர்மாவாய் நின்றானென்று § புராணம் உண்டாயின், சூரனதற்றன்மையையுடைய மாவின்முதலென்றவாறும்.

9 - 10. நீர்நிறம் பெயர்ந்து, மனாலைக் கலவைபோலவென முடிக்க.

போலவென்றது ஈண்டுப் போலும்படியென வினையெச்சப் பொருள்பட்டு நின்றது. மனாலமென்றது குங்குமம் ; சாதிங்குலிகமென்பாரும் உளர்.

8 - 10. 'அருநிறந்திறந்த' என முன்வந்த அடைச்சிறப்பானும், 'மணிநிற விருங்கழி நீர்நிறம் பெயர்ந்து, மனாலக் கலவை போல' எனப் பின்வந்த அடைச்சிறப்பானும் இதற்கு, '**புண்ணுமிழ் குருதி**' என்று பெயராயிற்று.

19 - 20. மேல்கொண்டு பொலிந்த நின் செல்வமென முடிக்க.

---

* செந்துறை : 'செந்துறையாவது விகார வகையான் அமரராக்கிச் செய்யும் அறுமுறை வாழ்த்தினைப் போலாது, உலகினுள் இயற்கை வகையான் இயன்ற மக்களைப் பாடுதல். இது செந்துறைப் பாடாண் பாட்டு எனப்படும்' (**தொல். புறத். 27, ந**) பாடாண் : 'பாடாணென்பது பாடுதல் வினையையும் பாடப்படும் ஆண்மகனையும் நோக்காது அவனது ஒழுகலாறாகிய திணையை உணர்த்தினமையின் வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை' (**தொல். புறத். 25, ந.**)

† ஒழுகுவண்ணம் : அற்று அற்றுச் செல்லாமல் ஒழுகிய ஓசையாற் செல்வது (**தொல். செய். 226, பேர்.**)

‡ செந்தூக்கு - ஆசிரியப்பா (**தொல். செய். 71, பேர்.**) தூக்கு - பாக்களைத் துணித்து இத்துணை யடியெனக் கூறுபாடறிதல் (**தொல். செய். 1, 87, பேர்.**)

§ புராணமென்றது காந்தம் முதலியவற்றை. உண்டாயின் - உண்டாதலால் ; ஆயின் : ஆதலால் என்னும் பொருளில் வந்தது (**புறநா. 34 : 20, உரை.**)

21. கவிர்ததை சிலம்பிற் றுஞ்சுமென்றது, ஆண்டு உறையும் * ஆரிய ராணையானே முருக்கென்னும் முள்ளுடை மரமும், "மயிர்நீப்பின் வாழாக் கவரிமா" (குறள். 969) என்று சிறப்பிக்கப்பட்ட தன் மயிர்க்கும் வருத்தஞ் செய்யாமையால், அக்கவிர் செறிந்த சிலம்பின்கண்ணே இனிதாக உறங்குமென்றவாறு.

22. அருவியொடு நரந்தம் கனவுமென்றது அவ்வாரியராணையானே பிற விலங்கானும் மக்களானும் வருத்தமின்றிப் பகற்காலத்துத் தான் நுகர்ந்த அருவியையும் நரந்தத்தையுமே கனவினும் காணுமென்றவாறு.

24. குமரியொடுவென்னும் ஒடு எண்ணொடு. ஆயிடை யென்றது இமயம் குமரியாகிய அவற்றுக்கு இடையென்றவாறு; அவ்வென்னும் வகரவீற்றுப் பெயர் ஆயிடையென முடிந்தது.

25. 'மன்' என்றதனை † அரசென்றதுபோல அஃறிணைப்பெயராக்கி அம் மன்களில் மீக்கூறுமெனக் கொள்க.

மறந்தபக் கடந்து (25) முழங்குபணை செய்த (26) என மாறி முடிக்க; ‡ இங்ஙனம் மாறாது எருத்த மேல்கொண்டு (14) என்னும் வினையொடு மாறி முடிப்பாரும் உளர்.

சேரலாத (16), கடுஞ்சின விறல்வேள் களிறூர்ந்தாங்கு (6) யானை (18) எருத்தமேல்கொண்டு பொலிந்தநின் (19) பலர்புகழ் செல்வம் கண்டிரும் (20) என மாறிக் கூட்டி வினைமுடிவு செய்க.

இதனாற் சொல்லியது அவன் வெற்றிச் செல்வச் சிறப்புக் கூறியவாறாயிற்று.

(குறிப்புரை) 1. வரை-மலை. மருள்: உவமஉருபு. புணரி-அலை; அலைக்கு மலை: "மலைக்குநிக ரொப்பன வன்றிரைகள்" (தே. சுந்தர. அஞ்சைக்களம்.) பிசிர் - துளி (பதிற். 17 : 4.)

2. அட்ட - சிதைத்த. துளங்கு - அசைகின்ற. சூல் - கருப்பம்; இங்கே நீருக்காயிற்று, "கமஞ்சூன் மாமழை" (முருகு. 7) என்புழிப்போல.

3. பரப்பினையுடைய கடல்.

4. அணங்குடை - துன்பத்தைச் செய்தலையுடைய. ஏமம் புணர்க்கும் - பாதுகாவலாகச் சேர்த்துவைத்த.

5. முழுமுதல் - அடிமரம்; இங்கே மாவினது அடிமரம்; பேரிசை: முருகு. 268.

4 - 5. 'அவுண ரெல்லாரும் தம்முடனே எதிர்ந்தார்வலியிலே பாதி தங்கள் வலியிலே கூடும்படி மந்திரங்கொண்டிருந்து சாதித்ததொரு மாவை வெட்டினான் என்றவாறு' (முருகு. 59 - 60, ந.)

6. விறல்வேள்: முருகு. 262. களிறு - முருகக் கடவுளின் ஊர்தியாகிய யானை; பிணிமுகம் என்று வழங்கப்படும் (முருகு. 247, ந.)

7. வாய் என்றது முனையை. எஃகம் - வேல். விலங்குநர் - குறுக்கே தடுத்து நிற்கும் பகைவரை.

---

* ஆரியர் என்றது இங்கே முனிவரை.

† மன் - சொல்லால் அஃறிணை; பொருளால் உயர்திணை (தொல். கிளவி. 56.) ‡ இரண்டாவது முடிபே பொருத்தமாகத் தோற்றுகின்றது.

8. அருநிறம் திறந்த - பிறரால் துளைத்தற்கரிய மார்பைத் துளைத்த தனால் உண்டாகிய ; நிறம் - உயிர்நிலையுமாம். புண்ணுமிழ் குருதி : குறிஞ்சிப். 172. குருதியின் - இரத்தத்தால்.

9. மணிநிறம் - நீலமணிபோன்ற நிறம்.

8 - 9. மார்பிலிருந்து வெளிப்பட்ட இரத்தத்தின் மிகுதியால் கழியி லுள்ள நீர் தன் நீலநிறம் மாறிச் சிவப்பாயிற்றென்றபடி.

10. போல - போலாக. அரண் - பகைவரது மதில்.

11. முரண் - வலி. ஊக்கலை - செலுத்தும் முயற்சியை யுடையாய் ; விளி.

12. மொசிந்து - மொய்த்து. கடம்பு : இப்பாட்டுடைத் தலைவனுக்குப் பகைவரான அரசர்களுள் ஒருவனது காவல் மரம்.

13. கடியுடை முழுமுதல் - காவலையுடைய அடிமரம். ஏஎய் - ஏவி.

14. வென்று - வஞ்சியாது எதிர் நின்று கொன்று. பணை செய்த - முரசாகச் செய்த.

12 - 4. பகைவரது காவல்மரத்தை வெட்டி அதைக்கொண்டு முரசு செய்தல் மன்னர் இயல்பு ; " கடம்பறுத் தியற்றிய வலம்படு வியன்பணை " என்பர் பின் ; 17 : 5 ; " கடம்பறுத் தியற்றிய பண்ணமை முரசு " (அகநா. 347 : 4 - 5) ; " உதியர், இடப்புண்ட பேரிஞ்சி வஞ்சியி லிட்ட, கடப்ப முதுமுரசங் காணீர் " (இராசராச. 87.)

கடம்பறுத்தது ; பதிற். 12 : 3, 20 : 4 ; அகநா. 127 : 4 ; சிலப். 25 : 1.

15. நார் அரி நறவின் - பன்னாடையால் அரிக்கப்படுகின்ற கள்ளை யுடைய. ஆரம் - சந்தனம் ; முத்துமாலையுமாம்.

17. தார் - மாலை.

20. கண்டிகும் - கண்டோம் ; பதிற். 43 : 31, உரை ; " கண்டிகு மல்லமோ கொண்கநின் கேளே " (ஐங். 121.)

17 - 20. யானைமேல் கொண்டு பொலிந்த நின் செல்வம் என்க.

21. கவிர் - முள்ளு முருங்கை. கவரி - கவரிமான்.

22. நரந்தம் - நரந்தப்புல் ; இது நரந்தை எனவும் வழங்கும் ; " நரந்தை நறும்புன் மேய்ந்த கவரி " (புறநா. 132 : 4.)

23. துவன்றிய - நிறைந்த. துவன்றுதல் நிறைவென்னும் குறிப் புணர்த்தும் என்பதற்கு மேற்கோள் (தொல். உரி. 34, ந ; இ. வி. 290.)

23 - 4. இமயமும் குமரியும் : மதுரைக். 70 - 71 ; புறநா. 17 : 1 - 2.

25. மன் மீக்கூறுநர் - அரசர்களுள் உயர்த்துக் கூறப்படுபவர்க ளுடைய. 23 - 5. பதிற். 43 : 7 - 9.

மு. சேரனுக்கு முருகக்கடவுளை உவமை கூறவந்த புலவர் கடலிற் சென்று கடிமரந்தடிதலும், களிறூர்தலும் ஆகிய பொதுத் தொழில்களை இருவர்க்கும் சார்த்தி உரைத்தனர்.

(பிரதிபேதம்.) 4. ஏமம்புணர்காக்கும். 9. நீனிறம். 10. போலரண். 13. நுமியவோஒய். 16. வேண்டுதானை. 25. மதந்தப. (க)

(கஉ) **வ**யவர் வீழ வாளரின் மயக்கி
இடங்கவர் கடும்பி னரசுதலை பனிப்பக்
கடம்புமுத றடிந்த கடுஞ்சின வேந்தே
தாரணி யெருத்தின் வாரல் வள்ளுகிர்
அரிமான் வழங்குஞ் சாரற் பிறமான்
தோடுகொ ளினநிரை நெஞ்சதிர்ந் தாங்கு
முரசுமுழங்கு நெடுநக ரரசுதுயி லீயாது
மாதிரம் பனிக்கு **மறம்வீங்கு பல்புகழ்**
கேட்டற் கினிதுநின் செல்வங் கேட்டொறும்
காண்டல் விருப்பொடு கமழுங் குளவி
வாடாப் பைம்மயி ரிளைய வாடுநடை
அண்ணன் மழகளி றரிஞிமி றோப்பும்
கன்றுபுணர் பிடிய குன்று பல நீந்தி
வந்தவ ணிறுத்த விரும்பே ரொக்கற்
றொல்பசி யுழந்த பழங்கண் வீழ
எஃகுபோழ்ந் தறுத்த வானிணக் கொழுங்குறை
மையூன் பெய்த வெண்ணெல் வெண்சோறு
நனையமை கள்ளின் றேறலொடு மாந்தி
நீர்ப்படு பருந்தி னிருஞ்சிற கன்ன
நிலந்தின் சிதாஅர் களைந்த பின்றை
நூலாக் கலிங்கம் வாலரைக் கொளீஇ
வணரிருங் கதுப்பின் வாங்கமை மென்றோள்
வசையின் மகளிர் வயங்கிழை யணிய
அமர்புமெய் யார்த்த சுற்றமொடு
நுகர்தற் கினிதுநின் பெருங்கலி மகிழ்வே.

இதுவுமது. பெயர் - மறம்வீங்கு பல்புகழ் (8.)

(ப-ரை.) 7. துயிலீயாதென்பது துயிலாதென்னும் வினைத்திரிசொல்; துயிலாமலெனத் திரிக்க; இனித்திரியாது, 'யாறுநீ ரொழுகாது கிடந்தது' என்னும் வழக்குப்போல இடத்து நிகழ்பொருளின் தொழிலை இடத்திற் கேற்றி, மாதிரமானது அரசு துயிலீயாது பனிக்குமென அம்மாதிரத்தின் வினையொடு முடிப்பினும் அமையும்.

8. மறம்வீங்கு பல்புகழென்றது அரசர்க்குச் சிறந்த மறப்புகழ் * மற்றைப் புகழினும் மிக்க பல்புகழென்றவாறு.

இச்சிறப்பானே இதற்கு, '**மறம்வீங்கு புல்புகழ்**' என்று பெயராயிற்று.

---

* மற்றைப்புகழ் - கல்வி, ஈகை முதலியவற்றால் வரும் புகழ்.

8 - 9. நின் செல்வம் இனிது ; யாது இனிதெனிற் பல்புகழ் கேட்டற்கு இனிதென முடிவுகொள்க.

9. கேட்டொறு மென்பதற்கு அச்செல்வத்தையென வருவிக்க.

21. நூலாக்கலிங்கமென்றது ஒருவர் நூலாநூலாகிய பட்டுநூல் முதலாயவற்றாற் செய்த கலிங்கமென்றவாறு.

நூலாமை யென்னும் தொழில் கலிங்கத்துக்குச் சினையாகிய நூல் மேலதாலெனின், அச்சினையோடு முதற்குள்ள ஒற்றுமைபற்றிச் சினை வினையை முதல்மேலேற்றி வழுவமைதியாற் கூறினனென்க. இனி நூலா நூற் கலிங்கமென்பான் நூலென்பதனைத் தொகுத்துக் கூறினனென்பாரும் உளர்.

25. நுகர்தற்கு இனிது நின் பெருங்கலிமகிழ்வே யென்றது நின் பெரிய ஆரவாரத்தையுடைய * ஓலக்கத்துச் செல்கின்ற விநோத மகிழ்ச்சி அனுபவித்தற்கு இனிதென்றவாறு.

வேந்தே (3), நின்செல்வம் (9) புகழ் (8) கேட்டற்கினிது (9), நின் பெருங்கலி மகிழ்வு நுகர்தற்கினிது (25) என வினைமுடிவு செய்க.

இதனாற் சொல்லியது அவன் வென்றிச் சிறப்பும் அவனது ஓலக்க விநோதச் சிறப்பும் உடன் கூறியவாறாயிற்று.

(கு-ரை) 1-3. வயவர் வீழ-வீரர்கள் இறந்துபட. வாள் அரில் மயக்கி-வாள்வீரரது நெருக்கத்தைக் கலக்கி (பதிற். 36 : 6.) இடம் கவர்-தனக்குரிய இடத்தைக் கவர்ந்த. கடும்பின் அரசு - மந்திரி முதலிய சுற்றத்தையுடைய பகையரசர். பனிப்ப - நடுங்க. கடம்புமுதல் - கடம்பின் அடிமரத்தை ; கடம்பைத் தடிந்தது : பதிற். 11: 12 - 4, குறிப்புரை.

மயக்கி, பனிப்ப, தடிந்த வேந்தே.

4 - 9. தார் பிடரிமயிர் போலும். எருத்து - கழுத்து. வாரல் - நீட்சி. அரிமான் - சிங்கம். பிறமான் - யானை முதலிய வேறு விலங்கினங்கள். தோடு - தொகுதி. நெடுநகர்-பகைவருடைய பெரிய நகரங்கள். துயிலீயாது - தூங்காமல். மாதிரம் - திசைகளில். மறம் வீங்கு பல்புகழ் - வீரத்தின் மிகுதியால் வந்த பல புகழ். சேரனுக்குச் சிங்கமும் பகையரசருக்குப் பிற விலங்கினங்களும் உவமை. மறம் வீங்கு பல் புகழ் : “ வென்றிப் பல்புகழ்” (மலைபடு. 544) ; “ மறப்புகழ் நிறைந்த மைந்தினோன் ” (புறநா. 290 : 6.)

9 - 10. நின் செல்வத்தைக் கேட்குந்தோறும் அதனைக் காண்கின்ற விருப்பத்தோடு.

10 - 13. குளவி - காட்டு மல்லிகையையுடைய. பைம் மயிரும் நடையும் களிற்றுக்கு அடை. அரி ஞிமிறு-கோடுகளையுடைய வண்டுகள் ; களிறு, பிடியைச் சுற்றிய வண்டுகளை ஓட்டியது. குளவியையும் பிடிகளையும் உடைய குன்று.

14 - 20. அவண் - சேரனது முன்னிலையை. இரும்பேரொக்கல் - வறுமையால் கரிய பெரிய சுற்றத்தார் (சிறுபாண். 139, ந.) ஒக்கலது பழங்கண் என்க ; பழங்கண் - துன்பம். தொல் பசி - தொன்றுதொட்டு வந்த பசி (பெரும்பாண். 25.) எஃகு - இங்கே அரிவாள் ; அரிவாளால் பிளந்து அறுத்த வெள்ளிய நிணத்தோடு சேர்ந்த கொழுவிய துண்டாகிய ஆட்டின் மாமிசம் ; மை - ஆடு. வெண்ணெல் - ஒருவகை நெல். நனை அமை கள்

* ஓலக்கம்-அரசிருக்கைக்குரிய இடம். செல்கின்ற - நடந்துவருகின்ற. விநோதம் - பொழுதுபோக்கு.

ளின் தேறல் - அரும்பினால் அமைத்த கள்ளின் தெளிவு. நீர்ப்படு - மழை நீரில் வருந்திய. நிலம் தின் சிதார் - மண்ணால் அரிக்கப்பட்ட கந்தை. சிதாருக்குப் பருந்தின் சிறகு உவமை ; புறநா. 150 : 1-2.

வீழ, மாந்தி, களைந்த பின்றையென்க.

21. நூலாதநூலா னியன்ற கலிங்கமென ஒற்றுமை நயம்பற்றிச் செயப்படுபொருள் மேல் நின்றது (தொல். வினை. 37, ந ; இ. வி. 243 )

21 - 5. நூலாக்கலிங்கம் - நூற்கப்படாத நூலாலியன்ற ஆடை ; பட்டாடை. வால் அரைக் கொளீஇ-வெள்ளிய அரையில் உடுத்தி ; வெண்மை : இன்மையைக் குறித்தது. வணர் இருங்கதுப்பின் - வளைந்த கரிய கூந்தலை யுடைய. மகளிரென்றது விறலியரை.

விறலியர் உபகாரிகளால் தரப்பெற்ற இழையை அணிதல் : பொருந. 159 ; 62, அடிக் ; மலைபடு. 569 - 70. அமர்பு - மனம் பொருந்தி. மெய் ஆர்த்த சுற்றம் - உண்மையைத் தம்மிடத்தே கட்டிய மந்திரி முதலிய சுற்றத்தார். நுகர்தற்கு - கலந்து மகிழ்தற்கு. சுற்றமொடு மகிழ்வென இயைக்க.

கொளீஇ, அணிய, மகிழ்வு இனிது என்க.

(பி - ம்) 5. சோலைப் பிறமான். 11. இழையவாடு நடை. (உ)

---

(கரு) தொறுத்தவய லாரல்பிறழ்நவும்
ஏறுபொருதசெறு வுழாதுவித்துநவும்
கரும்பின் பாத்திப் பூத்த நெய்தல்
இருங்க ணெருமையி னிரைதடுக் குநவும்
கலிகெழு துணங்கை யாடிய மருங்கின்
வளைதலை மூதா வாம்ப லார்நவும்
ஒலிதெங்கி னிமிழ்மருதிற்
புனல்வாயிற் பூம்பொய்கைப்
பாடல் சான்ற பயங்கெழு வைப்பின்
நாடுகவி னழிய நாமந் தோற்றிக்
கூற்றடூஉ நின்ற யாக்கை போல
நீசிவந் திறுத்த நீரழி பாக்கம்
விரிபூங் கரும்பின் கழனி புல்லெனத்
திரிகாய் விடத்தரொடு காருடை போகிக்
கவைத்தலைப் பேய்மகள் கழுதூர்ந் தியங்க
ஊரிய நெருஞ்சி நீறுடு பறந்தலைத்
தாதெரு மறுத்த கலியழி மன்றத்
துள்ள மழிய வூக்குநர் மிடறபுத்
துள்ளுநர் பனிக்கும் பாழா யினவே

காடே கடவுண் மேன புறவே
ஒள்ளிழை மகளிரொடு மள்ளர் மேன
ஆறே யவ்வனைத் தன்றியு ஞாலத்துக்
கூலம் பகர்நர் குடிபுறந் தராஅக்
குடிபுறந் தருநர் பார மோம்பி
அழல்சென்ற மருங்கின் வெள்ளி யோடாது
மழைவேண்டு புலத்து மாரி நிற்ப
நோயொடு பசியிகந் தொரீஇப்
பூத்தன்று பெருமநீ காத்த நாடே.

**துறை - செந்துறைப் பாடாண்பாட்டு. வண்ணம் - ஒழுகுவண்ணம். தூக்கு - செந்தூக்கும் வஞ்சித்தூக்கும். பெயர் - பூத்த நெய்தல் (3.)**

(ப - ரை.) **பி**றழ்ந (1) எனவும் வித்துந (2) எனவும் தடுக்குந (4) எனவும் ஆர்ந (6) எனவும் வந்தன * வினைப்பெயர்த் திரிசொல்.

3 - 4. நெய்தல் எருமையின் நிறை தடுக்குநவுமென்றது நெய்தலானது அக்கரும்பு முதலாய † மற்றோரிரையின் பாங்கரிற் செல்லாது தன்னையே நின்று தின்னும்படி தான் போதவுண்ட எருமை நிரையைத் தடுக்கும் இடங்களுமென்றவாறு.

இச்சிறப்பானே இதற்கு, '**பூத்த நெய்தல்**' என்று பெயராயிற்று.

6. மூதா ஆம்பலார்நவுமென்றது புறத்துப் போய் இரை ‡ தெவிட்டாத முதிய ஆக்கள் துணங்கையாடிய இடத்து நின்று (5) ஆம்பலையே தின்னும் இடங்களுமென்றவாறு.

என்றது பெருக ஆம்பல் சூடித் துணங்கையாடுவாரை உடையனவென அவ்விடங்களின் செல்வச் சிறப்புக் கூறியவாறாயிற்று.

7. இமிழ் மருதென்றதற்குப் புள்ளிமிழ் மருதென்று ஒரு பெயர் வருவிக்க.

8. புனல்வாயில் - § வாய்த்தலை.

1 - 10. ஒலிதெங்கென்னும் பெயர்க்கு முன்னின்ற பெயர்கள் எண்ணும்மையோடு நின்றமையால் அவற்றையுடைய நாடென இரண்டாவதன் தொகையாய், அச்சொல் (?)...........அவற்றையெல்லாம் எழுவாயாக்க

---

* வினைப்பெயர் - வினையாலணையும் பெயர்.

† "செலல் விலங்குதேன்" (தக்க. 360) என்பதும், 'தன்னை விட்டுப் போகையை விலக்கும் தேன்' என்னும் அதன் உரையும் இதனோடு ஒப்பிடற்பாலன.

‡ தெவிட்டாத - உண்டு அசைபோடாத. 'இரைதேர மாட்டாத' என்றிருப்பின் நலம்.

§ வாய்த்தலை - வாய்க்காலின் தலைப்பு; வாத்தலை என இப்பொழுது வழங்கும்.

நாட்டிற்கு அவ்விடங்கள் சினையாகலின், நாடு கவினழியவென்னும் முதற் பயனிலையோடு * வழுவமைதியாக முடிக்க.

10 - 11. கூற்றடூஉ நின்ற யாக்கைபோல நாடு கவினழியவென மாறிக் கூட்டிக் கூற்றுவனாலே கொல்லப்படாநின்ற யாக்கை ஒருகாலைக்கு ஒருகால் அழகழியுமாறுபோல, நாடு அழகழியும்படியென உரைக்க.

இனி, மாறாதே போலும்படி யென, போலவென்பதனை வினையெச்ச நீர்மையாக்கி, போல்கின்றது மேல்வருகின்ற பாக்கமாக உரைப்பினும் அமையும். † இனி, கூற்றுவனை அட்டுநின்ற யாக்கையை உடையானொருவன் உளனாயினும் அவனைப்போல நீ சிவந்தென்றுரைப்பாரும் உளர்.

12. நீரழி பாக்கமென்றது ‡ வெள்ளத்தான் அழிவுபடினல்லாது பகை வரான் அழியாத பாக்கமென்றவாறு.

பாக்கமென்றது நெய்தனிலத்து ஊர்க்கேயன்றி, § "கட்கொண்டிக் குடிப்பாக்கத்து, நற்கொற்கை" (மதுரைக். 137-8) என்று வந்தமையான் ஒரோவழி $ அரசனிருப்புக்கும் பெயராமாகலின் ஈண்டு பாக்கமுடைய பேரூர்களெனப்பட்டது.

14. உடைபோகவெனத் திரிக்க.

17 - 9. மன்றத்து உள்ளம் அழிய ஊக்குநர் மிடல் தபுத்து உள்ளுநர் பனிக்கும் பாழென்றது அம்மன்றிலே போதற்கு உள்ளம் ¶ அழியச்செய்தே பின்னும் தம் கரும வேட்கையாற் போக மேற்கொண்டவருடைய வலியைக் கெடுத்தலானே பின்பு போக நினைப்பார் நடுங்குதற்குக் காரணமாகிய பாழென்றவாறு.

18. தபுத்து : தபுக்கவெனத் திரிக்க.

20. காடே கடவுள் மேனவென்றது நின் நாட்டுப் பெருங்காடான இடங்களெல்லாம் (முதற்காலத்துக்) கோயில்களான வென்றவாறு.

மேயினவென்பது மேனவென்று இடைக் குறைந்தது.

20 - 21. புறவு மகளிரொடு மள்ளர்மேனவென்றது சிறுகாடான இடங்களெல்லாம் நின்படையாளர்கள் மகளிரோடு உறையும் ‖ படைநிலைகளாயின வென்றவாறு.

---

* வழுவமைதி என்றது சினைப்பெயர்கள் முதற்பயனிலையோடு முடிந்தமையை.

† இப்பொருள் சிறப்புடையதன்று.

‡ "செந்நீர்ப் பூச லல்லது, வெம்மை யரிதுநின் னகன்றலை நாடே" (பதிற். 28 : 13 - 4), "தண்புனற் பூச லல்லது நொந்து, களைக வாழி வளவ வென்றுநின், முனைதரு பூசல் கனவினு மறியாது" (புறநா. 42 : 7-9) என்பவற்றை இவ்வுரை நினைப்பிக்கின்றது.

§ இங்கே காட்டிய பகுதிக்கு நச்சினார்க்கினியர், 'கள்ளாகிய உணவினையுடைய இழிந்த குடிகளையுடைய சீறூர்களையுமுடைய நன்றாகிய கொற்கை' என உரை வகுத்தார்.

$ அரசனிருப்பு - இராசதானி.

¶ அழியச் செய்தே - அழிந்துகொண்டிருக்கும்பொழுதே; இச்சொல் அழியச்சே என வழங்கும்.

‖ படைநிலை - படை தங்குமிடம்; இதனைப் பாடி என்றும், கைக்நிலை என்றும் வழங்குவர்.

22. ஆறே அவ்வனைத்தென்றது காடும் புறவும் அல்லாத பெருவழிகளும், ஆறலைகள்வரும் * பிற இடையூறுமின்றி முன்சொன்ன கடவுளும் மள்ளரும் உறையும் இடமாயின வென்றவாறு.

அனைத்தென்னுது அவ்வனைத்தென்று சுட்டு இரட்டித்தது அந்த அந்தத் தன்மையதென முன்னின்றவற்றின் பன்மை தோற்றற்கென்பது.

23. தாராவென்பது தராவெனக் குறுகிற்று.

24. குடிபுறந்தருநரென்றது தம் † கீழ்க்குடிகளாகிய வரிசையாளரைப் புறந்தரும் மேற்குடிகளாகிய காணியாளரை.

பாரமோம்பி (24) நீ காத்த (28) என மாறிக் கூட்டுக.

வெள்ளி யோடாமல் (25) எனவும் பசிபிணித்தொருவ (27) எனவும் திரிக்க.

22 - 6. இனி, ஆறு முன் சொன்ன அவ்வனைத்தாவதுமன்றி ஆறலை கள்வரின்றிக் கூலம் பகர்வார் இயங்கும்படியான வழக்காலே அந்தக் கூலம் பகர்வார் குடிகளைப் புறந்தந்தென்றும், குடிபுறந்தருநர் பாரத்தை ஓம்பி மழைவேண்டு புலத்து மாரிநிற்பவென்றும், கூலம்பகர்நர் குடிபுறந்தருதலை ஆற்றின் தொழிலாகவும் குடிபுறந்தருநர் பாரமோம்புதலை மழையின் தொழிலாகவும் கூட்டி உரைப்பாரும் உளர்.

கூற்றடூஉ நின்ற யாக்கைபோல (11) நாடுகவினழிய நாமந்தோற்றி (10) நீ சிவந்திறுத்த நீரழி பாக்கங்கள் (12) கழனி புல்லெனக் (13) காருடை போகக் (14) கழுது ஊர்ந்து இயங்கப் (15) பாழாயின (19); நீ காத்த நாட்டிற் (28) காடு கடவுளான் மேவப்பட்டன (20); அந்நாட்டுப்புறவுகள் மள்ளரான் மேவப்பட்டன (21); அந்நாட்டு ஆறு அவ்வனைத்தாயிற்று; அன்றியும் (22) கூலம்பகர்நர் குடிபுறந்தராக் (23) குடிபுறந்தருநர் பாரமோம்பி (24) நீ காத்த நாடு (28), மழை வேண்டிய புலத்து மாரி நிற்ப (26) நோயொடு பசியிகந்தொருவப் (27) பூத்தது (28) எனக் கூட்டி வினைமுடிவு செய்க.

இதனாற் சொல்லியது அவன் வென்றிச் சிறப்பும் தன் நாடுகாத்தற் சிறப்பும் உடன் கூறியவாறாயிற்று.

'தொறுத்த' (1) என்றும், 'ஏறுபொருத' (2) என்றும், 'ஒலிதெங்கின்' (7) என்றும், 'புனல்வாயில்' (8) என்றும் இருந்த நான்கடியும் வஞ்சியடியான் வந்தமையான், வஞ்சித்தூக்குமாயிற்று.

(கு-ரை) 1-10. பகைவர் நாட்டின் பழையநிலை கூறப்படும்.

1. தொறுத்த வயல் - ஆட்டுக்கிடைகட்டிய வயல்கள்; தொறு - ஆடு. ஆரல் பிறழ்ந - தம்பால் நீர் நிரம்பி நிற்றலின், ஆரல்மீன் உகளுவதற்கு இடமாயிருப்பவை.

2. ஏறு தம்முட் பொருதமையினாலே வயல் சேறு பட்டு உழவேண்டாதனவாயின; செறு - வயல் (பெரும்பாண். 210-11.)

* பிற இடையூறுகளாவன: இடி வீழ்ச்சி, அரவு, காட்டுவிலங்கு முதலியவற்றால் வருந்துன்பங்கள் (பெரும்பாண். 39 - 43; சிலப். 13 - 5 - 9.)

† கீழ்க்குடிகளென்றது உழுதுண்ணும் வேளாளரையும், மேற்குடிகளென்றது உழுவித்துண்ணும் வேளாளரையும் குறித்தன. வரிசையாளர் - வாரம் முதலிய பகுதி தருபவர்; காணியாளர் - நிலத்துக்குரியோர். இவ்விரு வகையினரையும், "வீழ்குடி யுழவர்" (சிலப். 5 : 43) என **இளங்கோவடிகளும்** குறித்தனர்.

3. பாத்தியின்கண் பூத்த நெய்தல். கரும்பின் பாத்தி ; குறுந். 262: 7, அடிக்.

4. எருமையின் நிரை - எருமையின் வரிசை.

5 - 6. ஆரவாரம் மிக்க துணங்கைக்கூத்தை மகளிர் ஆடிய இடங்களில் அவர்கள் அணிந்து வீழ்த்திய ஆம்பல்மலர்களை வளைந்த தலையையுடைய முதிர்ந்த பசுக்கள் உண்டன. துணங்கை ; "மகளிர் தழீஇய துணங்கை யானும்" (குறுந். 31 : 2) என்பதன் உரை முதலியவற்றைப் பார்க்க.

7. ஒலித்தல் - தழைத்தல் என்பதற்கு மேற்கோள் (சீவக. 653, ந.)

7 - 10. ஒலி தெங்கு - தழைத்த தென்னை. இமிழ் மருது - கிளிமுதலிய பறவைகள் ஒலிக்கின்ற மருதமரம். வைப்பு-ஊர்கள். கவின்-அழகு. நாமம் - அச்சம்.

1-10. பிறழ்ந, வித்துந, தடுக்குந, ஆர்ந: வினையாலணையும் பெயர்கள். பிறழ்ந முதலியவற்றையும், தெங்கையும், மருதையும், பொய்கையையும், வைப்பையும் உடைய நாடு.

11-9. பகைவர் நாடு அழிந்தபின் நின்ற நிலை கூறப்படும்.

11. கூற்றால் அடப்பட்டு நின்ற உடலைப்போல ; என்றது பிணத்தை.

12. சிவந்து - கோபித்து. சீரழி பாக்கம் : உரையைப் பார்க்க ; தமது இயல்பான சீர்மை அழிந்த ஊர்கள் எனினும், சீர்நிலைகள் அழிந்த ஊர்கள் எனினும் ஆகும். சிவப்பென்னும் உரிச்சொல் வெகுளிப் பொருளில் வருவதற்கு மேற்கோள் (தொல். உரி. 74, ந.)

13. புல்லென - பொலிவழிய.

14. திரிந்த காயையுடைய விடத்தேரையென்னும் முள்மரத்தோடு கரிய உடைமரமும் வளரப்பெற்று ; விடத்தர், உடை : முள் மரவகைகள். விடத்தர் என்பது விடத்தேர், விடத்தேரை, விடத்தே தொடரி எனவும் வழங்கும் (பெரும்பாண். 184 - 5, ந. அடிக்.) போகல் என்னும் உரிச்சொல் நெடுமையை உணர்த்துதற்கு மேற்கோள் (தொல். உரி. 19, 91, ந.)

15. 'கவைத்தாட் பேய்மகள்' என்பது பெருவழக்கு. பேய்மகள் பேயை ஊர்ந்து செல்ல. பேய்மகளும் கழுதும் பரந்து செல்ல எனினும் ஆம்.

16. ஊரிய - பரந்த. நெருஞ்சியையுடைய பறந்தலை, நீறு பறந்தலை என்க ; நீறு - புழுதி. பறந்தலை - வறுங்களம்.

17. சாணம் இல்லையான, ஆரவாரம் அழிந்த மன்றம் ; மன்றம் - பசுக்கள் தங்கும் இடம். முன்பு தாதெரு நிறைந்து கலிமிக்க மன்றமாக இருந்தது இப்பொழுது அவ்விரண்டும் இலதாயிற்று.

18. உள்ளம் - மனவெழுச்சி. மிடல் தபுத்து - வலியை அழித்து.

19. பனிக்கும் - நடுங்கும்.

11 - 9. பாக்கம் யாக்கைபோல, போகி, இயங்க, பறந்தலையையும் மன்றத்தையுமுடைய பாழ்நிலமாயின ; உரையாசிரியர் வேறு முடிபு கூறுவர்.

20 - 28. சேரமன்னனாற் பாதுகாக்கப்பட்ட நாட்டின் நிலை கூறப்படும்.

20. காடு - பெருங்காடு. மேன = மேயின - விரும்பப்பட்டன. புறவு - சிறுகாடு.

21. மள்ளர் - வீரர்.

20 - 21. சீவக. 2578, ந. மேற்.

22. ஆறு - பெருவழி. அவ்வனைத்து : முற்று.

23. கூலம் பகர்நர் - நெல் முதலிய பண்டங்களை விற்கும் வணிகர். புறந்தரா - பாதுகாத்து.

24. குடிபுறந்தருநரென்றது வேளாளரை. பாரம் இங்கே குடும்பத்தைக் குறித்தது ; " பகடுபுறந் தருநர் பார மோம்பி " (புறநா. 35 : 32.)

25. அழல் - செவ்வாய். வெள்ளி - சுக்கிரன். செவ்வாயும் சுக்கிரனும் சேர்ந்தால் மழை இலதாகும் என்பது சோதிட நூற்றுணிபு.

26. புலம் - இடம். மாரி நிற்ப - மழை பெய்ய.

27. நோயும் பசியும் நீங்கல் ஒரு நாட்டுக்கு இலக்கணம் (குறள். 734 ; சிலப். 5 : 72 ; மணி. 1 : 71.) இகந்து ஒரீஇ - விட்டு நீங்க ; ஒரீஇ : எச்சத்திரிபு.

28. பூத்தன்று - பொலிவு பெற்றது.

23 - 8. புறந்தரா, ஓம்பி, காத்த நாடு, ஓடாது நிற்ப ஒரீஇப் பூத்தன்று.

மு. ' இதனுள் மறத்திற் சென்று நாட்டை அழித்தவாறும், அறத்திற் றிரிந்த வேந்தனை அழித்து அவன் நாட்டைக் குடியோம்பிக் காத்தவாறும் கூறிற்று ' (தொல். புறத். 20, ந.)

(பி-ம்.) 1. தொறுத்தகு நீள்வயல். 16. ஊறிய நெருஞ்சி. 24. குடிபுறந்தாரா. (௩)

---

(கச) நிலநீர் வளிவிசும் பென்ற நான்கின்
அளப்பரி யையே
நாள்கோ டிங்கண் ஞாயிறு கனையழல்
ஐந்தொருங்கு புணர்ந்த விளக்கத் தனையை
போர்தலை மிகுத்த வீரைம் பதின்மரொடு
துப்புத்துறை போகிய துணிவுடை யாண்மை
அக்குர னனைய கைவண் மையையே
அமர்கடந்து மலைந்த தும்பைப் பகைவர்
போர்பீ டழித்த செருப்புகன் முன்ப
கூற்றுவெகுண்டு வரினு மாற்றுமாற் றலையே
எழுமுடி கெழீஇய திருஞெம ரகலத்து
நோன்புரித் தடக்கைச் சான்றோர் மெய்ம்மறை
வா னுறை மகளிர் நலனிகல் கொள்ளும்
வயங்கிழை கரந்த வண்டுபடு கதுப்பின்
ஒடுங்கீ ரோதிக் கொடுங்குழை கணவ

பல்களிற்றுத் தொழுதியொடு வெல்கொடி நுடங்கும்
படையே ருழவ பாடினி வேந்தே
இலங்குமணி மிடைந்த பொலங்கலத் திகிரிக்
கடலக வரைப்பினிப் பொழின்முழு தாண்டநின்
முன்றிணை முதல்வர் போல நின்றுநீ
கெடாஅ நல்லிசை நிலைஇத்
தவாஅ லியரோவிவ் வுலகமேர் டுடனே.

**துறை - செந்துறைப்பாடாண்பாட்டு. வண்ணம் - ஒழுகுவண்ணமும் [சொற்சீர்வண்ணமும்.**

**தூக்கு - செந்தூக்கு. பெயர் - சான்றோர் மெய்ம்மறை (12.)**

(ப - ரை.) 1. பூதங்கள் ஐந்தையும் எண்ணாது தீயை ஒழித்தது மேல் விளக்கத்துக்கு உவமமாக (4) எண்ணுகின்றவற்றோடு கூட்டவேண்டி யென்பது.

3. ஈண்டுக் கோளென்றது விளக்கமில்லா இராகுகேதுவென்னும் இரண்டும் நீக்கி நின்ற ஏழினும், சிறப்புப்பற்றி வேறு எண்ணப்பட்ட திங்கள் ஞாயிறென்னும் இரண்டும் நீக்கி, நின்ற ஐந்தையுமென்பது.

4. ஐந்தென்று தொகைகூறியது நாள்கோளென்னும் அவற்றைத் * தொகைக்கூற்றின் ஒரோவொன்றாக்க வென்பது.

11. எழுமுடியென்பது ஏழு அரசரை வென்று அவர்கள் ஏழுமுடி யானுஞ் செய்ததோர் ஆரமாம்.

12. நோன்புரித் தடக்கையென்றது வலி † பொருந்துதலையுடைய தடக்கையென்றவாறு.

ஈண்டுச் ‡ சான்றோரென்பது போரில் அமைதியுடைய வீரரை. மெய்ம் மறை - மெய்புகு கருவி ; மெய்ம்மறையென்றது அச்சான்றோர்க்கு மெய்புகு கருவிபோலப் போரிற் புக்கால் வலியாய் முன்னிற்றலின்.

இச்சிறப்பு நோக்கி இதற்கு, '**சான்றோர் மெய்ம்மறை**' என்று பெயரா யிற்று.

13. வானுறைமகளிர் நலன் இகல் கொள்ளுமென்றது வானரமகளிர் அழகிற்கு அவளையொப்பேன் யானே யானேயென்று தங்களில் மாறு கொள்ளுமென்றவாறு.

15. ஓடுங்கீரோதி - § சுருள்.

---

* நாளும் ஏனைக் கோளும் பலவாக இருப்ப அவற்றை ஒவ்வொன்றாக நிறுத்தித் திங்கள் முதலியவற்றோடு சேர்த்து ஐந்தென்று எண்ணியது அவற் றின் தொகுதியைக் கருதியதென்றபடி.

† புரித்தடக்கையென ஒற்று மிகுதலின் முதனிலைத் தொழிற் பெய ராக்கி, பொருந்துதலையுடைய தடக்கையென உரை வகுத்தார்.

‡ வீரர்களைச் சான்றோரென்று கூறும் மரபு, "தானைச் சான்றோர்" (பதிற். 82 : 13), "தேர்தர வந்த சான்றோர்", "பல்சான் றீரே பல்சான் றீரே" (புறநா. 63 : 5, 301 : 1) என்பவற்றாலும் உணரப்படும்.

§ சுருள் - ஐம்பாலுள் ஒன்று (பு. வெ. 223, உரை.)

நிலமுதற் பூதம் நான்கும்போலப் (1) பெருமை அளத்த லரியை (2); நாண்மீன்முதல் (3) ஐந்தையும் விளக்கத்தால் ஒப்பை (4); கைவண்மையால் அக்குரனென்பவனை யொப்பை (7); அன்றி முன்ப (9), நின்வலி இருக்கும்படி சொல்லிற் கூற்று வெருண்டுவரினும் அதனையும் மாற்றும் வலியையுடையை (10); ஆதலாற் சான்றோர் மெய்ம்மறை (12), கொடுங்குழை கணவ (15), படையேருழவ, பாடினி வேந்தே (17), நின்குடி முன் முதல்வர்போல நின்று (20) நல்லிசையை நிலைப்பித்து (21) இவ்வுலகத்தோடு கூடக் கெடாதொழிவாயாக (22) என வினைமுடிவு செய்க.

இதனாற் சொல்லியது அவன் பல குணங்களையும் ஆற்றலையும் ஒருங்கு கூறி வாழ்த்தியவாறாயிற்று.

'அளப்பரியையே' (2) எனச் சொற்சீரடி வந்தமையாற் * சொற்சீர் வண்ணமுமாயிற்று; ஈண்டுச் சொற்சீரென்றது அளவடியிற் குறைந்தும் வஞ்சியோசையன்றி அகவலோசையாயும் வரும் அடியினை.

(கு-ரை.) 1 - 2. நிலத்தின் பரப்பும் நீரின் ஆழமும் வளியின் செலவும் விசும்பின் ஓக்கமும் அளப்பரியன வாதலின், அவற்றை உவமை கூறினர்; பல்வகைப் பெருமைக்கு அவற்றைக் கூறுதல் மரபு; பதிற். 24 : 15-6; "இருமுந்நீர்க் குட்டமும், வியன்ஞாலத் தகலமும், வளிவழங்கு திசையும், வறிது நிலைஇய காயமும், என்றாங், கவையளந் தறியினு மளத்தற் கரியை" (புறநா. 20 : 1 - 5); "நிலத்தினும் பெரிதே வானினு முயர்ந்தன்று, நீரினு மாரள வின்றே" (குறுந். 3 : 1 - 2); "மண்ணினும் வானினு மற்றை மூன்றினும், எண்ணினும் பெரியதோ ரிடர்" (கம்ப. அயோமுகி. 99.) பகைவர் பிழைசெய்தலைப் பொறுத்தலில் நிலத்தைப் போன்றும், அவர் வழிப்படின் அவரை அளித்தலில் நீரைப்போன்றும், சதுரங்க வலியிலும் மனவலியிலும் வளியைப் போன்றும், ஆராய்ச்சியின் விரிவில் விசும்பைப்போன்றும் அவ்வத்தன்மையின்கண் அளத்தற்கு அரியையென உவமையைப் பொருத்திக்கொள்க (புறநா. 2 : 1 - 8, உரை.)

உம்மையும் உருபும் விரித்தற்குப் பொருந்தாது எழுவாயாய் நான் கென்னும் தொகைச் சொற்பயனிலை கொண்டு நின்றது (தொல். இடை. 43, ந.)

3 - 4. நாள் - நட்சத்திரங்கள். கனை அழல் - மிக்க தீ.

பல பொருளினும் உளதாகிய கவின் ஓரிடத்துவரின், அதற்கு உவமையாமென்பதற்கு மேற்கோள் (தொல். உவம. 24, இளம்.)

1 - 4. இதில் எண்ணுவண்ணம் வந்தது (இ. வி. 757.)

5 - 7. ஈரைம்பதின்மர் - துரியோதனன் முதலிய கௌரவர் நூற்றுவர்; இது தொகைக் குறிப்புப் பெயர். துப்பு - துணைவலி; "மூவரு ளொருவன் றுப்பா கியரென" (புறநா. 122 : 5.) அக்குரன் - பாரதத்தில் கூறப்படுபவனும், தலையெழு வள்ளல்களுள் ஒருவனுமாகிய அக்குரன்போலும்; கர்ணனென்று நினைத்தற்கும் இடமுண்டு; ஆதாரம் கிடைக்கவில்லை.

8 - 9. கடந்து-வஞ்சியாது எதிர்நின்று. தும்பை : அதிரப்பொருவோர் சூடும் பூ. பகைவரது போரையும் பீட்டையும் அழித்த; பீடு - பெருமை. செரு புகல் முன்ப - போரை விரும்புகின்ற வலியையுடையோய். பகைவர் போர்பீடழித்தும் மேலும் போரை விரும்புபவனென்றவாறு (புறநா. 31 : 9.)

---

* சொற்சீர்வண்ணம் பாஅவண்ணமென்றும் கூறப்படும் (தொல். செய்யுள். 213, பேர்.) சொற்சீரடியின் இலக்கணம் : தொல். செய்யுள். 123, பேர்.

10. வெருளியிற் கூற்றம் சிறத்தலின், 'கூற்று வெருண்டு வரினும்' என்றார்; "கால னனைய கடுஞ்சின முன்ப" (பதிற். 39 : 8) என்பதன் குறிப்பைப் பார்க்க; "மாற்றருங் கூற்றம்" (தொல். புறத். 24.) ஆதலின் அவனை இங்கே கூறினார். கூற்றம் வரினும் மாற்றும் ஆற்றல் : கலி. 43 : 10; குறள். 765; சீவக. 1114.

11. ஞெமர்தல் - பரத்தல். அகலம் - மார்பு. எழுமுடி கெழீஇய அகலம் : பதிற். 16 : 17, 40 : 13, 45 : 6; சிலப். 28 : 169.

பகைவர் முடிப்பொன்னால் ஆரம் செய்து அணிவதோடு அதனால் கழல் செய்து புனைதலும் உண்டு (புறநா. 40 : 1 - 4.)

12. சான்றோர் - வீரர் (பதிற். 82 : 13.) மெய்ம்மறை - கவசம் போன்றவனே; விளி.

13 - 5. சேரன் பெருந்தேவியின் எழில் கூறப்படும்.

14. மிகையெனக் கருதி இழை அணியப்படவில்லை; இழை இங்கே தலைக்கலன். கூந்தலின் இயற்கை மணங்கருதி வண்டுகள் மொய்த்தன.

15. மகளிரைச் சார்த்து வகையாற் பாடுதலன்றித் தனித்துப் பாடுதல் மரபன்றாதலின் இங்கே சேரனொடு சார்த்தி அவன் மாதேவியைச் சிறப்பித்தார்; "மக்களுட் பெண்பாலைப் பாடுதல் சிறப்பன்மையின், 'செயிர்தீர் கற்பிற் சேயிழை கணவ' (புறநா. 13 : 6) என்றாற்போலச் சிறுபான்மை ஆண்மக்களொடு படுத்துப்பாடுப" (தொல். புறத். 26, ந.) இந்நூலுள் பின்னரும் இங்ஙனம் வருதல் காண்க; பதிற். 24 : 11, 38 : 10, 42 : 7, 55 : 1, 61 : 4, 65 : 10, 70 : 16, 88 : 36, 90 : 50.

14 - 5. "தன்னிறங் கரந்த வண்டுபடு கதுப்பின், ஒடுங்கீ ரோதி யொண்ணுதல்" (பதிற். 81 : 27 - 8.)

16 - 7. தொழுதி - தொகுதி. நுடங்கும்-அசையும். படை ஏர் உழவ - படையை ஏராக உடைய உழவ. பாடினிவேந்து; விறலியருக்கு ஆபரணங்களை அளித்தலின் இங்ஙனம் கூறினார் (பதிற். 17 : 14.)

18. மணிகள் இடையிடையே அழுத்தப்பெற்ற பொன்னணிகளால் விளங்கும் சக்கரம்; என்றது ஆக்ஞா சக்கரத்தை.

19. கடலக வரைப்பு - பூமி. இப்பொழிலென்றது நாவலந்தீவை.

18- 9. திகிரியால் ஆண்ட.

20. முன் திணை முதல்வர் - குலத்தில் முன் இருந்த முதல்வர்; திணை - குலம்.

முன்னோர் வழி யொழுகுதல் : மதுரைக். 192; புறநா. 58 : 25.

21. நல்லிசையை நிலைபெறச் செய்து (பதிற். 86 : 5.)

22. தவாஅலியர் - கெடாமல் இருப்பாயாக.

மு. இது பரவற்கண் வந்த செந்துறைப் பாடாண் பாட்டு; இதனை வாழ்த்தியலென்பர் (தொல். புறத். 27, ந)

(பி - ம்.) 4. வந்தொருங்கு. 10. வரினும் பாற்றும். 12. சான்றோர் மேமலறை. 14. வண்டுபடு துப்பின். (ச)

(கரு) **யா**ண்டுதலைப் பெயர வேண்டுபுலத் திறுத்து
முனையெரி பரப்பிய துன்னருஞ் சீற்றமொடு
மழைதவழ்பு தலைஇய மதின்மர முருக்கி
நிரைகளி றொழுகிய **நிரைய வெள்ளம்**
பரந்தாடு கழங்கழி மன்மருங் கறுப்பக்
கொடிவிடு குரூஉப்புகை பிசிரக் கால்பொர
அழல்கவர் மருங்கி னுருவறக் கெடுத்துத்
தொல்கவி னழிந்த கண்ணகன் வைப்பின்
வெண்பூ வேளையொடு பைஞ்சுரை கலித்துப்
பீரிவர்பு பரந்த நீரறு நிறைமுதற்
சிவந்த காந்தண் முதல்சிதை மூதிற்
புலவுவில் லுழவிற் புல்லாள் வழங்கும்
புல்லிலை வைப்பிற் புலஞ்சிதை யரம்பின்
அறியா மையான் மறந்துதுப் பெதிர்ந்தநின்
பகைவர் நாடுங் கண்டுவந் திசினே
கடலவுங் கல்லவும் யாற்றவும் பிறவும்
வளம்பல நிகழ்தரு நனந்தலை நன்னாட்டு
விழவறு பறியா முழவிமிழ் மூதூர்க்
கொடிநிழற் பட்ட பொன்னுடை நியமத்துச்
சீர்பெறு கலிமகி ழியம்பு முரசின்
வயவர் வேந்தே பரிசிலர் வெறுக்கை
தாரணிந் தெழிலிய தொடிசிதை மருப்பிற்
போர்வல் யானைச் சேர லாத
நீவா ழியரிவ் வுலகத் தோர்க்கென
உண்டுரை மாறிய மழலை நாவின்
மென்சொற் கலப்பையர் திருந்துதொடை வாழ்த்த
வெய்துற வறியாது நந்திய வாழ்க்கைச்
செய்த மேவ லமர்ந்த சுற்றமோ
டொன்றுமொழிந் தடங்கிய கொள்கை யென்றும்
பதிபிழைப் பறியாது துய்த்த லெய்தி
நிரைய மொரீஇய வேட்கைப் புரையோர்
மேயின ருறையும் பலர்புகழ் பண்பின்
நீபுறந் தருதலி னோயிகந் தொரீஇய
யாணர்நன் னாடுங் கண்டுமதி மருண்டனென்

மண்ணுடை ஞாலத்து மன்னுயிர்க் கெஞ்சா
தீத்துக்கை தண்டாக் கைகடுந் துப்பிற்
புரைவயிற் புரைவயிற் பெரிய நல்கி
ஏம மாகிய சீர்கெழு விழவின்
நெடியோ னன்ன நல்லிசை
ஒடியா மைந்தநின் பண்புபல நயந்தே.

**துறை - செந்துறைப் பாடாண்பாட்டு. வண்ணம் - ஒழுகுவண்ணம். தூக்கு - செந்தூக்கு. பெயர் - நிரையவெள்ளம் (4.)**

(ப - ரை.) நீ சீற்றமொடு (2) அழல்கவர் மருங்கின் உருவறக் கெடுத்து (7) என முடிக்க.

4. நிரையவெள்ளமென்றது பகைவர்க்கு * நிரையபாலரைப்போலும் படைவெள்ளமென்றவாறு; நிரையமென்றது நிரையத்து வாழ்வாரை.

இச்சிறப்பானே இதற்கு, '**நிரைய வெள்ளம்**' என்று பெயராயிற்று.

5. மன்மருங்கறுப்பவென்றது மன் மருங்கறுப்பவேண்டி யென்றவாறு.

7. கெடுத்தென்பதனைக் கெடுக்கவெனத் திரிக்க.

தொல்கவினழிந்த கண்ணகன் வைப்பினையும் (8) புல்லாள் வழங்கும் (12) புல்லிலைவைப்பினையுமுடைய புலஞ்சிதை (13) நாடு (15) என முடிக்க.

8. தொல்கவினழிந்த வைப்பென்றது சூடுண்டு அழிந்த ஊர்களை.

புல்லிலைவைப்பென்றது குடிபோய்ப் பாழ்த்த ஊர்களை.

9. சுரை கலிக்கவெனத் திரிக்க.

10 - 11. நிறைமுதற் காந்தளெனக் கூட்டுக.

11 - 3. மூதில்லையுடைய புல்லிலைவைப்பெனக் கூட்டுக.

13. புல்லிலை வைப்பென்றது புல்லிய இலைகளாலே †வேயப்பட்ட ஊரென்றவாறு; இதனை, 'நாலாக் கலிங்கம்' (பதிற். 12 : 21) என்றது போலக் கொள்க.

12. புல்லாளென்றது புல்லிய தொழிலையுடைய ஆறலை கள்வரை.

அரம்பிற் (13) பகைவர் (15) என முடிக்க.

13. அரம்பென்பது குறும்பு.

20 - 21. சீர்பெறு கலிமகிழியம்பும் முரசின் வயவரென்றது வெற்றிப்புகழ்பெற்ற மிக்க மகிழ்ச்சியானே ஒலிக்கின்ற முரசினையுடைய வீரரென்றவாறு.

19 - 20. நியமத்து இயம்புமென முடிக்க.

24 - 6. நீ வாழியரிவ்வுலகத்தோர்க்கெனத் திருந்துதொடை வாழ்த்தவென முடித்து, இவ்வுலகத்தோர் ஆக்கத்தின்பொருட்டு நீ வாழ்வாயாகவெனச் சொல்லித் திருந்திய நரப்புத்தொடையினையுடைய யாழொடு வாழ்த்தவென வுரைக்க.

* நிரையம் - நரகம். † வேயப்பட்ட வீடுகளையுடைய ஊர்.

தொடையொடெண விரியும் ஒடு வேறுவினையொடு.

25 - 6. மழலைநாவினையும் * மென்சொல்லினையுமுடைய கலப்பையரெனக் கொள்க.

வெய்துறவறியாது நந்திய வாழ்க்கையினையும் (27) ஒன்று மொழிந்து அடங்கிய கொள்கையினையும் (29) நிரையமொரீஇய வேட்கையினையும் உடைய புரையோர் (31) செய்த மேவலமர்ந்த சுற்றத்தோடு (28) பதி பிழைப்பறியாது துய்த்தலெய்தி (30) மேயினருறையும் (32) நாடெண (34) மாறிக் கூட்டியுரைக்க.

28. செய்த மேவலமர்ந்த சுற்றமென்றது (சுற்றத்)தலைவர் செய்த காரியங்களைப் பின் சிதையாது தாம் அவற்றை மேவுதலையுடைய அத்தலைவரொடு மனம்பொருந்தின சுற்றமென்றவாறு.

செய்தனவென்பது கடைக்குறைந்தது.

ஈத்துக்கை தண்டா (36) மைந்த (40) என முடிக்க.

37. †புரைவயிற் புரைவயிற் பெரிய நல்கியென்றது உயர்ந்த தேவாலயமுள்ள இடங்களிலே உயர்ந்த ஆபரணம் உள்ளிட்டவற்றைக் கொடுத்தென்றவாறு.

நின் பகைவர் நாடும் கண்டுவந்தேன் (15); அதுவேயன்றி வேந்தே, வெறுக்கை (21), சேரலாத (23), நீ புறந்தருதலின், நோயிகந்தொரீஇய நின் (33) நாடும் கண்டு மதிமருண்டேன் (34); இவை இரண்டும் காண வேண்டின காரணம் யாதெனின், மைந்த, நின் பண்புபலவற்றையும் காண நயந்து (40) என வினைமுடிவு செய்க.

இதனாற்சொல்லியது அவன்வென்றிச் சிறப்பும் தன் நாடுகாத்தற்சிறப்பும் உடன்கூறியவாறாயிற்று.

(கு - ரை.) 1. யாண்டு தலைப்பெயர - ஓராண்டு செல்ல. வேண்டு புலத்து இறுத்து - தான் அழிக்கவேண்டிய நாட்டிற் சென்று தங்கி (**மதுரைக்**. 234, **ந**.)

1 - 2. எரி பரப்புதல்: இதனை, 'எரி பரந்தெடுத்தல்' என்னும் துறையின்பாற் படுத்துவர் (**பதிற்**. 25 : 7, 71 : 9 - 10; **மதுரைக்**. 126, 154 - 6; **கலி**. 13 : 1 - 2; **புறநா**. 6 : 21 - 2, 7 : 8 - 9, 16 : 17, 23 : 10 - 11.)

3. தலைஇய - பெய்த; இது மதிலுக்கு அடை. மதின்மரம் - கணைய மரம்.

3 - 4. முருக்கி - அழித்து. கணைய மரத்தைக் களிறுகள் முருக்கின. யானை கொம்பால் இடிக்கும்பொழுது மதிற்கதவுகளுக்குப் பாதுகாப்பாக அவற்றின் பின்னே அமைக்கப்படுவது கணைய மரம் (**பதிற்**. 16 : 5 - 8.)

4. களிறொழுகிய நிரைய வெள்ளம் - யானைகள் வரிசையாகச் சென்ற, நரகபாலரைப் போன்ற படை. படையில் யானை தலைமையுடைய தாதலின் அதனை எடுத்துக் கூறினர்; "யானை யுடைய படை" (**இனியவை**. 5); கஜரததுரகபதாதி யென்பது வழக்கு. நிரைய வெள்ளம்: "நிரைய வொள்வா ளிளையர் பெருமகன்" (**குறுந்**. 258 : 6); "நிரையத் தானை"[2] (**சிலப்**. 26 : 37.)

---

* மென்சொல்: இசைவல்லோரது மொழியும் மென்மையாக இருக்கும்; "மென்மொழி மேவல ரின்னரம் புளர" (**முருகு**. 142.)

† புரையென்பது உயர்வைக்குறிப்பதாதலின் புரைவயின் என்பதற்கு உயர்ந்த தேவாலயங்கள் என்று பொருளுரைத்தார்.

5. பரவி ஆடுகின்ற கழங்குகள் அழிதற்குக் காரணமான அரசர்களின் குலத்தை முற்றக் கெடுப்பதற்கு. கழங்கு அழிதலாவது எண்ணுதற்குக் கருவியாகவுள்ள கழங்குகள் பொருளின் மிகுதியால் போதாவாதல். இங்கே பகையரசர்களின் மிகுதிபற்றிக் கழங்கு அழிதல் கூறினர். கழங்கு - கழற்சிக்காய். எண்ணுதற்கு இது கருவியாதல், "எல்லா மெண்ணி னிடு கழங்கு தபுந" (பதிற். 32 : 8) என்பதனாலும் அறியப்படும்; இவ்வழக்கம் இன்னும் மலைநாட்டில் உள்ளது.

6. கொடி - தீக்கொழுந்து. பிசிர - சிறிது சிறிதாகச் சிதறும்படி (பதிற். 25 : 7.)

7. உரு அற - நாட்டின் பழைய உருவம் கெடும்படி. 8. வைப்பு - ஊர்கள்.

9. வேளை - ஒரு செடி. சுரை - சுரைக்கொடி. கலித்து - தழைத்து வளர; எச்சத் திரிபு. அழிந்த நாட்டில் வேளையும் சுரையும் படர்தல்: "வேரறுகு பம்பிச் சுரைபரந்து வேளைபூத், தூரறிய லாகா கிடந்தனவே .........முசிரியார் கோமான், நகையிலைவேல் காய்த்தினர் நாடு" (முத்.)

10. பீர் இவர்பு - பீர்க்கங் கொடி ஏறி. நிறைமுதல் - நீர்ச்சாலினிடத்தில் (சீவக. 69, ந. மேற்.)

11. காந்தள் முதல்-காந்தட்கிழங்கு; நீரற்றமையின் அது சிதைந்தது

12. புலவு வில் - எய்த அம்பினை மீட்டும் தொடுத்தலின் புலால் நாற்றத்தை யுடைய வில் (மதுரைக். 142, ந.) வில் உழவு - விற்றொழிலாகிய உழவு. புல்லாள் - வழிப்பறி செய்வோர்.

14. துப்பு எதிர்ந்த - வலியொடு மாறுபட்டெழுந்த (புறநா. 54 : 8.)

15. வந்திசின் - வந்தேன்; இசின் தன்மைக்கண் வந்தது (புறநா. 22 : 36, உரை.)

16. கடல - முத்து, பவளம் முதலிய நெய்தல் நிலத்துப் பொருள்கள்; கல்ல - மணி முதலிய குறிஞ்சி நிலத்துப் பொருள்கள்; யாற்ற - முல்லையிலும் மருதத்திலும் உள்ள பொருள்கள்.

18. விழவு அறுபு அறியா - விழாக்கள் நிற்றலை அறியாத; என்றும் விழாவுடையது என்றபடி (பதிற். 29 : 7, 30 : 20.) இமிழ் - ஒலிக்கின்ற.

19. பலவகைக் கொடிகளின் நிழலில் அமைந்த பொன்னை மிகுதியாக உடைய கடைவீதியின்கண். கொடிகள் இன்ன பொருளை விற்குமிடம் என்பதை அறிவுறுத்துவதற்குக் கட்டப்படுவன (மதுரைக். 365 - 6; பட்டினப். 167 - 8; சிலப். 14 : 216.)

21. பரிசிலர் வெறுக்கை - பரிசில் பெற வருவாருடைய செல்வமாக இருப்பவனே; "அந்தணர் வெறுக்கை" (முருகு. 263.)

22 - 3. தார் - கழுத்தில் அணிந்த மாலை (பெருங். 2. 2 : 197.) எழிலிய - அழகுபெற்ற (புறநா. 68 : 5.) தொடி சிதை மருப்பின்-பகைவரது மதிற்கதவத்தைப் பாய்ந்து அழித்தமையாலே பூண் சிதைந்த கொம்பை யுடைய; "கடிமதிற் கதவம் பாய்தலிற் றொடிபிளந்து, நுதிமுக மழுகிய மண்ணைவெண் கோட்டுச், சிறுகண் யானை" (அகநா. 24 : 11 - 3.)

24. இவ்வுலகத்தோர் வாழும்பொருட்டு நீ வாழ்வாயாக.

25 - 6. கள்ளையுண்டமையால் சொல் தடுமாறிய மழலை வார்த்தையைப் பேசும் நாவையும், மெல்லிய சொல்லையும், இசைக் கருவிகளைக் கொண்ட பையையுமுடைய பாணர் முதலியோர், குற்றமற்றுத் திருந்திய

நரப்புக் கட்டுக்களையுடைய யாழின் இசையோடு வாழ்த்துக்கூற. உண்டு உரை மாறுதல் : " உண்டுமகிழ் தட்ட மழலை நாவிற், பழஞ்செருக் காளர்" (மதுரைக். 668 - 9.) கலம் - யாழ் முதலியன. தொடை : இங்கே யாழ் ; ஆகுபெயர்.

27. வெய்துறவு - துன்பமுறுதலை. நந்திய - பெருகிய.

28. சுற்றமோடு - உறவினர்களோடு.

29. ஒன்று மொழிந்து - உண்மையையே சொல்லி. அடங்கிய கொள்கை - ஐம்புலன்களும் அடங்கிய கோட்பாட்டினையுடைய ; இது புரையோருக்கு அடை (புறநா. 191 : 6 - 7.)

30 - 31. இவனது செங்கோற் சிறப்பால் அவ்வூரை விட்டுச் செல்லாது தங்கித் தவத்தாலாய நுகர்ச்சியைப் பெற்று நரகத் துன்பத்தினின்றும் நீங்கிய, இவன் நாட்டிலேயே வாழவேண்டுமென்னும் விருப்பத்தையுடைய மேலோர் ; பெருங். 1. 40 : 386 - 8 - ஆம் அடிகளிலும் இக்கருத்து வந்துள்ளது.

32. மேயினர் – விரும்பி. உறையும் (32) நாடு (34) எனக் கூட்டுக.

33. புறந்தருதலின் - பாதுகாத்தலினால்.

34. யாணர் - புது வருவாயையுடைய.

35. மண்ணுடை ஞாலம் - மண் அணுக்கள் செறிதலையுடைய பூமி (புறநா. 2 : 1.) எஞ்சாது - குறையாமல்.

36. கொடுத்து நீங்காத கையினிடத்துள்ள மிக்க வன்மையினாலே. கைக்குத் துப்பாவது ஈகை. 38. ஏமம் - இன்பம்.

39 - 40. திருமாலைப் போன்ற, நல்ல புகழ் அழியாத வன்மையையுடையோய். புகழுக்குத் திருமாலை உவமை கூறுதல், "புகழொத் தீயே யிகழுந ரடுநனை" (புறநா. 56 : 13) என்பதனாலும் அதன் அடிக்குறிப்பாலும், " உரைசால் சிறப்பி னெடியோன் " (சிலப். 22 : 60) என்பதனாலும் உணரலாகும்.

மு. "யாண்டுதலைப் பெயர" என்னும் பதிற்றுப்பத்தும் அழிவு கூறிய இடம் அடுத்தூர்ந்கட்ட கொற்றத்தின் பாற்படும் (தொல். புறத். 8, ந.)

(பி - ம்.) 5. கழங்குவழி. 8. கவினிழந்த. 10. பீர்வாய் பரந்த. (ரு)

---

(கசு) கோடுறழ்ந் தெடுத்த கொடுங்க ணிஞ்சி
நாடுகண் டன்ன கணை துஞ்சு விலங்கற்
றுஞ்சுமரக் குழாஅந் துவன்றிப் புனிற்றுமகள்
பூணா வையவி தூக்கிய மதில
நல்லெழி னெடும்புதவு முருக்கிக் கொல்லு
பேன மாகிய நுனைமுரி மருப்பிற்
கடாஅம் வார்ந்து கடுஞ்சினம் பொத்தி
மரங்கொன் மழகளிறு முழங்கும் பாசறை
நீடினை யாகலிற் காண்குவந் திசினே
ஆறிய கற்பி னடங்கிய சாயல்

ஊடினு மினிய கூறு மின்னகை
அமிர்துபொதி துவர்வா யமர்த்த நோக்கிற்
சுடர்நுத லசைநடை யுள்ளலு முரியள்
பாய லுய்யுமோ தோன்ற ருவின்று
திருமணி பொருத திகழ்விடு பசும்பொன்
வயங்குகதிர் வயிரமோ டுறழ்ந்துபூண் சுடர்வர
எழுமுடி கெழீஇய திருஞெம ரகலத்துப்
புரையோ ருண்கட் டுயிலின் பாயல்
பாலுங் கொளாலும் வல்லோய்நின்
சாயன் மார்பு நனியலைத் தன்றே.

இதுவுமது.
பெயர் - துயிலின் பாயல் (18.)

(ப-ரை.) 1. கோடுறழ்ந்து எடுத்த கொடுங்கணிஞ்சியென்றது மலையுள்ள இடங்களிலே *அம்மலைதானே மதிலாகவும் மலையில்லாத இடங்களில் மதிலே அரணாகவும் இவ்வாறு மலையொடு மாறுபட எடுத்த வளைந்த இடத்தையுடைய புறமதிலென்றவாறு.

உறழவெனத் திரிக்க. 'கோடுபுரந்தெடுத்த' என்பது பாடமாயின், மதிலில்லாத இடங்களை மலை காவலாய்ப் புரக்கவெடுத்தவென்க.

2. நாடுகண்டன்ன கணைதுஞ்சு விலங்கலென்றது நெடுநாட்பட † அடைமதிற்பட்ட காலத்தே விளைத்துக் கோடற்கு வயலும் குளமும் உளவாகச் சமைத்துவைத்தமையாற் கண்டார்க்கு நாடுகண்டாற்போன்ற ‡ அப்புக் கட்டுக்கள் தங்கும் மலைபோன்ற இடைமதிலென்றவாறு.

விலங்கல் போறலின் விலங்கலெனப்பட்டது. நாடுகண்டாலொப்பது அம்மதிலையடைந்தவிடமென்னின், அவ்விடவணுமைபற்றி அதன் உவமையை அம்மதில்மேலதாகக் கூறிற்றெனக் கொள்க.

3. துஞ்சு மரமென்றது மதில்வாயிலில் தூங்கும் கணையமரங்களை; இனிக் கழுக்கோலாக நாட்டிய மரமென்பாரும் உளர்.

4. ஐயவியென்றது கதவிற்குக் காவலாகப் புறவாயிலிலே தூக்கப்படும் துலாமரத்தை; அப்புக்கட்டென்பாரும் உளர். ஈண்டு மதிலென்றது உண்மதிலை.

கொடுங்கணிஞ்சியையும் (1) விலங்கலையுமுடைய (2) மதில் (4) எனக் கூட்டுக.

இனி, இடையில் விலங்கலென்றதனை மாற்றார்படையை விலங்குதலையுடையவென்றாக்கி, முன்னின்ற கொடுங்கணிஞ்சியென்றதொன்றுமே மதிலதாக, ஐயவி தூக்கிய மதிலென்றதனை ஆகுபெயரான் ஊர்க்குப் பெயராக்கி, நாடுகண்டன்ன ஊரென மாறியுரைப்பாரும் உளர்.

---

* மலை இயற்கையரணாகவும், மதில் செயற்கையரணாகவும் பயன்பட்டன; "மணிநீரு மண்ணு மலையு மணிநிழற், காடு முடைய தரண்" (குறள். 742) என்பதையும் அதன் உரையையும் பார்க்க.

† அடைமதிற்பட்ட காலம் - பகைவர் முற்றுகையிட்டமையால் மதில் அடைக்கப்பட்டுக் கிடக்கும் சமயம். ‡ அப்புக்கட்டு-அம்புக்கட்டு.

13. * உள்ளலும் உரியளென்றது யான் குறித்த நாளளவும் ஆற்றியிருக்கவென்ற நின்னேவல் பூண்டு நின்னை உள்ளாதிருத்தலேயன்றி நீ குறித்த நாளுக்கு மேலே நீட்டித்தாயாகலின் (9) நின்னை நினைத்து வருந்துதலும் உரியளென்றவாறு.

14-5. தாவின்று திருமணி பொருத திகழ்விடு பசும்பொனென்றது வலியில்லையானபடியாலே அழகிய மணிகளொடு பொருத ஒளிவிடுகின்ற பசும்பொனென்றவாறு.

ஈண்டுத் † தாவென்றது வலி; பொன்னுக்கு வலியாவது உரனுடைமை. இன்றென்பதனை இன்றாகவெனத் திரித்து இன்றாகையாலெனக்கொள்க. என்றது ஒளியையுடைய மணிகளொடு பொரவற்றும்படி ஓட்டற்ற ஒளியையுடைய பசும்பொனென்றவாறு.

15-6. பூண் பசும்பொன் வயிரமொடு உறழ்ந்து சுடர்வரவெனக் கூட்டி, பூணுன பசும்பொன் தன்னிடை அழுத்தின வயிரங்களொடு மாறுபட்டு விளங்கவென உரைக்க.

18. புரையோரென்ற பன்மையாற் காதன்மகளிர் பலரெனக் கொள்க.

17-8. அகலப் பாயலென இருபெயரொட்டாக்கி, அத்தை ‡ அல்வழிச் சாரியை என்க. துயிலினிய பாயலென உரைக்க.

அகலத்தை மகளிர்க்குப் பாயலெனச் சிறப்பித்தமையான் இதற்கு, '**துயிலின் பாயல்**' என்று பெயராயிற்று.

19. பாலுங் கொளாலும் வல்லோயென்றது அவ்வகலப்பாயலை § வேற்றுப்புலத்து வினையில்வழி நின்மகளிர்க்கு நுகரக்கொடுத்தற்கு நின்னிடத்தினின்றும் பகுத்தலையும், வினையுள்வழி அம்மகளிர்பால்நின்றும் வாங்கிக் கோடலையும் வல்லோயென்றவாறு.

பாசறைக்கண் நீ (8) நீடினையாகலின் நின்னைக் காணவந்தேன் (9); நின் தேவியாகிய அசைநடை நின்னை நினைத்தலும் உரியள் (13); ஆனபின்பு அவள் பாயல்வருத்தத்திற்கு உய்யுமோ (14)? உய்யாளன்றே; தோன்றல், அகலப் (17) பாயல் (18) பாலும் கொளாலும் வல்லோய், நின் (19) மார்பு மிக அவளை வருத்திற்றுக்காண் (20); $ நீ அவள்பாற் கடிதெழுகவென வினைமுடிவு செய்க.

இதனாற் சொல்லியது அவன் வென்றிச்சிறப்பும் குலமகளோடு நிகழ்த்த இன்பச்சிறப்பும் உடன்கூறியவாறாயிற்று.

(கு-ரை.) பாசறைக்கண் தங்கியிருந்த அரசன்பால் மாதேவியினிடமிருந்து தூது சென்றோன் கூற்றாக அமைந்தது இச் செய்யுள்.

1 - 4. மதிலின் சிறப்பு.

1. மலைகளொடு மாறுபடக் கட்டிய வளைந்த இடங்களையுடைய புறமதில். மதிலுக்கு மலை: **பதிற்**. 62 : 10; **மலைபடு**. 92; **கலி**. 92 : 12; **பெருங்**. 3. 27 : 46.

---

* உம்மை இறந்தது தழீஇய எச்சஉம்மை.

† தா - கேடு எனலுமாம்.

‡ அல்வழிச்சாரியை - வேண்டாவழிச்சாரியை.

§ வேற்றுப் புலத்து வினை - பகைவர் நாட்டிற் சென்று செய்யும் போர்.

$ இக்கருத்து குறிப்பாற் கூறப்பட்டது.

2. கணை - அம்பு. விலங்கல் - இடைமதில்; ஆகுபெயர்.

3 - 4. துவன்றி - செறிந்து. புனிற்று மகள் - ஈன்ற அணிமையை யுடைய பெண். அவள் வெண்சிறுகடுகை அரைத்துப் பூசிக்கொள்ளுதல் மரபு. ஐயவி - துலாமரம். வெண்சிறுகடுகை விலக்க, "புனிற்று மகள் பூணு வையவி" என்றார். இது வெளிப்படை நிலை.

5 - 8. களிற்றின் இயல்பு.

4 - 5. மதிலவாகிய புதவுகள்; புதவு - கதவு; அவற்றைக் களிறுகள் கொம்பால் இடித்தன. முருக்கிக் கொல்லுபு - இடித்து அழித்து.

6. ஏனமாகிய - பன்றியின் கொம்பைப்போலாகிய; ஏனம் : ஆகு பெயர்.

7. பொத்தி - மூண்டு.

9. நீடினை - குறித்த காலத்தே வாராமல் தாமதித்தாய். காண்கு வந்திசின் - நின்னைக் காணவந்தேன்; காண்கு : செய்கென்னும் வாய்பாட்டு முற்று; வந்திசின் என்னும் முற்றோடு முடிந்தது.

10 - 14. சேரன்மாதேவியின் நிலை.

10. ஆறிய கற்பின் - அறக்கற்பினையுடைய. இதனை அடங்கிய கற்பென்றுங் கூறுவர் (குறுந். 338 : 7.) ஆறிய கற்பு : பதிற். 90 : 49; சிலப். பதி. 38 - 54, அடியார். அடங்கிய சாயல் - அடங்கிநின்ற மென்மையை உடைய. இவ்வடி, 'நீடினையாயினும் பெருந்தேவி தன் கற்பினாலும், அடக்கத்தினாலும் பிரிவுத் துன்பத்தை ஆற்றி நின்றாள்' என்னும் குறிப்புடையது.

12. அமிர்தென்றது எயிற்றில் ஊறிய நீரை (குறுந். 14 : 1 - 2, குறிப்.) துவர்வாய் - செவ்வாய். அமர்த்த நோக்கின்-விரும்பிய பார்வையையுடைய; அமர்த்த - மாறுபட்ட எனலுமாம் (குறள். 1083 - 4, பரிமேல்.)

13. அசைநடை - தளர்ந்த நடையையுடையவள்.

11 - 3. இனிய கூறுதல் முதலியன பெருந்தேவியின் ஆறிய கற்புக்கு அடையாளங்கள்.

14. பாயல் உய்யுமோ - படுக்கையின்கண் படும் வருத்தத்தினின்றும் தப்புவாளோ. பின்னர்க்கூறும் துயிலின் பாயலாகிய அகலத்தையே விரும்புபவளாதலின் பாயல் உய்யாளாயினள்- தோன்றல் : விளி.

15. பொருத - நிறத்தால் மாறுபட்டுத் தோன்றிய. திகழ் - ஒளி; ஆகுபெயர்.

16. சுடர்வர - விளங்க.

17. எழுமுடி என்றது ஏழு அரசர்களை வென்றுகொண்ட ஏழு முடிகளாற் செய்த ஆரத்தை (பதிற். 14 : 11, அடிக்.) ஞெமர்தல் - பரத்தல்.

18. உயர்ந்த மகளிர் மையுண்ட கண்கள் துயிலுவதற்கு இனிதாகிய படுக்கை.

17 - 8. சேரனது மார்பையே பாயலென்றார்; தலைவியர் தலைவர் மார்பில் துயிலுதல் இயல்பு (நற். 20 : 2, 171 : 11; ஐங். 14 : 3 - 4, 205 : 4 - 5.)

19. பாலுங் கொளாலும் - பகுத்து அளித்தலையும் கொடாது வாங்கிக் கொள்ளுதலையும்.

20. சாயல் - மென்மை. நனி அலைத்தன்று - அண்மையில் இல்லாமையின் மிக வருத்தாநின்றது. (சு)

(கஎ) புரைவது நினைப்பிற் புரைவதோ வின்றே
பெரிய தப்புந ராயினும் பகைவர்
பணிந்துதிறை பகரக் கொள்ளுநை யாதலிற்
றுளங்குபிசி ருடைய மாக்கட லீக்கிக்
கடம்பறுத் தியற்றிய **வலம்படு வியன்பணை**
ஆடுநர் பெயர்ந்துவந் தரும்பலி தூஉய்க்
கடிப்புக் கண்ணுறூஉந் தொடித்தோ ளியவர்
அரணங் காணாது மாதிரந் துழைஇய
நனந்தலைப் பைஞ்ஞிலம் வருகவிந் நிழலென
ஞாயிறு புகன்ற தீதுதீர் சிறப்பின்
அமிழ்துதிகழ் கருவிய கணமழை தலைஇக்
கடுங்கால் கொட்கு நன்பெரும் பரப்பின்
விசும்புதோய் வெண்குடை நுவலும்
பசும்பூண் மார்ப பாடினி வேந்தே.

இதுவுமது.

பெயர்-வலம்படு வியன்பணை (5.)

(ப-ரை.) 5. வலம்படு வியன்பணையென்றது *போர்செய்து வருந்தாமற் பகைவர் வெருவியோட முழங்கி அரசனுக்கு வென்றி தன்பாலே பட நின்ற முரசமென்றவாறு.

இச்சிறப்பான் இதற்கு, 'வலம்படு வியன்பணை' என்று பெயராயிற்று.

6. ஆடுநரென்றது † வினையெச்சமுற்று வினைத்திரிசொல்.

அமிழ்து திகழ் மழையென முடிக்க.

‡ அமிழ்தென்றது நீர். தலைஇயென்பதனைத் தலையவெனத் திரிக்க.

13. வெண்குடைநுவலுமென்றது வெண்குடையின் § அருட்சிறப்பைச் சொல்லுமென்றவாறு.

13-4. நுவலும் மார்பவென முடிக்க.

இஃது ¶ ஏதுப்பெயர்.

---

* "வலனிரங்கு முரசு" (பரி. 7 : 6) என்பதற்கு, 'வெற்றியுண்டாக ஒலிக்கும் முரசு' எனப் **பரிமேலழகர்** எழுதிய உரை இங்கே ஒப்புநோக்கு தற்குரியது. † வினையெச்ச முற்று - முற்றெச்சம்.

‡ "வானின் றுலகம் வழங்கி வருதலாற், றானமிழ்த மென்றுணரற் பாற்று" (குறள். 11) என்பது இங்கே நினைத்தற்குரியது.

§ உலகத்திலுள்ளார் யாராயினும் தன் நிழற்கீழ் வரின் பாதுகாக்கும் தன்மையாதலின் 'தொடர்பு பற்றாதே வருத்தமுற்றார்மேற் செல்வதாய' (குறள். 757, பரிமேல்.) அருளுடையதாயிற்று. சேரலாதனது அருளைக் குடைமேலேற்றியது இலக்கணை.

¶ ஏதுப்பெயரென்றது மார்ப என்பதை. ஏதுப்பெயர் - காரணப் பெயர். நுவலுமென்னும் எச்சம் மார்பவென்பதைக் கொண்டு முடிந்தது.

வியன்பணையைக் (5) கடிப்பைக் கண்ணுறும் இயவர் (7), 'அரணங் காணாது மாதிரந் துழைஇய (8) பைஞ்ஞிலம் இந்நிழற்கண்ணே வருக' எனச் சொல்லி (9) வெண்குடையின் அருட்சிறப்பைச் சொல்லுதற்குக் காரணமாய்நின்ற (13) பசும்பூண்மார்ப, பாடினிவேந்தே (14), நினக்குப் புரைவது நினைப்பிற் (1) பகைவர் பெரிய தப்புநராயினும் (2) பணிந்து திறைபகரக் கொள்ளுநையாதலின் (3), புரைவதோ வின்று (1) என மாறிக்கூட்டி வினைமுடிவு செய்க.

இதனாற் சொல்லியது பொறையுடைமையொடு படுத்து அவன் வென்றிச் சிறப்புக் கூறியவாறாயிற்று.

(கு-ரை.) 1. புரைவது நினைப்பின் - நின்னைப் பொறுமையினால் ஒப்பதாகிய பொருளை ஆலோசித்தால். புரைவது இன்று - அங்ஙனம் ஒப்பாம் பொருள் யாண்டும் இல்லை.

2-3. பகைவர் : எழுவாய். பெரிய தப்புநராயினும் - பெரியனவாகிய பிழைகளைச் செய்தனரேனும். திறை பகர - நினக்குத் திறையை வெளிப்படையாக அளிக்க. கொள்ளுநை - நின் சினம் மாறி அத்திறைகளை ஏற்றுக் கொள்ளுவாய்.

1-3. பெரும்பிழை செய்த பகைவராயினும் அவர் தன்னைப் பணியும் காலத்து அவர் பிழையை மறந்து ஒழுகுபவனென்றபடி : "இணரெரி தோய்வன்ன வின்னா செயினும், புணரின் வெகுளாமை நன்று" (குறள், 308.)

4-5. பிசிர் உடைய - துளித்துளியாகச் சிதறும்படி (பதிற். 11 : 1.) கடம்பு சேரனது பகைவருக்குரிய காவல்மரம். கடலரணிடையே இருந்த பகைவராதலின் கடலை நீக்கிச் சென்று அம்மரத்தை அறுத்தனன் ; நீக்கி - கடந்து. வலம் - வெற்றி. சேரன் கடல்கடந்து சென்று கடம்பறுத்த செய்தி, "இருமுந்நீர்த் துருத்தியுள்...நெடுஞ்சேரலாதன் (பதிற். 20 : 2-5), "வலம்படு முரசிற் சேரலாதன், முந்நீர் ஓட்டிக் கடம்பறுத்து", "சால் பெருந் தானைச் சேரலாதன், மாக்கட லோட்டிக் கடம்பறுத் தியற்றிய, பண்ணமை முரசு" (அகநா. 127 : 3-4, 347 : 4-6), "கடற்கடம் பெறிந்த காவலன்" (சிலப். 23 : 81) என்பவற்றாலும் உணரப்படும்.

பகைவரது காவல்மரத்தால் முரசுசெய்தல் ; பதிற். 11 : 12-4, அடிக். வலம்படுபணை : புறநா. 304 : 9.

5-7. பணைக்குப் பலிதூவி. ஆடுநர் - ஆடுவாராகி. பலி - மலர் முதலிய பூசைக்குரிய பொருள்கள் ; "உருவச் செந்தினை குருதியொடு தூஉய், மண்ணுறு முரசங் கண்பெயர்த்து" (பதிற் 19 : 6-7) எனப் பின்னரும் வருதல் காண்க. முரசைப் பூசித்தல். "கோற்றெழில் வேந்தன் கொற்ற முரசம், பெரும்பணைக் கொட்டிலு ளரும்பலி யோச்சி" (பெருங். 2. 2 : 29-30.) கடிப்பு - முரசை அடிக்கும் குறுந்தடி. அதனைக் கண்ணுறுதல் - எடுத்து அடிப்பதற்கு. இயவர் இங்ஙனம் செய்தல் 19-ஆம் பாட்டாற் புலப்படும்.

---

துவழ்தற்குக் காரணமாகிய மார்பவென்னும் பொருள்படுதலின் இங்கே துவழும் வினைக்கு அப்பெயர்ப் பொருள் ஏதுவாயிற்று. தன்னை அடைந்தோரைக் காத்தற்கு மார்பின் வலி காரணமாயிற்று ; "மண்டமர் கடந்தநின் வென்றா டகலத்துப், பரிசிலர்த் தாங்கு முருகெழு நெடுவேஎள்" (முருகு. 272-3), 'கொடுக்கும் பொருள் மார்பின் வலியான் உளதாமாகலின், அகல் நோக்கின வென்றதாகக் கொள்க' (புறநா. 155: 8, உரை) என்பவற்றையும் காண்க.

இயவர் - அதனை அடித்தற்குரிய வள்ளுவர்; எழுவாய். ஆடுவாராகிப் பணைக்குப் பலி தூவிக் கடிப்பைக் கண்ணுற்றுப் பின்வருவனவற்றைக் கூறுவாராயினர்.

8-9. இயவர் கூற்று. அரணம் - பாதுகாப்பு. மாதிரம் துழைஇய - திசைகளெல்லாம் சென்று தேடிய. நனந்தலைப் பைஞ்ஞிலம் - விரிந்த இடமாகிய உலகிலுள்ள மக்கட்டொகுதி. இந்நிழலென்றது சேரலாதன் குடைநிழலை. என (9), நுவலும் (13) என்று முடிக்க.

10-13. ஞாயிறு புகன்ற விசும்பு; தீதுதீர் சிறப்பின் விசும்பு; புகன்ற - விரும்பிய. அமிழ்து - நீர். கருவிய - நீர் முதலிய தொகுதியை உடைய. கணமழை - மேகக்கூட்டம். தலைஇ - பெய்ய; எச்சத்திரிபு. கடுங்கால் கொட்கும் - வேகமாகிய காற்றுச் சுழன்று அடிக்கும். ஞாயிறு புகலுதல் முதலியன விசும்புக்கு அடை. ஞாயிற்றின் வெயிலாலும், மேகத்தின் மழையாலும், காற்றின் வேகத்தாலும் தடையுறாது நின்று பாதுகாக்கும் குடையென்பது குறிப்பு. நுவலும் - புகழும். இயவர் (7) நுவலும் என்க.

14. பசும்பூண் - பசும்பொன்னாலாகிய பதக்கம். பாடினி வேந்து: **பதிற். 14 : 17, அடிக்.**

தன்பாற் புக்கோரைப் பாதுகாக்கும் அறிவுடையானென்பதை அவன் இயல்பாகவும் அவனது குடையின் இயல்பாகவும் கூறிப் பாராட்டியவாறு.

**(பி-ம்.)** 1. புரைவதோ வன்றே. 9. பஞ்ஞிலம். (எ)

---

(கஅ) **உ**ண்மின் கள்ளே யடுமின் சோறே
எறிக திற்றி யேற்றுமின் புழுக்கே
வருநர்க்கு வரையாது பொலங்கலந் தெளிர்ப்ப
இருள்வண ரொலிவரும் புரியவி ழைம்பால்
ஏந்துகோட் டல்குன் முகிழ்நகை மடவரற்
**கூந்தல் விறலியர்** வழங்குக வடுப்பே
பெற்ற துதவுமின் றப்பின்று பின்னும்
மன்னுயி ரழிய யாண்டுபல துளக்கி
மண்ணுடை ஞாலம் புரவெதிர் கொண்ட
தண்ணிய லெழிலி தலையாது மாறி
மாறி பொய்க்குவ தாயினும்
சேர லாதன் பொய்யல னசையே.

**துறை - இயன்மொழி வாழ்த்து. வண்ணம் - ஒழுகுவண்ணம்.**
**தூக்கு - செந்தூக்கு. பெயர் - கூந்தல்விறலியர் (6.)**

(ப - ரை.) 2. திற்றி - இறைச்சி.

வருநர்க்கு வரையாது (3) வழங்குக அடுப்பு (6) என முடிக்க; வரையாமல் எனத் திரித்து வரையாதொழியும்படியெனக் கொள்க.

பொலங்கலந் தெளிர்ப்ப (3) என்பதனையும் வழங்குக (6) என்பதனோடு முடிக்க.

6. கூந்தல்விறலியர் வழங்குக அடுப்பென்றது வந்தார்க்குச் சோறு கடிதின் உதவுதற்பொருட்டு அடுப்புத்தொழிற்குரியரல்லாத *வரிசைமகளிரும் அடுப்புத்தொழிலிலே வழங்குகவென்றவாறு.

இச்சிறப்பானே இதற்கு, '**கூந்தல் விறலியர்**' என்று பெயராயிற்று.

ஐம்பாற் (4) கூந்தல் (6) என மாறிக்கூட்டுக; இனி மாறாது கூந்தல் விறலியரென்றதை †ஒருபெயராக உரைப்பினும் அமையும்.

நீயிர் கள்ளினையுண்மின்; அதுவேயன்றி உண்டற்குச் சோற்றையடுமின்; அதுவேயன்றித் (1) தின்றற்குத் திற்றியையறுமின்; அதுவேயன்றித் தின்றற்குப் புழுக்கப்படுமவற்றை அடுப்பிலேயேற்றுமின் (2); வருநர்க்கு வரையாதே கடிதின் உதவுதற்பொருட்டுக் (3) கூந்தல் விறலியர் அடுப்பிலே வழங்குக (6); இன்னும், வருநர்க்குச் சோறிடுதலேயன்றி அவன்பால் நாம் பொருளாகப் பெற்றதுகொடுமின்; இவ்வாறு எல்லாங் கொடுத்தாலும் பின்னுக்குக் காரியத்தில் தப்பில்லை (7); அதற்கு யாது காரணமெனின், மன்னுயிரழிய (8) மாரி பொய்த்தாலும் (11) சேரலாதன் நசை பொய்யலன் (12); அதுகாரணமென வினைமுடிவு செய்க.

இதனாற்சொல்லியது அவன்கொடைச்சிறப்புக் கூறியவாறாயிற்று.

(கு-ரை) 2. திற்றி எறிக - தின்றற்குரிய மாமிசத்தை அறுத்திடுக; திற்றி - தசை; "அழித்தானுக் கொழுந்திற்றி" (**மதுரைக்.** 217.) புழுக்கு - புழுக்குதற்குரிய பருப்புவகை.

3. தெளிர்ப்ப - ஒலிக்க (**ஐங்.** 24 : 4.)

4. இருண்ட வளைந்த தழைத்தல் பொருந்திய ஐந்து பகுதிகளையுடைய; ஐம்பாலாவன: குழல், அளகம், கொண்டை, பனிச்சை, துஞ்சை யென்பன (**சீவக.** 2437, **ந**.)

5. கோடு - பக்கம்.

6. அடுப்பு வழங்குக - சமையலைச் செய்க.

7. தப்பு இன்று - பிழை இல்லை.

8. யாண்டு பல துளக்கி - பல ஆண்டுகளாக நடுங்கச்செய்து.

9. ஞாலம் புரவு எதிர்கொண்ட - உலகத்தைப் பாதுகாத்தலை ஏற்றுக் கொண்ட.

10. தண்ணிய இயல்பையுடைய மேகம் பெய்யாமல் மாறி.

9 - 10. "உலகத்து, மழைசுரந் தளித்தோம்பு நல்லூழி" (**கலி.** 99 : 4 - 5.)

12. நசை பொய்யலன் - விரும்பிய பரிசிற்பொருளைத் தருதலிற் பொய்த்தல் செய்யான்; "இரவலர்க் குள்ளிய, நசைபிழைப் பறியாக் கழறொடி யதிகன்" (**அகநா.** 162 : 17 - 8.)

---

*பரிசில் பெறுதற்குரிய மகளிர்.

†கூந்தல் விறலியரென்றது அனைத்தும் ஒரு பெயராகி இடுகுறி மாத்திரையாய் நின்றது; ஐம்பாலென்று முன்னர் வந்ததைக் கூந்தலென்னும் பொருளுடையதாக்கி, இங்குள்ள கூந்தலென்பதைப் பொருளில் அடையாக்கின் இங்ஙனம் இலக்கணம் கூறுக.

பின் நமக்கு இலதாகுமே என அஞ்சாமல் பெற்றதை உதவுமின்; அவன் பின்னும் பொய்யாது தருவானென்றபடி.

(பி - ம்) 7. பெற்ற வுதவுமின். 8. மன்னுயி ரொழிய. 12. பொய்யி லனசையே. (அ)

---

(கக) கொள்ளை வல்சிக் கவர்காற் கூளியர்
கல்லுடை நெடுநெறி போழ்ந்துசுர னறுப்ப
ஒண்பொறிக் கழற்கான் மாறு வயவர்
திண்பிணி யெஃகம் புலியுறை கழிப்பச்
செங்கள விருப்பொடு கூல முற்றிய
உருவச் செந்தினை குருதியொடு தூஉய்
மண்ணுறு முரசங் கண்பெயர்த் தியவர்
கடிப்புடை வலத்தர் தொடித்தோ ளோச்ச
வம்புகளை வறியாச் சுற்றமோ டம்புதெரிந்
தவ்வினை மேவலை யாகலின்
எல்லு நனியிருந் தெல்லிப் பெற்ற
அரிதுபெறு பாயற் சிறுமகி ழானும்
கனவினு ளுறையும் பெருஞ்சால் பொடுங்கிய
நாணுமலி யாக்கை வாணுத லரிவைக்
கியார்கொ லளியை
இனந்தோ டகல வூருட னெழுந்து
நிலங்கண் வாட நாஞ்சில் கடிந்துநீ
வாழ்த லீயா வளனறு பைதிரம்
அன்ன வாயின பழனந் தோறும்
அழன்மலி தாமரை யாம்பலொடு மலர்ந்து
நெல்லின் செறுவி னெய்தல் பூப்ப
அரிநர் கொய்வாண் மடங்க வறைநர்
தீம்பிழி யெந்திரம் பத்தல் வருந்த
இன்றோ வன்றோ தொன்றோர் காலை
நல்லம னளிய தாமெனச் சொல்லிக்
காணுநர் கைபுடைத் திரங்க
மாணு மாட்சிய மாண்டன பலவே.

துறை - பரிசிற்றுறைப் பாடாண்பாட்டு.
வண்ணம் - ஒழுகுவண்ணமும் சொற்சீர்வண்ணமும்.
தூக்கு - செந்தூக்கு. பெயர் - வளனறு பைதிரம் (18.)

(ப - ரை.) 1. கவர் கால் - செல்லவை விரும்பின கால். 2. சுரன்-வழியில் அருமை.

4. எஃகம் புலியுறை கழிப்பவென்றது * எஃகினைப் புலியுறை கழித்துக் † கடைவன கடைந்தும் அல்லன ‡ வாய்கீறியும் போர்க்குரியவாம்படி பண்ணவென்றவாறு.

5. கூலம் முற்றியவென்றது பண்டமாகமுற்றியவென்றவாறு; இனிப் பலிக்குரிய மற்றைப்பண்டங்கள் குறைவறக் கூடினவென்பாரும் உளர்.

9. வம்பு - § கைச்சரடு.

சுரனறுப்பப் (2) புலியுறை கழிப்பத் (4) தோளோச்ச (8) அவ்வினை மேவலை (10) என முடிக்க.

11. எல்லு நனியிருந்தென்றது 'பகற்பொழுதின் கண்ணே ஒரு $ விநோதமும் இன்றி நெடுக வருந்தியிருந்தென்றவாறு.

பெற்ற (11) மகிழ் (12) என முடிக்க.

அரிதுபெறுதலைப் பாயன்மேல் ஏற்றுக. ஈண்டுப் பாயல், உறக்கம்.

ஊருடனெழுந்து இனந்தோடகல (16) எனவும், நாஞ்சில் கடிந்து நிலங் கண் வாட (17) எனவும் கூட்டுக.

ஊரெழுந்தென்னும் முதல்வினையை வழுவமைதியால் இனந்தோட்கல வென்னும் அதன் சினைவினையொடு முடிக்க.

தோடகலக் (16) கண்வாட (17) அன்னவாயின (19) என முடிக்க.

ஈண்டு ஆயினவென்பது ¶ தொழிற்பெயர்.

17 - 8. நீ வாழ்தலீயாவென்றது நீ பண்டுபோலே குடியேறுகவென்று வாழ்வுகொடாதவென்றவாறு.

'வாழ்தலீயா' என்ற அடைச்சிறப்பான் இதற்கு, '**வளனறு பைதிரம்**' என்று பெயராயிற்று.

20. தாமரை மலரவெனத் திரிக்க.

22. கொய்வாள் மடங்கவென்றது நெற்றாளின் பருமையாலே கொய்யும் அரிவாட்கள் தங்கள் வாய் மடியவென்றவாறு.

23. எந்திரமென்றது ஆலையை.

எந்திரமென்னும் முதலெழுவாயை வழுவமைதியாற் பத்தல் வருந்த வென்னும் அதன் சினைவினையோடு முடிக்க. பத்தல் வருந்தலாவது பல காலும் சாறேடி || நனைந்து சாதல்.

தாமரை மலர (20) நெய்தல் பூப்ப (21) வாள் மடங்கப் (22) பத்தல் வருந்த (23) நல்ல (25) என முடிக்க.

27. மாணா மாட்சிய மாண்டனவென்றது மாட்சிமைப்படத் திருத்தினும் மாட்சிமைப்படாத அழகையுடையவாய்ப் பின்னைத் திருந்தாதவளவேயன்றி உரு மாய்ந்தனவென்றவாறு.

---

* எஃகென்றது ஆயுதப் பொது. † கடைவன அம்புகள்.

‡ வாய்கீறுதல் - தீட்டுதல்; வேலும் வாளும் தீட்டற்குரியன. பண்ண - சித்தம் செய்ய. § கைக்கு அணியும் தோலாலாகிய கவசம்.

$ விநோதம் - பொழுதுபோக்குக்குரிய விளையாட்டு.

¶ தொழிற்பெயர் - வினையாலணையும் பெயர்.

|| நைந்து சாதலென்றிருப்பின் சிறக்கும்.

மாணுதவற்றை மாட்சியவென்றது பண்டு அழகிய ஊரும் வயலுமாய்த் தோன்றிக்கிடந்த பண்புபற்றி எனக்கொள்க. மாட்சியவென்பது வினையெச்சமுற்று. இனி மாணுமாட்சிய வென்பதற்கு மாணுமைக்குக் காரணமாகிய * பெருக்கு முதலாயவற்றின் மாட்சிய வென்பாருமுளர்.

பலவாகிய (27) நீ (17) வாழ்தலீயா வளனறு பைதிரம் (18) ஊருடனெழுந்து இனம் தோடு அகல (16) நாஞ்சில் கடிந்து நிலங்கண் வாட (17) அன்னவாயினவை பழனந்தோறும் (19) தாமரை ஆம்பலொடு மலர (20) நெல்லின்செறுவில் நெய்தல் பூப்ப (21) அரிநர் கொய்வாள் மடங்க அறைநர் (22) எந்திரம் பத்தல் வருந்தத் (23) தொன்றோர்காலே (24) நல்லமன் அளிய தாமெனச் சொல்லிக் (25) காணுநர் கைபுடைத்திரங்க (26) மாணுமாட்சிய மாண்டன (27) எனக் கூட்டுக.

பைதிரம் (18) என்னும் எழுவாய்க்கு மாண்டன (27) என்பது பயனிலை ; அன்னவாயின (19) என்னும் பெயரும் இடையே ஒரு பயனெனப் படும்.

அன்னவாயின (19) மாணுமாட்சிய மாண்டன (27) என்றது பைதிரங்கள் (18) ஊருடனெழுதல் (16) முதலாய வறுமையையுடைய அளவாய் நின்றன ; பின் அவ்வளவினவன்றித் திருத்தவும் திருந்தாநிலைமையவாய் நின்றன ; பின் அவ்வளவுமன்றி † ஊரும் வயலும் தெரியாதபடி உருவம் மாய்ந்தன (27) என்றவாறு.

நீ அவ்வினை மேவலையாயிருந்தாய் ; நீ வினையை மேவுகின்றபடியால் (10) கனவினுள் உறையும் (13) நின்னரிவைக்கு (14) நீ யார் கொல் (15)? நீ அவள்பால் வாராமைக்குக் காரணம் யாது? நீ அழிக்க ஏன்று அழிந்த நாடுகள் அழிந்து அற்றால் வருவலெனின், ஆம் ; அழிக்க அழிந்து நீ பின் வாழ்தலீயாத பைதிரம் (18) காணுநர் கைபுடைத்திரங்க (26) மாணுமாட்சியவாய் மாண்டன (27) ; அதனால் அது குறையன்று; நின் அன்பின்மையே குறை ; இனி நீ அவள்பாற் கடிது எழுகென வினைமுடிவு செய்க. ‡

இதனாற் சொல்லியது அவன்வென்றிச்சிறப்பும் குலமகளோடு நிகழ்ந்த இன்பச்சிறப்பும் உடன்கூறியவாறாயிற்று.

பாணன் பாசறைக்கண் வந்து தேவி ஆற்றாமை கூறி இனி அவள்பாற் போகவேண்டுமென்று இரந்தமையாற் பரிசிற்றுறையாயிற்று.

‘ அவ்வினை மேவலை யாகலின் ’ (10) எனவும், ‘யார்கொ லளியை’ (15) எனவும் சொற்சீர் வந்தமையாற் சொற்சீர் வண்ணமும் ஆயிற்று.

(கு - ரை.) பாசறையிலிருந்த மன்னன்பால் தூதுவந்த பாணனது கூற்றாக அமைந்தது இச்செய்யுள்.

1. கொள்ளை வல்சி - வழிப்பறித்த பொருள்களை உணவாகவுடைய. கவர் - விரும்பும் (தொல். உரி. 64.) கூளியர் - மறவர். கொள்ளை வல்சிக் கூளியர் : புறநா. 23 : 5 - 7.

2. துறுகற்களையுடைய நீண்ட வழியை அகழ்ந்து அருவழியை வரையறுக்க. கற்களையுடைமையாலும் அருவழியாதலானும் படை செல்லும் பொருட்டு வழியை ஒழுங்கு செய்தனர்.

---

* பெருக்கு - மிக்க வெள்ளம்.

† “ ஊரறிய லாகா கிடந்தனவே ” (முத்.)

‡ இம்முடிபில் உரையாசிரியர் பல செய்திகளை இசையெச்சத்தால் வருவித்து உரைத்தனர்.

3. ஒண்பொறிக் கழற்கால் - தாங்கள் செய்த அரிய போர்த்தொழில் களைப் பொறித்தலையுடைய ஒள்ளிய கழற்கால் (பதிற். 34 : 2, உரை.) மாறா- வீரத்தினின்றும் மாறுபடாத. வயவர் - வீரர்.

4. எஃகம் - வேல். புலியுறை கழிப்ப - புலித்தோலாற் செய்யப்பெற்ற உறையை விட்டு எடுக்க. வேலையும் உறையிற் செறித்தல் மரபு (பதிற். 24 : 2 ; புறநா. 323 : 7.)

5. செங்கள விருப்பொடு - இரத்தத்தாற் சிவக்கும் போர்க்களத்திற் குச் செல்லும் விருப்பத்தோடு. கூலம் முற்றிய - கூலமாக நிறைந்த; கூலம்- தானியம்.

6. உருவச் செந்தினை - சிவந்த நிறத்தையுடைய தினையை. குருதி யொடு தூஉய் - இரத்தத்தோடு தூவி (பதிற். 29 : 11 - 2.) தினையையும் குருதியையும் தூவிப் பூசித்தல் வழக்கம் (முருகு. 242 ; அகநா. 22 : 10.) வீர முரசத்தை இரத்தத்தைக் கொண்டு பூசித்தல் : பதிற். 29 : 11 - 2 ; புறநா. 50 : 5 ; மணி 1 : 30 - 31.

7. மண்ணுறு முரசம் - நீராட்டப்பெற்ற வீரமுரசம். கண்பெயர்த்து- அடிக்கும் பக்கத்தைத் திறந்து. இயவர் - வள்ளுவர் முதலியோர்.

8. கடிப்பு - குறுந்தடி ; தோள் ஓச்ச - தோளால் அடிக்க ; தோள்-கை.

9. வம்பு களைவு அறியா - கைச்சரடு களைதலை அறியாத. சுற்றம் - படைவீரர். அம்பு தெரிந்து - அம்புகளை ஆராய்ந்து.

10. அவ்வினையென்றது போரை. மேவலை - விரும்புதலை உடையாய்.

கூளியர் சுரனறுப்பவும் வயவர் எஃகத்தை உறையினின்றும் கழிப்ப வும் இயவர் தோள் ஓச்சவும் நீ சுற்றத்தோடு அவ்வினையினிடத்தே விருப்ப முடையாயாயினும்.

11 - 4. சேரன் மாதேவியினது நிலைமை கூறப்படும்.

11. எல்லு - பகலில். நனி இருந்து - நன்றாக நின் பிரிவை ஆற்றி யிருந்து ; இருத்தல் - இங்கே ஆற்றியிருத்தல் (தொல். அகத். 14.) எல்லி - இரவில்.

12. அரிதிற் பெறுகின்ற துயிலின்கண் உண்டாகும் சிறுமகிழ்ச்சிக் காலத்தும்.

11-3. பகலெல்லாம் ஆற்றியிருந்து இரவிற் சிறிதுநேரம் துயின்றாலும் அந்நேரத்தும் கனவு கண்டு வருந்தினளென்றபடி.

13-4. பெருஞ்சால்பினால் ஒடுங்கிய யாக்கையையும், நாணுமலி யாக்கையையும் உடைய அரிவை.

15. யார்கொல் - என்ன உறவுடையை? என்றது அவள்பால் அன்பி லன்போலப் பிரிவு நீட்டித்தாயென்ற குறிப்பினது.

16. இதுமுதல் சேரனுடைய பகைவர் நாட்டின் நிலை கூறப்படும்.

ஊரினர் ஒருங்கே எழுந்து இனத்தினரும் பசு முதலிய தொகுதியும் விட்டு நீங்க.

17. உழுவாரின்றிக் கலப்பைகள் வெறுக்கப்பட்டு அதனால் நிலம் வளப்பமின்றிப் பொலிவழிய; "நாடுவறங் கூர நாஞ்சி றுஞ்ச" (அகநா. 42 : 5.)

18. வளன் அறு பைதிரம் - வளப்பம் அற்ற பகைவர் நாடுகள்.

19. அன்னவாயின - அகலவும், வாடவும் பெற்ற அந்நிலையின வாயின. பழனம் - வயலைச் சார்ந்த பொய்கை.

20. அழல்மலி : மலி உவமஉருபு ; அழல்போன்ற மிக்க தாமரை எனலும் ஆம். தாமரைக்கு நெருப்பு உவமை : **பதிற்.** 23 : 23 ; **பெரும்பாண்.** 289 - 90, **அடிக்.** 21. செறு - வயல்.

22. கொய்வாள் - அரிவாள். அறைநர் - கரும்பை வெட்டுதலையுடையோர் ; அறை - வெட்டுதல் ; “ அறைக் கரும்பு ” (**பொருந.** 193.)

23. தீம்பிழி எந்திரம் - இனிய சாற்றை எடுக்கும் கரும்பாலை. பத்தலென்றது கரும்பின் சாறு விழும் கூனை ; அது சாற்றின் மிகுதியால் வருந்தியது.

24. இன்றோ அன்றோ : ஓகாரங்கள் அசைநிலை.

25. தாம் நல்லமன் ; மன் ஒழியிசையின்கண் வந்தது.

27. மாணாமாட்சிய - மாட்சிமைப்படாத தன்மையை யுடையவாயின. மாண்டன பல - முன்பு மாட்சிபெற்றிருந்தனவாகிய பல பைதிரங்கள்.

மாண்டன பல ஒருகாலை நல்ல, அளிய எனச்சொல்லி இரங்க, மாணா மாட்சியவாயின வென்க ; உரையாசிரியர் வேறுவிதமாக முடிப்பர்.

(**பி - ம்.**) 4. கழிப்பிச். 12. சிறுமதிமானும் 23. பத்தர் வருந்த. (௯)

---

(௨௦) நுங்கோ யாரென வினவி னெங்கோ
இருமுந்நீர்த் துருத்தியுள்
முரணியோர்த் தலைச்சென்று
கடம்புமுத றடிந்த கடுஞ்சின முன்பின்
நெடுஞ்சேர லாதன் வாழ்கவவன் கண்ணி
வாய்ப்பறி யலனே வெயிற்றுக ளனைத்தும்
மாற்றோர் தேஎத்து மாறிய வினையே
கண்ணி னுவந்து நெஞ்சவிழ் பறியா
நண்ணார் தேஎத்தும் பொய்ப்பறி யலனே
கனவினும், ஒன்னார் தேய வோங்கி நடந்து
படியோர்த் தேய்த்து வடிமணி யிரட்டும்
கடாஅ யானைக் கணநிரை யலற
வியலிரும் பரப்பின் மாநிலங் கடந்து
புலவ ரேத்த வோங்குபுகழ் நிறீஇ
விரியுளை மாவுங் களிறுந் தேரும்
வயிரியர் கண்ணுளர்க் கோம்பாது வீசிக்
கடிமிளைக் குண்டுகிடங்கின்
நெடுமதி னிலைஞாயில்
அம்புடை யாரெயி லுள்ளழித் துண்ட
அடாஅ வடுபுகை **யட்டுமலர் மார்பன்**

எமர்க்கும் பிறர்க்கும் யாவ ராயினும்
பரிசின் மாக்கள் வல்லா ராயினும்
கொடைக்கட னமர்ந்த கோடா நெஞ்சினன்
மன்னுயி ரழிய யாண்டுபல மாறித்
தண்ணிய லெழிலி தலையா தாயினும்
வயிறுபசி கூர வீயலன்
வயிறுமா சிலீயரவ னீன்ற தாயே.

**துறை - இயன்மொழி வாழ்த்து.**
**வண்ணம் - ஒழுகுவண்ணமும் சொற்சீர்வண்ணமும்.**
**தூக்கு - செந்தூக்கும் வஞ்சித்தூக்கும். பெயர் - அட்டுமலர்**
**[மார்பன் (20)**

(ப-ரை.) 3. *முரணியோரையென விரியும் இரண்டாவதனைத் தலைச் சென்றென்பதற்கு இடத்திலே சென்றென்பது பொருளாக்காது முடிவிலே சென்றென்பது பொருளாக்கி, அதற்குப் போந்தபொருள் முடிவுசெயலாக்கி அதனொடு முடிக்க.

மேலே கொடைக்கடனமர்ந்த கோடா நெஞ்சினன் (23) என்று கொடைகூறுகின்றான் ஈண்டு ஓம்பாது வீசி (16) என்று கொடை கூறியதற்குக் காத்தற்குச் †சென்றவிடைக் கொண்டவற்றைக் ‡களம்பாடச் சென்றார்க்குக் கொடுக்கும் கொடையென வுரைக்க.

20. அடா அடுபுகை - ஊர்சுடு புகை. அட்டுமலர் மார்பனென்றது, பகைவரைக் கொன்று அச்செருக்கானே அகன்ற மார்பனென்றவாறு.

இச்சிறப்பானே இதற்கு, '**அட்டுமலர் மார்பன்**' என்று பெயராயிற்று.

21. எமர்க்கும் பிறர்க்குமென நின்றவற்றைக் கொடைக்கடனமர்ந்த வென்பதனொடு முடித்து, எமர்க்கென்றது தன் பாணராகிய எமர்க்கென்றும், பிறர்க்கென்றது தன்பாணரல்லாத பிறர்க்கென்றும் உரைக்க.

21-2. பரிசின்மாக்கள் யாவராயினும் வல்லாராயினுமெனக் கூட்டிப் பரிசின்மாக்களென்றதற்கு முன்சொன்ன எமர்க்கும் பிறர்க்குமெனப்பட்டாரையே ஆக்கி யாவராயினுமென்றதற்குக் கண்டார் மதிக்கப்படும் தோற்றமிலராயினுமெனவும், வல்லாராயினுமென்றதற்கு ஒரு கல்வி மாட்டாராயினுமெனவும் உரைக்க.

யாவராயினுமென்ற உம்மை இழிவுசிறப்பு; § வல்லாராயினுமென்ற உம்மை எதிர்மறை.

---

* பகைவரை முடிவு செய்து எனப் பொருள் கொள்க; தகரவொற்று விரிந்திருத்தலின் இவ்வாறு பொருள் கொண்டார். தலைச்சென்று - முடித்து. இத்தொடர் 'தலைக்கட்டி' என்பது போல நின்றது.

† சென்ற இடை - சென்ற இடத்தில்.

‡ களம்பாடச் சென்றவர் பொருநரும் பாணரும்.

§ வன்மையுடையாருக்கும் கொடுப்பான் என்பது பெறப்படுதலின் எதிர்மறை உம்மையாயிற்று.

நடந்து (10) கடந்து (13) நிரீஇ (14) வீசி (16) என நின்றவற்றை நெஞ்சினன் (23) என்னும் முற்றுவினைக் குறிப்பொடு முடிக்க.

26. வயிறுபசிகூரவீயலனென *மூன்றுவதும் கொடைகூறியதற்கு, மழைபெய்யா விளைவில்காலைத் தன் †பரிகரமாயுள்ளார்க்கு அவர்கள் பசித்து வருந்தாமல் வேண்டும் பொழுதுகளிலே வேண்டுவன கொடுக்கு மென்று ஓர் கொடைநிலையாக வுரைக்க.

நுங்கோ யாரென வினவின், எங்கோ (1), சேரலாதன் அவன் கண்ணி வாழ்க (5); அவனியல்பிருக்குமாறுசொல்லின், மாற்றோர் தேஎத்து மாறிய வினையே (7) வெயிற்றுகளனைத்தும் வாய்த்தலறியான் (6); பொய்த்தலறி யான் (9); அட்டுமலர்மார்பன் (20), கொடைக்கடனமர்ந்த கோடாநெஞ்சி னன் (23); கோடையிடத்து எழிலி தலையாதாயினும் (25) வயிறுபசிகூரவீ யலன் (26); ஆதலான், அவனையீன்றதாய் வயிறுவிளங்குவாளாக (27) என வினைமுடிவு செய்க.

இதனாற் சொல்லியது அவன்றன் செல்வப் பொலிவு கண்டு நீ யாரு டைய பாணனென்று வினவியாற்கு, யான் இன்னாருடையேனென்று சொல்லிமுடிக்க, அவன் குணங்கள் இன்ன கூறிப் பின் அவனை வாழ்த்தி முடித்தவாறாயிற்று.

'இருமுந்நீர்' (2) எனவும், 'முரணியோர்' (3) எனவும், 'கடிமிளை' (17) எனவும், 'நெடுமதில்' (18) எனவும் எழுந்த நான்கடியும் வஞ்சியடியாக லான் வஞ்சித்தூக்குமாயிற்று.

கனவினுமென்பது கூன்.

(கு - ரை.) சேரலாதனாற் சிறப்புப்பெற்ற பாணன் ஒருவன் தன் எதிரே வந்த பாணன் ஒருவனுக்கு அச்சேரலாதனது பெருமையைக் கூறி வாழ்த் தியதாக அமைந்தது இச்செய்யுள்.

1. நும் கோ - உம்முடைய இறைவன். நும் என்றது தன் சுற்றத்தின ரையும் உளப்படுத்தியது. மு. புறநா. 212 : 1. 2. கடலிடையே உள்ள குறைநிலத்தில்.

3. முரணியோர் - பகைவர்.

4. கடம்புமுதல் தடிந்த - கடம்பினது அடிமரத்தை வெட்டிய (பதிற். 11 : 12-4, அடிக்.) முன்பு - வலி. எங்கோ (1) நெடுஞ்சேரலாதன் (5) என்க.

5. கண்ணி - அடையாள மாலை; இது தலையிற் சூடுவது.

6 - 7. மாற்றோர் தேத்துமாறிய வினை வெயில் துகளனைத்தும் வாய்ப்பு அறியலன் - பகைவரது நாட்டிற் சென்று செய்த போரிற் பின்வாங்குதலை வெயிற்கதிரிலே தோற்றும் அணுவளவேனும் பொருந்துதலையறியான்; மேற்கொண்ட வினையை முடித்தல்லது மீளான் என்பது கருத்து. வெயில் துகள் - சூரியன் கதிரினிடையே தோற்றும் தூசி; இதனைச் சிறுமைக்கு உவமை கூறுதல் மரபு; "இன்னுழை கதிரின் றுன்னணுப் புரைய ச், சிறிய வாகப் பெரியோன்" (திருவா. திருவண்டப். 5 - 6.)

8 - 9. கண்ணின் உவந்து - கண்ணின்முன்னர் உவப்பை வெளிப் படுத்தி; நெஞ்சு அவிழ்பு அறியா - உட்கோளை வெளிப்படுத்துதலையறியாத;

---

* வீசி (16) எனவும், கொடைக்கடனமர்ந்த (23) எனவும் இருமுறை கொடை கூறினமையின் இங்கே மூன்றுவது என்றார்.

† பரிகரம் - ஏவலர் முதலிய சுற்றத்தார்; இக்காலத்துப் பரிகல மென்று வழங்கும்.

புறத்தே மகிழ்வுடையாரைப் போலக் காட்டி அகத்தே பகைப்பாரைச் சுட்டியது. பொய்ப்பு - பொய்த்தல் தேளத்தும்: உம்மை உயர்வு சிறப்பு; அரசியல் அடைவாற் பொய்கூற வேண்டிய செவ்வி நேருமாயினும் அப்பொழுதும் பொய்த்தலறியான் என்றபடி. இக்குணம் தருமபுத்திரர் செயலால் அறியப்படும்.

9 - 10. கனவினும் பொய்ப்பு அறியலன் எனக் கூட்டுக.

பகைவர் அழியும்படி எழுச்சியொடு எடுத்துச் சென்று.

11. படியோர் - பகைவர்; இச்சொல் பிரதியோர் என்பதன் திரிபென்பர் (அகநா. 22 : 5, உரை); "படியோர்த் தேய்த்த பணிவிலாண்மை" (மலைபடு. 423) என்றவிடத்து வணங்காதார் எனப்பொருள் கூறுவர் **நச்சினார்க்கினியர்.** படியோர்த் தேய்த்தல் களிற்றுக்கு அடை. வடிமணி - வடித்துச் செய்த மணி; "வடிமணிப் புரவி" (**பட்டினப்** 232.) இரட்டும் - மாறி யொலிக்கும்.

12. கடாஅ யானை - மதம் மிக்க யானை. அலற என்றமையின் இவை பகைவர் படையிலுள்ள யானையெனக் கொள்க.

13. வியலிரும் பரப்பின் - மிக்க பெரிய பரப்பையுடைய. கடந்து - வஞ்சியாது எதிர் நின்று வென்று.

14. நிறீஇ - நிறுத்தி.

15. விரியுளை மா - விரிந்த தலையாட்டத்தையுடைய குதிரை.

16. வயிரியர் - கூத்தர். கண்ணுளர் - சாந்திக் கூத்தர் (**சிலப்.** 5 : 49, **அடியார்.**) ஓம்பாது வீசி - தனக்கென்று பாதுகாவாமல் வழங்கி.

15 - 6. பரிசிலர்க்கு யானை முதலியன வழங்குதல்: **சிறுபாண்:** 142 - 3, **அடிக்.**

17 - 9. மிக்க காப்பையுடைய காவற்காட்டையும், ஆழமாகிய அகழியையும், உயர்ந்த புறமதிலையும், நிலையான மதிலுச்சியையும், அம்புக் கட்டுக்களையுமுடைய அழித்தற்கரிய மதிலை உட்புக்கு அழித்து. கடி - காவல். குண்டு - ஆழம். எயில் - அரண். ஒப்பு: **மதுரைக்.** 64 - 7; **புறநா.** 21 : 2 - 6.

19 - 20. அடாஅ அடு புகை-சமையல் செய்தலால் உண்டாகாத ஊர் சுடு புகை. உண்ட மார்பன், புகையையுடைய மார்பன் என்க. எயிலை அழித்துப் பின்னர் அவ்வெயிற்குள்ளிருந்து உண்ணுதல் ஒரு மரபு (**பதிற்.** 58 : 6 - 7; **பு. வெ.** 117; **புறத்திரட்டு,** 1327.) நாட்டைச் சுட்ட புகை மார்பில் வந்து தவழ்ந்தது (**புறநா.** 6 : 21 - 2.)

22. வல்லாராயினும் - எவ்விதக் கலையிலும் வன்மையில்லாராயினும் (**அகநா.** 152 : 19; **புறநா.** 57 : 1); தமக்கு வேண்டியதைச் சொல்லும் ஆற்றலிலராயினும் எனலும், தாம் கற்றவற்றை மனங்கொள்ளக் கூறமாட்டாராயினும் (**மலைபடு.** 78, **ந.**) எனலுமாம்.

23. கொடுத்தலாகிய கடமையை விரும்பிய, ஒருபால் கோடாத நெஞ்சையுடையோன்; நம்மவரென்றும் பிறரென்றும் பாராமையின் கோடா நெஞ்சினன் என்றார்.

24. மாறி - நீங்கி.

25. தண்ணிய இயல்பையுடைய மேகம் பெய்யாமற் போயினும்.

26. தன்னைச் சார்ந்தார் வயிறு பசிமிகும்படி ஈயாமல் இரான்; பசி கூர்தல் ஈயாமையின் விளைவு. 24 - 6. **பதிற்.** 18 : 8 - 12.

27. அவனைப் பெற்ற தாய் வயிறு குறையின்றி விளங்குவாளாக.

(பி - ம்.) 10. ஓருங்கு நடந்து, ஓங்கு நடந்து. 21. எமக்கும். (கo)

8. இதன்பதிகத்து யவனர்ப்பிணித்தென்றது யவனரைப் போருள் அகப்படுத்தியென்றவாறு.

9. நெய் தலைப்பெய்து கை பிற்கொளீஇ யென்பதற்கு அக்காலத்துத் தோற்றாரை நெய்யைத் தலையிற் பெய்து கையைப் பிறகு பிணித்தென் றுரைக்க.

10. அருவிலை நன்கலம் வயிரமொடுகொண்டென்றது அந்த யவனரைப் * பின்தண்டமாக அருவிலைநன்கலமும் வயிரமுங்கொண்டென்றவாறு.

## (பதிகம்)

மன்னிய பெரும்புகழ் மறுவில் வாய்மொழி
இன்னிசை முரசி னுதியஞ் சேரற்கு
வெளியன் வேண்மா னல்லினி யீன்றமகன்
அமைவர லருவி யிமையம் விற்பொறித்
திமிழ்கடல் வேலித் தமிழகம் விளங்கத்
தன்கோ லிரீஇத் தகைசால் சிறப்பொடு
பேரிசை மரபி னாரியர் வணக்கி
நயனில் வன்சொல் யவனர்ப் பிணித்து
நெய்தலைப் பெய்து கைபிற் கொளீஇ
அருவிலை நன்கலம் வயிரமொடு கொண்டு
பெருவிறன் மூதூர்த் தந்துபிறர்க் குதவி
அமையார்த் தேய்த்த வணங்குடை நோன்றாள்

இமையவரம்ப னெடுஞ்சேரலாதனைக் குமட்டூர்க்கண்ணனார் பாடினார் பத்துப்பாட்டு.

அவைதாம், புண்ணுமிழ்குருதி, மறம்வீங்கு பல்புகழ், பூத்த நெய்தல், சான்றோர்மெய்ம்மறை, நிரையவெள்ளம், துயிலின் பாயல், வலம்படுவியன் பணை, கூந்தல்விறலியர், வளனறுபைதிரம், அட்டுமலர்மார்பன். இவை பாட்டின் பதிகம்.

பாடிப் பெற்ற பரிசில்: உம்பற்காட்டு ஐந்நூறூர் † பிரமதாயம் கொடுத்து முப்பத்தெட்டியாண்டு தென்னாட்டுள் வருவதனிற் பாகம் கொடுத்தான் அக்கோ.

* பின்தண்டம் - சிறைகொண்டாரை விடுத்தற்பொருட்டுக் கொள்ளும் திறை.

† பிரமதாயம் - அந்தணர்களுக்கு விடப்படும் இறையிலி நிலம்; இத் தொடர் சிலாசாஸனங்களில் பயின்று வழங்கும்.

இமைய வரம்ப னெடுஞ்சேரலாதன் ஐம்பத்தெட்டியாண்டு வீற்றிருந் தான்.

(கு - ரை.) 4. இமையம் விற்பொறித்தது : அகநா. 396 : 17 ; புறநா. 39 : 15 - 6 ; சிலப். 25 : 1 - 2, 118, 28 : 136 ; மணி. 23 : 104.

5. தமிழகம் : புறநா. 168 : 18 ; சிலப். 3 : 37 ; மணி. 17 : 62.

7. ஆரியர் - வடநாட்டரசர். அவரைச் சேரன் வென்ற செய்தி, “ஆரிய ரலறத் தாக்கி......வெஞ்சின வேந்தரைப் பிணித்தோன்” (அகநா. 396 ; 15 - 8) என்பதனாலும் பெறப்படும். வணக்கி - வணங்கச்செய்து.

8. வன்சொல் யவனர் : சிலப். 28 : 141, 29 : ஊசல்வரி, 3.

10. அருவிலை நன்கலம் : புறநா. 218 : 4 ; பெருங். 4. 2,: 82.

11. மூதூர் - தலைநகர். தந்து - கொணர்ந்து.

10 - 11. தான் பகைவர்பாற் பெற்றதைப் பரிசிலர்க்கு உதவுதல் மரபு ; பதிற். 44 : 3 - 4, 53 : 1 ; சிறுபாண். 247 - 8 ; மதுரைக். 145 - 6, 220 - 24, மலைபடு. 71 - 2.

12. அமையார் - தன்பாற் பொருந்தாதோரை. தேய்த்த - இல்லையாக்கிய. அணங்குடை நோன்றாள் - பகைவருக்கு வருத்தத்தைச் செய்தலையுடைய வலிய முயற்சி.

இரண்டாம் பத்து முற்றிற்று.

---

## மூன்றாம் பத்து

(உக) சொற்பெயர் நாட்டங் கேள்வி நெஞ்சமென்
றைந்துடன் போற்றி யவைதுணை யாக
எவ்வஞ் சூழாது விளங்கிய கொள்கைக்
காலை யன்ன சீர்சால் வாய்மொழி
உருகெழு மரபிற் கடவுட் பேணியர்
கொண்ட தீயின் சுடரெழு தோறும்
விரும்புமெய் பரந்த பெரும்பெய ராவுதி
வருநர் வரையார் வார வேண்டி
விருந்துகண் மாறா துணீஇய பாசவர்
ஊனத் தழித்த வானிணக் கொழுங்குறை
குய்யிடு தோறு மானா தார்ப்பக்
கடலொலி கொண்டு செழுநகர் நடுவண்
அடுமை யெழுந்த வடுநெய் யாவுதி
இரண்டுடன் கமழு நாற்றமொடு வானத்து
நிலைபெறு கடவுளும் விழைதகப் பேணி
ஆர்வளம் பழுனிய வையந்தீர் சிறப்பின்

மாரியங் கள்ளின் போர்வல் யானைப்
போர்ப்புறு முரசங் கறங்க வார்ப்புச்சிறந்து
நன்கலந் தரூஉ யண்படு மார்ப
முல்லைக் கண்ணிப் பல்லான் கோவலர்
புல்லுடை வியன்புலம் பல்லா பரப்பிக்
கல்லுயர் கடத்திடைக் கதிர்மணி பெறூஉம்
மிதியற் செருப்பிற் பூழியர் கோவே
குவியற் கண்ணி மழவர் மெய்ம்மறை
பல்பயந் தழீஇய பயங்கெழு நெடுங்கோட்டு
நீரறன் மருங்கு வழிப்படாப் பாகுடிப்
பார்வற் கொக்கின் பரிவேட் பஞ்சாச்
சீருடைத் தேஎத்த முனைகெட விலங்கிய
நேருயர் நெடுவரை யயிரைப் பொருந
யாண்டுபிழைப் பறியாது பயமழை சுரந்து
நோயின் மாந்தர்க் கூழி யாக
மண்ணு வாயின் மணங்கமழ் கொண்டு
கார்மலர் கமழுந் தாழிருங் கூந்தல்
ஒரீஇயின போல விரவுமலர் நின்று
திருமுகத் தலமரும் பெருமதர் மழைக்கண்
அலங்கிய காந்த ளிலங்குநீ ரழுவத்து
வேயுறழ் பணைத்தோ ளிவளோ
டாயிர வெள்ளம் வாழிய பலவே.

துறை - செந்துறைப் பாடாண்பாட்டு. வண்ணம் - [ஒழுகுவண்ணம்.
தூக்கு - செந்தூக்கு. பெயர் - அடுநெய்யாவுதி (13.)

(ப-ரை.) 1. * சொல் - சொல்லிலக்கணஞ் சொல்லும் †நூல். பெயர் - பொருளிலக்கணஞ் சொல்லும் நூல்; "பெற்ற பெரும்பெயர் பலர்கை யிரீஇய" (பதிற். 90 : 23) என இத்தொகையுள் மேலே வந்தமையால், பெய

* இங்கே கூறிய சொல்முதலியவற்றிற்கு வேதத்துக்கு உபகாரப்படும் சாத்திரங்களென்று பொருளுரைப்பின் சிறக்கும். சொல் என்பதை வேதச் சொற்களுக்கு இலக்கணங் கூறும் பிராதிசாக்கியம் முதலியனவாகவும், பெயர் என்பதை அவற்றிற்குப் பொருள்கூறும் நிருத்தம் என்பதாகவும் கொள்ளலாகும். † நூல் - இலக்கணம்.

ரென்பது பொருளாம். நாட்டம் - சோதிடநூல். கேள்வி - வேதம். நெஞ்ச மென்றது இந்திரியங்களின் வழியோடாது * உடங்கிய தூயநெஞ்சினை.

3. எவ்வம் சூழாமை - உயிர்வருத்தம் சூழாமை; சூழாமலெனத் திரிக்க.

4. † காலை அன்ன வாய்மொழி - ஆதித்தனைப்போல என்ஞான்றும் தப்பாதாகிய மெய்ம்மொழி: மொழியானென ஆனுருபு விரிக்க; ஒடு விரிப் பினும் அமையும்.

துணையாகக் (2) கொண்ட (6) என முடிக்க.

7. விருப்புமெய்யென்னும் ‡ ஒற்று மெலிந்தது; 'மைபரந்த' என் பது பாடமாயின் மைபோலப் பரந்தவென்க.

9. பாசவர் - ஆட்டுவாணிகர்.

10. ஊனம் - இறைச்சி கொத்தும் § அடை குறடு.

கடலொலிகொண்டு (12) ஆர்ப்ப (11) எனக் கூட்டி ஆர்ப்ப எழுந்த (13) எனமுடிக்க; இனி, 'கடலொலிகொண்ட' என்பது பாடமாயின் கட லொலிகொண்ட நகரென்க.

13. அடுநெய்யாவுதியென்றது அடுசில்நெய்யாகிய ஆவுதியென்ற வாறு; அடுநெய்யை ஆவுதியென்றது விருந்து புறந்தருதலையும் ஒருவேள்வி யாக்கி $ ஆள்வினைவேள்வியென்று ஒரு துறையாக நூலுட்கூறலானென் பது.

இச்சிறப்பானே இதற்கு, 'அடுநெய்யாவுதி' என்று பெயராயிற்று.

7 - 13. ஆவுதியென்ற இரண்டனையும் அவற்றுடைய புகைமேற் கொள்க.

14. நாற்ற மொடென்பதனை நாற்றத்தானெனக் கொள்க.

15. கடவுளும் விழைதகவென்றது கடவுளரும் இவ்வாறு நாம் அறஞ் செய்யப்பெறின் அழகிதென்று அதுவிரும்ப வென்றவாறு. பேணி யென் றது முன்சொன்ன வேள்வியால் தேவர்களையும் பின்பு அதனோடு ஒப்பித் துச்சொன்ன ஆள்வினைவேள்வியால் விருந்தாய் வரும் மக்களையும் பேணி யென்றவாறு; அதனைத் திரித்துப் பேணப் பழுனிய (16) என முடிக்க. பழுனியவென்பது பெயரெச்ச வினைத்திரிசொல்.

16. ஆர்வளம் பழுனிய சிறப்பென்றது கொடுக்கக் கொடுக்கக் குறை படாத நிறைந்த செல்வத்திலே நின்று பழுத்த சிறப்பென்றவாறு.

17. கள்ளிற்போர்வல் யானையென்னும் ஒற்று மெலிந்தது.

ஆர்ப்புச்சிறந்து (18) கலந்தரூஉம் மார்ப (19) எனக் கூட்டுக.

19. மண்படு மார்பவென்றது பகைவர் மண்ணெல்லாம் படுகின்ற மார்பவென்றவாறு.

பல்லா பரப்பிக் (21) கதிர்மணி பெறூஉஞ் (22) செருப்பு (23) என முடிக்க.

---

* உடங்கிய - உள்ளே அடங்கிய. † காலை: ஆகுபெயர்.

‡ 'பெரும் பெயர்' என்பது நோக்கி மெலிந்தது.

§ அடைகுறடு - அடியில் ஆதாரமாக வைத்துக் கொள்ளும் கட்டை.

$ ஆள்வினை வேள்வி யென்பதனை ஒரு துறையாகப் **புறப்பொருள் வெண்பா** மாலையிற் காணலாம் (215.)

23. செருப்பென்பது ஒருமலை. மிதியலென்பது அடை; * மிதி யென்று செருப்பிற்குப் பேராக்கிச் செருப்பல்லாத செருப்பென்று வெளிப் படுத்தானாக வுரைக்க. குவியற்கண்ணி (24) என்னும் தொடைநோக்கி மிதியற் செருப்பென வலிந்தது. மிதியற்செருப்பென்பதற்குப் பிறவாறு சொல்லுவாரும் உளர்.

24. குவியற்கண்ணியென்றதற்கு வெட்சிமுதல் வாகையீறாய போர்க் கண்ணியெல்லாம் குவிதலையுடைய கண்ணியென்க.

26 - 9. பரிவேட்பு அஞ்சா அயிரையென்று வெளிப்படை கூறு கின்றானாகலின் அதற்கேற்ப, நீரறன்மருங்கு வழிப்படாவென்று பெய ரெச்சமறையே பாடமாகல் வேண்டும். இனிப் படாதென்று வினையெச்ச மறையாகிய பாடத்திற்கு நீரற்றவிடத்தில் தான் படாதபடியாலே கொக்கின் பரிவேட்புக்கு அஞ்சா அயிரையெனவுரைக்க. அயிரையென்பது ஒரு மலை.

நெடுங்கோட்டு (25) அயிரை (29) என முடிக்க.

31. மாந்தர்க்கு நோயிலூழியாகவென மாறிக்கூட்டுக; கிடந்தவாறும் பொருள்படும்.

34. ஒரீஇயினபோல வென்பதற்குப் பொய்கையென வருவித்துப் பொய்கையை ஒருவினபோலவென உரைக்க. இனி மேற்சொன்ன கூந் தலை ஒரீஇயினபோல வென்பாருமுளர். இரவுமலர்நின்றென்பது பொய் கைப்பூப்போலன்றி இரவுக்காலத்தும் † மலர்ச்சி நிலைபெற்றென்றவாறு.

ஒரீஇயினபோல (34) அலமரும் (35) எனக் கூட்டுக.

36. காந்தளுள்ளவிடத்து எழுந்த மூங்கிலைத் தோளுக்கு உவமை கூறி அக்காந்தளையும் கைக்கு உவமையாக்குக. நீரமூவம் - நதியென்க.

36 - 7. நீரபூவத்து வேயென்றது ஒருநாளும் உடல்வெம்மையாற் கொதியாது குளிர்ந்தேயிருக்கும் தோளென்றற்கென்க.

மண்படுமார்ப (19), பூழியர்கோவே (23), மழவர்மெய்ம்மறை (24), அயிரைப்பொருந (29), பயமழைசுரந்து (30) மாந்தர்க்கு நோயிலூழி உண்டாக (31), இவளோடே (37), பலவாயிரம் வெள்ளம் வாழிய (38) எனக்கூட்டி வினைமுடிவு செய்க.

இதனாற் சொல்லியது அவன் நாடுகாத்தற்சிறப்புக்கூறி வாழ்த்தியவா றாயிற்று.

(கு-ரை.) 1. பெயர் பொருளென்பதற்கு மேற்கோள் (முருகு. 269, ந.)

1 - 2. கேள்வி - வேதம் (பரி. 2 : 25, 61 ; பு. வெ. 163) ; சுருதி என்ற படி., உடன் - ஒருங்கே. 3. கொள்கை - விரதம்.

4. வாய்மைக்குச் சூரியன் : கலி. 35 : 25 ; பரி. 2 : 54.

5. பேணியர் - பேணும்பொருட்டு.

7. ஆவுதி - ஆகுதியினின்றும் எழூம் புகை ; ஆகுபெயர்.

1 - 7. இதனுள் அரசன் ஓதியவாறும் வேட்டவாறும் காண்க (தொல். புறத். 20, ந.)

8. பரிசில் பெறவருவார் அளவின்றித் தாமே வாரிக்கொள்ள வேண் டியும்.

---

* மிதியடியென இக்காலத்து வழங்கும்.

† மலர் - மலர்தல் ; முதனிலைத் தொழிற்பெயர்.

9. இடம் மாறாமல் விருந்தினர் உண்ணும்பொருட்டும்.

11. குய் - தாளிப்பு. ஆனாது - அடங்காமல். 14. உடன் - ஒருங்கே.

1 - 15. சொல் முதலியன துணையாக, கொள்கையினாலும், வாய்மொழியினாலும் கடவுளைப் பேணும்பொருட்டு எடுத்துக்கொண்ட வேள்வித் தீயின் ஆவுதியும், வருநர் வாரவேண்டியும் விருந்தினர் உண்ணவேண்டியும் அழித்த குறை ஆர்ப்ப, மையெழுந்த ஆவுதியும் கமழும் நாற்றத்தோடு பேணி.

14 - 5. தேவர் நாற்றவுணவினரென்று கூறப்படுவர் (மதுரைக். 457 - 8 ; புறநா. 62 : 16 - 7.)

16 - 7. பழுனிய - முதிர்ந்த. மாரிபோன்ற கள்ளினாற் போரில் வல்ல யானை ; "பிரச மாந்திடுங் கடகரி" (கம்ப. நகரப். 54.)

18. போர்ப்புறு முரசம் - தோல் போர்த்தலையுடைய முரசு ; இது யானை மேலது.

19. கலம் தரூஉம் - பகைவர் நாட்டிற் பெற்ற அருந்தனங்களைத் தன் நாட்டிற் கொணரும். மண்படு மார்ப என்றது அனைத்தும் ஒரு பெயராய்ச் சேரன் என்னும் துணையாய் நின்றது.

1 - 19. வேள்விப்புகையும் அடிசிற்புகையும் கமழும்படி கடவுளரையும் விருந்தினரையும் பேணும்பொருட்டு, பகைவர் நாட்டை வென்று அவர் பொருளைக் கொணரும் சிறப்புக் கூறப்பட்டது.

20. கண்ணி - தலையில் அணியும் மாலை ; கோவலர் முல்லையை அணிதல் சாதி இயல்பு. பல்லான் - பலவகைப் பசுக்கள் ; "பல்லான் கோவலர் கண்ணிச், சொல்லுப வன்ன முல்லைமென் முகையே" (குறுந். 358 : 6 - 7.)

21. புல்லையுடைய மேலான மேய்ச்சற்புலங்களிற் பல பசுக்களைப் பரந்து மேயச்செய்து. மு. பதிற். 62 : 13.

22. துறுகற்கள் உயர்ந்த காட்டினிடையே ஒளியையுடைய மணியைப் பெறுதற்கு இடமாகிய ; பெறுபவர் கோவலர் ; கடத்திடை மணி பெறுதல் : பதிற். 66 : 17 - 9.

24. மழவர் மெய்ம்மறை - மழவர் என்னும் வீரர்களுக்குக் கவசம் போன்றாய் ; இது, "சான்றோர் மெய்ம்மறை" (பதிற். 14 : 12) என்பது போல நின்றது. மழவர் : ஒருவகை வீரர் ; குதிரையையுடையவரென்று தெரிகிறது (அகநா. 1 : 2.)

25. பயம் - பழம் முதலிய விளைபொருள்கள், "உழவ ருழாதன நான்கு பயன்" (புறநா. 109 3.) பயம் கெழு - நீர்வளம் பொருந்திய. நெடுங்கோடு -உயர்ந்த சிகரங்களையுடைய ; இது பின்வரும் அயிரைமலைக்கு அடை.

26 - 9. அயிரையென்பது ஒருவகை மீனுக்கும் பெயராதலின், அதனை விலக்கி அயிரைமலையென்னும் பொருள்கொள்ளும்பொருட்டுக் கொக்குக்கு அஞ்சுதலாகிய மீனின் இயல்பை எதிர்மறுக்கின்றார்.

26 - 7. நீரற்ற இடத்தின்கட் செல்லாத கூர்மையாகிய பார்வையையுடைய கொக்கினது, பரிந்த விருப்பத்தை அஞ்சாத. பாகுடி - கூர்மை போலும். பார்வல் - பார்வை. பரிவேட்பாவது இரையை விரும்பிக் குத்துதல்.

27 - 9. அஞ்சா அயிரை, விலங்கிய அயிரை, நெடுவரை அயிரை எனக் கூட்டுக.

முனை கெட விலங்கிய - போர்கெடும்படி தடுத்துநின்ற ; முனை : ஆகு பெயர். நேர் உயர்நெடுவரை - செங்குத்தாக உயர்ந்த பக்கமலையை உடைய. பொருந - வீரனே.

23 - 9. அரசனை மலையைச் சார்த்திப் புகழ்ந்தவாறு (தொல். புறத். 31, ந.)

30. யாண்டு பிழைப்பறியாது - யாண்டு தோறும் பெய்யாமல் நிற்றலை அறியாது ; ஓர்யாண்டேனும் பொய்த்தலை அறியாதெனலுமாம்.

31. ஊழி ஆக - நெடுங்காலம் வாழ்வு உண்டாகும்படி.

32 - 7. மாதேவியின் சிறப்பு.

32. மண்ணுவாயின் - எண்ணெய் பூசுதல் முதலியன செய்யாவிடத்தும் ; உம்மை தொக்கது. இயற்கை மணம் உள்ளதென்றபடி.

33. கார்காலத்து மலரும் முல்லைப்பூ மணக்கின்ற தாழ்ந்த கரிய கூந்தல். முல்லைப்பூ, கற்புக்கு அடையாளம்.

33 - 5. கூந்தலினின்றும் நீங்கினவைபோல. மழைக்கண்கள் கூந்தலினின்று ஒருவின மலரைப் போல இருந்தன. அலமரும் - சுழலும்.

36 - 7. அசைகின்ற காந்தள் மலர் விளங்கும் நீரையுடைய நிலத்தில் முளைத்த மூங்கிலையொத்த தோளையுடைய இவள். இவள் என அண்மைச் சுட்டால் குறித்ததனால், இச்செய்யுள் சேரனும் அவன் பெருந்தேவியும் ஒருங்கிருந்தவழிப் பாடப்பெற்றதாகத் தோற்றுகிறது.

38. வெள்ளம் - ஒரு பேரெண். ஆயிர வெள்ளம் வாழிய : பதிற். 63 : 20 - 21.

30 - 38. மழை சுரந்து ஊழியாக இவளோடு நீ வாழிய.

(பி - ம்.) 1 - 2. நெஞ்ச, மைந்து. 10. ஊனைத்தழித்த. 12 - 3. செழுநகர்வரைப்பி, னடுவணெழுந்த. (௧)

---

(உ.உ) சினனே காமங் கழிகன் ணோட்டம்
அச்சம் பொய்ச்சொ லன்புமிக வுடைமை
தெறல்கடு மையொடு பிறவுமிவ் வுலகத்
தறந்தெரி திகிரிக்கு வழியடை யாகும்
தீதுசே ணிகந்து நன்றுமிகப் புரிந்து
கடலுங் கானமும் பலபய முதவப்
பிறர்பிறர் நலியாது வேற்றுப்பொருள் வெஃகாது
மையி லறிவினர் செவ்விதி னடந்துதம்
அமர்துணைப் பிரியாது பாத்துண்டு மாக்கள்
மூத்த யாக்கையொடு பிணியின்று கழிய
ஊழி யுய்த்த வுரவோ ரும்பல்
பொன்செய் கணிச்சித் திண்பிணி யுடைத்துச்
சிரறுசில ஊறிய நீர்வாய்ப் பத்தற்
**கயிறுகுறு** முகவை மூயின மொய்க்கும்

ஆகெழு கொங்கர் நாடகப் படுத்த
வேல்கெழு தானை வெருவரு தோன்றல்
உளைப்பொலிந்த மா
இழைப்பொலிந்த களிறு
வம்புபரந்த தேர்
அமர்க்கெதிர்ந்த புகன் மறவ ரொடு
துஞ்சுமரந் துவன்றிய மலரகன் பறந்தலை
ஓங்குநிலை வாயிற் றூங்குபு தகைத்த
வில்விசை மாட்டிய விழுச்சீ ரையவிக்
கடிமிளைக் குண்டுகிடங்கின்
நெடுமதி னிரைப்பதணைத்
தண்ணலம் பெருங்கோட் டகப்பா வெறிந்த
பொன்புனை யுழிஞை வெல்போர்க் குட்டுவ
போர்த்தெறிந்த பறையாற் புனல்செறுக் குநரும்
நீர்த்தரு பூசலி னம்பழிக் குநரும்
ஒலித்தலை விழவின் மலியும் யாணர்
நாடுகெழு தண்பணை சீறினை யாதலிற்
குடதிசை மாய்ந்து குணமுதற் றோன்றிப்
பாயிரு ளகற்றும் பயங்கெழு பண்பின்
ஞாயிறு கோடா நன்பக லமயத்துக்
கவலை வெண்ணரி கூஉமுறை பயிற்றிக்
கழல்கட் கூகைக் குழறுகுரற் பாணிக்
கருங்கட் பேய்மகள் வழங்கும்
பெரும்பா ழாகுமன் னளிய தாமே.

துறை - வஞ்சித்துறைப்பாடாண்பாட்டு.
வண்ணம் - ஒழுகுவண்ணமும் சொற்சீர்வண்ணமும்.
தூக்கு - செந்தூக்கும் வஞ்சித்தூக்கும்.
பெயர் - கயிறுகுறு முகவை (14)

(ப - ரை.) 2. அச்சம் - பகைவர்க்கு அஞ்சுதல். அன்பு - பொருண்மே லன்பு.

13. சிதறு சில ஊறியவென்றது பல்லூற்றொழியச் சில்லூற்றுகவூறிய வென்றவாறு ; சிதறுதல் - சிதறுதல்.

14. கயிறு குறு முகவையென்றது தன்னால் நீர்வாங்குவது பெரிதன் றித் தன் கயிற்றையே நின்று வாங்கப்படும் முகவையென்றவாறு.

இச்சிறப்பானே இதற்கு, 'கயிறுகுறு முகவை' என்று பெயராயிற்று.

22. தூங்குபு என்பதனைத் தூங்கவெனத் திரித்துக் காலவழுவமைதி யெனக் கொள்க. தகைத்தல் - கட்டுதல்.

23. வில்விசை மாட்டிய விழுச்சீர் * ஐயவியென்றது விசையையுடைய வில்லானும் துளையுருவ எய்யமுடியாது மிக்க கனத்தையுடைய † ஐயவித் துலா மென்றவாறு.

37. கருங்கண் - ‡ கொடியகண். வழங்குதல் - ஆடுதல்.

உரவோரும்பல் (11), தோன்றல் (16), குட்டுவ (27), நீ சீறினையாத லின், நாடுகெழு தண்பணை (31) அளிய தாம் பெரும்பாழாகும் (38) எனக் கூட்டி வினைமுடிவு செய்க.

இதனாற் சொல்லியது அவன் வென்றிச்சிறப்புக் கூறியவாறாயிற்று.

சீறினையாதலின், நாடுகெழு தண்பணை பாழாகுமென § எடுத்துச்செல வினை மேலிட்டுக் கூறினமையால், வஞ்சித்துறைப் பாடாணாயிற்று.

'உளைப்பொலிந்த மா' (17) என்பது முதலாய நாலடியும் 'கடிமிளை' (24) என்பது முதலாய இரண்டடியும் வஞ்சியடியால் வந்தமையால் வஞ்சித் தூக்குமாயிற்று.

20. 'புகல்' என அடியிடையும், 'ஒடு' என அடியின் இறுதியும் வந்தன கூன்.

(கு - ரை.) 1 - 5. செங்கோல் செலுத்தும் அரசருக்கு வேண்டப் படாத குற்றங்கள் கூறப்படும்.

சினன் - கோபம்; ஏ : எண்ணேகாரம். இதனைக் காம முதலிய வற்றோடும் கூட்டுக. கழி கண்ணோட்டம் - அளவிறந்து ஒருவரை உவத்தல்; இதனை, "மாணா உவகை" என்றும் "அளவிறந்த உவகை" என்றும் கூறுவர் (குறள். 432, பரிமேல்.); "பிணைந்த பேரருள்" (சீவக. 198) என்றவிடத்து நச்சினார்க்கினியர், 'கழிகண்ணோட்டம்' என்று உரை கூறினர்.

2. அச்சம் - பகைவர்க்கு அஞ்சுதல். அன்புமிக உடைமை - பொருளி னிடத்தே அளவுக்கு மிஞ்சிய பற்று உடையோனாதல்; இஃது உலோபம் என்னும் குற்றத்தின்பாற்படும்.

3. தெறல் கடுமை - அளவுக்கு மிஞ்சிய தண்டனை; "கையிகந்த தண்டம்" (குறள். 567.) பிற என்றது மதம், மானம் முதலியவற்றை.

1 - 3. இங்கே கூறிய குற்றங்களையும், "செருக்குஞ் சினமுஞ் சிறுமையு மில்லார், பெருக்கம் பெருமித நீர்த்து", "இவறலு மாண்பிறந்த மானமு மாணா, உவகையு மேத மிறைக்கு" (குறள். 431 - 2) என்பவற்றிற் கூறிய குற்றங்களையும் ஒப்பு நோக்குக.

4. அறந்தெரி திகிரி - தருமத்தையே தெரிந்து செலுத்தும் ஆக்ஞா சக்கரம்; தரும சக்கரமென்பர். தெரிதலைக் கூறினும் தெரிந்து செலுத்தலையே கொள்க. வழியடை - தடை; 'குன்றம் உருண்டால் குன்றி வழியடைபா காதவாறு போலவும்' (இறை. 3, உரை.)

3 - 5. பிறவுமாகிய தீது என்க. சேண் இகந்து - சேய்மையிலே விட்டு நீங்க; இகந்து : எச்சத் திரிபு.

* 16-ஆம் பாட்டில் ஐயவியென்பதற்கு அப்புக்கட்டென்றும் பொருளெழுதினர். † ஐயவித்துலாம் : சிலப். 15 : 213.

‡ செங்கண்ணையுடைய பேயாதலின் கரிய கண் என்னாது கொடிய கண் என்றார். § எடுத்துச் செலவு - போர்புரிதற்கு மேற்செல்லுதல்.

1 - 5. அறந்தரு திகிரிக்கு வழியடையாகுமென்று பாடம் கொண்டு இவற்றைப் பரிமேலழகர் மேற்கோள் காட்டினர் (குறள். 432.)

6. கடல் - நெய்தல் நிலம். கானம் - காடு ; முல்லை நிலம். கடலுங்கானமும் கூறினராயினும் உபலட்சணத்தால் அவற்றின் இனமாகிய குறிஞ்சியும் மருதமும் உடன் கொள்க.

7 - 9. குடிமக்கள் செயல். பிறரை நலியாமலும், பிறர் பொருளை விரும்பாமலும் குற்றமற்ற அறிவினராய்ச் செவ்விய அறநெறியிலே ஒழுகித் தம்முடைய, விரும்புகின்ற மனைவியரைப் பிரியாமல் இல்லறம் நடத்தி விருந்ினருக்குப் பகுத்து எஞ்சியதை உண்டு. பிறரை நலிதலையும் வேற்றுப் பொருளை வெஃகுதலையும் அரசர் தொழிலாகக் கூறுதல் சிறவாது ; முன்னரே தெறலும், அன்பு மிகவுடைமையும் கூறப்பட்டமை காண்க.

9 - 10. மாக்கள் - குடிமக்கள், மூத்தயாக்கையும் பிணியுமில்லாமல் அவற்றினின்றும் நீங்க.

11. நெடுங்காலம் வாழும்படி செய்த வலியோர் வழியில் வந்தோய்.

1 - 11. சினன் முதலியனவும் பிறவுமாகிய தீது இகப்ப, நன்று புரிந்து, உதவ, அறிவினராகி நலியாது வெஃகாது நடந்து பிரியாது உண்ண, மாக்கள் கழிய, உய்த்த உரவோரும்பல்.

12 - 5. பசுக்களுக்காகத் தோண்டிய பத்தல் : நற். 92 : 5 - 6, 240 : 7 - 8 ; ஐங். 304 : 1 - 2 ; அகநா. 155 : 9.

12 - 6. இரும்பினாற் செய்த குந்தாலியால் திண்ணிய பாறையின் செறிவை உடைத்தமையால் சிதறின போன்ற சிலவாக ஊறிய நீரைத் தன் இடத்தேபெற்ற குழியில் பறியாகிய கயிற்றை வாங்கும் பாத்திரத்தைச் சுற்றி நீருண்ணும் பொருட்டு மொய்க்கின்ற பசுக்கள் பொருந்திய கொங்கர் நாட்டைக் கைக்கொண்ட, வேற்படையைப் பெற்ற சேனையையுடைய பகைவர் அஞ்சுதற்குரிய தலைவனே.

இரும்பையும் பொன்னென்றல் மரபு ; "பொன்னியற் புனைதோட்டியான்" (புறநா. 14 : 3) என்பதன் உரையைப் பார்க்க. பிணி - செறிவு ; இங்கே பாறையின் செறிவு. உடைத்து என்பதனை உடைக்க வென்று திரித்துப் பொருள்கொள்க. சிரறு - சிதறிய ; 'சிரறு சேலாடிய நீர்வாய்ப் பதத்த என்றாற்போல, சிரறுதல் சிதறுதன்மேல் நின்றது' (கலி. 88 : 13, ந.) சிலவென்பதிற் சின்மை சிறிதென்பதைக் குறித்தது ; சின்னீரென்னும் வழக்கைக் காண்க (தொல். கிளவி. 17, சே.) பத்தல் - குழியின்கண். முகவை - முகக்கும் பாத்திரம். ஆ கெழு கொங்கர் ; "கொங்கர், ஆபரந் தன்ன செலவு" (பதிற். 77 : 10 - 11.)

17. உளையாற் பொலிந்த குதிரைகளோடு ; மறவரொடு : ஒடு என்னும் எண்ணிடைச் சொல்லை மா முதலியவற்றோடும் கூட்டுக. உளை - தலையாட்டம்.

18. பட்டம் முதலிய ஆபரணங்களாற் பொலிந்த களிற்றோடு.

19. வம்பு - தேர்ச்சீலை.

20. போரை எதிர்நோக்கியிருந்த விருப்பத்தையுடைய வீரர்களோடு. மாமுதலியன முற்கூறினமையின் மறவரென்பது காலாட்படையை.

17 - 20. நால்வகைப்படை : புறநா. 55 : 7 - 8.

21. துஞ்சுமரம் - கணையமரம் ; பதிற். 16 : 3, உரை பார்க்க. துவன்றிய வாயில். மலரகன் பறந்தலை - மலர்ந்த அகன்ற வெளியையுடைய.

22. வாயிலின்கண்ணே நாலும்படி கட்டிய ; இது பின்வரும் ஐயவிக்கு அடை.

23. வில்லின் விசையோடு பொருந்திய மேலான சிறப்பையுடைய அம்புக் கட்டுகளையும்; வில்விசை - விற்பொறியுமாம் (சிலப். 15 : 207) ; ஐயவி - துலாமுமாம். 21 - 3. பதிற். 16 : 2 - 4.

24 - 5. காவலையுடைய காட்டையும் ஆழமாகிய அகழியையும் உயர்ந்த மதிலையும் மதிலுள் மேடையையும் உடைய.

26. பெருமையுடைய பெரிய சிகரங்களோடு கூடிய அகப்பாவென்னும் அரணத்தை எதிர்த்த. அகப்பாவெறிந்தது : பதிற். 3-ஆம் பதி. 3 ; நற். 14 : 3 - 4 ; சிலப். 28 : 144.

27. மதிற்போர் கூறுதலால் மதில் வளைத்தற்குரிய உழிஞையைக் கூறினர். பொன்னாற் புனையப்பெற்ற உழிஞை ; போர்ப்பூக்களைப் பொன்னாற் செய்து அணிதலும் மரபு ; "பொலம்பூந் தும்பை" (மதுரைக். 737) என்பதையும் அதன் அடிக்குறிப்பு முதலியவற்றையும் பார்க்க குட்டுவன்- குட்ட நாட்டையுடைய சேரன்.

28. தோலைப் போர்த்து முழக்கிய பறையின் ஒலியால் நீரினது ஓசையை அடக்குவாரும் ; செறுக்குநர் - அடக்குவார் ; "மீனிற் செறுக்கும் யாணர்" (புறநா. 7 : 12.)

29. நீரிற் செய்கின்ற விளையாட்டின் ஆரவாரத்தினால் அம்பினாற் செய்யும் போராரவாரத்தை அழியச் செய்வாரும்; என்றது நீர்விளையாட்டுப் பூசல் போர்ப்பூசலைவிடப் பெரிதாயிற்றென்றபடி (பரி. 6 : 29 ; பெருங். 1. 41 : 20 - 22 ; சீவக. 2655.)

30. முழக்கத்தைத் தன்னிடத்தே பெற்ற நீர்விழாவின்கண் மிகுதியாக உள்ள புதுவருவாயையுடைய ; பெருங்கதையிலுள்ள நீராட்டரவமென்னும் பகுதி இங்கே அறிதற்குரியது.

31. தண்பணை - மருதநிலம். நீ கோபித்தாயாதலின்.

32 - 8. இனிவரும் கேடு கூறி இரங்கியது.

32 - 4. மேற்குத் திசையிலே மறைந்து கிழக்கில் உதயமாகி, பரவிய இருளை அகற்றும் பயனையுடைய பண்பைப் பெற்ற சூரியன் ஒருபாற் சாயாமல் நின்ற நடுப்பகற்பொழுதில்.

34 - 8. இரவிலே நிகழ்வதற்குரிய செய்திகள் மக்களின்றிப் பாழ் பட்ட பகைவர் நிலத்தில் நடுப்பகலிலும் நிகழ்ந்தனவென்றார் ; "பின்பகலே யன்றியும் பேணா ரகநாட்டு, நன்பகலுங் கூகை நகும்" (பு. வெ. 39.)

35. கவர்த்த வழிகளில் உள்ள வெள்ளிய நரிகள் கூவுதலை முறையே செய்ய.

36 - 7. பிதுங்கிய கண்களையுடைய கோட்டான்கள் குழறுகின்ற குரலாகிய தாள இசைக்கு ஏற்பக் கொடிய கண்களையுடைய பேய்மகள் ஆடுகின்ற. கழல்கட் கூகை : முருகு. 49.

தண்பணை (31) பெரும்பாழாகும் ; தாம் அளிய. மன் : ஒழியிசைப் பொருளில் வந்தது.

(பி - ம்.) 13. சிரறுசெல 34. ஞாயிறு கொண்ட. (உ)

(உரு) அலந்தலை யுன்னத் தங்கவடு பொருந்திச்
சிதடி கரையப் பெருவறங் கூர்ந்து
நிலம்பை தற்ற புலங்கெடு காலையும்
வாங்குபு தகைத்த கலப்பைய ராங்கண்
மன்றம் போந்து மறுகுசிறை பாடும்
வயிரிய மாக்கள் கடும்பசி நீங்கப்
பொன்செய் புனையிழை யொலிப்பப் பெரிதுவந்து
நெஞ்சுமலி யுவகைய ருண்டுமலிந் தாடச்
சிறுமகி ழானும் பெருங்கலம் வீசும்
போரடு தானைப் பொலந்தார்க் குட்டுவ
நின்னயந்து வருவேங் கண்டனம் புன்மிக்கு
வழங்குந ரற்றென மருங்குகெடத் தூர்ந்து
பெருங்கவி னழிந்த வாற்ற வேறுபுணர்ந்
தண்ணன் மரையா வமர்ந்தினி துறையும்
விண்ணுயர் வைப்பின காடா யினநின்
மைந்துமலி பெரும்புக ழறியார் மலைந்த
போரெதிர் வேந்தர் தாரழிந் தொராலின்
மருதிமிழ்ந் தோங்கிய நளியிரும் பரப்பின்
மணன்மலி பெருந்துறைத் ததைந்த காஞ்சியொடு
முருக்குத்தாழ் பெழிலிய நெருப்புற ழடைகரை
நந்து நாரையொடு செவ்வரி யுகளும்
கழனி வாயிற் பழனப் படப்பை
அழன்மருள் பூவின் றாமரை வளைமகள்
குறாஅது மலர்ந்த வாம்பல்
அறாஅ யாணர வகன்றலை நாடே.

துறை - வஞ்சித்துறைப்பாடாண்பாட்டு. வண்ணம் - ஒழுகுவண்ணம்.
தூக்கு - செந்தூக்கு. பெயர் - ததைந்த காஞ்சி (19.)

(ப - ரை.) 1. அலந்தலையெனல் விகாரம்.

15. விண்ணுயர் வைப்பின காடென்றது மரங்கள் விண்ணிலே செல்ல வோங்கி............; மாறியுரைப்பாரு முளர்.

19. ததைந்த காஞ்சியென்றது * விளையாட்டுமகளிர் பலரும் தளிரும் முறியும் தாதும் பூவும் கோடலாற் சிதைவுபட்டுக் கிடக்கின்ற காஞ்சி யென்றவாறு.

---

* மகளிர் காஞ்சி கொய்தல்: "கொய்குழை யகைகாஞ்சித் துறையணி நல்லூர" (கலி. 74 : 5.)

இச்சிறப்பானே இதற்கு, '**தசைநந்த காஞ்சி**' என்று பெயராயிற்று.

23 - 4. வளைமகள் குறுஅது மலர்ந்த ஆம்பலென்றது விளையாட்டு மகளிர் குறுதற்கு எட்டாமையாலே மலர்ந்த ஆம்பலென்றவாறு.

குறுமலெனத் திரிக்க.

சுட்டுவ (10), போரெதிர் வேந்தர் தாரழிந்து ஒராலின் (17), அவர் அகன்றலைநாடு (25) காடாயின (15); அதனை நின்னயந்து வருவேம் கண்டனம் (11) எனக்கூட்டி வினைமுடிவுசெய்க.

இதனாற்சொல்லியது அவன் வென்றிச்சிறப்புக் கூறியவாறாயிற்று.

போரெதிர்வேந்தர் தாரழிந்து ஒராலின் (17), நாடு (25) காடாயின (15) என எடுத்துச்செலவினை மேலிட்டுக் கூறினமையால் * வஞ்சித்துறைப் பாடாணாயிற்று.

(கு-ரை) 1. அலந்தலை = அலந்த தலை - இலையின்றி வறிதாகிய தலை; "அலந்தலை வேலத்து" (பதிற். 39 : 12.) உன்னம் - இலவென்பர். கவடு - கிளை.

2. சிதடி - சிள்வீடென்னும் வண்டு. வறம் - வறுமை.

3. பைது - பசுமை. புலங்கெடு காலையும் - விளைநிலங்கள் விளைவின்றிக் கெட்ட காலத்தும்.

4. நரம்பை இழுத்துக்கட்டிய யாழ்முதலிய இசைக் கருவிகளைக் கொண்ட பையினை உடையராகி; கலம் - யாழ் முதலிய இசைக்கருவிகள்.

5. மன்றம் - பரிசிலர் தங்கும் பொது இடம். மறுகு சிறைபாடும் - சென்று மீளும் பக்கமாகிய இசைத் துறைகளைப் பாடும்; மறுகு சிறை யென்றது ஆரோகண அவரோகணக் கிரமம் போன்ற ஓர் இசை முறை போலும்.

6. வயிரிய மாக்கள் - கூத்தரும் பாணரும்; கடும்பசி - மிக்க பசி.

5-6. பாடுவார் மன்றம்நண்ணி மறுகு சிறை பாடுதல் : பதிற். 29: 8-9, 43: 26-8.

7. புனையிழை - அலங்கரிக்கப்பெற்ற ஆபரணம். இது சேரனால் அணியப் பெற்றது.

8. உண்டு மலிந்து ஆட - கள்ளையுண்டு மகிழ்ச்சி மிக்கு ஆடுதலைச் செய்ய. உண்டாட்டு என்னும் சொல் இங்கே அறிதற்குரியது.

9-10. சிறிய அளவினையுடைய கள்ளுண்டு மகிழ்ச்சிபெற்ற காலத்தும் பெரிய ஆபரணங்களை வழங்குகின்ற; சிறுசோறு, பெருஞ்சோறு என்பன போலச் சிறியகள், பெரியகள் என அளவுபற்றிக் கூறுதல் மரபு (புறநா. 235 : 1-2); கள்ளுண்டு மகிழும் மகிழ்ச்சியை, மகிழ் என்று சொல்லுதல் வழக்காதலின், சிறுமகிழ் என்றது சிறிய கள்ளுண்ட மகிழ்ச்சி என்பதைக் குறித்தது. கள்ளுண்ட காலத்துப் பெருங்கொடை வழங்குதல் உபகாரிகளுக்கு இயல்பு. இங்கே சிறுகள்ளுண்டு பெருங்கலம் வீசுதல் இயல்பாகவே அவன் கொடையிற் சிறந்தவன் என்பதைப் புலப்படுத்தியது. "நாட்கள் ளுண்டு நாண்மகிழ் மகிழின், யார்க்கு மெளிதே தேரீ தல்லே, தொலையா நல்லிசை விளங்கு மலையன், மகிழா தீத்த விழையணி நெடுந்தேர், பயன்கெழு முள்ளூர் மீமிசைப், பட்ட மாரி யுறையினும் பலவே" (புறநா. 123) என்பதும் அதன் உரை முதலியனவும் இக்கருத்தைத் தெளிவுறுத்தும்.

---

* பதிற். 22, உரை.

10. பொலந்தார் - பொன்னரிமாலை.

1-10. நிலவளம் அற்ற வறுமைக்காலத்தும் சேரன் பெருங்கொடை வழங்குவான் என்றபடி.

11. நின் நயந்து - நின்னைக் காண விரும்பி. புல் மிக்கு - அறுகம்புல் முதலியவை மிக வளரப்பெற்று.

12. வழங்குநர் - வழிச்செல்வோர்.

13. ஆற்ற - வழிகளையுடைய. ஏறு புணர்ந்து - ஆண்மரையோடு கூடி. ஆற்ற (13) காடாயின (15) என்க.

14. அண்ணல் மரையா - தலைமையையுடைய மரையா. அமர்ந்து - விரும்பி.

16. மைந்து மலி பெரும் புகழ் - வன்மையினால் மிக்க பெரிய புகழை. அறியாராய் மலைந்த என்க.

17. போர் எதிர் வேந்தர் - போரை ஏற்றுக்கொண்ட அரசர். தார் அழிந்து ஒராலின் - தூசிப்படை கெட்டொழிய நீங்குதலால்.

18 - 9. மருது இமிழ்ந்து - மருதமரம் தன்னிடத்தே பறவைகள் ஒலிக்க; இமிழ்ந்து - இமிழ; எச்சத்திரிபு. மருதுமலி பெருந்துறை: "துறைநணி மருதமேறி" (பதிற். 27 : 6); "உயர்சினை மருதத் துறையுறத் தாழ்ந்து", "துறைநணி மருதத்து" (புறநா. 243 : 6, 344 : 3.) நளியிரும் பரப்பின் - செறிந்த பெரிய பரப்பினையுடைய. ததைந்த - சிதைந்த. காஞ்சி - காஞ்சியென்னும் மரம்.

20. முருக்கு தாழ்பு எழிலிய - முள்ளுமுருங்கையின் பூக்கள் நீரிலே தங்குதலால் அழகு பெற்ற. நெருப்பு உறழ் அடைகரை - நெருப்பை ஒத்த நீரை அடைந்த கரையில். முள்ளுமுருங்கையின் பூவிற்கு நெருப்பு உவமை. "பொங்கழன் முருக்கி னொண்குரல்" (அகநா. 277 : 17.)

21. நந்து - சங்கு.

22. பழனப் படப்பை - பொய்கையை அடுத்த விளைநிலத்திலுள்ள.

23. அழல் மருள் - நெருப்பை ஒத்த. தாமரைப் பூவிற்கு நெருப்பு உவமை: பதிற். 19 : 20, அடிக். பூவின் தாமரை: முதலுக்கேற்ற அடை.

24. குறுஅது - பறிக்கப்படாமல்.

23 - 4. தாமரையும் ஆம்பலும்.

25. அறுஅ யாணர் - இடையறாத புதிய வருவாயையுடைய. அகன்றலை நாடு - அகன்ற இடத்தையுடைய நாடுகள்.

(பி - ம்.) 15. காடாயினவே. (௫)

---

(௨௪) நெடுவயி னொளிறு மின்னுப்பரந் தாங்குப்
புலியுறை கழித்த புலவுவா யெஃகம்
ஏவ லாடவர் வலனுயர்த் தேந்தி
ஆரரண் கடந்த தாரருந் தகைப்பிற்
பீடுகொண் மாலைப் பெரும்படைத் தலைவ
ஓதல் வேட்ட லவைபிறர்ச் செய்தல்

ஈத லேற்றலென் றூறுபுரிந் தொழுகும்
அறம்புரி யந்தணர் வழிமொழிந் தொழுகி
ஞால நின்வழி யொழுகப் பாடல்சான்று
நாடுடன் விளங்கு நாடா நல்லிசைத்
திருந்திய வியன்மொழித் திருந்திழை கணவ
குலேயிழி பறியாச் சாபத்து வயவர்
அம்புகளே வறியாத் தூங்குதுளங் கிருக்கை
இடாஅ வேணி யியலறைக் குருசில்
நீர்நிலந் தீவளி விசும்போ டைந்தும்
அளந்துகடை யறியினு மளப்பருங் குரையை நின்
வளம்வீங்கு பெருக்க மினிதுகண் டிகுமே
உண்மருந் தின்மரும் வரைகோ ளறியாது
குரைத்தொடி மழுகிய வுலக்கை வயின்றே
றடைச்சேம் பெழுந்த வாடுறு மடாவின்
எஃகுறச் சிவந்த வூனத் தியாவரும்
கண்டுமதி மருளும் வாடாச் சொன்றி
வயங்குகதிர் விரிந்து வானகஞ் சுடர்வர
வறிதுவடக் கிறைஞ்சிய சீர்சால் வெள்ளி
பயங்கெழு பொழுதோ டாங்கிய நிற்பக்
கலிழுங் கருவியொடு கையுற வணங்கி
மன்னுயிர் புரைஇய வலனேர் பிரங்கும்
கொண்டற் றண்டளிக் கமஞ்சூன் மாமழை
காரெதிர் பருவ மறப்பினும்
பேரா யாணர்த்தால் வாழ்கநின் வளனே.

**துறை - இயன்மொழி வாழ்த்து. வண்ணம் - ஒழுகுவண்ணம். தூக்கு - செந்தூக்கு. பெயர் - சீர்சால் வெள்ளி (24.)**

(ப - ரை.) 4 - 5. தாரருந் *தகைப்பிற் பீடுகொண் மாலேப் பெரும்படை யென்றது தார்ப்படைக்கு அழித்தற்கரிய மாற்றார் படைவகுப்பிலே வென்றி செய்து பெருமைகொள்ளும் இயல்பையுடைய அணியாய் நிற்கும் பெரும் படை யென்றவாறு.

6. அவை பிறர்ச்செய்தலென்புழிப் பிறரையென விரியும் இரண்டாவதனை அவை செய்தலென நின்ற செய்தலென்னுந்தொழிலேப் போந்த பொருளாற் செய்வித்தலென்னும் தொழிலாக்கி அதனொடு முடிக்க.

* தகைப்பு என்பது கட்டப்பட்ட மாளிகைக்கு ஆவதுபோல இங்கே வகுத்து அமைக்கப்பட்ட படையணிக்கு ஆயிற்று.

12. குலைபிழிபு அறியாச் சாபமென்றது போர்வேட்கையான் இன்ன பொழுது போருண்டாமென்று அறியாதே எப்பொழுதும் நாணியேற்றியே கிடக்கும் வில்லென்றவாறு.

13. அம்பு கழிவறியாவென்றது போர்வேட்கையான் எப்பொழுதும் கையினின்றும் அம்பைக் கழிதலறியாவென்றவாறு. தூங்கு துளங்கு இருக்கையென்றது படை * இடம்படாது செறிந்து துளங்குகின்ற இருப்பென்றவாறு.

14. இடா ஏணி - அளவிடப்படாத எல்லை. இயலென்றது பாசறைக்குள்ள இயல்பை ; பாசறை அறையெனத் தலைக்குறைந்தது.

18. உண்மாரும் தின்மாருமென்பன குறுகிநின்றன ; உண்மாரையும் தின்மாரையுமென்னும் இரண்டாவது †விகாரத்தால்தொக்கது. அறியாதென்பதனை அறியாமலெனத் திரிக்க.

24 - 5. வறிது வடக்கு இறைஞ்சி சீர் சால் வெள்ளி பயம் கெழு பொழுதோடு ஆநியம் நிற்பவென்றது சிறிது வடக்கிறைஞ்சின புகழான் அமைந்த வெள்ளி மழைக்குப் பயன்படும் மற்றைக் கோட்களுடனே தான் நிற்கும் நாளிலே நிற்கவென்றவாறு.

‡ பொழுதென்றது அதற்கு § அடியாகிய கோளை.

வறிது வடக்கிறைஞ்சியவென்னும் அடைச்சிறப்பான் இதற்கு '**சீர் சால்வெள்ளி**' என்று பெயராயிற்று.

பெரும்படைத்தலைவ (5), திருந்திழை கணவ (11), குருசில் (14), நீர் நிலமுதலைந்தினையும் (15) அளந்து முடிவறியினும் பெருமை அளந்தறிதற்கரிய (16) ; நின் செல்வமிக்க பெருமை இனிது கண்டேம் (17) ; அஃது எவ்வாறு இருந்ததென்னின். வாடாச்சொன்றி (22), மழை (28) காரெதிர் பருவமறப்பினும் (29), பேரா யாணர்த்து ; அப்பெற்றிப்பட்ட நின்வளம் வாழ்க (30) என வினைமுடிவு செய்க.

இதனாற் சொல்லியது அவன் பெருமையும் கொடைச்சிறப்பும் கூறி வாழ்த்தியவாறாயிற்று.

(கு - ரை.) 1. உயர்ந்த ஆகாயத்திடத்தே விட்டு விளங்கும் மின்னல் பரந்தாற்போல்.

2. புலித்தோலாற்செய்த உறையினின்றும் நீக்கிய புலால் நாற்றத்தையுடைய வேலை (**பதிற்**. 19 : 4.)

1 - 2. வேலுக்கு மின்னல் உவமை : **புறநா**. 42 : 4.

3. ஏவல் ஆடவர் - அரசனது ஏவலிற் செல்லும் வீரர்கள். வலன் உயர்த்து - வலப்பக்கத்தே உயரத்தூக்கி ; வெற்றிக்களத்தே தூக்கி எனலுமாம் ; "வலவயி னுயரிய" (**முருகு**. 152) என்ற விடத்து **நச்சினார்க்கினியர்** 'வெற்றிக்களத்தே எடுத்த' என உரை எழுதினர். "அடுகளத் துயர்கநும் வேலே" (**புறநா**. 58 : 29) என்பதில் போர்க்களத்தில் வேலுயர்த்தலைக் கூறல் காண்க.

---

* இடம்படாது - இடம்பற்றாமல் (**புறநா**. 62 : 10 - 11.)

† உயர்திணை மருங்கின் ஒழியாது வரவேண்டு மாதலின் (**தொல்**. தொகைமரபு, 15) விகாரத்தால் தொக்கதென்றார்.

‡ பொழுதென்றது இங்கே ஆகுபெயர். § அடி - காரணம்.

4 - 5, ஆரரண்கடந்த-பிறரால் அழித்தற்கரிய பகைவர் அரணங்களை வென்ற. தூசிப்படையால் அழித்தற்கரிய பகைவரது அமைப்பின்கண் வெற்றியாற் பெருமையைக்கொண்ட. தகைப்பு என்றது இங்கே அணிவகுப்பை. மாலை - இயல்பு (தொல். உரி. 15.) ஏந்தியென்னும் சினைவினை கடந்த என்னும் முதல்வினையோடு முடிந்தது.

6. ஓதல் - வேதத்தை ஓதுதல். வேட்டல் - யாகம் செய்தல். அவை பிறர்செய்தலாவன ஓதுவித்தலும் வேட்பித்தலும்.

7. ஏற்றல் - கொள்ளத்தகும் பொருளைப் பெற்றுக்கொள்ளுதல். ஆறு புரிந்து - ஆறு தொழில்களைச் செய்து.

8. அறம்புரி அந்தணர் - தருமத்தை விரும்புகின்ற அந்தணர்; "அந்தண ரென்போ ரறவோர்" (குறள் 30.) அந்தணர்பாற் பணிவான வார்த்தைகளைச் சொல்லி; "பார்ப்பார்க் கல்லது பணிபறி யலையே" (பதிற். 63 : 1) என்றலின் இங்ஙனம் கூறினர். வழிமொழிதல் : புறநா. 239 : 6.

6 - 8. அந்தணர் அறுதொழில்: "அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கமும்" (தொல். புறத். 20) ; "இருமூன் றெய்திய வியல்பினின் வழாஅது.........இருபிறப் பாளர்" (முருகு. 177 - 82.)

அந்தணர்க்குக் கூறிய பொதுத் தொழில்கள் ஆறென்பதற்கு மேற்கோள் (தொல். புறத். 20, ந.)

9. பாடல்சான்று - புலவர் புகழும் பாடல்கள் அமைந்து; இது நல்லிசைக்கு அடை.

10. நாடு உடன் விளங்கும் - நாடு முழுவதும் விளங்கிய. நாடா நல் இசை - ஐயுற்று ஆராயப்படாத உலகறிந்த நல்ல புகழையுடைய (சிறுபாண். 82, ந.) பாடல் சான்றமையால் புகழ் நாடுமுழுவதும் விளங்குவதாயிற்று.

11. திருந்திய இயல்மொழி - பிறர் திருத்தவேண்டாதே இயல்பாகவே குற்றத்தினின்றும் நீங்கித் திருந்திய மொழி. திருந்திழை கணவ: பதிற். 14 : 15, அடிக். இத்தொடர் அனைத்தும் ஒரு பெயராக நின்றது.

12. நாணியை வளைத்தலினின்றும் இறக்குதலை அறியாத வில்லையுடைய வீரர். "கொடுந்தொழில் வல்விற் குலைஇய கானவர்" (முருகு. 194) என்ற பாடத்திற்கு உரை கூறும்பொழுது குலைஇய என்னும் சொல்லுக்கு வளைத்த என நச்சினார்க்கினியர் பொருளுரைத்தாராதலின், இங்கே வளைத்தலினின்றும் நீங்குதலை அறியாத வில் எனலுமாம்.

13. தூங்கு - செறிந்த. துளங்கு இருக்கை - வீரர்களின் மிகுதியால் அசைகின்ற இடங்களையுடைய.

14. அளவிடப்படாத எல்லையாகிய இயல்பையுடைய பாசறைக் கண் தங்கும் உபகாரியே. ஏணி - எல்லை (புறநா. 35 : 1.)

12 - 4. வயவர் அம்பு களைதலை அறியாத இருக்கையையுடைய அற்றையென்க.

15 - 6. ஓடு : எண் ஓடு. கடை அறியினும் - எல்லையை அறிந்தாலும். அளப்பரியை ; குரை : அசைநிலை. ஐந்து பூதங்களை அளவுப் பெருமைக்கு எடுத்துரைத்தல் மரபு (பதிற். 14 : 1 - 2, அடிக்.)

17. கண்டிகும் - கண்டோம்.

18. வரைகோள் அறியாது - எல்லை அறியாது; தடைசெயப்படுதலை அறியாமலெனலும் ஆம்.

'என்பார் என்மரெனத் திரிந்தது, உண்மருந் தின்மரும் என்றாற் போல' (சீவக. 1843, ந.)

19. ஒலித்தலையுடைய பூண்மழுங்கிய உலக்கைகளையுடைய இடந் தோறும். உணவுக்கு வேண்டிய நெல்லைக் குற்றிக் குற்றி உலக்கையின் பூண் மழுங்கியது.

20. இலையையுடைய சேம்பு மேலே வருகின்ற சமையல் செய்தற் குரிய மடாவினையும். இலையென்றது முதலுக்கு அடை. சேம்பு என்றது இங்கே உணவுக்குப் பயன்படும் அதன் தண்டையும் கிழங்கையும் அவற்றை வேகவைத்தலின் மேலே எழுந்தன. ஆடு - அடுதல். மடா வென்பது மிடா வெனவும் வழங்கும்.

21. அரிவாள் செத்தும் பொருட்டுப் பட இரத்தத்தாற் சிவந்து தோற் றும் இறைச்சியையும் உடைய.

22. வாடாச்சொன்றி - என்றும் குறைவுபடாத உணவு. சொன்றி யென்றது இங்கே உணவுப் பொதுவினைக் குறித்தது.

18 - 22. "யாவர்க்கும், வரைகோ ளறியாச் சொன்றி" (குறுந். 233 : 5 - 6.)

23. சுடர்வர - விளங்க. "விரிகதிர் வெள்ளி" (சிலப். 10 : 103) ஆதலின் இங்ஙனம் கூறினர்.

24. வறிது - சிறிதளவு. வடக்குத்திசையின் கண்ணே தாழ்ந்த சிறப் புச் சான்ற வெள்ளியென்னும் கோள். மழைக் கோளாகிய வெள்ளி வடக்கிறைஞ்சின் மழையுண்மையும், தெற்கெழுந்தால் மழையின்மையும் நேரும் ; 'விளங்குகின்ற வெள்ளியாகிய மீன் தான் நிற்றற்குரிய வடதிசை யில் நில்லாமல் தென்றிசைக்கண்ணே போகினும்' (பட்டினப். 1 - 2, ந.) என் பதையும், மதுரைக். 108 உரையின் அடிக் குறிப்பையும் பார்க்க. மழை பெய் தற்குக் காரணமாதலின் சீர்சால் வெள்ளியென்று சிறப்பித்தார்.

வறிதென்னும் உரிச்சொல் சிறிதென்னும் குறிப்புணர்த்தும் (தொல். உரி. 38, ந.)

25. பயன்பொருந்திய மற்றைக் கோள்களோடு தனக்குரிய நல்ல நாளிலே நிற்க.

24 - 5. "நிலம்பயம் பொழியச் சுடர்சினந் தணியப், பயங்கெழு வெள்ளி யாநிய நிற்ப" (பதிற். 69 : 13 - 4.)

26. கலங்கி வருகின்ற நீர்முதலிய தொகுதியோடு பக்கத்திற்பொருந்த இறங்கி ; மழை அமரர்கண்முடியும் ஆறில் ஒன்றாதலின் (தொல். புறத். 26, ந.) கையினால் மிக வணங்க எனலுமாம் ; வணங்கி - வணங்க.

27. உலகில் நிலைபெற்ற உயிர்கள் உயரும் பொருட்டு வானத்தில் வலமாக எழுந்து முழங்கும்.

28. கொள்ளுதலையுடைய தண்ணிய துளிகளாகிய நிறைந்த சூலை யுடைய கரியமேகத்தின் மழை.

29. காரை ஏற்றுக்கொள்ளும் கார்காலத்திற் பெய்தலை மறந்தாலும்.

30. மாறுத புதுவருவாயையுடையது. வளன் - செல்வச் சிறப்பு. சொன்றி (22) பேராத யாணர்த்து (30) என்க.

நின்வளத்தின் மிகுதியைக் கண்டோம் ; அது பேரா யாணர்த்து ; அவ் வளன் வாழ்கவென வாழ்த்தினர். (௪)

(உரு) **மா**வாடியபுல னாஞ்சி லாடா
கடாஅஞ் சென்னிய கடுங்கண் யானை
இனம்பரந்த புலம் வளம்பரப் பறியா
நின்படைஞர், சேர்ந்த மன்றங் கழுதை போகி
நீ, உடன்றோர் மன்னெயி றோட்டி வையா
கடுங்கா லொற்றலிற் சுடர்சிறந் துருத்துப்
பசும்பிசி ரொள்ளழ லாடிய மருங்கின்
ஆண்டலை வழங்குங் **கானுணங்கு கடுநெறி**
முனையகன் பெரும்பா ழாக மன்னிய
உருமுறழ் பிரங்கு முரசிற் பெருமலை
வரையிழி யருவியி னொளிறுகொடி நுடங்கக்
கடும்பரிக் கதழ்சிற ககைப்பநீ
நெடுந்தே ரோட்டியபிற ரகன்றலை நாடே.

**துறை - வஞ்சித்துறைப் பாடாண்பாட்டு.**
**வண்ணம் - ஒழுகுவண்ணமும் சொற்சீர்வண்ணமும்.**
**தூக்கு - செந்தூக்கும் வஞ்சித்தூக்கும்.**
**பெயர் - கானுணங்கு கடுநெறி (8.)**

(ப-ரை.) 2. கடாச்சென்னியென்னும் ஒற்று மெலிந்தது.

4. கழுதை போகியென்பதனைப் போகவெனத் திரிக்க.

5. தோட்டி - காவல். 7. அழல் - காட்டுத்தீ.

8. கானுணங்கு கடுநெறி யென்றது மழையின்மையாற் கானம் தீந்த கடியவழியென்றவாறு.

இச்சிறப்பானே இதற்கு, '**கானுணங்கு கடுநெறி**' என்று பெயராயிற்று.

9. முனை - ஆறலைகள்வர் செய்யும் போர்.

12. செலவின் கடுமை ஆற்றல் தோன்றப் பறவையாகக்கூறுவான் உபசாரவழக்குப்பற்றிச் சிறகு அகைப்பவென்றானென்க.

முரசினொடு (10) என ஒடு விரித்து அதனைத் தேரோட்டிய (13) என்பதனொடு முடிக்க.

நீ (12) தேரோட்டிய பிறர்நாடு (13) அழிந்தவாறு சொல்லின், நாடு நின் மா வழங்கினவயல் பின்பு கலப்பை வழங்கா (1); நின் யானையினம் பரந்த வயல் பின் செல்வம் பரத்தலையறியா (3); நின் படையாளர் சேர்ந்த மன்றம் கழுதையாலுழப்பட (4), நீ உடன்ற அரசர்தம் நகரிகள் பின்பு தமக்கு அரணுகக் காவலாளரை வைக்கப்படா (5); இவ்வாறு அழிந்த படியேயன்றிச் சில்லிடங்கள் கடுங்கால் ஒற்றலின் (6), அழலாடிய மருங்கினையுடைய (7) கானுணங்கு கடுநெறியினையும் (8) முனைகளையுமுடைய அகன்ற பெரும்பாழாக நின்றன (9) எனக்கூட்டி வினைமுடிவு செய்க.

இதனாற் சொல்லியது அவன்வென்றிச்சிறப்புக் கூறியவாறாயிற்று.

தேரோட்டிய பிறர்நாடு இவ்வாறு அழிந்ததென எடுத்துச்செலவினை மேலிட்டுக் கூறினமையால் வஞ்சித்துறைப் பாடாணாயிற்று.

'மாவாடிய' (1) என்பது முதலாக மூன்றும் வஞ்சியடியாக வந்தமை யால் வஞ்சித்தூக்குமாயிற்று.

'நின்படைஞர்' (4) எனவும் 'நீ' (5) எனவும் அடிமுதற்கட் சீரும் அசையும் கூனாய் வந்தன.

(கு-ரை). 1. நின் படையிலுள்ள குதிரைகள் சென்ற பகைவருடைய வயல்களில் கலப்பைகள் உழா.

2-3. மதத்தைத் தலையிலேயுடைய வன்கண்மையையுடைய யானைப் படை பரந்து சென்ற வயல்கள் வளம்பரவுதலை அறியா. கடாச்சென்னிய வென்பது மெலிந்தது. கடாஅஞ் சென்னிய யானை : "கமழ்கடாஅத், தளறு பட்ட நறுஞ்சென்னிய......வினைநவின்ற பேர்யானை" (மதுரைக். 44 - 7.)

4. படைஞர் - போர்வீரர். மன்றம் - பொதுவிடம். கழுதை போகி - கழுதைகள் செல்ல; பகைவர்நாட்டு ஊர்களிற் கழுதைகளைக் கொண்டு உழுவித்தல் மரபாதலின் இங்ஙனம் கூறினர்; "வெள்வாய்க் கழுதைப் புல்லினம் பூட்டிப், பாழ்செய் தனையவர் நனந்தலை நல்லெயில்" (புறநா. 15 : 2 - 3) என்பதையும் அதன் அடிக்குறிப்பையும் பார்க்க.

5. உடன்றோர் - போர்செய்த பகையரசரது. எயில்களில் மக்கள் இன்மையின் காவல்கள் வைக்கப்படா.

6. கடியென்னும் உரிச்சொல் மிகுதிப் பொருளில் வந்தது (தொல். உரி. 87, தெய்வச்.) 7. அழலாடுதல் : பதிற். 15 : 7.

6-7. மிகுதியான காற்று அடித்தலால் சுவாலை மிக்குக் கோபித்துப் பசிய பிசிரையுடைய ஒள்ளிய நெருப்பு வழங்கிய இடங்களையும்.

8. ஆண்டலை யென்னும் புள் வழங்குகின்ற, மரங்களடர்ந்த காடு தீந்துபோன கடியவழிகளையும் உடைய. ஆண்டலை - ஆண்மகன் தலை போன்ற தலையையும் புள்ளினைப்போன்ற உடலையுமுடையதொரு பறவை. இது பாலைக்குரியது.

9. ஆறலைப்பவர் போர்செய்யும் இடங்கள் அகன்ற பெரிய பாழ் வெளிகளாக நிலைபெற்றன.

10. இடியை ஒத்து ஒலிக்கும் வெற்றி முரசோடு.

10 - 11. பெரியமலையின் பக்கத்தினின்றும் ஒழுகும் அருவியைப் போல விளங்குகின்ற கொடி அசைய. கொடிக்கு அருவி : மதுரைக். 373 -4, அடிக்.

12. விரைவாகிய செலவையுடைய பறவையை ஒப்ப. பரி - செலவு. கதழ் - விரையும். சிறகு - பறவை; ஆகுபெயர். மலர்த்த வென்னும் பொருளையுடைய அகைப்பவென்னும் சொல் இங்கே உவமவாசகமாக நின்றது.

13. பிறரென்றது பகைவரை. 12 - 3. குறுந். 205 : 2 - 3.

நாடு (13) பாழாக மன்னிய (9.)

மு. இது புலவன் பொருள் நச்சிக் கூறலிற் பாடாண் கொற்றவள்ளை (தொல். புறத். 34, ந.)

(பி-ம்.) 12. சிறைநகைப்ப. (௫)

---

(உகூ) தேஎர் பரந்தபுல மேஎர் பரவா
களிறா டியபுல நாஞ்சி லாடா
மத்துர றியமனை யின்னியமிமிழா
ஆங்குப், பண்டுநற் கறியுநர் செழுவள நினைப்பின்
நோகோ யானே நோதக வருமே
பெயன்மழை புரவின் றாகிவெய் துற்று
வலமின் றம்ம காலையது பண்பெனக்
கண்பனி மலிர்நிறை தாங்கிக் கைபுடையூ
மெலிவுடை நெஞ்சினர் சிறுமை கூரப்
பீரிவர் வேலிப் பாழ்மனை நெருஞ்சிக்
**காடுறு கடுநெறி** யாக மன்னிய
முருகுடன்று கறுத்த கலியழி மூதூர்
உரும்பில் கூற்றத் தன்னநின்
திருந்துதொழில் வயவர் சீறிய நாடே.

**இதுவுமது. பெயர் - காடுறு கடுநெறி (11.)**

(ப-ரை.) 1. தேர்பரந்த புலம் ஏர் பரவாவென்றது ஒருகால் தேர்பரந்த வயல் அத்தேர் பரந்தமாத்திரையாற் சேறாய்ப் பின்பு உழுதற்கு ஏர் பரவா வென்றவாறு.

2. களிறு ஆடிய புலம் நாஞ்சில் ஆடாவென்றது பன்றிகள் உழுத *கொல்லைத்தறை அவை உழுத மாத்திரையானே புழுதியாகிப் பின்பு கலப்பை வழங்காவென்றவாறு.

3. மத்து உரறிய மனை இன்னியம் இமிழாவென்றது மத்து ஒலிக்கின்ற மனைகள் அம்மத்தொலியின் மிகுதியானே இனிய இயங்களின் ஒலிகிளராவென்றவாறு.

8. கட்பனியென்னும் ஒற்று மெலிந்தது.

10 - 11. நெருஞ்சியின் அடர்ச்சியை நெருஞ்சிக்காடெனக் கூறிய அடைச்சிறப்பான் இதற்கு, '**காடுறு கடுநெறி**' என்று பெயராயிற்று.

மூதூர்போல (12) என உவமவுருபு விரித்து, அதனை வயவர் சீறிய (14) என்னும் வினையொடு முடிக்க. இனிப் போலுமென விரித்து வயவர் சீறிய நாடெனலும் ஒன்று. இனி மூதூர்க்கூற்றமெனக் கூட்டிக் கூற்று வன் கொடுமை மிகுதி கூறலுமொன்று.

13. உரும்பில் கூற்றென்பது பிறிதொன்றால் நலிவுபட்டு மனக் கொதிப்பில்லாத கூற்றமென்றவாறு. † உருப்பென்னும் ஒற்று ‡ மெலிந்தது.

நின் (13) வயவர் சீறிய நாடு அவ்வயவர் சீறுதற்குமுன்பு இருக்கும்படி சொல்லின் (14), தேர் பரந்த புலம் ஏர் பரவா (1) ; களிறாடிய புலம் நாஞ்சி

* கொல்லைத்தறை - தரிசாய்க் கிடந்த காடு.

† உருப்பு - வெம்மை ; நெருப்பெனச் சிவந்த வுருப்பவி ரங்காடு" (அகநா 11 : 2.) ‡ திருந்துதொழில் வயவரென்பது நோக்கி மெலிந்தது.

லாடா (2); மத்து உரறிய மனை இன்னியம் இமிழா (3); அவ்வாறு வளவியது இப்பொழுது காடுறு கடுநெறியை உடைத்தாகா நின்றது (11); அதன் செழுவளத்தைப் பண்டுநற்கறியுநர் நினைப்பின் (4), நோதக வரும்; நோவேன் யான் (5) என மாறிக் கூட்டி வினைமுடிவுசெய்க.

இதனாற் சொல்லியது அவன் வென்றிச் சிறப்புக் கூறியவாறாயிற்று.

நின் வயவர் சீறிய நாடு இவ்வாறு அழிந்ததென எடுத்துச் செலவினை மேலிட்டுக் கூறினமையால் வஞ்சித்துறைப்பாடாணாயிற்று.

'தேஎர்பரந்த' (1) என்பது முதலாக மூன்றடி வஞ்சியடியாக வந்தமையால் வஞ்சித்தூக்குமாயிற்று.

'ஆங்கு' (4) என்பது அடிமுதற் கூன்.

(கு-ரை.) 1 - 3. இவ்வடிகளில் பகைவர்நாட்டின் பழைய நிலை கூறப்படும்.

1. புலம் - விளை நிலங்கள். பரவா : எதிர்மறை வினைமுற்று.

2. களிறு - பன்றி; "கேழற் கண்ணுங் கடிவரை யின்றே" (தொல். மரபு. 34.) நாஞ்சில் - கலப்பைகள்; பன்றிகள் உழுதமையால் வயல்கள் பின்பு உழுதல் வேண்டாதனவாயின; "கடுங்கட் கேழ லுழுத பூழி, நன்னாள் வருபத நோக்கிக் குறவர், உழாஅது வித்திய பரூஉக்குரற் சிறுதினை" (புறநா. 168 : 4-6.)

3. மத்து உரறிய மனை - தயிர்கடையும் மத்துக்கள் ஒலித்த வீடுகள். இன்னியம் இமிழா - இனிய வாத்தியங்களின் ஓசை கேட்கப்படா.

4. பண்டு நற்கு அறியுநர் - பழைய நிலைமையை நன்றாக அறிபவர். நற்கு : நன்கென்பதன் விகாரம் (மலைபடு. 392, ந.)

4 - 5. நினைப்பின் நோதக வரும் என்க. யான் நோகு - நான் வருந்துவேன். ஓ : அசைநிலை.

6. புரவு இன்றாகி - உலகத்தைக் காத்தல் இல்லையாகி. வெய்துற்று - வெம்மையுற்று.

7. காலையது பண்புவலம் இன்று என - சூரியனுடைய வெம்மை நன்மையையுடையதன்று என்று.

8. கண்பனி மலிர்நிறை தாங்கி - கண்களில் பனிக்கின்ற நீரைத் தாங்கி.

8 - 9. கை புடையூ சிறுமை கூர - கைகளைப் புடைத்துத் துன்பத்தை மிக அடைய.

10. பீர் இவர் வேலி - பீர்க்கங்கொடி படர்ந்த வேலியையுடைய; பாழ்மனையில் பீர்க்கங்கொடி படர்தல் : "ஊரெழுந் துலறிய பீரெழு முதுபாழ்", "முனைகவர்ந்து கொண்டெனக் கலங்கிப் பீரெழுந்து, மனைபாழ்பட்ட" (அகநா. 167 : 10, 373 : 1-2.) பாழ்மனை நெருஞ்சி : "பெருவிழாக் கழிந்த பேஎமுதிர் மன்றத்துச், சிறுபூ நெருஞ்சியோ டறுகை பம்பி" (பட்டினப். 255 - 6); "பாழூர் நெருஞ்சி" (புறநா. 155 : 4.)

11. மன்னிய - நிலைபெற்றன.

12. முருகு உடன்று கறுத்த - முருகக்கடவுள் மாறுபட்டுக் கோபித்த; முருகு-தெய்வத்தன்மை; முருகக்கடவுளுக்கு ஆகுபெயர் (மதுரைக். 181, ந.) கலி அழி மூதூர் - ஆரவாரம் அழிந்த பழைய ஊரைப்போல.

13. உரும்பு இல் கூற்றத்து அன்ன - பிறிதொன்றால் கொடுமை இல்லாத கூற்றுவனைப் போன்ற.

14. திருந்துதொழில் வயவர் - பின்னிடாத போர்த்தொழிலையுடைய வீரர்; 'திருந்தடி - பிறக்கிடாத வடி' (புறநா. 7 : 2, உரை.) சீறிய நாடு - கோபித்து அழித்த நாடுகள்.

வயவர் சீறிய நாடு (14) சிறுமை கூர (9) நெருஞ்சிக் (10) காடுறுகடு நெறியாக மன்னிய (11); அறியுநர் செழுவளம் நினைப்பின் (4) நோதக வரும்; யான் நோவேன் (5) என முடிக்க.

(பி-ம்.) 4 ஆங்கப். 7. வலனின்றம்ம. 9. நெலிவுடை 11. கடுநெறி யாகு. (சு)

---

(உஎ) சிதைந்தது மன்றநீ சிவந்தனை நோக்கலிற்
றொடர்ந்த குவளைத் தூநெறி யடைச்சி
அலர்ந்த வாம்ப லகமடி வையர்
சுரியலஞ் சென்னிப் பூஞ்செய் கண்ணி
அரிய லார்கைய ரினிதுகூ டியவர்
துறைநணி மருத மேறித் தெறுமார்
எல்வளை மகளிர் தெள்விளி யிசைப்பிற்
பழனக் காவிற் பசுமயி லாலும்
பொய்கை வாயிற் புனல்பொரு புதவின்
நெய்தன் மரபி னிரைகட் செறுவின்
வல்வா யுருளி கதுமென மண்ட
அள்ளற் பட்டுத் துள்ளுபு துரப்ப
நல்லெருது முயலு மளறுபோகு விழுமத்துச்
சாகாட் டாளர் கம்பலை யல்லது
பூச லறியா நன்னாட்
டியாண ரறாஅக் காமரு கவினே.

துறை - செந்துறைப்பாடாண்பாட்டு. வண்ணம் - ஒழுகுவண்ணம்.
தூக்கு - செந்தூக்கு. பெயர் - தொடர்ந்த குவளை (2.)

(ப-ரை.) 2. தொடர்ந்த குவளை - ஆண்டுகள்தோறும் இட்டு ஆக்க வேண்டாது *தொண்டு இட்டதே ஈடாக எவ்வாண்டிற்கும் இடையறாது தொடர்ந்துவரு மென்றவாறு.

இச்சிறப்பானே இதற்கு, 'தொடர்ந்த குவளை' என்று பெயராயிற்று.

மடிவையரென்பதனை (3) வினையெச்ச முற்றாக்கி, அதனைத் தெள்விளி யிசைப்பின் (7) என்னும் வினையொடு முடிக்க.

மகளிர் (7) தெறுமார் (6) இசைப்பின் (7), காவிற் பசுமயில் ஆலும் (8) என்றது வயலிற் புகுந்து உழக்காதிருத்தற் பொருட்டு அவ்வயற்

*தொண்டு - தொன்று.

புள்ளோப்பும் உழுவர்மகளிர் அதனைக் கடியவேண்டித் தெள்விளியிசைப்பின், *இயவர் இயங்களின் ஒலிகேட்ட பழக்கத்தானே தன்னைக் கடிகின்ற ஒலியையும் அவற்றின் ஒலியாகக் கருதி மயில் ஆலுமென்றவாறு.

10. நெய்தல் மரபின் நிரை கட் செறுவென்றது நெய்தல் இடையறாது பூக்கும் மரபினையும் நிரைத்த வண்டினையுமுடைய செறுவென்றவாறு.

†கள்ளென்பது வண்டு.

வல்வாயுருளி (11) அள்ளற் பட்டு (12) மண்ட (11) எனக் கூட்டுக.

12. துள்ளுபுதுரப்பவென்றது சாகாட்டாளர் துள்ளித் துரக்கையாலே யென்றவாறு.

13. அளறுபோகு விழுமமென்றது அளற்றைக் கழியப் போகின்ற காலத்து வருத்தமென்றவாறு.

நன்னாட்டுக் (15) கவின் (16) நீ சிவந்தனை நோக்கலின் சிதைந்தது (1) என வினைமுடிவு செய்க.

இதனாற் சொல்லியது அவன் வென்றிச் சிறப்புக்கூறியவாறாயிற்று.

(கு-ரை.) 1. நீ சிவந்தனை நோக்கலின் - நீ கோபித்துப் பார்த்தலினால். மன்ற சிதைந்தது - நிச்சயமாக அழிந்தது; மன்ற: தேற்றப் பொருளில் வந்த இடைச்சொல்.

2. இடையறாது மலரும் குவளையின் தூய புறவிதழொடித்த மலரைக் கூந்தலிற் செருகி. முழுநெறி - புறவிதழொடித்த முழுப்பூ; "தீநீர்ப் பெருங் குண்டு சுனைப்பூத்த குவளைக், கூம்பவிழ் முழுநெறி" (புறநா. 116 : 1 - 2.) அதனை மகளிர் கூந்தலிலே செருகுதல் வழக்கம்; "குவளைத், தேம்பா யொண்பூ நறும்பல வடைச்சிய, கூந்தல்" (அகநா. 308 : 11 - 3.)

3. மலர்ந்த ஆம்பற்பூவின் அகவிதழால் அமைத்த தழையை அணிந்தவராகி; மடிவை - தழையென்னும் ஆடை; "அகலு ளாங்க ணம்பகை மடிவைக் குறுந்தொடி மகளிர்" (அகநா. 226 : 3 - 4) என்றவிடத்து 'இப் பாட்டினுள் மடிவையென்றது தழையை' என ஒரு பழங் குறிப்பு உள்ளது. இங்கே 'ஆம்ப லம்பகை மடிவையர்' என்ற பாடம் இருப்பின் ஓசையும் பொருளும் சிறக்கும். அம்பகை மடிவைய ரென்பதற்கு ஒன்றற்கொன்று மாறாகத் தொடுத்த அழகிய தழையாடையை யுடையாரெனப் பொருள் கொள்க; "அயவெள் ளாம்ப லம்பகை நெறித்தழை, தித்திக் குறங்கி னாழ்மா றலைப்ப, வருமே சேயிழை" (குறுந். 293 : 5 - 7) என்பதையும் அதன் உரை முதலியவற்றையும் பார்க்க.

4 - 5. சுழிந்த மயிரையுடைய தலையையும் பூவாற் செய்த கண்ணியையும் கள்ளாகிய உணவையும் உடையராகிச் சுருதியோடு இனிதே கூடுகின்ற வாத்தியத்தையுடையோர்; இவர் உழவர்.

5 - 7. இயவரையுடைய துறையென்க. நீர்த்துறைக்கு அணித்தாக உள்ள மருதமரத்தில் ஏறி; ஏறியவை மயில்கள். மயில்களை ஓட்டும்

---

* "தெருவி னார்ப்புறும் பல்லியந் தேர்மயில்" (கம்ப. ஆறுசெல். 42.)

†"கள்ளின மார்த்துண்ணும்" (சிறு. 295) என்பதன் உரையில், 'கள்ளென்பது வண்டினுள் ஒரு சாதி யென்பாரும் உளர்' என்று பேராசிரியர் எழுதியது இங்கே கருதற்குரியது. தேனென்பது வண்டுக்கும் தேனுக்கும் ஆதல்போல இதனையும் கொள்க.

பொருட்டு ஒளியையுடைய வளையையணிந்த மகளிர் தெளிந்த ஓசையைச் செய்தால். துறைநணி மருதம் : பதிற். 23:18 - 9 ; புறநா. 243 : 6-7, 344:3.

8. வயல்களை அருகிலுடைய சோலைகளில் பசிய மயில் ஆடும். தம்மை ஓட்டும்பொருட்டு மகளிர் செய்யும் ஓசையைப் பாட்டென மருண்டு ஆடின.

6 - 8. மருதமேறி மயில் ஆலின. அவை நெற்கதிரை உண்ணுதிருத்தற்பொருட்டு மகளிர் ஓசை செய்தனர்; "செந்நெ லுண்ட பைந்தோட்டு மஞ்ஞை, செறிவளை மகளி ரோப்பலிற் பறந்தெழுந்து, துறைநணி மருதத் திறுக்கு மூரொடு" (புறநா. 344 : 1 - 3.)

9. பொய்கையின் நீர் வருதற்குரிய வாய்த்தலையையும் அதன்கண் நீர் வந்து மோதுகின்ற கதவினையும் உடைய.

10. பண்டே தொடர்ந்துவந்த நெய்தற்பூக்களையும் வரிசையாக உள்ள வண்டுகளையும் உடைய வயலில்.

11. வலிய வாயையுடைய சக்கரம் விரைவிலே நெருங்க. வாயென்றது சக்கரத்தின் பட்டத்தை.

12. சேற்றிலே புதைந்து ; புதைந்து மண்டவெனக் கூட்டுக. துள்ளுபு துரப்ப - துள்ளிச் செலுத்துகையினாலே.

13. நல்ல எருதுகள் முயலுகின்ற, சேற்றினின்றும் நீங்குகின்ற துன்பத்தையுடைய.

14. வண்டியை ஓட்டுவோரது முழக்கத்தையன்றி. சாகாடு - வண்டி.

12 - 4. "அள்ளற் றங்கிய பகடுறு விழுமம், கள்ளார் களமர் பெயர்க்கு மார்ப்பே" (மதுரைக். 259 - 60) என்பதையும் அதன் அடிக் குறிப்பையும் பார்க்க. 15. பூசல் - ஆரவாரம்.

16. புதுவருவாய் இடையறுத விருப்பம் பொருந்திய அழகு.
நன்னாட்டுக்கவின் நீ சிவந்தனை நோக்கலின் சிதைந்தது.

(பி - ம்) 6. துறையணி. 11. மண்டி. (எ)

---

(உஅ) திருவுடைத் தம்ம பெருவிறற் பகைவர்
பைங்கண் யானைப் புணர்நிரை துமிய
உரந்துரந் தெறிந்த கறையடிக் கழற்காற்
கடுமா மறவர் கதழ்தொடை மறப்ப
இளையினிது தந்து விளைவுமுட் டுறாது
புலம்பா வுறையு ளீதொழி லாற்றலின்
விடுநிலக் கரம்பை விடரளை நிறையக்
கோடை நீடக் குன்றம் புல்லென
அருவி யற்ற பெருவறற் காலையும்
நிவந்துகரை யிழிதரு நனந்தலைப் பேரியாற்றுச்
சீருடை வியன்புலம் வாய்பரந்து மிகீஇயர்
உவலை சூடி யுருத்துவரு மலிர்நிறைச்

செந்நீர்ப் பூச லல்லது
வெம்மை யரிதுநின் னகன்றலை நாடே.

துறை - நாடுவாழ்த்து. வண்ணமும் தூக்கும் அது.
பெயர் - உருத்துவரு மலிர்நிறை (12.)

(ப - ரை.) 3. கறையடியென்றது குருதிக்கறைபிணையுடைய அடியென்றவாறு.

4 - 5. மறவர் கதழ் தொடை மறப்ப இளை இனிது தந்தென்றது நின் வீரர் போரில்லாமையால் விரைந்து அம்புதொடுத்தலை மறக்கும்படி நாடு காவலை இனிதாகத் தந்தென்றவாறு.

இளை - காவல். விளைவில் முட்டுறுமலெனத் திரிக்க.

6. புலம்பா உறையுட்டொழிலென மாறிக் கூட்டுக.

7. கரம்பை விடர் அளை நிறையவென்றது முன்பு நீரேறாத கரம்பை வயல்களிற் * கமர்வாய் நீர்நிறைய வென்றவாறு.

விடரளை நிறைய (7) வாய்பரந்து மிகீஇயர் (11) என முடிக்க.

கோடை நீடுகையாலே குன்றம் புல்லெனும்படி (8) அருவியற்ற காலை (9) எனக் கூட்டியுரைக்க.

11. வாய் பரந்து மிகீயரென்றது இடத்திலே பரந்து நீர்தான் தன்னை மிருக்கவேண்டி என்றவாறு.

12. உவலை சூடி உருத்துவரும் மலிர்நிறையென்றது தழைகளைச் சூடித் தோற்றிவரும் வெள்ளமென்றவாறு.

தன்னை வயல் பொறுக்குமாறு காணவென்று போர்வேட்டு வருவாரைப் போலுமென்று கூறிய இச்சிறப்பானே இதற்கு, '**உருத்துவரு மலிர் நிறை**' என்று பெயராயிற்று.

வாய்பரந்து மிகீஇயர் (11) உருத்துக் (12) கரையிழிதரும் நனந்தலைப் பேரியாற்று (10) மலிர்நிறைச் (12) செந்நீர் (13) என மாறிக் கூட்டுக.

பெருவறற்காலையும் (9) நின் அகன்றலைநாடு (14), புலம்பா வுறையுட் டொழிலை நீ ஆற்றலின் (6) திருவுடைத்து (1) எனக் கூட்டி வினை முடிவு செய்க.

இதனாற் சொல்லியது அவன் நாடுகாத்தற்சிறப்புக் கூறியவாறாயிற்று.

(கு-ரை) 1 - 6. சேரனது அரசாட்சிச் சிறப்பு இவ்வடிகளிற் கூறப்படும்.

1. பெருவிறற் பகைவர் - முன்பு பெரிய வெற்றியையுடைய பகைவரது; 'வென்றிக் களிறு - முன்பு வெற்றியையுடைய களிறு' (சீவக. 14, ந.)

2. பைங்கண் யானைப் புணர்நிரை துமிய - பசிய கண்ணையுடைய யானையினது, தம்மிற் கூடின வரிசை அழியும்படி.

3. உரம் துரந்து எறிந்த - வன்மையினால் செலுத்தி வேலை யெறிந்த. கறையடி - இரத்தக் கறையையுடைய அடி; இது மறவருக்கு அடை.

4. கதழ் தொடைமறப்ப - விரைந்து அம்பு தொடுத்தலை மறக்கும்படி.

5. நாடுகாவலை இனிமையாகச் செய்து பயிர்விளைவுகள் குறையாமல்.

* கமர் - வெடிப்பு.

6. வருந்தாத இருப்பிடங்களில் நீ தொழிலைச் செய்தலால். புலம்பா உறையுள் என்றது குடிமக்கள் பகை பசி பிணி என்னும் துன்பங்கள் இன்றி அமைதியாக உறையும் இடங்களை. தொழில் என்றது அம்மூன்று வருத்தங்களையும் போக்கிப் புரக்கும் தொழிலை.

7 - 13. ஆற்று நீரின் சிறப்பு. 7. வினையின்றி விடப்பட்ட நிலத்தினை யுடைய தரிசுகளிலுள்ள வெடிப்புக்களில் நீர் நிறையும்படி.

8 - 9. கோடைத்தன்மை நீட்டித்திருத்தலின் மலைகள் பொலிவழிய, அருவி ஒழுகாது அற்றுப்போன பெரிய வறட்சிக் காலத்திலும்; "கல்காயும் கடுவேனிலொடு" (மதுரைக். 106.)

10. மிக்குக் கரையின்கண்ணே இறக்குகின்ற அகன்ற இடத்தை யுடைய பெரிய ஆற்றினது. பேரியாறு - சேரநாட்டிலுள்ளதோர் ஆறு எனலுமாம்; "பெருமலை விலங்கிய பேரியாற் றடைகரை" (சிலப். 25 : 22); பேரியாற்றினது மலிர் நிறை (12) என முடியும்.

11. சிறப்பையுடைய அகன்ற வயல்களிடத்திலே பரவி மிகும் பொருட்டும்.

12. தழைகளை மேலே போர்த்துத் தோற்றிவருகின்ற வெள்ளத்தினது. உவலை - தழை.

13. சிவந்த நீரினாலுண்டாகும் ஆரவாரம் அல்லாமல்; வெள்ளம் கண்ட உழவரது ஆரவாரமும் நீர்விளையாட்டுச் செய்வார் ஆரவாரமும் ஒருங்கு கொள்க.

7 - 12. அணை நிறையவும் புலம் மிகவும் வருகின்ற மலிர்நிறை.

14. வெம்மை அரிது - பகைவரால் உண்டாகும் கொடுமை இல்லாதது.

12 - 4: பதிற். 13 : 12, உரை. நீர்ப்பூசலல்லது பகைவர்களால் உண்டாகும் பூசல் இல்லையென்பார் அந்நீர்ப் பூசலைப் பகைவர் பூசல் போலத் தோற்றும்படி சொற்றொடர் அமைத்தார். உவலைக் கண்ணியைச் சூடிக் கோபித்து வருகின்ற வெள்ளத்தின் சிவந்த நீர்மையையுடைய பூசல் என ஒரு பொருள் தோற்றியது. வீரர் உவலைக்கண்ணி சூடுதல்; "உவலைக் கண்ணி வன்சொ லிளைஞர்" (மதுரைக். 311.) "உருத்தெழு வெள்ளம்" (பதிற். 72 ; 10) என்பதற்கு, 'கோபித்தெழு வெள்ளம்' என உரையாசிரி யர் எழுதிய உரை இங்கே கருதற்குரியது.

நின் அகன்றலை நாடு மறவர் தொடை மறப்ப, நீ ஆற்றலின் வெம்மை யரிது; ஆதலால் திருவுடைத்து.

(வி - ம்) 5. வினையிலிது. 10. கரையழிதரு. (அ)

---

(உகூ) அவலெறிந்த வுலக்கை வாழைச் சேர்த்தி
வளைக்கை மகளிர் வள்ளை கொய்யும்
முடந்தை நெல்லின் விளைவயற் பரந்த
தடந்தா ளாரை யிரிய வயிரைக்
கொழுமீ னார்கைய மரந்தொறுங் குழாஅலின்
வெண்கை மகளிர் வெண்குரு கோப்பும்
அழியா விழவி னிழியாத் திவவின்

வயிரிய மாக்கள் பண்ணமைத் தெழீஇ
மன்ற நண்ணி மறுகுசிறை பாடும்
அகன்கண் வைப்பி னாடும னளிய
விரவுவேறு கூலமொடு குருதி வேட்ட
மயிர்புதை மாக்கண் கடிய கழற
அமர்கோ ணேரிகந் தாரெயில் கடக்கும்
பெரும்பல் யானைக் குட்டுவன்
வரம்பி னானை பரவா வூங்கே.

**துறை - வஞ்சித்துறைப்பாடாண்பாட்டு.**
**வண்ணமும் தூக்கும் அது. பெயர் - வெண்கை மகளிர் (6.)**

(ப - ரை.) 3. முடந்தை நெல்லென்றது கதிர்க்கனத்தாலே வளைந்து முடமான நெல்லென்றவாறு ; முடந்தையென்பது பெயர்த்திரிசொல் ; இனிப் பழவழக்கென்பதுமொன்று.

5. கொழுமீனார்கையவென்றது..............................................

6. இச்சிறப்பானே இதற்கு, '**வெண்கைமகளிர்**' என்று பெயராயிற்று.

இனி வெண்சங்கணிந்த கையென்பாருமுளர் ; இனி *அடுகைமுதலாகிய தொழில்செய்யாத கையென்பாருமுளர்.

7. திவவையுடைய யாழ் திவவெனப்பட்டது.

குட்டுவன் வரம்பில் தானை பரந்த இப்பொழுது அழிந்து கிடக்கின்ற இந்நாடுகள், குட்டுவன் (14) வரம்பில் தானை பரவாவூங்கு (15) முடந்தை நெல்லின் விளைவயற்பரந்த (3) நாரையிரிய (4) வெண்கை மகளிர் வெண்குருகோப்புதலையுடையவாய் (6) அழியாத விழவினையும் இழியாத திவவினையு முடையவாய் (7) வயிரியமாக்கள் எழீஇ (8) மன்ற நண்ணி மறுகு சிறை பாடும் (9), இப்பெற்றிப்பட்ட சிறப்பையுடைய அகன்கண் வைப்பினாடு இப்பெற்றியெல்லாமழிந்து கண்டார்க்கு அளித்தலையுடைய (10) என வினை முடிவு செய்க.

இதனாற் சொல்லியது அவன் வென்றிச்சிறப்புக் கூறியவாறாயிற்று.

வரம்பிறானை பரவாவூங்கென எடுத்துச்செலவினை மேலிட்டுக் கூறினமையால் வஞ்சித்துறைப்பாடாணாயிற்று.

(கு-ரை.) 1. பச்சை அவலை இடித்த உலக்கையை அருகிலுள்ள வாழை மரத்தில் சார்த்திவிட்டு. 2. வளையைக் கையிலே அணிந்த மகளிர் வள்ளையைக் கொய்தற்கு இடமாகிய.

1 - 2. "பாசவ லிடித்த கருங்கா ழுலக்கை, ஆய்கதிர் நெல்லின் வரம்பணைத் துயிற்றி, ஒண்டொடிமகளிர் வண்ட லயரும்" (குறுந். 238 : 1 - 3.)

3. கதிரின் கனத்தால் வளைவையுடைய நெல்லையுடைய விளையும் வயல்களிடத்திலே பரவியுள்ள ; மடத்தையுடையாள் மடந்தையானாற்போல முடத்தையுடையது முடந்தையாயிற்று ; "முடந்தைநெல்" (பதிற். 32 : 13.)

4. இரிய - நீங்க.

* பதிற். 18 : 6. உரை பார்க்க.

4 - 5. அயிரையாகிய கொழுவிய மீனை உண்ணுதலை யுடையனவாய் மரந்தோறும் கூடித் தங்குதலால். 6. வெண்குருகு - வெள்ளிய பறவைகள்.

4 - 6. மகளிர் குருகு ஓப்பிய ஒலியால் நாரைகளும் இரிந்தன. வெண் குருகு என்பதைச் சுட்டிப் பொருளதாக்கி முற்கூறிய நாரைகள் என்று பொருள்கொள்ளுதலும் ஒன்று; நாரை அயிரைமீனை உண்ணுதல்; குறுந். 128 : 1 - 3, ஒப்புமைப்.

7. அழியா விழவு: பதிற். 15 : 18. இழியாத் திவவின் - சுருதி யிறங்காத நரம்புக்கட்டுக்களோடு கூடிய யாழையுடைய. திவவு இங்கே யாழுக்கு ஆயிற்று; ஆகுபெயர். இது வயிரிய மாக்களுக்கு அடை.

8. வயிரிய மாக்கள் - கூத்தர். பண்ணமைத்து எழீஇ - பண்களை நன்றாக அமைத்து இசையை எழுப்பி.

9. மன்றம் - பொதுவிடம். 8 - 9. பதிற். 23 : 5 - 6, உரை.

10. அகன்கண் வைப்பின் நாடு - அகன்ற இடத்தையுடைய ஊர்களை யுடைய பகைவர் நாடுகள். அளிய - இரங்கத்தக்கன. மகளிர் குருகோப்பு தற்கு இடமானவும் விழவினையுடையனவும் வயிரியமாக்கள் பாடுவதற்கு இடமானவும் ஆகிய வைப்பையுடைய நாடுகள் என்க.

11. கலந்த பலவகைப்பட்ட தானியங்களோடு இரத்தத்தைப் பலியாக விரும்பிய.

12. மயிரோடு கூடிய தோல்போர்த்த முரசினது கரிய அடிக்கும் பக்கம் கடுமையாக முழங்க. "மயிர்க்கண் முரசு" (சிலப். 5 : 88) என்பதும், 'புலியைப் பொருது கொன்று நின்று சிலைத்துக் கோட்டுமண் கொண்ட ஏறு இறந்துழி அதன் உரிவையை மயிர் சீவாமற் போர்த்த முரசு' என்னும் அதனுரையும் இங்கே அறிதற்பாலன. 11 - 2: பதிற். 19 : 6, உரை.

13. அமர்கோள் நேர் இகந்து - போரை விரும்பிக் கொள்ளுதலில் ஒப்புமை நீங்க; இகந்து - இகப்ப. ஆரெயில் கடக்கும் - பகைவரது அரிய மதிலை வஞ்சியாது எதிர்நின்று வென்று கைக்கொள்ளும்.

14. பெரும்பல் யானை: பதிற். 77 : 11 - 2. பல்யானைச் செல்கெழு குட்டுவனென்பது இப்பத்தின் பாட்டுடைத்தலைவனை சேரனது பெயர்.

15. தானை - சேனை. பரவாவூங்கு - பரவிச் செல்லுதற்கு முன்பு.

குட்டுவன் (14) தானை பரவாவூங்கு (15) வயிரிய மாக்கள் (8) மறுகு சிறைபாடும் (9) அகன்கண் வைப்பின் நாடு மன் அளிய (10) என முடிக்க.

மு. 'இதில் இமயவரம்பன்தம்பி பல்யானைச் செல்கெழு குட்டுவனைப் பாலைக் கௌதமனார் துறக்கம் வேண்டினாரென்பது குறிப்புவகையாற் கொள்ளவைத்தலின் இது வஞ்சிப்பொருள்வந்த பாடாணாயிற்று' (தொல். புறத். 25, ந.)

(பி - ம்.) 1. அவலெறியுலக்கை. 5. குமுறலின், குழறலின். (௯)

---

(௩0) இணர்ததை ஞாழற் கரைகெழு பெருந்துறை
மணிக்கலத் தன்ன மாயிதழ் நெய்தற்
பாசடைப் பனிக்கழி துழைஇப் புன்னை
வாலிணர்ப் படுசினைக் குருகிறை கொள்ளும்
அல்குறு கான லோங்குமண லடைகரை

தாழடும்பு மலைந்த புணரிவளை ஞரல
இலங்குநீர் முத்தமொடு வார்துகி ரெடுக்கும்
தண்கடற் படப்பை மென்பா லணவும்
காந்தளங் கண்ணிக் கொலைவில் வேட்டுவர்
செங்கோட் டாமா னூனொடு காட்ட
மதனுடை வேழத்து வெண்கோடு கொண்டு
பொன்னுடை நியமத்துப் பிழிநொடை கொடுக்கும்
குன்றுதலை மணந்த புன்புல வைப்பும்
கால மன்றியுங் கரும்பறுத் தொழியா
தரிகா லவித்துப் பலபூ விழவிற்
றேம்பாய் மருத முதல்படக் கொன்று
வெண்டலைச் செம்புனல் பரந்துவாய் மிகுக்கும்
பலசூழ் பதப்பர் பரிய வெள்ளத்துச்
சிறைகொள் பூசலிற் **புகன்ற வாயம்**
முழவிமிழ் மூதூர் விழவுக்காணூஉப் பெயரும்
செழும்பல் வைப்பிற் பழனப் பாலும்
ஏன லுழவர் வரகுமீ திட்ட
கான்மிகு குளவிய வன்புசே ரிருக்கை
மென்றினை நுவணை முறைமுறை பகுக்கும்
புன்புலந் தழீஇய புறவணி வைப்பும்
பல்பூஞ் செம்மற் காடுபய மாறி
அரக்கத்தன்ன நுண்மணற் கோடு கொண்
டொண்ணுதன் மகளிர் கழலொடு மறுகும்
விண்ணுயர்ந் தோங்கிய கடற்றவும் பிறவும்
பணிகெழு வேந்தரும் வேளிரு மொன்றுமொழிந்து
கடலவுங் காட்டவு மரண்வலியார் நடுங்க
முரண்மிகு கடுங்குரல் விசும்படை பதிரக்
கடுஞ்சினங் கடாஅய் முழங்கு மந்திரத்
தருந்திறன் மரபிற் கடவுட் பேணியர்
உயர்ந்தோ னேந்திய வரும்பெறற் பிண்டம்
கருங்கட் பேய்மகள் கைபுடையூஉ நடுங்க
நெய்த்தோர் தூஉய நிறைமகி ழிரும்பலி
எறும்பு மூசா விரும்பூது மரபிற்
கருங்கட் காக்கையொடு பருந்திருந் தார

ஓடாப் பூட்கை யொண்பொறிக் கழற்காற்
பெருஞ்சமந் ததைந்த செருப்புகன் மறவர்
உருமுநில னதிர்க்குங் குரலொடு கொளைபுணர்ந்து
பெருஞ்சோ றுகுத்தற் கெறியும்
கடுஞ்சின வேந்தேநின் றழங்குகுரன் முரசே.

துறை - *பெருஞ்சோற்றுநிலை.
வண்ணமும் தூக்கும் அது. பெயர் - புகன்றவாயம் (19.)

(ப - ரை.) 2. மணிக்கலமென்றது நீலமணியாலே செய்த பாத்திரம். மணிக்கலத்தன்ன கழி (3) எனக் கூட்டி நெய்தற்பூவின் கருமையானும் அதன் பாசடைக்கருமையானும் மணிக்கலம் போன்ற கழியென வுரைக்க.

5. கானலென்றது தன்னிடத்து வந்து இரைகொள்ளுவதற்குக் குருகு தங்கி வாழும் கானலென்றவாறு.

6. புணரி வளை ஞரலவென்றது கடல்கொண்டுவந்த சங்கு திரையிலே துவண்ட வருத்தத்தாலே ஈனுகைக்கு மெய்வருந்திக் கதறவென்றவாறு.

7. முத்தமொடு வார்துகிரெடுக்குமென்றது கரைநின்றோர் வளைஞரலக் (6) கேட்டார் அம்முத்தெடுக்கவென்று வந்து முத்தையன்றி அதனோடு பவளத்தையும் எடுக்குமென்றவாறு.

பலபூவிழவினையுடைய (15) வைப்பு (21) எனக் கூட்டுக.

17. புனல் பரந்தென்றதனைப் பரக்கவெனத் திரிக்க.

18. பலசூழ் பதப்பரென்றது பல புரியாலும் சூழப்பட்ட மணற் கோட்டையென்றவாறு.

19. புகன்ற ஆயமென்றது முன்பு மணலிலைக்கு நில்லாத பெருவெள்ளத்தினை அணைசெய்து முடித்த விருப்பத்தையுடைய ஆயமென்றவாறு.

இச்சிறப்புப்பற்றி இதற்கு, 'புகன்ற வாயம்' என்று பெயராயிற்று.

27 - 8. மணற்கோடு கொண்டென்றது † மணற்கோட்டைக் கழலாடுதற்கு இடமாகக் கொண்டென்றவாறு.

இனிக் கழலென்றதனைக் ‡ கழலையுடைய தலைமகன்காலாக்கி அக்காலொடு தலைமகளிர் புணர்ந்து உடன்போமென்பாருமுளர்.

29. பிறவுமென்றது அவ்வாறு ஒருநிலமாகச் சொல்லப்படாத பல நிலப்பண்புமுடைய இடங்களுமென்றவாறு.

முன்பு எண்ணிநின்ற நிலங்களெல்லாம் ஆகுபெயரான் அந்நிலத்து வாழ்வார் மேலனவாகக் கொள்க.

30. ஒன்றுமொழிந்தென்றது ஒருவர் துணிந்ததே காரியமாக அனைவரும் துணிந்து சொல்லியென்றவாறு.

கடுஞ்சினங் கடாஅய் (33) எறியும் (43) முரசு (44) என முடிக்க.

---

* தொல். புறத். 8; பு. வெ. 58.

† மகளிர் மணலில் கழல் முதலியன விளையாடுதல் இயல்பு; பெரும்பாண் : 327 - 35 ; புறநா : 36 : 4 - 5.

‡ உடன் போக்கினை நினைத்துக் கூறியது இது.

33. முழங்கு மந்திரமென்றது முழங்க உச்சரிக்கப்படும் மந்திரமென்றவாறு.

மந்திரத்தானென உருபு விரித்து அதனைப் பேணியர் (34) என்பதனோடு முடிக்க. 34. கடவுளென்றது முரசுறை கடவுளை.

கருங்கட் பேய்மகள் கையுடைபூஉ நடுங்க (36) உயர்ந்தோனேந்திய அரும்பெறற் பிண்டம் (35) எறும்புமூசா இறும்பூது மரபின் (38) நெய்த்தோர் தூஉய நிறைமகிழ் இரும்பலி (37) கருங்கட்காக்கையொடு பருந்து இருந்தார (39) எனக் கூட்டுக.

இறும்பூது மரபிற் (38) பலி (37) என மாறிக் கூட்டுக.

பேய்மகளும் (36) எறும்பும் அஞ்சிச் செல்லாத (38) பலிகளைக் (37) காக்கையொடு பருந்திருந்தார (39) என்றது, அம்முரசுறை கடவுள் தன் ஆணையால் தன்பலிகளை மேல் தன்னருளாலே போர்வென்றி விளைவது அறிவித்தற்கு நிமித்தமாகக் காக்கையும் பருந்தும் இருந்து ஆரவென்றவாறு.

இவ்விடத்துக்குப் பிறவாறு கூட்டியுரைப்பாருமுளர்.

41. பெருஞ்சமம் ததைந்த செருவென்றது பகைவர் செய்யும் போர் சிதையும்படி செய்யும் போரென்றவாறு.

41 - 2. மறவர் குரலெனக் கூட்டுக.

ஆருபெயரான் உருமுநிலனதிர்க்குங் குரலோடு ஒத்த மறவர் குரலை உருமுநிலனதிர்க்கும் குரலென்றாகக் கொள்க.

43 - 4. எறியு முரசென்க.

மென்பால் (8) முதலாகக் கடறு ஈறாக எண்ணப்பட்ட ஐவகை நிலத்து மக்களும் பிறவும் (29) அந்நிலத்து வேந்தரும் வேளிரும் தங்களிலே ஒன்று மொழிந்து (30) அரண்வலியாதே நடுங்காநிற்கும்படி (31) கடுங்குரல் விசும்படைந்து அதிரும்படி (32) கடுஞ்சினத்தைக் கடாவிப் (33) பேய்மகள் கையுடைபூஉ நடுங்க (36) உயர்ந்தோனேந்திய பிண்டத்தினையும் (35) எறும்புமூசா மரபின் (38) நெய்த்தோர் தூஉய நிறைமகிழ் இரும்பலியினையும் (37) கருங்கட்காக்கையொடு பருந்திருந்து ஆராநிற்கச் (39) செருப்புகன்மறவரது (41) குரலோடே கோட்பாடு பொருந்திப் (42) பெருஞ்சோறு உகுத்தற்கு எறியப்படாநின்றது (43) நின்முரசு (44) என வினைமுடிவு செய்க.

இதனாற் சொல்லியது அவன் வென்றிச்சிறப்புக் கூறியவாறாயிற்று.

(கு - ரை.) 1 - 8. நெய்தல் நிலத்தின் இயல்பு.

1. இணர் ததை ஞாழல் - பூங்கொத்துக்கள் சிதைந்த ஞாழல் என்னும் மரத்தையுடைய; மகளிர் கொய்தலால் சிதைந்தது. ஞாழல் - புலிநகக் கொன்றை. ஞாழலையுடைய கரை.

2. நீலமணியாற் செய்த பாத்திரத்தைப் போன்ற கரிய இதழையுடைய நெய்தலினது. நெய்தற்பூவிற்கு நீலமணியுவமை : **மதுரைக்.** 282 ; **அகநா.** 240 : 3. 3. பசிய இலையையும் குளிர்ச்சியையுமுடைய கழியைத் துழாவி. துழாவியது இரையின்பொருட்டு.

3 - 4. புன்னைமரத்தின் வெள்ளிய பூங்கொத்தையுடைய நீரிற் படும் கிளையில் நாரை முதலிய பறவைகள் தங்குகின்ற.

5. தங்குதற்குரிய கடற்கரைச் சோலை ஓங்கிய மணலடைந்த கரையினிடத்து.

6. மணலிலே தாழ்ந்த அடம்பங்கொடியை அணிந்த கடலில் சங்குகள் ஒலிக்க ; மலைந்த - மோதிய எனலுமாம்.

7. இலங்குநீர் முத்தம் - விளங்குகின்ற தன்மையையுடைய முத்து; விளங்குநீர் முத்தமெனக்கொண்டு, மாறுபட்ட அலைகளிலுள்ள முத்து எனப் பொருள் கொள்ளுதலுமாம். வார் துகிர் எடுக்கும் - நீண்ட பவளத்தின் கொடியை வேண்டுவார் எடுத்தற்கிடமாகிய.

8. குளிர்ந்த கடற்பக்கத்தையுடைய நெய்தல் நிலத்திலுள்ள மக்களும். நெய்தலும் மருதமும் மென்பாலெனக் கூறப்படும் (புறநா. 42 : 17 - 8, உரை.)

கழி துழைஇச் சினையில் குருகு இறைகொள்ளும் கானல் பொருந்திய கரையினிடத்து வலைஞரால் துகிர் எடுக்கும் மென்பால் என்க.

9 - 13. பாலைநிலத்து இயல்பு.

9. கார்த்தட்பூவாற் செய்த கண்ணியையும் கொலை செய்யும் வில்லையும் உடைய வேடர். 10. சிவந்த கொம்பையுடைய காட்டுப் பசுவின் இறைச்சியோடு. காட்ட - காட்டிலுள்ள.

11. வன்மையையுடைய யானையினது வெள்ளிய தந்தத்தையும் கொண்டு.

12. செல்வத்தையுடைய கடைத் தெருவில் தாம் வாங்கும் கள்ளுக்கு விலையாகக் கொடுக்கும். ஆமான் ஊனையும் வேழத்து வெண்கோட்டையும் கள்ளுக்கு விலையாகக் கொடுத்தனர். "அண்ணல் யானை வெண்கோடு கொண்டு, நறவுநொடை நெல்லின் நாண்மகி ழயரும்", "வல்வி லிளையர் தலைவர்......அரிய லாட்டிய ரல்குமனை வரைப்பின், மகிழ்நொடை பெறாஅ ராகி நனைகவுட் கான யானை வெண்கோடு சுட்டி" (அகநா. 61 : 9 - 10, 245 : 7 - 11.) பிழி - கள். நொடை - விலை.

13. குன்றுகள் கலந்த புல்லிய பாலைநிலத்து மக்களும். வைப்பு : ஆகுபெயர்.

14 - 21. மருத நிலத்தின் இயல்பு.

14. கரும்பு தான் முற்றி விளையும் காலத்தல்லாமலும், எப்பொழுதும் அறுத்து முடியாமல்; என்றது என்றும் கரும்பு அறுக்கும் பாத்துடைய தாயிற்று என்றபடி.

15. அரிகால் அவித்து - நெல்லின் சூட்டை அவியச்செய்து. பல பூ விழவின் - பல பூக்களால் கடவுளை வழிபடும் விழாவையுடைய; "இந்திர விழவிற் பூவி னன்ன" (ஐங். 62 : 1) என்றலின் இவ்விழா இந்திரனை நோக்கிச் செய்யப்பெறுவதுபோலும்.

16 - 7. இலிமை பரவிய மருதமரத்தின் அடி விழும்படி மோதி நுரையாகிய வெள்ளிய தலையையுடைய சிவந்த புதுப்புனல் எங்கும் பரந்து தான் புகும் இடங்களை மிக்க வளமுடையதாகச் செய்யும். வெண்டலைச் செம்புனல் : பதிற். 87 : 2 - 3.

18. பல்சூழ் பதப்பர் பரிய - பல வைக்கோற்புரிகள் சூழ்ந்த மணற் கோட்டை கரைய; மணற்கோட்டை வெள்ளத்துக்கு அணைபோடும் பொருட்டு இடப்பட்டது.

19. அணை இடுகின்ற ஆரவாரத்தோடு விருப்பம் கொண்ட மக்கட் டொகுதி.

20. முழவு ஒலிக்கின்ற பழைய ஊரில் நிகழும் விழாவைக் கண்டு தம் இடத்திற்குத் திரும்பிச் செல்லுகின்ற. மூதூர் விழவு : பதிற். 15 : 18, 29 : 7.

15 - 20. மணற்கோட்டை சிந்துதலால் மேலும் ஆரவாரஞ்செய்து அலைமோதிய மக்கள் பின்னர் மூதூருக்குச் சென்று விழாவைக் கண்டு பெயர்ந்தனர். மூதூர் என்றது இராசதானிநகரம் போலும்.

21. வளத்தையுடைய பல ஊர்களையுடைய மருதநிலத்தின் பகுதியிலுள்ள மக்களும்.

22 - 5. குறிஞ்சி நிலத்தியல்பு கூறப்படும்.

22 - 3. தினைக் கொல்லையை உழுவோர் வரகின் மேலே இட்ட நறுமணம்மிக்க காட்டுமல்லிகையையுடைய வன்மை பொருந்திய இருப்பிடங்களில். வரகு மீதிட்ட - வரகின் வைக்கோலின் மேலே வேய்ந்த எனலுமாம்.

24. மெல்லிய தினைமாவை முறைப்படியே விருந்தினர்க்குப் பகுத்து அளித்துண்ணும். மென்றினை நுவணை : மலைபடு. 445 ; குறு. 285 : 2.

25. புல்லிய நிலங்களைத் தழுவிய காட்டை அணித்த இடங்களில் உள்ளோரும்.

26 - 9. முல்லைநிலத்தின் இயல்பு கூறப்படும்.

26. பல்பூக்களின் வாடையையுடைய காடு தான் அளிக்கும் பயன்கள் வேறுபட்டு. 27. செவ்வரக்கைப்போன்ற நுண்ணிய மணலையுடைய குன்றுகளைத் தன்னிடத்தே கொண்டு.

26 - 7. "அரக்கத் தன்ன செந்நிலப் பெருவழிக், காயாஞ் செம்மறாஅய்" (அகநா. 14 : 1 - 2.) 28. கழலொடு மறுகும் - கழற்சிக்காயோடு திரியும்.

29. வானத்திலே உயர்ந்து வளர்ந்த மரங்களையுடைய காடுகளையுடைய முல்லை நிலத்திலுள்ளாரும். கடறு - காடு.

28 - 9. கழலென்பதற்குச் செருப்பென்று பொருள்கூறி இவ்வடிகளை மேற்கோள் காட்டினர் (சீவக. 1648, ந.)

30. முரசைப்பெற்ற முடியுடை மன்னரும் குறுநிலமன்னரும் வஞ்சினங் கூறி. வேந்தரும் வேளிரும் : பதிற். 88 : 13.

31. கடலிலுள்ளனவும் காட்டிலுள்ளனவுமாகிய அரண்களால் நன்மை பெறாராய் நடுங்கும்படி. 32. போரை மிகுவிக்கின்ற கடிய (முரசினது) முழக்கம் வானத்தை அடைந்து அதிரும்படி.

33. கடுஞ்சினங் கடாஅய் - மிக்க சினத்தைச் செலுத்தி. முழங்கும் மந்திரத்து - உரக்க உச்சரிக்கப்படுகின்ற மந்திரங்களால்.

34. கடவுள் பேணியர் - முரசில் உறையுங் கடவுளை வழிபடும் பொருட்டு.

35. உயர்ந்தோன் - முரசுறை கடவுளை வழிபடுவோன்.

36. கொடிய கண்களையுடைய பேய்மகள் கையை அடித்து நடுங்க. அப்பலியைக் கொள்ளமாட்டாமையின் நடுங்கியது. கருங்கட் பேய்மகள் : பதிற். 22 : 37.

37. நெய்த்தோர் - இரத்தம். நிறை மகிழ் இரும்பலி - நிறைந்த கள்ளையுடைய பெரிய பலி ; பதிற். 19 : 6, உரை.

38. முரசுறை கடவுள் விரும்புதலால் எறும்பும் மொய்யாத வியப்பைத் தரும் முறையினால்.

34 - 9. முரசுறை கடவுளுக்குப் பலியாக ஓச்சிய பிண்டத்தைப் பேய்மகளும் எறும்பு முதலியனவும் பெறாமல் இருப்ப, காக்கையும் பருந்தும் உண்டன.

40. புறங்கொடுத்து ஓடாத கொள்கையையும், தாங்கள் செய்த அரிய போர்த்தொழில்களைப் பொறித்தலையுடைய கழற்காலையும் உடைய. ஒண் பொறிக் கழற்கால் : **பதிற்** : 34 : 2.

41. பெரிய போரிலே பகைவரைச் சிதைத்த, மேலும் போரை விரும்பும் வீரரது.

42. இடி பூமியை அதிரச் செய்யும் குரலைப்போன்ற ஆரவாரத்தோடு. கொளை புணர்ந்து - யாழிசை சேரப் பெற்று; கொளை - நரம்புக்கட்டு; அது யாழுக்காகி இங்கே யாழிசைக்காயிற்று. கோட்பாடென்பர் உரையாசிரியர்.

43. போர்வீரருக்கு மிக்க சோற்றை அளித்தற்கு ஒலிக்கும். பெருஞ் சோறு உகுத்தல் : **புறநா.** 2 : 16, **அடிக்.**

43 - 4. தழங்கு - ஒலிக்கும். முரசு எறியும் என்க ; எறியும் : முற்று.

மு. 'வேந்தன் போர்தலைக் கொண்ட பிற்றைஞான்று போர்குறித்த படையாளரும் தானும் உடன் உண்பான் போல்வதோர் முகமன் செய்தற்குப் பிண்டித்து வைத்த உண்டியைக் கொடுத்தல் மேயின பெருஞ் சோற்று நிலை' (**தொல். புறத்.** 8, **ந.**)

(**பி - ம்.**) 1. இணர்த்ததை. 38. இறும்பூதுபிரப்பின். (௧௦)

---

3. இதன் பதிகத்து அகப்பாவெறிதலைப் பகற்றீ வேட்டற்கு அடையாக்கியுரைக்க.

4 - 5. முதியரை மதியுறழ்மரபிற்றழீஇ மண்வகுத்தீத்தெனக்கூட்டித் *தன் குலத்தில் தனக்கு முதியாரை மதியோடொத்த தன்தண்ணளியால் தழீஇக்கொண்டு அவர்க்குத் தன்னாட்டைப் பகுத்துக்கொடுத்தென உரைக்க.

7. இருகடலுமென்றது தன்னதாய மேல்கடலும் பிறநாட்டதாய்ப் பின்பு தான் பொருதுகொண்டு தன்னாடாக்கிய நாட்டிற் கீழ்கடலுமென்றவாறு.

6 - 7. கருங்களிற்றியானைப் புணர்நிரை நீட்டி இருகடனீரும் ஒருபகலாடியென்றது அவ்விருமுந்நீரும் ஒருபகலிலே வரும்படி யானைகளை நிரைத்து அழைப்பித்து ஆடியென்றவாறு.

8. அயிரை பரைஇயென்றது தன்னாட்டு †அயிரையென்னும் மலையில் வாழும் கொற்றவைக்கடவுளைத் தன்குலத்துள்ளார் செய்துவரும் வழிபாடு கெடாமல் தானும் வழிபட்டென்றவாறு.

ஆற்றல்சான் முன்போடு (8) காடுபோந்த (10) எனக் கூட்டுக.

10. நெடும்பாரதாயனர் முந்துறக் காடுபோந்தவென்றது தன்புரோகிதராகிய நெடும்பாரதாயனார் தனக்குமுன்னே துறந்து காடு போக அதுகண்டு தானும் துறவுள்ளம் பிறந்து துறந்து காட்டிலே போனவென்றவாறு.

---

* இங்ஙனம் தன் குலத்து முதியோருக்கு நாட்டைப் பகுத்துக்கொடுத்து ஆளச்செய்யும் வழக்கம் பிற்காலத்துச் சோழ மன்னர் சிலரிடத்தும் இருந்ததென்பது அவர்கள் மெய்க் கீர்த்திகளால் அறியப்படுகின்றது.

† "கடவு ளயிரையி னிலைஇ" (**பதிற்.** 79 : 18, உரை.)

## (பதிகம்)

இமைய வரம்பன் றம்பி யமைவர
உம்பற் காட்டைத் தன்கோ னிறீஇ
அகப்பா வெறிந்து பகற்றீ வேட்டு
மதியுறழ் மரபின் முதியரைத் தழீஇக்
கண்ணகன் வைப்பின் மண்வகுத் தீத்துக்
கருங்களிற் றியானைப் புணர்நிரை நீட்டி
இருகட னீரு மொருபக லாடி
அயிரை பரைஇ யாற்றல்சான் முன்போ
டொடுங்கா நல்லிசை யுயர்ந்த கேள்வி
நெடும்பார தாயனார் முந்துறக் காடுபோந்த

**பல்யானைச் செல்கெழு குட்டுவனைப் பாலைக் கௌதமனார்** பாடினார் பத்துப் பாட்டு. அவைதாம் : அடுநெய்யாவுதி, கயிறு குறுமுகவை, ததைந்தகாஞ்சி, சீர்சால்வெள்ளி, கானுணங்குகடுநெறி, காடுறுகடுநெறி, தொடர்ந்தகுவளை, உருத்துவருமலிர்நிறை, வெண்கைமகளிர், புகன்றவாயம். இவை பாட்டின் பதிகம்.

பாடிப்பெற்ற பரிசில் : 'நீர் வேண்டியதுகொண்மின்' என, 'யானும் என்பார்ப்பனியும் சுவர்க்கம் புகல்வேண்டும்' என, *பார்ப்பாரிற் பெரியோரைக்கேட்டு ஒன்பது பெருவேள்வி வேட்பிக்கப் பத்தாம்பெருவேள்வியிற் பார்ப்பானையும் பார்ப்பனியையும் காணாராயினார்.

இமயவரம்பன்றம்பி பல்யானைச்செல்கெழுகுட்டுவன் இருபத்தையாண்டு வீற்றிருந்தான்.

(கு - ரை.) 2. தன் கோல் நிறீஇ - தன் செங்கோற்கீழே அமைத்து.

3. அகப்பா - ஓர் அரண். அகப்பா எறிந்தது : **பதிற்**. 22 : 26 ; **நற்**. 14 : 4 - 5 ; **சிலப்**. 28 : 144.

4. தன் அறிவோடு ஒக்கும் முறைமையையுடைய பெரியோரைத் தழுவிக் கொண்டு.

6. யானைகள் பொருந்திய வரிசையை நீளமாக்கி. இப்பத்துக்கு உரிய பாட்டுடைத் தலைவன் பெயரிலுள்ள பல்யானையென்ற தொடர் இதனால் வந்ததுபோலும்.

7. இருகடல் - மேல்கடலும் கீழ்கடலும்.

---

* 'யாகங்களைப் பண்ணிப் பெரிய சுவர்க்கத்து ஏறப்போம் அந்தணர்' (**மதுரைக்**. 494 - 5, **ந**.)

8. அயிரை பரைஇ - அயிரையென்னும் மலையினிடத்தே உள்ள துர்க்கையைப் பரவி. அயிரையைப் பராவுதல் : பதிற். 88 : 12, 90 : 19. முன்பு - வலிமை.

7 - 8. " உருகெழு மரபி னயிரை மண்ணி, இருகட னீரு மாடினோன் " (சிலப். 28 : 145 - 6.)

10. பாரதாயனார் - பாரத்துவாச கோத்திரத்தில் உதித்தவர். முந்து உற - துறவுபூண்டு முன்னே செல்ல.

**மூன்றும் பத்து முற்றிற்று.**

---

## நான்காம் பத்து

(௩௧) குன்றுதலை மணந்து குழூஉக்கட லுடுத்த
மண்கெழு ஞாலத்து மாந்த ரொராங்குக்
கைசுமந் தலறும் பூசன் மாதிரத்து
நால்வேறு நனந்தலை யொருங்கெழுந் தொலிப்பத்
தெள்ளுயர் வடிமணி யெறியுநர் கல்லென
உண்ணாப் பைஞ்ஞிலம் பனித்துறை மண்ணி
வண்டூது பொலிதார்த் திருஞெம ரகலத்துக்
கண்பொரு திகிரிக் **கமழ்குரற் றுழாஅய்**
அலங்கற் செல்வன் சேவடி பரவி
நெஞ்சுமலி யுவகையர் துஞ்சுபதிப் பெயர
மணிநிற மையிரு ளகல நிலாவிரிபு
கோடுகூடு மதிய மியலுற் றாங்குத்
துளங்குகுடி விழுத்திணை திருத்தி முரசுகொண்
டாண்கட னிறுத்தநின் பூண்கிளர் வியன்மார்பு
கருவி வானந் தண்டளி தலைஇய
வடதெற்கு விலங்கி விலகுதலைத் தெழிலிய
பனிவார் விண்டு விறல்வரை யற்றே
கடவு ளஞ்சி வானத் திழைத்த
தூங்கெயிற் கதவங் காவல் கொண்ட
எழூஉநிவந் தன்ன பரேரெறுழ் முழவுத்தோள்
வெண்டிரை முந்நீர் வளைஇய வுலகத்து
வண்புகழ் நிறுத்த வகைசால் செல்வத்து
வண்ட னனையைம னீயே வண்டுபட
ஒலிந்த கூந்த லறஞ்சால் கற்பிற்

குழைக்குவிளக் காகிய வொண்ணுதற் பொன்னின்
இழைக்குவிளக் காகிய வவ்வாங் குந்தி
விசும்புவழங்கு மகளி ருள்ளுஞ் சிறந்த
செம்மீ னனையணின் றொன்னகர்ச் செல்வி
நிலனதிர் பிரங்கல வாகி வலனேர்பு
வியன்பணை முழங்கும் வேன்மூ சழுவத்
தடங்கிய புடையற் பொலங்கழ றேன்றாள்
ஒடுங்காத் தெவ்வ ரூக்கறக் கடைஇப்
புறக்கொடை யெறியார்நின் மறப்படை கொள்ளுநர்
நகைவர்க் கரண மாகிப் பகைவர்க்குச்
சூர்நிகழ்ந் தற்றுநின் றானை
போர்மிகு குருசினீ மாண்டனை பலவே.

**துறை - செந்துறைப் பாடாண்பாட்டு. வண்ணம் - ஒழுகுவண்ணம். தூக்கு - செந்தூக்கு. பெயர் - கமழ்குரற் றுழாய் (8.)**

(ப - ரை.) ஒலிப்பப் (4) பரவி (9) என முடிக்க.

5 - 6. மணியெறிதலை உண்ணுப்பைஞ்ஞிலத்தின் தொழிலாக்கி அவர்கள் மணியை எறிந்து தீர்த்தமாடுகின்றார்களாகக் கொள்க.

6. உண்ணுப் பைஞ்ஞிலமென்றது அத்திருமால் கோயிலுள் வரம் வேண்டி உண்ணது கிடந்த மக்கட்டொகுதி யென்றவாறு.

எறியுநரென்றது வினையெச்சமுற்று.

இனி எறியுநரென்பதனைத் தொழிற்பெயராக்கி, மணியையெறிவார், *தீர்த்தமாடுவோர் ஆடுதற்கு இது †முகுத்தமென்று அறிந்து வருதற்பொருட்டு அம்மணியை எறிந்து ஆரவாரிப்பவென்றுரைப்பாரும் உளர்.

8. கமழ்குரற்றுழாயென்றது நாறுகின்ற பூங்கொத்துக்களையுடைய துழாயென்றவாறு.

‡ நாறுத பூவுடையதனை மிக நாறுவதொன்றுபோலச் § சாதிபற்றிச் சொன்ன சொற்சிறப்பான் இதற்கு, '**கமழ்குரற் றுழாய்**' என்று பெயராயிற்று.

9. செல்வனென்றது $ திருவனந்தபுரத்துத் திருமாலை.

10. பதிப்பெயரவென்னும் எச்சத்தினை மதியம் இயலுற்றாங்கு (12) என்னும் வினையொடு முடிக்க.

---

*இப்பொருளே சிறப்புடையதாகத் தோற்றுகின்றது.

†முகுத்தம் - முகூர்த்தமென்பதன் சிதைவு.

‡ "நக்கலர் துழாஅய் நாறிணர்க் கண்ணியை" (பரி. 4 : 58) எனத் துழாய்ப் பூங்கொத்து மணமுடையதென்று கூறுவதனல் இவ்வுரை சிறப்புடையதாகத் தோற்றவில்லை. § சாதியென்றது பூவென்னும் சாதியை.

$ ஆடக மாடத் தறிதுயி லமர்ந்தோன் " (சிலப். 26 : 62) என்ற விடத்து 'ஆடகமாடம் - திருவனந்தபுரம்' என்று அரும்பதவுரையாசிரியர் எழுதிய குறிப்பு இங்கே கருதற்குரியது.

உண்ணாப் பைஞ்ஞிலம் (6) நெஞ்சமலி உவகையராய்த் தாம் தாம் தஞ்சு பதிகளிலே பெயரும்படி (10) மைஇருள் அகலக் (11) கோடுகூடு மதியம் இயலுற்றாங்குத் (12) துளங்கு குடி விழுத்திணை திருத்தி (13) எனக்கூட்டி, உண்ணாது வரங்கிடந்த மக்கட்டொகுதி வரம்பெற்று நெஞ்சமலிந்த உவகையராய்த் தாம் தாம் தஞ்சுபதிகளிலே பெயரும்படி இருள் அகல விரிந்து கோடுகூடுதலையுடைய உவாமதியம்......................

இனி, தஞ்சுபதிப் பெயர (10) என்னும் எச்சத்தினை ஆண்கடன் இறுத்த (14) என்னும் வினையொடுமுடித்து, * வழி ஆறலை கள்வர் முதலாய ஏதங்களின்றித் தாம்தாம் தஞ்சுபதிகளிலே பெயரும்படி தன் ஆண்மைக் கடனை இறுத்தவென்று உரைப்பாரும் உளர்.

13. முரசுகொண்டென்றது சிலகாலத்துப் பயன்கொள்வாரின்மையிற் பண்ணழிந்து கிடந்த பழமுரசினைத் தான் தோன்றி அதன் அழிவு தீர்த்து அதன் பயன்கொண்டென்றவாறு.

14. ஆண்கடன் இறுத்தவென்றது ஆண்மக்களாயுள்ளார் தம் கீழ் வாழ்வாரைக் காத்தற்பொருட்டு அவர்க்கு அவர் செய்யும் கடன்களெல்லாம் செய்துமுடித்தவென்றவாறு.

16. விலங்கியென்றதனை விலங்கவெனத் திரிக்க.

17. பனிவார் விண்டுவாகிய விறல்வரையென இருபெயரொட்டு.

கூந்தலினையும் கற்பினையும் (24) நுதலினையும் (25) உந்தியினையும் (26) உடைய தொன்னகர்ச் செல்வி (28) என மாறிக் கூட்டுக.

28. செம்மீன் † அருந்ததி.

29. நிலனதிரவெனத் திரிக்க. 31. புடையலென்றது பனந்தார்.

புடையலினையும் கழறொடியினையுமுடைய (31) நின் படைகொள்ளுநர் (33) என மாறிக் கூட்டுக.

33. எண்ணுப் படை கொள்ளுநரென்றது ‡ படைத்தலைவரை யென்றவாறு.

நின் மார்பு (14) பனிவார் விண்டு விறல்வரையற்று (17); நின்றோள் கள் எழூஉ நிவந்தன்ன (20); நீதான் வண்டனென்பவனை அனையை (23); நின் செல்வி செம்மீனனையள் (28); நின் மறப்படை கொள்ளுநர் புறக்கொடை பெறியார் (33); நின் தானை (35) நகைவர்க்கு அரணமாகிப் பகைவர்க்குச் (34) சூர் நிகழ்ந்தற்று (35); அவ்வாற்றாற் குருசில், நீ பலவும் மாட்சிமைப் பட்டனை (36) என வினை முடிவு செய்க.

இதனாற் சொல்லியது அவற்குள்ள மாட்சிமையெல்லாம் எடுத்து || உடன் புகழ்ந்தவாறாயிற்று.

---

* செங்கோல் மன்னர் நாட்டில் ஆறலைகள்வரால் வரும் ஏதமில்லையெனக் கூறுதல் மரபு; "அத்தஞ் சொல்வோ ரலறத் தாக்கிக், கைப்பொருள் வௌவுங் களவேர் வாழ்க்கைக், கொடியோ ரின்றவன் கடியுடை வியன்புலம்" (பெரும்பாண். 39 - 41.)

† அருந்ததியை அருந்துதி எனலும் ஒரு வழக்கு; "இருந்துதி வண்டன வாலெரி முன்வலஞ் செய்திடப்பால், அருந்துதி காணுமளவுஞ் சிலம்ப னருந்தழையே" (திரு. 300.)

‡ பின்னர், தானையெனப் படைவீரரைக் கூறுதலின் இங்கே படைத்தலைவரெனக் கொள்ளவேண்டும். || உடன் - ஒருங்கே.

(கு - ரை.) 1 - 10. திருமாலை வழிபடுவார் செயல்.

1. குன்றுகள் தம்மிற் கூடப்பெற்றுப் பல பொருள்களும் திரளுதலை யுடைய கடலை ஆடையாக உடுத்த.

2. மண்கெழு ஞாலத்து - மண் அணுக்கள் பொருந்திய பூமியில் (பதிற். 69 : 12.) ஓராங்கு - ஒருதன்மைப்பட.

3. கைசுமந்து அலறும் பூசல்-கைகளைத்தலைமேலேந்தித் தம்குறையை எடுத்துக்கூறி வேண்டிக்கொள்ளும் ஆரவாரம். பூசல் : எழுவாய். மாதிரத்து - திசைகளில். 3 - 4. பூசல் ஒலிப்ப.

5. தெளிந்த ஓசையையுடைய உயர்ந்த திருந்திய கைத்தொழிலை யுடைய மணியை அடிப்பவர் கல்லென்னும் ஓசைபட ஆரவாரிப்ப.

6. உண்ணாப் பைஞ்ஞிலம் - பட்டினி கிடக்கும் மக்களின் தொகுதி; பைஞ்ஞிலம் பஞ்ஞிலமெனவும் வழங்கும். பனித்துறை மண்ணி - குளிர்ச்சியையுடைய நீர்த்துறையில் நீராடி.

7 - 9. திருமாலின் சிறப்பு.

7. தார் திருமகளுக்கு அடை. திரு ஞெமர கலத்து - திருமகள் பரவிய மார்பின்கண் ; "திருஞெமர்ந் தமர்ந்த மார்பினை" (பரி. 1 : 8.)

8. கண்பொரு திகிரி - கண்ணை வெறியோடச்செய்யும் சக்கரப் படையையும் ; "கண்பொரா வெறிக்கும்" (மதுரைக். 665, உரை.)

8 - 9. நறுமணம் வீசும் பூங்கொத்துக்களையுடைய துளவ மாலையை அணிந்த திருமாலினது திருவடிகளைப் புகழ்ந்து வணங்கி.

10. துஞ்சு பதிப்பெயர - தாம் தாம் தங்குகின்ற ஊர்களுக்கு மீட்டும் செல்ல.

பூசல் ஒலிப்ப, கல்லென, பைஞ்ஞிலம் பரவி உவகையராகிப் பெயர.

11. நீலமணியின் நிறத்தைப்போன்ற கரிய இருள் நீங்கும்படி நிலாவைப் பரப்பி.

12. இருபக்கமும் ஒன்றுபட்ட முழுமதி வானத்திற் சஞ்சரித்தாற் போல ; கோடு கூடுமதியம் : "கோடுகொ ளொண்மதியை" (களவழி. 22.) பிறையை, "கோடுவாய் கூடாப் பிறை" (கலி. 142 : 24) எனக் கூறுதல் காண்க.

13. துளங்கு குடி விழுத்திணை திருத்தி - வறுமையால் தளர்ந்த குடிகளை யுடைய சிறந்த குடும்பங்களைப் பண்டுபோலே நிலைநிறுத்தி (பதிற். 32 : 7, 37 : 7.) முரசு கொண்டு - பகைவரை வென்று களத்திலே அவரிட்ட முரசைக் கைக்கொண்டு ; முரசு கொள்ளல் : மதுரைக். 129 ; அகநா. 36 : 21 - 2 ; புறநா. 25 : 7, 72 : 8 - 9, 179 : 4 - 5. உரையாசிரியர் வேறு உரை கூறுவர்.

14. ஆண் கடன் இறுத்த - வீரருக்குச் செய்யவேண்டிய கடமைகளை ஒழுங்காகச் செய்துமுடித்த ; என்றது பகைவரை வெற்றிகொண்டு, அவ்வெற்றிக்குக் காரணமாக நின்ற வீரருக்கு வரிசையும் பரிசுமளித்தான் என்றபடி. பூண்கிளர் வியன்மார்பு - பேரணி விட்டு விளங்குகின்ற அகன்ற மார்பு ; எழுவாய்.

15. தண் தளி தலைஇய - தண்ணிய துளியைப் பெய்த.

16 - 7. வடக்குத் தெற்காகச் செல்லும் மார்க்கத்தைத் தடுத்து விட்டு விளங்குகின்ற சிகரத்தை உடையதாகி அழகுபெற்ற பனிமிக்க இமயமலையினது, பிறமலைகளை வென்ற வெற்றியையுடைய பக்க மலையையொப்பது.

விலகு தலை என்றது மின்னுகின்ற இமயமலையின் பொற்கோட்டை; "மின்னுமிழ் வைரக் கோட்டு விளங்கொளி யிமயமென்னும், பொன்னெடுங் குன்றம்" (சீவக. 2417.)

18 - 20. தேவருக்குப் பயந்து ஆகாயத்திலே அவுணர் அமைத்த இயங்குகின்ற அரணத்தின் கதவைக் காக்கின்ற கணையமரம் மேலெழுந் தாற் போன்றன பருத்த அழகிய வலிமையையுடைய முழவணைய தோள் கள். நிவந்தன்ன : முற்று. வானத்து இழைத்த தூங்கெயிலென்றது தேவர் களினின்றும் தம்மைப் பாதுகாத்துக்கொள்ள அசுரர் அமைத்த மூன்று அரணங்களை; அவற்றை ஒரு சோழன் அழித்தான்; "திறல்விளங் கவுணர் தூங்கெயி லெறிந்த, விறன்மிகு முரசின் வெல்போர்ச் சோழன்" (**தொல்.** களவு. 11, **ந**. மேற்.)

21. வளைஇய - வளைந்த.

22. வண்புகழ் நிறுத்த - கொடையால் வரும் புகழைத் தன்னிடத்தே நிறுத்திய; "வண்புகழ் மூவர்" (**தொல்**. செய். 79.) வகைசால் செல்வத்து - கூறுபாடு மிக்க செல்வத்தையுடைய.

23. வண்டன் : ஒரு கொடையாளி போலும். வண்டுபட - வண்டுகள் ஒலிக்கும்படி. 24 - 8. சேரன் மாதேவியின் சிறப்பு.

24. ஒலிந்த - தழைத்த. அறஞ்சால் கற்பின் - அறக்கற்பையுடைய.

25 - 6. குழைக்கு விளக்காகிய ஒண் நுதல் - காதணிக்கு விளக்கம் அளிப்பதாகிய ஒள்ளிய நெற்றி; "குழைவிளங் காய்நுதல்" (**குறுந்**. 34 : 7, பி - ம்.) பொன்னலாகிய ஆபரணங்களுக்கு விளக்கம் அளிப்பவளாகிய. அவ்வாங்கு உந்தி - அழகிய வளைந்த கொப்பூழ்.

28. செம்மீன் - அருந்ததி. தொன்னகர்ச் செல்வியென்றது பெருந் தேவியை. கற்புக்கு அருந்ததியைக் கூறுதல் : **பதிற்**. 89 : 19 - 20; **பெரும் பாண்**. 302 - 4, **அடிக்**.

29 - 30. நிலன் அதிர்பு இரங்கலவாகி - பூமியிலுள்ளார் நெஞ்சு நடுங்கும்படி முழங்காதனவாகி; அதிர்பு : எச்சத்திரிபு. வலனேர்பு வியன் பணை முழங்கும் - வெற்றிக்களத்தே எழுச்சி பெற்று அகன்ற முரசு முழங்கும்; வெற்றியை மேற்கொண்டு முழங்குமெனலுமாம். வேல் மூசு அழுவத்து - வேற்படை நெருங்கிய பரப்பில்.

31. விரியாது அடங்கிய பனைமாலையையும் பொன்னலாகிய கழலை யணிந்த வலிய தாள்களையும் உடைய; புடையல் - பனைமாலை (**பதிற்**. 37 : 8, 42 : 1, 57 : 2; **புறநா**. 99 : 5.) இவை சேரன் படையிலுள்ளாருக் குரியன.

32. அடங்காத பகைவரது மனவெழுச்சி நீங்கும்படி அவர்களை ஓட்டி.

33. புறக்கொடை எறியார் - பகைவர் புறங்கொடுத்து ஓடும்பொழுது அவர்மேல் ஆயுதங்களை எறியார்; இவ்வாறு எறியாது நிற்கும் இயல்பைத் தழிஞ்சியென்னும் துறையின்பாற் படுத்துவர்; "அழிகுநற் புறக்கொடை யயில்வா ளோச்சாக், கழிதறு கண்மை காதலித் துரைத்தன்று" (**பு. வெ**. 55.) மறப்படை கொள்ளுநர் - வீரத்தையுடைய படைத்தலைவர்.

34. நகைவர்க்கு அரணமாகி - தன்பால் அன்புடையாருக்குப் பாது காப்பாகி; நகைவர் : **பதிற்**. 37 : 4, 43 : 20; **புறநா**. 373 : 35.

35. சூர் நிகழ்ந்தற்று - தெய்வம்பற்றி வருத்தியதுபோல்வது. தானை - தானையிலுள்ள படைவீரர்; ஆகுபெயர். 36. பல மாண்டனை - இவ்வாறு பலவகையால் நீ மாட்சிமைப்பட்டாய்.

(**பி - ம்**.) 2. மாந்தரோங்குக. 20. நிமிர்ந்தன்ன. 34. நயவர்க்கரணம். (க)

(௩௨) **மா**ண்டனை பலவே போர்மிகு குருசினீ
மாதிரம் விளக்குஞ் சால்புஞ் செம்மையும்
முத்துடை மருப்பின் மழகளிறு பிளிற
மிக்கெழு கடுந்தார் துய்த்தலைச் சென்று
துப்புத்துவர் போகப் பெருங்கிளை யுவப்ப
ஈத்தான் றானா விடனுடை வளனும்
துளங்குகுடி திருத்திய வலம்படு வென்றியும்
எல்லா மெண்ணி னிடுகழங்கு தபுந
கொன்னொன்று மருண்டனெ னடுபோர்க் கொற்றவ
நெடுமிடல் சாயக் கொடுமிட றுமியப்
பெருமலை யானையொடு புலங்கெட விறுத்துத்
தடந்தா ளாரை படிந்திரை கவரும்
முடந்தை நெல்லின் **கழையமல் கழனிப்**
பிழையா விளையு ணாடகப் படுத்து
வையா மாலையர் வசையுநர்க் கறுத்த
பகைவர் தேஎத் தாயினும்
சினவா யாகுத லிறும்பூதாற் பெரிதே.

**இதுவுமது.**
**பெயர் - கழையமல் கழனி (13.)**

**(ப - ரை.)** 8. இடுகழங்கு தபுநவென்றது இடுகழங்கும் * அலகு தபுதற்குக் காரணமாக இருப்பனவென்றவாறு.

தபுநவென்றது பெயர்த்திரிசொல்.

10. நெடுமிடல் - அஞ்சியின் இயற்பெயராம். கொடுமிடல் : மிடல் - வலி ; என்றது வலியாற் செய்யப்படும் போரினை.

13. முடமாகிய கழையென இருபெயரொட்டு. நெல்லின் கழை - நெல்லினது கழை.

நெற்றாளை அதன்பருமையாலே மூங்கிலோடு ஒப்புமைபற்றிக் † கழையென்று பெயர்கொடுத்த சிறப்பான் இதற்கு, '**கழையமல் கழனி**' என்று பெயராயிற்று.

15. வையா மாலையரென்றது ஒன்றில் வகைபடாத இயல்பை யுடையாரென்றவாறு.

15 - 6. வசையுநர்க் கறுத்த பகைவரென்றது தங்கள் பகைவரொடு செற்றம் கொண்டாடாது ஒழிந்திருக்க வேண்டுமளவினும் ஒழியாது அவர்களை அக்கடப்பாடன்றி வெகுண்டிருத்தலே தொழிலாகவுடைய பகைவரென்றவாறு.

* அலகு - கணக்கு. † கழையென்பதை மூங்கிலாக்கி அதனைப்போன்ற நெற்றாளுக்கு ஆகுபெயராக்கினர்.

வசையுநர் - பகைவர் ; வசையுநரென்றது பெயர்த்திரிசொல். இனிக் ககரவொற்றின்றி 'வசையுநர் கறுத்த' என்பது பாடமாயின், அதனை வினையெச்சவினைக்குறிப்புமுற்றுத் திரிசொல்லாக்கி, வசைசொல்லுதலுடையவராய் வெகுண்ட பகைவரென்று உரைப்பாருமுளர்.

குருசில், நீ பல குணங்களும் மாட்சிமைப்பட்டனை (1); அப் பல குணங்களும் எண்ணப்புகின் இடுகழங்கு தபும் எல்லையவாயிருக்கும் (8) ; கொற்றவ, பல குணத்தினும் ஒன்றைக் கொன்னே யான் வியந்தேன் (9) ; அப்பலவற்றுள்ளும் வியப்பான குணம் யாதெனின், பகைவர்செய்த குற்றத்திற்குத் தண்டமாக அவர் நாட்டை அகப்படுத்திக்கொண்டு (14), வையா மாலையராகிய வசையுநர்க்கறுத்த (15) அப்பகைவரிடத்தாயினும் நீ (16) சினவாதொழிகின்ற பொறை எமக்குப் பெரிதும் வியப்பாகாநின்றது (17) என வினைமுடிவு செய்க.

இதனாற் சொல்லியது அவற்குள்ள பல குணங்களையும் உடனெண்ணிப் புகழ்ந்து அவற்றுட் பொறையுடைமையை மிகுத்துப் புகழ்ந்தவாறாயிற்று.

(கு - ரை.) 2. மாதிரம் விளக்கும் - திசைகளை விளங்கச் செய்கின்ற. சால்பும் செம்மையும் - நற்குணங்களும் நடுவுநிலைமையும். 3. மூத்தையுடைய மருப்பினையுடைய இளைய ஆண்யானைகள் பிளிறும்படி.

4. மிக்கு எழு கடுந்தார் துய்த்தலைச் சென்று - போரில் வேட்கை மிக்குச் செல்லுகின்ற விரைவையுடைய தூசிப்படை பகைவர் நாட்டின் கோடிவரையிற் சென்று.

5. துப்பு துவர் போக - வலியின்கண் முற்றவும் உயர்ந்து நிற்க. பெருங்கிளை உவப்ப - பெரிய சுற்றத்தார் உவக்கும்படி ; கிளை என்றது பாணர் முதலியோரை.

6. ஈத்து ஆன்று ஆனா இடனுடை வளன் - தான் பெற்ற அரிய பொருள்களைக் கொடுத்தலிலே அமைந்தும் குறையாத செல்வத்தின் மிகுதியும் ; இடன் - செல்வம் ; "இடனில் பருவத்தும்" (குறள். 218.)

7. துளங்கு குடி திருத்திய - நடுக்கமுற்ற தன் குடியை மேம்படுத்திய. மு. பதிற். 37 : 7 ; 4-ஆம் பதிகம், 12.

8. எல்லாம் எண்ணின் - சால்பும் செம்மையும் வளனும் வென்றியும் ஆகிய நின் குணங்கள் எல்லாவற்றையும் எண்ணினால். இடு கழங்கு தபுந - எண்ணுதற்கு இடப்படும் கழற்சிக்காய்கள் போதாமைக்குக் காரணமாயிருக்கும். கழங்கு தபுந : பதிற். 15 : 5, உரை.

9. கொன் ஒன்று மருண்டனென் - அக்குணங்களுள் பெரிதாகிய ஒன்றை வியந்தேன். கொன் : பெருமையைக் குறிக்கும் இடைச்சொல்.

10. நெடுமிடல் - அஞ்சி யென்னும் தலைவன். கொடு மிடல் துமிய - கொடிய வலியாற் செய்யும் போர் கெடும்படி.

11. பெரிய மலையைப் போன்ற யானைப் படையோடு பகைவர் நாடு கெடும்படி சென்று தங்கி.

12. தடந்தாள் நாரை - வளைந்த காலையுடைய நாரை. இரை கவரும் (12) கழனி (13) என்க.

13. முடந்தை நெல்லின் - கதிர்க்கனத்தின் மிகுதியால் வளைந்த நெல்லினது (பதிற். 29 : 3.) நெல்லின் கழை - நெல்லின் தாள். அமல் கழனி - செறிந்த வயல்களையுடைய.

14. பிழையா விளையுள் நாடு அகப்படுத்து - தப்பாத விளைச்சலை யுடைய நாடுகளைக் கைப்பற்றி. அகப்படுத்தல் சேரன் தொழில்.

15 - 6. பகைவரது இயல்பு.

15. வையா மாலையர் - ஒரு தன்மையிலே வைத்து எண்ணப்படாத வராகி. வசையுநர்க் கறுத்த - தங்கள் பகைவரைக் கோபித்த.

16. பகைவர் தேஎத்தாயினும் - நின் பகைவரிடத்தாயினும்.

17. சினவாயாகுதல் பெரிது இறும்பூது - கோபங் கொள்ளாயாயிருத்தல் மிகவும் வியப்பைத் தருவது.

1 - 17. சேரன் பல இயல்புகளால் மாட்சிமைப் பட்டானாயினும் அரசர் மாட்டு அரிதிற் காணப்படுவதும் எல்லாவற்றினும் சிறந்ததுமாகிய பொறையைப் பாராட்டிக் கூறினார். அரசனுக்குப் பொறை சிறப்பாதல் : **பதிற்**. 17 : 1 - 3 ; **கலி**. 133 : 14 ; **புறநா**. 2 : 1 - 7 ; **குறள்**. 151, 579 ; **பழ**. 19.

(**பி - ம்**.) 14. பிழையாவிழையினாடு. (உ)

---

(நடு) இறும்பூதாற் பெரிதே கொடித்தே ரண்ணல்
வடிமணி யணைத்த பணைமரு ணோன்றாட்
கடிமரத்தாற் களிறணைத்து
நெடுநீர துறைகலங்க
மூழ்த்திறுத்த வியன்றானையொடு
புலங்கெட நெரிதரும் **வரம்பில் வெள்ளம்**
வாண்மதி லாக வேன்மிளை யுயர்த்து
வில்விசை யுமிழ்ந்த வைம்முள் ளம்பிற்
செவ்வா யெஃகம் வளைஇய வகழிற்
காரிடி யுருமி னுரறு முரசிற்
கால்வழங் காரெயில் கருதிற்
போரெதிர் வேந்த ரொரூஉப நின்னே.

**துறை - வஞ்சித்துறைப் பாடாண்பாட்டு.**
**வண்ணம் - ஒழுகுவண்ணம்.**
**தூக்கு - செந்தூக்கும் வஞ்சித்தூக்கும்.**
**பெயர் - வரம்பில் வெள்ளம் (6.)**

(**ப - ரை**.) 2 - 3. நோன்றாட் களிறெனை மாறிக் கூட்டுக.

5. வியன்றானை யென்றது பகைவர்நாட்டு எல்லையின் *முற்பாடு சென்றுவிட்ட தூசிப்பெரும்படையை.

6. வரம்பில் வெள்ளமென்றது அதனோடு கூடி நாட்டுள்ளுச் சென்றுவிடும் பேரணிப் பெரும்படையை.

*முற்பாடு - முன்னே ; பிற்பாடு என்னும் சொல்லைப் போன்றது.

கரையையுடைய கடலை வரம்புடைய வெள்ளமென்றாக்கி இதனை வரம்பில்வெள்ளமென்று கூறிய சிறப்பான் இதற்கு, '**வரம்பில் வெள்ளம்**' என்று பெயராயிற்று.

வெள்ளமென மகரவொற்றுக் கெடாமையான் * இருபெயரொட்டுப் பண்புத்தொகையன்றி ஒருபொருளாக †இருபெயர் நின்றதாக்கிக்கொள்க.

6 - 11. படைவெள்ளத்தை ஆரெயிலென்றது அரசன்றனக்கு ஆரெயில்போல அரணாய் நிற்றலினெனக் கொள்க.

இனிக் ‡ கால்வழங்காரெயிலெனக் காற்றல்லது வழங்கா ஆரெயிலென்று பகைவர்மதிலாக்கி, அதனை வரம்பில்வெள்ளம் கொள்ளக்கருதினென்று உரைப்பாருமுளர்.

7. உயர்த்தென்பதனை உயர்த்தவெனத் திரித்து, அதனை எஃகம் வளைஇய (9) என்பதனோடு முடிக்க.

செவ்வாயெஃகம் வளைஇய அகழினையும் (9) வில்விசையுமிழ்ந்த அம்பாகிய வைம்முள்ளினையுமுடைய (8) ஆரெயில் (11) என மாறிக் கூட்டுக.

செவ்வாயெஃகமென்றது § முனைமுகத்திற் செல்லாது ஒழிந்த கூர்வேற் கருவிகளையெனக் கொள்க.

இனி, வாள் மதிலாகவென்று வைத்துப் பின்னை ஆரெயிலென்றது வாண்மதிலைச் சூழ்தலையுடைய ஆராகிய எயிலினையெனக் கொள்க ; ஈண்டு ஆராவது காலாள்வழங்கிச் செல்கின்ற படையின் திரட்சி. இனி வரம்பில் வெள்ளமானது வாள்மதிலாக வேல்மிளை உயர்த்துக் கால்வழங்கு ஆர் எயிலாதலைக் கருதினென்றலும் ஒன்று.

அண்ணல், இது பெரிதும் இறும்பூதாயிருந்தது (1) ; யாதெனின், வரம்பில் வெள்ளம் (6) கால்வழங்காரெயிலெனச் சொல்லப்பட்ட நின் படை போர்செய்யக் கருதின் (11) நின்னோடு போரெதிர்ந்த வேந்தர் பொரமாட்டாது நின்னை நீங்குவர் (12) ; இஃது அதுவென வினைமுடிவு செய்க.

இதனாற் சொல்லியது அவன்வென்றிச் சிறப்புக் கூறியவாறாயிற்று.

வரம்பில்வெள்ளங் கருதினென எடுத்துச்செலவினை மேலிட்டுக் கூறினமையான் வஞ்சித்துறைப் பாடாணாயிற்று.

'கடிமரத்தான்' (3) என்றது முதலாக மூன்றடி வஞ்சியடியாக வந்தமையான் வஞ்சித் தூக்குமாயிற்று.

(கு - ரை.) 1. இறும்பூது - வியப்பு. ஆல் : அசை.

2 - 3. திருந்திய மணியைப் பக்கத்திலே கொண்ட துடியையொத்த வலியதாளையுடைய யானையைப் பகைவரது கடிமரத்திலே கட்டி; நோன்றாட் களிறெனக் கூட்டுக. பகைவரது காவல் மரத்தில் களிற்றைக் கட்டுதல் மரபு (புறநா. 57 : 10 - 11, 162 : 5 - 6, 336 : 4.)

4. நெடு நீர துறை கலங்க - ஆழமாகிய நீரையுடைய குளங்களின் துறைகள் கலங்கும்படி. பகைவர் நாட்டிலுள்ள நீர்நிலைகளை உடைத்தல் மரபு; "கரும்பொடு காய்நெற் கனையெரி பூட்டிப், பெரும்புனல் வாய் திறந்த பின்னும்" (பு. வெ. 56.)

---

* படைவெள்ளமாகிய ஆரெயிலென்பதைக் கருதி இவ்வாறு எழுதினார்போலும். † வரம்பில் வெள்ளம், ஆரெயில் எனத் தனித் தனியே நிறுத்தி வரம்பில் வெள்ளம் கருதின், ஆரெயில் கருதினெனக் கூட்டுதலை இங்கே கருதினர். ‡ கால் - காற்று. § முனைமுகம் - போர்க்களம்.

5. மொய்த்துச் சென்று தங்கிய பரந்த படையோடு. மூழ்த்தல் - மொய்த்தல் (பரி. 10 : 18 ; பெருங். 1. 56 : 49.)

6. பகைவர் நாடு கெடும்படி வளைந்து செல்லும் எல்லையற்ற வெள்ளம் போன்ற படை. வெள்ளம் - ஓரெண் எனலும் ஆம்.

7. வாட்படையே மதிலாகும்படி வேலாகிய காவற்காட்டை உயரச் செய்து. வேல் மிளை : “வேன்மிடைந்த வேலியும்” (சீவக. 279, 1846.)

8. விற்பொறிகள் விடுத்த கூரிய முள்ளைப்போன்ற அம்பினையுடைய.

9. சிவந்த வாயையுடைய படைக் கருவிகள் வளைந்த அகழையும். எஃகம் - ஆயுதப் பொது.

10. மேகத்தினின்று இடிக்கும் இடியைப்போல முழங்கும் முரசினை யுடைய.

11. காலால் நடக்கின்ற வெல்லுதற்கரிய அரண், போர் செய்தலைக் கருதினால்.

7-11. படையை அரணமாக உருவகம் செய்தார். மதில், மிளை, அகழ் என்பன அரணத்தின் உறுப்பாதலால் வாட்படையையும் வேற்படையையும் அம்பொடு கூடிய படையையும் அம்மூன்றாக உருவகித்தார்.

வரம்பில் வெள்ளமாகிய (6) கால் வழங்கு ஆரெயில் (11) என்று கூட்டுக.

12. போரை ஏற்றுக்கொண்ட பகையரசர் தம் கருத்தழிந்து நின்னை விட்டு நீங்குவர்.

போர் செய்ய வேண்டாதே எடுத்துச் சென்ற மாத்திரத்திலே பகையரசர் அஞ்சி ஓடுதல் வியப்புத் தருவதாயிற்று.

மு. இஃது இயங்குபடையரவம் : இயங்குகின்ற இருபடை யெழுச்சியின் ஆர்ப்பரவம் (தொல். புறத். 8, ந.) (ந.)

---

(நச) ஒருஉப நின்னை யொருபெரு வேந்தே
ஓடாப் பூட்கை யொண்பொறிக் கழற்கால்
இருநிலந் தோயும் விரிநூ லறுவையர்
செவ்வுளைய மாவூர்ந்து
நெடுங்கொடிய தேர்மிசையும்
ஓடை விளங்கு முருகெழு புகர்நுதற்
பொன்னணி யானை முரண்சே ரெருத்தினும்
மன்னிலத் தமைந்த......................
மாறு மைந்தர் மாறுநிலை தேய
முரைசுடைப் பெருஞ்சமந் ததைய வார்ப்பெழ
அரைசுபடக் கடக்கு மாற்றற்
புரைசால் மைந்தநீ யோம்பன் மாறே.

**துறை - தும்பையரவம். வண்ணமும் தூக்கும் அது.**
**பெயர் - ஒண்பொறிக் கழற்கால் (2.)**

(ப-ரை.) ஒருஉப (1) அறுவையர் (3) என முடிக்க.

2. ஒண்பொறிக் கழற்காலென்றது தாங்கள் செய்த அரிய போர்த் தொழில்களைப் பொறித்தலையுடைய ஒள்ளிய கழற்காலென்றவாறு.

இச்சிறப்பான் இதற்கு, '**ஒண்பொறிக் கழற்கால்**' என்று பெயராயிற்று.

வேந்தே (1), மாவூர்ந்து (4) அரைசுபடக் கடக்கும் ஆற்றலையுடைய (11) புரைசான் மைந்த, அவ்வாற்றலிடத்து வரும் *குறைகளுக்குப் பிறரை ஏவாது அவற்றை நீயே பாதுகாத்துச் செய்தலால் (12) ஒருஉப (1) அறுவையர் (3) எனக் கூட்டி வினைமுடிவு செய்க.

இதனாற் சொல்லியது அவன் வென்றிச்சிறப்புக் கூறியவாறாயிற்று.

†மாற்றார் நாடுகோடல் முதலாயினவன்றி ‡வென்றிகோடலே கூறினமையால் துறை தும்பையாய், ஒருஉபவெனப் படையெழுச்சி மாத்திரமே கூறினமையான், அதனுள் § அரவமாயிற்று.

'செவ்வுளைய' (4) என்பதுமுதலாக இரண்டும் வஞ்சியடியாய் வந்தமையான் வஞ்சித்தூக்குமாயிற்று.

(கு - ரை.) 1. ஒருஉப நின்னை - போர் செய்தற்கு வந்த நிலை நீங்கி நின்னை விட்டுச் செல்வர்.

2. ஓடாப் பூட்கை - புறங்கொடுத்து ஓடாத கோட்பாட்டையும் (**பதிற்.** 57 : 1 ; **முருகு.** 247 ; **சிறுபாண்.** 83 ; **அகநா.** 100 : 8 ; **புறநா.** 165 : 15.) ஒண் பொறிக் கழற் கால் - ஒள்ளிய பொறித்தலையுடைய கழலையணிந்த காலையும் உடைய ; "ஓடாத் தானை யொண்டொழிற் கழற்கால்" (**பெரும் பாண்.** 102.)

3. பெரிய பூமியிலே படுகின்ற விரிந்த நூலாலாகிய ஆடையை அணிந்த வேற்றரசர். நிலத்திற் படும்படி ஆடையணிதல் பெருமிதத்திற்கு உரிய அடையாளம் ; "மருங்கிற் கட்டிய நிலனேர்பு துகிலினன்" (**முருகு.** 214) ; "நிலந்தோய் புடுத்த நெடுநுண் ணுடையர்" (**பெருங்.** 1. 32 : 64.)

1 - 3. அறுவையர் நின்னை ஒருஉப.

4. உளை - பிடரி மயிர் ; தலையாட்டமும் ஆம். மா - குதிரை.

5. கொடியையுடைய தேர்.

6. ஓடை - நெற்றிப்பட்டம். உருகெழு புகர் நுதல் - அச்சம் பொருந்திய புள்ளிகளையுடைய நெற்றியையுடைய.

7. பொன்னாற் செய்த இழைகளை அணிந்த யானையினது வலி சேர்ந்த பிடரினும். பொன்னணி யானை : "இழையணி யானை" (**புறநா.** 153 : 2 .)

---

* குறைகள் - காரியங்கள்.

† மாற்றார் நாடு கோடல் காரணமாயின் வஞ்சியாய் விடும் ; "எஞ்சா மண்ணசை வேந்தனை வேந்தன், அஞ்சுதகத் தலைச்சென் றடல்குறித் தன்றே" (**தொல்.** புறத். 7.)

‡ "அரசுபடக் கடக்கு மாற்றல்" என்று மாத்திரம் கூறினமைபற்றி, 'வென்றி கோடலே கூறினமையால்' என்றார் ; அது தும்பையாதல், "மைந்துபொரு ளாக வந்த வேந்தனைச், சென்றுதலை யழிக்குஞ் சிறப்பிற் றென்ப" (**தொல்.** புறத். 15) என்பதனால் உணரப்படும்.

§ தும்பையரவம் : **பு. வெ.** 128.

9. மாறா மைந்தர் - போரினின்றும் மாறுபடாத வலியையுடைய வீரர் ; மாற்றலரென்பது போல நின்றதெனலும் ஆம். மாறுநிலை தேய - எதிராக நிற்கும் நிலை அழியும்படி.

10. சமம் ததைய - போர் கெடும்படி. ஆர்ப்பு எழ - வீரர்களது ஆரவாரம் எழ ; வீரர் : சேரன் படையிலுள்ளார். போரில் வெற்றி பெற்ற வீரர் ஆரவாரித்தல் இயல்பு ; "அட்ட மள்ள ரார்ப்பிசை" (குறுந். 34 : 5.)

11. அரசர்கள் போர்க்களத்திலே அழியும்படி வஞ்சியாது எதிர் நின்று வெல்லும் ஆற்றலையுடைய ; "அரைசுபடக் கடந்தட்டு" (கலி. 105 : 1.)

12. புரை சால் மைந்த - உயர்ச்சி மிக்க வலியையுடையோய் ; புரை - உயர்வு. நீ ஓம்பல் மாறு - நீ பாதுகாத்தலால். மாறு : ஏதுப்பொருள் தருவதோர் இடைச்சொல் (புறநா. 4 : 17, உரை.)

பகையரசர்களை வென்று நீ நின் நாட்டைப் பாதுகாத்தலினால் நின் வலியை அறிந்து பிறர் நின்னைப் பொருதலொழிந்து நீங்குவரென்றார்.

வேந்தே (1), மைந்த, நீ ஓம்பல் மாறே (12), அறுவையர் (3) நின்னை ஒரூஉப (1) என்க. (௪)

---

(௫௫) புரைசான் மைந்தநீ யோம்பன் மாறே
உரைசான் றனவாற் பெருமைநின் வென்றி
இருங்களிற் றியானை யிலங்குவான் மருப்பொடு
நெடுந்தேர்த் திகிரி தாய வியன்களத்
தளகுடைச் சேவற் கிளைபுகா வாரத்
தலைதுமிந் தெஞ்சிய மெய்யாடு பறந்தலை
அந்தி மாலை விசும்புகண் டன்ன
செஞ்சுடர் கொண்ட குருதி மன்றத்துப்
பேஎ யாடும் வெல்போர்
வியா யாணர் நின்வயி னானே.

**துறை - வாகைத்துறைப் பாடாண்பாட்டு.**
**வண்ணம் அது.**
**தூக்கு - செந்தூக்கு. பெயர் - மெய்யாடு பறந்தலை (6.)**

(ப - ரை.) 4. வியன்களமென்றது ஒன்றான போர்க்களப் பரப்பை.

5. *அளகுடைச் சேவலென்றது பெடையொடு கூடின பருந்தின் சேவலை.

6. பறந்தலையென்றது அப்பெரும்பரப்பின் உட்களத்தை.

---

* அளகென்னும் பெயர் கோழி, கூகை, மயில் என்பவற்றிற்கு வரும் (தொல். மரபு. 55 - 6) ; இங்கே இடம்பற்றிப் பருந்தென்று உரை கூறினார்.

*குறையுடலெழுந்தாடுவது ஒரு பெயருடையார் பலர்பட்ட வழியன்றே; அவ்வாற்றாற் பலர் பட்டமை தோன்றக் கூறிய சிறப்பான், இதற்கு, 'மெய்யாடு பறந்தலை' என்று பெயராயிற்று.

8. மன்றென்றது அவ்வுட்களத்தின் நடுவை; அது †மன்றுபோறலின் மன்றெனப்பட்டது.

9 - 10. வெல்போர் வீயா யாணரென்றது வெல் போராகிய இடையறுது வருகின்ற செல்வ மென்றவாறு. ஆன் : அசை.

மைந்த, நின் படை அழிவுபடாமை நீ ஓம்பு வினை செய்தமையானே (1) நின் வென்றிகளின் பெருமை (2) பிறரிடத்தின்றி நின்னிடத்தே (10) புகழ்ச்சியமைந்தன (2) என முடிவு செய்க.

இதனாற் சொல்லியது அவன் வென்றிச்சிறப்புக் கூறியவாறாயிற்று.

உரைசான்றன நின்வென்றியெனக் கூறினமையான் வாகைத்துறைப் பாடாணாயிற்று.

(கு - ரை.) 1. நீ ஓம்பல்மாறு - நீ பாதுகாத்தலால்.

2. பெருமையையுடைய நின் வெற்றிகள் புகழ்ச்சியமைந்தன.

3. வால் மருப்பு - வெள்ளிய கொம்பு.

4. உயர்ந்த தேரினது சக்கரம் தாவிய இடமகன்ற போர்க்களத்தில்.

5. பெடையையுடைய சேவலினது இனம் தசையாகிய இரையையுண்ண; புகா - உணவு; "மரற்புகா வருந்திய மாவெருத் திரலை" (குறுந். 232 : 3.)

6. தலை துமிந்து எஞ்சிய மெய் - தலை வெட்டப்பட எஞ்சி நின்ற உடம்பு; கவந்தம்; துமிந்து - துமிய; எச்சத் திரிபு. பறந்தலை - உட்களம்.

7 - 8. அந்திமாலைப் பொழுதின்கண் ஆகாயத்தைச் கண்டாலொத்த சிவந்த ஒளியைக்கொண்ட இரத்தத்தையுடைய உள்ளிடத்தில்; குருதியாற் சிவந்த போர்க்களத்துக்குச் செவ்வானம் உவமை; "பருதிசெல் வானம் பரந்துருகி யன்ன, குருதியா றுவதுகொல் குன்றூர்" (பு. வெ. 70.)

9 - 10. பேய் ஆடுதற்குக் காரணமாகிய வெல்லுகின்ற போராகிய இடையறுது வருகின்ற புது வருவாயையுடைய நின்னிடத்து.

நின் வயின் நின்வென்றி உரைசான்றன. பிறர் உதவியாற் பெறும் வெற்றியன்றித் தானே பொருது தன் வலியாற் கொண்ட வெற்றியாதலின், 'நின்னிடத்தே புகழ்ச்சி அமைந்தன' என்றார்.

(பி - ம்.) 2. பெருமநின் வென்றி. 5. அருகுடைச் சேவல், அருளுடைச் சேவல். (ரு)

---

(நசு) **வீ**யா யாணர் நின்வயி னானே
தாவா தாகு மலிபெறு வயவே!
மல்ல லுள்ளமொடு வம்பமர்க் கடந்து
செருமிகு முன்பின் மறவரொடு தலைச்சென்று

---

* கம்ப. மூலபலவதைப். 228. † மன்று - ஊருக்கு நடுவாய் எல்லாரும் இருக்கும் மரத்தடி (முருகு. 226, ந.)

பனைதடி புனத்திற் கைதடிபு பலவுடன்
யானை பட்ட **வாண்மயங்கு கடுந்தார்**
மாவு மாக்களும் படுபிண முணீஇயர்
பொறித்த போலும் புள்ளி யெருத்திற்
புன்புற வெருவைப் பெடைபுணர் சேவல்
குடுமி யெழாலொடு கொண்டுகிழக் கிழிய
நிலமிழி நிவப்பி னீணிரை பலசுமந்
துருவெழு கூளிய ருண்டுமகிழ்ந் தாடக்
குருதிச் செம்புன லொழுகச்
செருப்பல செய்குவை வாழ்கநின் வளனே.

**துறை - களவழி. வண்ணமும் தூக்கும் அது. பெயர் - வாண் மயங்கு கடுந்தார் (6.)**

(ப - ரை.) தலைச்சென்று (4) வம்பமர்க் கடந்து (3) என மாறிக் கூட்டுக.

* வம்பமரென்றது முன்பு செய்துவருகின்ற போரன்றிப் பகைவர் புதிதாகப் பகைத்துச் செய்யும் போரினை.

6. வாள் மயங்குதலாவது இரண்டு படையில் வாளும் தம்மில் தெரியாமல் மயங்குதல்.

இச்சிறப்பான் இதற்கு, '**வாண்மயங்கு கடுந்தார்**' என்று பெயராயிற்று.

10. கிழக்கென்றது கீழான பள்ளங்களை.

உள்ளமொடு வம்பமர்க் கடந்து (3) செருப்பல செய்குவை (14); அதனானே நினது வலி (2) நின்னிடத்துக் (1) கேடுபடாததாயிருந்தது (2); அதன் மேலும் இதற்கு † அடியாகிய நின் போர்வளம் வாழ்க (14) எனக் கூட்டி வினைமுடிவு செய்க.

இதனாற் சொல்லியது அவன் வென்றிச்சிறப்புக் கூறியவாறாயிற்று.

மிகுதி வகையால் தன் போர்க்களச் சிறப்புக் கூறினமையின் துறை ‡ களவழியாயிற்று.

(கு - ரை.) 1. கெடாத புதுவருவாயையுடைய நின்னிடத்தில்.

2. மலிதல் பெற்ற வலி கெடாதாகும்; வயவு : வய என்னும் அகர வீற்று உரிச்சொல் ஈறு விகாரப்பட்டு நின்றது.

3. வளத்தையுடைய ஊக்கத்தோடு பகைவர் செய்த புதிய போரை வென்று. உள்ளம் - மனவெழுச்சி. 4. முன்பு - வலி. மறவர் - வீரர்.

5. பனைமரத்தை வெட்டிய புனத்தைப்போலத் துதிக்கைகள் வெட்டப்பட்டுப் பலவாகி ஒருங்கே. யானைக்கைக்குப் பனைமரம் உவமை.

---

* வம்பு - புதுமை. † அடி - காரணம்.

‡ களவழி - போர்க்களத்தில் நிகழும் நிகழ்ச்சியைச் சிறப்பித்தல்; களவழி வாழ்த்தென்று கூறப்படும் (பு. வெ. 207.)

6. யானைகள் இறந்த, வாட்படைகள் தம்முட் கலந்த, கடிய தூசிப் படையிலுள்ள. வாள் மயங்கு தார் : பதிற். 12 : 1.

7. யானை குதிரையென்னும் விலங்குகளும் வீரருமாகிய பட்ட பிணத்தை உண்ணும்பொருட்டு.

8 - 9. பொறிக்கப்பட்டன போன்ற புள்ளிகளையுடைய கழுத்தினையும், புல்லிய புறத்தினையுமுடைய எருவையினது, பெடையைச் சேர்ந்த ஆண் பறவை. எருவை - தலைவெளுத்து உடல் சிவந்திருக்கும் பருந்து (புறநா. 64 : 4, உரை); கழுகெனினும் ஆம் (தக்க. 562, உரை.) பொறித்த........ புறம் : பதிற். 39 : 10-11.

எருவையின் இயல்பு : "பொறித்த போலும் வானிற வெருத்தின், அணிந்த போலு மஞ்செவி யெருவை" (அகநா. 193 : 5 - 6.)

10. உச்சிக் கொண்டையையுடைய புல்லூறு என்னும் பறவையை உடன்கொண்டு கிழே இறங்க. குடுமி கூறியமையின் ஆண் புல்லூறாகக் கொள்க. இறங்கியது ஊன் உண்ணுதற்பொருட்டு. எருவை போர்க்களத்தில் ஊனுண்ணுதல், "உயிர்திறம் பெயர நல்லமர்க் கடந்த, தறுக ணாளர் குடர்தரீஇத் தெறுவரச், செஞ்செவி யெருவை யஞ்சுவர விருக்கும்" (அகநா. 77 : 9 - 11) என்பதனால் உணரப்படும். எழால் : குறுந். 151 : 2; அகநா. 103 : 1; திணைமொழி. 15.

11. பூமி பாரத்தால் தாழ்வதற்குக் காரணமான உயர்ச்சியையுடைய நீண்ட பிணவரிசைகள் பலவற்றைச் சுமந்து.

12. அச்சம் எழுதற்குக் காரணமாகிய பேய்கள் ஊனை உண்டு களித்து ஆட.

13. இரத்தமாகிய செந்நீர் ஓட. 14. செரு - போர். (சு)

---

(கஎ) **வா**ழ்கநின் வளனே நின்னுடை வாழ்க்கை
வாய்மொழி வாயர் நின்புக ழேத்தப்
பகைவ ராரப் பழங்க ணருளி
நகைவ ரார நன்கலஞ் சிதறி
ஆன்றவிந் தடங்கிய செயிர்தீர் செம்மால்
வான்றோய் நல்லிசை யுலகமொ டுயிர்ப்பத்
துளங்குகுடி திருத்திய **வலம்படு வென்றி**யும்
மாயிரும் புடையன் மாக்கழல் புனைந்து
மன்னெயி லெறிந்து மறவர்த் தரீஇத்
தொன்னிலைச் சிறப்பி னின்னிழல் வாழ்நர்க்குக்
கோடற வைத்த கோடாக் கொள்கையும்
நன்றுபெரி துடையையா னீயே
வெஞ்திறல் வேந்தேயிவ் வுலகத் தோர்க்கே.

**துறை - செந்துறைப் பாடாண்பாட்டு.**

**வண்ணமும் தூக்கும் அது. பெயர் - வலம்படு வென்றி (7.)**

(ப - ரை.) 7. வலம்படு வென்றியென்றது மேன்மேலும் பல போர் வென்றி படுதற்கு * அடியாகிய வென்றியென்றவாறு.

இச்சிறப்பான் இதற்கு, '**வலம்படு வென்றி**' என்று பெயராயிற்று.

செம்மால் (5), துளங்கு குடி திருத்திய வலம்படு வென்றியும் (7) மன்னெயில்களை எறிந்து அவற்றில் வாழும் மறவர்களைப் பிடித்துக் கொண்டு (9) பழைதான நிலைமைச் சிறப்பினையுடைய நின்னிழலில் வாழும் வீரர்க்குக் (10) † கொடுமை அறும்படி வைத்த பிறழாக் கொள்கையும் (11) நீ மிகப் பெரிதுமுடையையாயிராநின்றாய் (12); ஆதலால் வேந்தே, இவ்வுலகத்தோர் ஆக்கத்தின் பொருட்டு (13) நின் செல்வமும் நின் வாழ்நாளும் வாழ்வனவாக (1) எனக் கூட்டி வினைமுடிவு செய்க.

இதனாற் சொல்லியது அவற்குள்ள குணங்களையெல்லாம் எடுத்துப் புகழ்ந்து அவன் செல்வத்தையும் அவனையும் வாழ்த்தியவாறாயிற்று.

(கு - ரை.) 1. நின் செல்வமும் நின் வாழ்நாளும் வாழ்வனவாருக.

2. உண்மையையே மொழிகின்ற வாயையுடைய சான்றோர் நின் புகழை உயர்த்துக் கூற ; "பீடின் மன்னர்ப் புகழ்ச்சி வேண்டிச், செய்யா கூறிக் கிளத்தல், எய்யா தாகின்றெஞ் சிறுசெம் நாவே" (புறநா. 148 : 5-7.)

3. பகைவர் நிரம்பப் பெறும்படி துன்பத்தை அளித்து.

4. பாணர் முதலியோர் பெறும்படி பகைவர்பாற் பெற்ற நல்ல ஆபரணங்களை மிக வழங்கி; நகைவர் - மகிழ்ச்சிக்குக் காரணமான பாணர் முதலியோர்.

5. நற்குணங்களால் அமைந்து பணியவேண்டும் உயர்ந்தோரிடத்துப் பணிந்து, ஐம்பொறிகளும் அடங்கிய குற்றம் தீர்ந்த தலைவனே. ஆன்றவிந்தடங்கல் : புறநா. 191 : 6.

6. மிக உயர்ந்த நல்ல புகழ் உலகம் உள்ள அளவும் அழியாமல் நிற்ப ; ஆதாரமாகிய உலகம் அழியப் புகழும் அழியுமாதலின் உலகமொடுயிர்ப்ப வென்றார்.

7. வறுமை முதலியவற்றால் நடுக்கமுற்ற தன் கீழ்க்குடிகளை மேம்படுத்திய, மேலும் வெற்றிபெறுதற்குக் காரணமான வெற்றியையும்.

8. கரிய பெரிய பனந்தோட்டால் ஆகிய மாலையையும் பெரிய வீரக் கழலையும் அணிந்து.

9. பகைமன்னரது நிலைபெற்ற மதில்களை அழித்து அவற்றிலுள்ள மறவர்களைச் சிறைப்படுத்திக் கொணர்ந்து.

10 - 11. பழைய நிலைமையான சிறப்பினையுடைய நினது நிழலில் வாழ்வார்க்குக் கொடுமையறும்படி வைத்த மாறுபடாத கோட்பாட்டையும்.

செம்மால் (5) நீயே (12) வென்றியும் (7) கொள்கையும் (11) உடையை (12.)

13. இவ்வுலகத்தோர்க்கு - இவ்வுலகத்தோர் ஆக்கத்தின் பொருட்டு ; உலகத்தோர் பொருட்டு வாழ்க எனக் கூட்டுக.

(பி - ம்.) 3. பகைவராயினும். 5. செம்மல். (எ)

---

* அடி - காரணம். † கோடு - கொடுமை.

(நஅ) உலகத் தோரே பலர்மற் செல்வர்
எல்லா ருள்ளுநின் னல்லிசை மிகுமே
வளந்தலை மயங்கிய பைதிரந் திருத்திய
களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல்
எயின்முகஞ் சிதையத் தோட்டி யேவலிற்
றோட்டி தந்த தொடிமருப் பியானைச்
செவ்வுளைக் கலிமா வீகை வான்கழற்
செயலமை கண்ணிச் சேரலர் வேந்தே
**பரிசிலர் வெறுக்கை** பாணர் நாளவை
வாணுதல் கணவ மள்ள ரேறே
மையற விளங்கிய வடுவாழ் மார்பின்
வசையில் செல்வ வான வரம்ப
இனியவை பெறினே தனிதனி நுகர்கேம்
தருகென விழையாத் தாவி னெஞ்சத்துப்
பகுத்தூண் டொகுத்த வாண்மைப்
பிறர்க்கென வாழ்திநீ யாகன் மாறே.

**இதுவுமது. பெயர் - பரிசிலர் வெறுக்கை (9.)**

**(ப-ரை.)** 4. களங்காய்க்கண்ணி நார்முடியென்றது களங்காயாற்செய்த கண்ணியும் நாராற் செய்த முடியுமென்றவாறு.

தான் முடிசூடுகின்ற காலத்து ஒரு காரணத்தால் முடித்தற்குத் தக்க கண்ணியும் முடியும் உதவாமையிற் களங்காயால் கண்ணியும் நாரால் முடியும் செய்துகொள்ளப்பட்டனவென்றவாறு.

9. பரிசிலர் வெறுக்கையென்றது பரிசிலர் வாழ்வென்றவாறு.

இச்சிறப்பான் இதற்கு, '**பரிசிலர் வெறுக்கை**' என்று பெயராயிற்று.

நாளவையுடைமையாற் பாணர்நாளவை யென்றும் அவற்குப் பெயராயிற்று.

சேரல் (4), சேரலர் வேந்தே (8), பரிசிலர் வெறுக்கை, பாணர் நாளவை (9), வாணுதல் கணவ, மள்ளரேறே (10), வசையில் செல்வ, வானவரம்ப (12), செல்வர் உலகத்தார் பலர்மன் (1); (அச் செல்வத்தாரெல்லாம் பெற்றது ஈதெனத்) தாவில் நெஞ்சத்துப் (14) பகுத்தூண் தொகுத்த ஆண்மையானே (15) பிறர்க்கென வாழ்தி நீயாகலான் (16), அவர்களெல்லாருள்ளும் நின் நல்லிசை மிகும் (2) எனக் கூட்டி வினைமுடிவு செய்க.

இதனாற் சொல்லியது அவன் கொடைச்சிறப்புக் கூறியவாறாயிற்று.

**(கு - ரை.)** 1. உலகத்தோர் செல்வர் பலர்மன் - உலகத்தோரிற் செல்வத்தையுடையோர் பலர்; அவரது புகழ் தோன்றாமல் மறைந்தது; மன் ஒழியிசைப் பொருளில் வந்தது.

2. அவ்வெல்லாருள்ளும் நினது நல்ல புகழ் மேம்பட்டுத் தோன்றும்; இசை ஈகையால் வந்தது.

3. செல்வங்கள் ஒன்றோடு ஒன்று கலந்த நாட்டைச் செம்மைப் படுத்திய.

4. களங்காயாற் செய்யப்பட்ட தலையிற் சூடும் மாலையினையும் நாராற் செய்யப்பட்ட முடியையும் உடைய சேரனே.

5 - 6. பகைவர் மதிலின் இடங்கள் அழியும்படி அங்குசத்தையுடைய பாகன் ஏவுதலால் நாடுகாவலை நினக்குத் தந்த பூணையணிந்த கொம்பை யுடைய யானையையும். தோட்டி - அங்குசம்; இங்கே அதனையுடைய பாக னுக்கு ஆயிற்று. தோட்டி தந்த: தோட்டி - காவல்; "நீ, உடன்றோர் மன் னெயி றோட்டி வையா" (பதிற். 25 : 5.)

'தோட்டியையுடையானைத் தோட்டியென ஆகுபெயராயிற்று' (தொல். வேற்றுமைமயங்கு. 33, தெய்வச்.)

7. செந்நிறம் ஊட்டப்பட்ட தலையாட்டத்தையணிந்த மனம் செருக்கிய குதிரைகளையும், பொன்னாற் செய்த வீரக் கழலையும்; ஈகை - பொன்.

8. செயல் அமை கண்ணி - தொழிற்சிறப்பு அமைந்த கண்ணியை யும் உடைய.

9. பரிசிலர் வெறுக்கை - பரிசில்பெற வருவாருடைய செல்வமாக இருப்பாய் (பதிற். 15 : 21, 65 : 11.) பாணர் நாளவை - பாணரையுடைய நாளோலக்கத்தை யுடையாய்: "பாண்முற் றுகநின் னுண்மகி ழிருக்கை" (புறநா. 29 : 5.)

10. வாணுதல் கணவ: பதிற். 14 : 15, உரை. மள்ளர் ஏறே - வீரர்க் குள் ஆண்சிங்கம் போன்றாய்.

11. குற்றமில்லாமல் விளங்கிய வடுக்கள் ஆழ்ந்த மார்பினையுடைய.

12. வசையில் செல்வ - பழியில்லாத செல்வத்தை யுடையாய்.

13 - 5. 'இனிய பொருள்களை நின்பாற் பெற்றால் அவற்றை வேறு வேறாக அனுபவிப்போம்; தருவாயாக' என்று விரும்புவதற்கு முன்னே கெடுதியில்லாத மனத்தோடு பிறருக்குப் பகுத்துண்ணும் உணவைச் சேரக் கொடுத்த ஆண்மையால். இனியவை என்பது நோக்கித் தனி தனி என இயல்பாயிற்று.

விழையாப் பகுத்தூண் எனக் கூட்டுக. ஆண்மையையுடைய நீ எனக் கூட்டுதலும் ஒன்று.

16. நீ பிறர்பொருட்டு வாழ்வாயாதலால்; "தனக்கென வாழாப் பிறர்க்குரி யாளன்" (அகநா. 54 : 13; மணி. 5 ; 73.) மாறு: ஏதுப்பொருள் தருவதோர் இடைச்சொல்; 'மாறென்பது ஆனென்னும் உருபின் பொருள் படுவதோரிடைச்சொல்' (பதிற். 54 : 9, உரை.)

பிறர்க்கென நீ வாழ்தியாதலால் (16) எல்லாருள்ளும் நின் நல்லிசை மிகும் (2.)

(பி - ம்.) 16. வாழ்கநீ. (அ)

(௩௯) **பி**றர்க்கென வாழ்திநீ யாகன் மாறே
எமக்கிலென் னூர்நின் மறங்கூறு குழாத்தர்
துப்புத்துறை போகிய வெப்புடைத் தும்பைக்
கறுத்த தெவ்வர் கடிமுனை யலற
எடுத்தெறிந் திரங்கு **மேவல் வியன்பணை**
உருமென வதிர்பட்டு முழங்கிச் செருமிக்
கடங்கா ராரரண் வாடச் செல்லும்
கால னனைய கடுஞ்சின முன்ப
வாலிதின், நூலி னிழையா நுண்மயி ரிழைய
பொறித்த போலும் புள்ளி யெருத்திற்
புன்புறப் புறவின் கணநிரை யலற
அலந்தலை வேலத் துலவை யஞ்சினைச்
சிலம்பி கோலிய வலங்கற் போர்வையின்
இலங்குமணி மிடைந்த பசும்பொற் படலத்
தவிரிழை தைஇ மின்னுமிழ் பிலங்கச்
சீர்மிகு முத்தந் தைஇய
நார்முடிச் சேரனின் போர்நிழற் புகன்றே.

**துறை - வாகை. வண்ணமும் தூக்கும் அது.**
**பெயர் - ஏவல் வியன்பணை (5.)**

(ப-ரை.) 2. எமக்கிலென்னூர் நின் மறங்கூறு *குழாத்தரென்றது நின் படைக் குழாத்திற் படைத்தலைவர் நீ பிறர்க்கென வாழ்தியாகையால், அவரும் தம்பால் இரந்து சென்றோர்க்கு †எமக்கு இல்லையென்று மறாரென்றவாறு.

5. எடுத்தெறியவெனத் திரிக்க. ஏவல் வியன்பணை யென்றது எடுத்த ‡வினை முடிந்ததெனாது மேன்மேலும் படையைக் கடிமுனைக்கண் §ஏவுதலை யுடைய முரசென்றவாறு.

இச்சிறப்பான் இதற்கு, '**ஏவல் வியன்பணை**' என்று பெயராயிற்று.

9. இழைய போர்வை (13) எனக் கூட்டுக. 11. புறவின் கணநிரை யலறுதல், அப்போர்வையை $ வலையெனக்கருதி அலறுதல்.

12. உலவையஞ்சினையென்றது உலந்த சிறு கொம்பினையுடைய பெருங்கொம்பினை.

---

*குழாமென்றது படையையாதலின் குழாத்தர் படைவீரர்கள் ஆயினர்.

† குறள். 223, பரிமேல். விசேட. ‡ வினை - போர்.

§ பதிற். 54 : 13, உரை.

$ "கொலைவல் வேட்டுவன் வலைபரிந்து போகிய, கானப் புறவின் சேவல் வாய்நூற், சிலம்பி யஞ்சினை வெரூஉம், அலங்க லுலவையங் காடு" (நற். 189 : 7 - 10.)

14. இலங்கு மணிமிடைந்த பசும்பொற் படலமென்றது விளிம்புமணி யழுத்திய பொற்றகட்டாற் செய்த கூட்டினை.

15. அவிரிழை தைஇயென்றது விளங்கின நூலாலே முத்தைக் கோத் தென்றவாறு.

போர்வையின் (13) முத்தந் தைஇய (16) என்றது அப்போர்வையை முத்தாற் சூழுமாறுபோல அக்கூட்டினைச் செறிந்த நார்முடியின் *பொல் லாங்கு குறைதற்கு முத்துவடங்களைச் சூழ்ந்தவென்றவாறு.

போர்வையின் (13) முத்தந் தைஇய (16) பசும்பொற்படலத்து (14) நார்முடி (17) என்று மாறிக் கூட்டுக.

17. நின் போராகிய நிழலை என்றும் உளவாகவேண்டுமென்று விரும்பி யென்றவாறு. †போரை நிழலென்றது அப்போர் மறவரது ஆக்கத் திற்குக் காரணமாகலின்.

முன்ப (8), சேரல் (17), நீ பிறர்க்கென வாழ்தியாகலான் (1), நின் மறங்கூறு குழாத்தர் (2) நின் போர்நிழற் புகன்று (17) எமக்கு இல்லையென்னார் (2) எனக் கூட்டி வினைமுடிவு செய்க.

இனி இதற்குப் பிறவாறு கூட்டி வேறு பொருள் உரைப்பாருமுளர்.

இதனாற் சொல்லியது அவன் கொடைச்சிறப்பும் அவன்வென்றிச்சிறப் பும் உடன்கூறியவாறாயிற்று.

அம்மறவரது கொடைக்குக் காரணம் அவன்வென்றியாகலின், துறை வாகையாயிற்று.

(கு - ரை.) 2. நின் மறம் கூறு குழாத்தர் எமக்கு இல்லென்னார் - நின் னுடைய வீரத்தை எடுத்துச் சொல்லும் படைவீரர் தம்மிடத்து இரந்து சென்ற எமக்கு இல்லையென்று சொல்லார்; "நின் படைகொண் மாக்கள் ............கூவை துற்ற நாற்காற் பந்தர்ச், சிறுமனை வாழ்க்கையி னொரீஇ வருநர்க், குதவி யாற்று நண்பிற் பண்புடை, ஊழிற் றாகநின் செய்கை" (புறநா. 29: 17 - 22.)

3. துப்புத்துறை போகிய - பகைமையின் துறைகளை யெல்லாம் முடித்த. வெப்புடைத் தும்பை - வெம்மையை யுடைய போர்க்குரிய தும்பை மாலையைச் சூடிய.

4. சினங்கொண்ட பகைவர் அச்சத்தையுடைய போர்க்களத்தில் அலறும்படி.

5. குறுந்தடியை எடுத்து அடிப்பதனால் ஒலிக்கின்ற, படைவீரரைப் போருக்கு ஏவுதலைச் செய்யும் பெரிய முரசு.

6. இடியைப்போல அதிர்ந்து ஒலித்து. செரு மிக்கு-போரின்கண்ணே மேம்பட்டு.

7. பகைவரது, கைப்பற்றுதற்கு அரிய அரண்கள் அழியும்படி எடுத் துச் செல்கின்ற.

8 கூற்றுவனைப்போன்ற மிக்க சினத்தையும் வன்மையையும் உடையோய்; "கால முன்ப" (புறநா. 23 : 17.)

9. வாலிதின் - வெண்மையாக. நூலால் இழைக்கப்படாத நுண்ணிய மயிரைப்போன்ற இழைகளையுடைய; இது சிலந்திவலைக்கு (13) அடை.

* பொல்லாங்கு - குறை.

† "போரெனிற் புகலும் புனைகழன் மறவர்" (புறநா. 31 : 9, அடிக்.)

10. மு. பதிற். 36 : 8.

11. புல்லிய முதுகினையுடைய புறாக் கூட்டங்களின் வரிசை கதறும்படி.

12 - 3. சிதைந்த தலையையுடைய வேலமரத்தினது உலர்ந்துபோன சிறிய கிளையில் சிலந்தி வனைந்த அசைதலையுடைய வலையைப்போல. அலந்த தலை அலந்தலை என விகாரமாயிற்று. மேலே போர்த்து அமைந்தமையின் வலையைப் போர்வை என்றார்.

14. விளங்குகின்ற மணிகள் நெருங்கின பசிய பொற்றகட்டாற் செய்த கூட்டினிடத்தே.

15 - 6. விளங்குகின்ற நூலிலே கோத்து ஒளியை உமிழ்ந்து விளங்கும்படி சிறப்பு மிக்க முத்துவடங்களைச் சூழக் கோத்த.

17. நின் போர் நிழற் புகன்று - நினது போராகிய நிழலின்கண்ணே விரும்பி வாழ்ந்து. படைவீரருக்குப் போரே இன்பத்தைத் தருவதாதலின் அதனை நிழலென்றார்.

கடுஞ்சின முன்ப (8) நார்முடிச் சேரல் (17) நீ பிறர்க்கென வாழ்தியாகல் மாறு (1) நின் போர்நிழற் புகன்று (17) நின் மறங்கூறு குழாத்தர் எமக்கு இல்லென்னார் (2) என முடிக்க. (௯)



(௪0) போர்நிழற் புகன்ற சுற்றமொ டூர்முகத்
திருஅ லியரோ பெருமநின் றானை
இன்னிசை யிமிழ்முர சியம்பக் கடிப்பிகூஉப்
புண்டோ ளாடவர் போர்முகத் திறுப்பக்
காய்த்த கரந்தை மாக்கொடி விளைவயல்
வந்திறை கொண்டன்று தானை யந்திற்
களைநர் யாரினிப் பிறரெனப் பேணி
மன்னெயின் மறவ ரொலியவிந் தடங்க
ஒன்னார் தேயப் பூமலைந் துரைஇ
வெண்டோடு நிரைஇய வேந்துடை யருஞ்சமம்
கொன்றுபுறம் பெற்று மன்பதை நிரப்பி
வென்றி யாடிய தொடித்தோண் மீகை
எழுமுடி கெழீஇய திருஞெம ரகலத்துப்
பொன்னங் கண்ணிப் பொலந்தேர் நன்னன்
சுடர்வீ வாகைக் கடிமுத றடிந்த
தார்மிகு மைந்தி னார்முடிச் சேரல்
புன்கா லுன்னஞ் சாயத் தெண்கண்
வறிதுகூட் டரிய லிரவலர்த் தடுப்பத்
தான்றர வுண்ட நனைநறவு மகிழ்ந்து
நீரிமிழ் சிலம்பி னேரி யோனே

செல்லா யோதில் சில்வளை விறலி
மலர்ந்த வேங்கையின் வயங்கிழை யணிந்து
மெல்லியன் மகளி ரெழினலஞ் சிறப்பப்
பாணர் பைம்பூ மலைய விளையர்
இன்களி வழாஅ மென்சொ லமர்ந்து
நெஞ்சுமலி யுவகையர் வியன்களம் வாழ்த்தத்
தோட்டிநீ வாது தொடிசேர்பு நின்று
பாக ரேவலி னொண்பொறி பிசிரக்
காடுதலைக் கொண்ட **நாடுகா ணவிர்சுடர்**
அழல்விடுபு மரீஇய மைந்திற்
றொழில்புகல் யானை நல்குவன் பலவே.

**துறை - விறலியாற்றுப்படை. வண்ணமும் தூக்கும் அது.**
**பெயர் - நாடுகா ணவிர்சுடர் (29.)**

(ப - ரை.) போர்கிழற் புகன்ற சுற்றமென்றது படைத்தலைவரை. ஊர் முகமென்றது படை பொரும் இடத்தை.

ஆடவர் போர்முகத்திறுப்ப (4) வயலிலே (5) வந்து இறைகொண்டன்று தானை (6); களைநர் யார், இனிப்பிறர் (7); பெரும, நின்றானை (2) சுற்றமொடு ஊர்முகத்து (1) இறுஅலியரெனச் (2) சொல்லிப் பேணி (7) என மாறிக் கூட்டுக.

9. ஒன்னாரென்றது முன்சொன்ன மன்னெயின்மறவர் (8) அல்லாத பகைவரை.

வெண்டோடு நிரைஇய (10) பூ மலைந்து (9) என மாறிக் கூட்டுக.

11. மன்பதை நிரப்பியென்றது தன் படையை அவ்வேந்தர் நாட்டுத் தன் ஆணையானே நிரப்பியென்றவாறு.

12. வென்றியாடியவென்னும் பெயரெச்சத்திற்கு மீகையென்னும் பெயரினை அவன்றான் வென்றியாடுதற்குக் கருவியாகிய கையெனக் கருவிப் பெயராக்குக. மீ கை - மேலெடுத்த கை.

14. பொன்னங்கண்ணியும் பொலந்தேரும் நன்னற்கு அடையாக்குக.

17. * உன்னம் சாயவென்றது தன்னொடு பொரக் கருதுவார் நிமித்தம் பார்த்தவழி அவர்க்கு வென்றியின்மையிற் கரிந்து காட்டவென்றவாறு.

18. வறிது கூட்டு அரியலென்றது களிப்பு † விறக்கவிடும் பண்டங்கள் பெருகக்கூட்டிற் களிப்புமிகுமென்று அவை அளவே கூட்டின அரியலென்றவாறு.

---

* உன்ன நிலை என்னும் துறை 'வேந்தன் கருத்தானன்றி அவன்மறவன் வேந்தற்கு நீ வென்றி கொடுத்தால் யான் நினக்கு இன்னது செய்வலெனப் பரவுதலும், எம் வேந்தற்கு ஆக்கம் உளதெனின் அக் கோடு பொதுளுகவெனவும், பகை வேந்தற்கு ஆக்கமுளதெனின் அக்கோடு படுவதாகவெனவும் நிமித்தம் கோடல்' (தொல். புறத். 5, ந.; பு. வெ. 243.)

† விறக்க - மிக.

19. தானென்பதனைச் சேரல்தான் (16) எனக் கூட்டித் தரவுண்ட வென்பதனை * வரையாது கொடுத்தற்பொருட்டு உண்டவென வுரைக்க.

இனி இதற்குப் பிறவாறு உரைப்பாரும் உளர்.

27. தோட்டி நீவாமலெனத் திரிக்க.

29. காடுதலைக்கொண்ட சுடரெனக் கூட்டுக. நாடுகாணவிர்சுட ரென்றது நாடெல்லாம் நின்று காணும்படி நின்று எரிகின்ற விளங்கின சுடரென்றவாறு.

இச்சிறப்பானே இதற்கு, '**நாடுகா ணவிர்சுடர்**' என்று பெயராயிற்று.

29 - 30. சுடரழலென்றதனைச் சுடர்போலும் அழலென உவமைத் தொகையாக்கி அழலை அந்த யானையின் சீற்றத்தீ யாக்குக. மரீஇயவென்றது அவ்வாறு அழல்விட்டும் பாகரேவலொடு மரீஇயவென்றவாறு.

சேரல் (16) தான் (19) நேரியோன் (20); இளையவர் (24) களம் வாழ்த்த (26), மகளிர் (23) மலர்ந்த வேங்கையின் இழையணிந்து (22) நலஞ்சிறப்ப (23), பாணர் பூ மலைய (24), யானையைப் பல நல்குவான் (31.) ஆனபின்பு விறலி, நீ செல்லாயோ (21) எனக் கூட்டி வினைமுடிவு செய்க.

இதனாற் சொல்லியது அவன் கொடைச்சிறப்புக் கூறியவாறாயிற்று.

(**கு - ரை.**) 1. போராகிய ஆக்கத்தை விரும்பிய படைத்தலைவராகிய சுற்றத்தோடு: போர் நிழல்: **பதிற்.** 39 : 17, உரை.

1 - 2. ஊர்முகத்து நின் தானை இருஅலியர் - போர் செய்யும் இடத்தே நினது சேனை தங்காதொழிவதாக.

3 - 7. மன்னெயில் மறவரது கூற்று.

3. முரசு இயம்ப கடிப்பு இகூஉ - வீர முரசு ஒலிக்கும்படி குறுந்தடியால் அடித்து.

4. எப்போதும் போர்செய்தலால் புண்ணையுடைய தோளையுடைய படைவீரர் போரிடத்தே வந்து தங்க.

5 - 6. காய்த்த கரந்தையாகிய பெரிய கொடியையுடைய விளைகின்ற வயலில் தானை வந்து தங்குதல் கொண்டது.

6 - 7. அவ்விடத்தே நம் துயரத்தைப் போக்குபவர் சேரனையல்லாமல் வேறு யாருளரென்று விரும்பி.

8. நிலைபெற்ற சிற்றரண்களிலுள்ள மறவர் தம் போராரவாரம் குறைந்து பணியவும்.

9 - 10. ஒன்னார் தேய-மறவரல்லாத பகைவர் அழியவும். வெண்டோடு நிரைஇய பூ மலைந்து - வெள்ளிய தோடு வரிசையாக அமைந்த போருக்கு உரிய தும்பைப் பூவைச் சூடி. உரைஇ - வஞ்சினங்களைக் கூறி.

10 - 11. வேந்துடை அருஞ்சமம் கொன்று புறம்பெற்று மன்பதை நிரப்பி-வேந்தர்களுடைய அரிய போரை அழித்து அவர் புறங்கொடுத்து ஓடுதலைப் பெற்று, அவர் நாட்டில் ஆணையால் தன் படையை நிரப்பி.

12. வெற்றியால் ஆடிய வீரவளையை அணிந்த தோளையுடைய மேலெடுத்த கையையும்; இது 'தேரோர் வென்ற கோமான் முன்தேர்க்குரவை' என்று கூறப்படும் ( **பதிற்.** 56 : 5) ; 'தேரின்கண் வந்த அரசர் பலரையும்

* "நாட்கள் ளுண்டு நாண்மகிழ் மகிழின், யார்க்கு மெளிதே தேரீதல்லே" (**புறநா.** 123 : 1 - 2.)

வென்ற வேந்தன் வெற்றிக் களிப்பாலே தேர்த்தட்டிலே நின்று போர்த் தலைவரோடு கைபிணைந்தாடும் குரவை: சூடிய பொன்முடியும் பூணு மொளிதுளங்க, ஆடிய கூத்தரின்வேந் தாடினன்' (தொல். புறத். 21, ந.)

13. எழு முடி கெழீஇய - பகையரசரது ஏழு கிரீடங்களாற் செய்த ஆபரணம் பொருந்திய. திரு ஞெமர் அகலத்து - திருமகள் பரவிய மார்பினையும். எழுமுடி: பதிற். 14 : 11, உரை. நிரப்பி (11) ஆடிய (12) என்க.

அகலத்து (13) நார்முடிச் சேரல் (16) என இயைக்க.

14 - 6. பொன்னாற் செய்த கண்ணியையும், பொன்னால் இயற்றப் பட்ட தேரையும் உடைய நன்னனது ஒளிவிடும் பூக்களையுடைய வாகை மரத்தினது காவலையுடைய அடிமரத்தை வெட்டிய, தூசிப் படையினிடத்தே மிக்குச் செல்லும் வன்மையையும் உடைய நார்முடிச் சேரனே. வாகை மரத்தைத் தடிந்தது: பதிற். 4-ஆம் பதிகம், 9. நார்முடிச் சேரல்: பதிற். 38 : 4, உரை.

17. புன் கால் உன்னம் சாய - பொலிவற்ற காலையுடைய உன்ன மர மானது கெடும்படி; உன்னம்: இலவமரமென்பர்; இது நிமித்தம் பார்க்கும் மரங்களுள் ஒன்று; "புன்கா லுன்னத்துப் பகைவ னெங்கோ" (பதிற். 61 : 6.)

17 - 8. தெளிந்த இடத்தையுடைய, களிப்புக்காக இடப்படும் பண்டங் கள் சிறிதளவாகச் சேர்க்கப்பட்ட கள் இரவலரை மேலே செல்லவொட்டா மல் தடுப்ப.

19. தான் பிறருக்குக் கொடுப்பதற்காக உண்ட பூவரும்புகளாற் செய் யப்பட்ட நறவினால் களிப்பு மிக்கு.

20. அருவிநீர் ஒலிக்கின்ற நேரிமலையிலுள்ளான்.

சேரல் (16) நேரியோன் (20) என முடிக்க.

21. சில்வளை விறலி - சிலவாகிய வளையை அணிந்த விறலியே (பதிற். 57 : 6, உரை.)

22. வேங்கையின் - வேங்கை மரத்தைப்போல.

22 - 3. மெல்லியன் மகளிரென்றது விறலியரை. மகளிர் இழையை யணிந்து எழினலம் சிறப்ப; எழினலம் - எழுச்சியும் அழகும்; எழிலாகிய நலமெனினும் ஆம். இழையணிந்த மகளிர்க்கு மலர்ந்த வேங்கை: "எரி மருள் வேங்கை யிருந்த தோகை, இழையணி மடந்தையிற் றோன்றும்" (ஐங். 294 : 1-2.)

24. பாணர் பசிய பொன்னாற் செய்த தாமரைப் பூவைச் சூட.

24 - 5. பாணரில் சிறுவர் இனிய களிப்பு வழுவாத மென்சொல்லை விரும்பி.

26. நெஞ்சில் மிக்க உவகையை உடையவராய் அகன்ற போர்க் களத்தை வாழ்த்த. இது களவழி வாழ்த்தென்று கூறப்படும்.

27. தோட்டி நீவாது - அங்குசத்தின் எல்லையைக் கடவாமல். தொடி சேர்பு நின்று - பூண் பொருந்தி நின்று.

28. பாகர் ஏவுதலால் ஒள்ளிய தீப்பொறி சிதறும்படி.

29 - 31. காடு தன்னிடத்தே கொண்ட, நாட்டிலுள்ளாரெல்லாம் காணத்தக்க, விளங்குகின்ற சுடரைப்போன்ற சினத்தீயை விட்டுப் பாக

ரேவலினொடு பழகிய வன்மையையுடைய போர்த்தொழிலை விரும்பிய யானைகள் பலவற்றை அளிப்பான்.

தொழில் புகல் யானை : பதிற் : : 82 : 4, 84 : 4.

**இப்பத்திலுள்ள செய்யுட்கள் அந்தாதியாக அமைந்துள்ளன.**

(பி - ம்.) 10. வெண்டோடு நிரைத்த. 21. செல்லாமோதில். 27. தோட்டி நிவந்து. (௧௦)

இதன் பதிகத்துக் **கடம்பின் பெருவாயில்** (7) என்றது, அந் நன்னன் ஊரை. நிலைச்செரு (8) என்றது அந்நன்னன் நாடோறுஞ் செய்த போரினை.

(பதிகம்)

ஆராத் திருவிற் சேர லாதற்கு
வேளாவிக் கோமான்
பதுமன் றேவி யீன்ற மகன்முனை
பனிப்பப் பிறந்து பல்புகழ் வளர்த்
தூழி னாகிய வுயர்பெருஞ் சிறப்பிற்
பூழி நாட்டைப் படையெடுத்துத் தழீஇ
உருள்பூங் **கடம்பின் பெருவாயி னன்னனை**
நிலைச்செருவி னாற்றலை யறுத்தவன்
பொன்படு வாகை முழுமுத றடிந்து
குருதிச் செம்புனல் குஞ்சர மீர்ப்பச்
செருப்பல செய்து செங்களம் வேட்டுத்
துளங்குகுடி திருத்திய வலம்படு வென்றிக்

**களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரலைக் காப்பியாற்றுக் காப்பியனார்** பாடினார் பத்துப்பாட்டு.

அவைதாம் : கமழ்குரற்றுழாய், கழையமல்கழனி, வரம்பில் வெள்ளம், ஒண்பொறிக்கழற்கால், மெய்யாடுபறந்தலை, வாண்மயங்குகடுந்தார், வலம்படுவென்றி, பரிசிலர்வெறுக்கை, ஏவல் வியன்பணை, நாடுகாணவிர்சுடர். இவை பாட்டின் பதிகம்.

பாடிப்பெற்ற பரிசில் : நாற்பது நூறாயிரம் பொன் ஒருங்கு கொடுத்துத் தான் ஆள்வதிற் பாகங்கொடுத்தான் அக்கோ.

களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல் இருபத்தையாண்டு வீற்றிருந்தான்.

(கு - ரை.) 1. ஆராத்திருவின் - நுகர நுகர விருப்பம் அமையாத செல்வத்தையுடைய.

3 - 4. முனைபனிப்பப் பிறந்து - பகைவர் போர்முனைகள் நடுங்கும்படி பிறந்து.

5. ஊழின் ஆகிய - முறைமையினால் உண்டான.

6. பூழிநாடு : கொடுந்தமிழ்நாடு பன்னிரண்டனுள் ஒன்று ; இதனை வென்றமையால் சேரர், “பூழியர் மெய்ம்மறை” (பதிற். 73 : 11, 90 : 27),

"பூழியர் கோ" (பதிற். 21 : 23, 84 : 6) என்று கூறப்படுவர். தழீஇ - தன் நாட்டோடு சேர்த்துக்கொண்டு.

7. உருள் பூங்கடம்பு - தேருருள் போன்ற பூவையுடைய கடம்பு (முருகு. 11, ந. ; பரி. 5 : 81, 21 : 11, 50.)

7 - 8. "குடாஅது, திரும்பொன் வாகைப் பெருந்துறைச் செருவிற், பொலம்பூ ணன்னன் பொருதுகளத் தொழிய, வலம்படு கொற்றந் தந்தவாய் வாட், களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல்" (199 : 18 - 22) என அகநானூறு வாகைப்பறந்தலையில் வென்றதாகக் கூறும்.

9. வாகை நன்னனது காவல்மரம் (பதிற். 40 : 14 - 5.)

10. இரத்தமாகிய செந்நிறத்தையுடைய புனல் யானைகளை இழுத்துச் செல்ல.

11. செங்களம் வேட்டு - இரத்தத்தாற் சிவந்த போர்க்களத்தில் களவேள்வியைச் செய்து ; களம் வேட்டல் : முருகு. 99 - 100 ; மதுரைக். 128 - 30 ; புறநா. 26 : 6 - 11 ; பு. வெ. 160.

## நான்காம் பத்து முற்றிற்று.

---

# ஐந்தாம் பத்து

(சுக) **பு**ணர்புரி நரம்பின் றீந்தொடை பழுனிய
வணரமை நல்யா ழிளையர் பொறுப்பப்
பண்ணமை முழவும் பதலையும் பிறவும்
கண்ணறுத் தியற்றிய தூம்பொடு சுருக்கிக்
காவிற் றகைத்த துறைகூடு கலப்பையர்
கைவ லிளையர் கடவுட் பழிச்ச
மறப்புலிக் குழூஉக்குரல் செத்து வயக்களிறு
வரைசேர் பெழுந்த சுடர்வீ வேங்கைப்
பூவுடைப் பெருஞ்சினை வாங்கிப் பிளந்துதன்
மாயிருஞ் சென்னி யணிபெற மிலைச்சிச்
சேஎ ருற்ற செல்படை மறவர்
தண்டுடை வலத்தர் போரெதிர்ந் தாங்கு
வழையமல் வியன்காடு சிலம்பப் பிளிறும்
மழைபெயன் மாறிய கழைதிரங் கத்தம்
ஒன்றிரண் டலபல கழிந்து திண்டேர்
வசையி னெடுந்தகை காண்குவந் திசினே
தாவ லுய்யுமோ மற்றே தாவாது
வஞ்சின முடித்த வொன்றுமொழி மறவர்
முரசுடைப் பெருஞ்சமத் தரசுபடக் கடந்து

வெவ்வ ரோச்சம் பெருகத் தெவ்வர்
மிளகெறி யுலக்கையி னிருந்தலை யிடித்து
வைகார்ப் பெழுந்த மைபடு பரப்பின்
எடுத்தே றேய கடிப்புடை வியன்கண்
வலம்படு சீர்த்தி யொருங்குட னியைந்து
காலுளைக் கடும்பிசி ருடைய வாலுளைக்
கடும்பரிப் புரவி யூர்ந்தநின்
படுந்திரைப் பனிக்கட லுழந்த தாளே.

**துறை - காட்சி வாழ்த்து. வண்ணம் - ஒழுகுவண்ணம்.**
**தூக்கு - செந்தூக்கு. பெயர் - சுடர்வீ வேங்கை (8.)**

(ப - ரை.) 5. துறைகூடு கலப்பை - ஆடற்றுறைக்கு வேண்டுவன வெல்லாம் கூடின * மூட்டு.

கடவுட் பழிச்ச (6) அத்தம் (14) பல கழிந்து (15) காண்குவந்திசின் (16) என முடிக்க.

7 - 8. † களிறு தன் சினத்தாற் செய்த செயலுக்கெல்லாம் வேங்கை காரணமாய் நின்றமையான் இதற்கு, **'சுடர்வீ வேங்கை'** என்று பெயராயிற்று.

17. தாவலுய்யுமோவென்றது வருத்தத்தில் நின்று நீங்குமோ என்றவாறு.

தாவென்னும் உரிச்சொல் தொழிற்பெயர்ப்பட்டுத் தாவலென நின்றது.

18. வஞ்சினமுடித்தல் - மாற்றார் மண்டலங்களைக் கொண்டு முடித்தல்.

20. வெம்மையென்னும் பண்பிற்கு வெவ்வரென்பதும் ஓர் வாய்பாடு.

தெவ்வர் தலை (21) என மாறிக் கூட்டுக. இருந்தலைபிடித்து (21) அரசுபடக் கடந்து (19) என முடித்து அதனைக் கடக்கவெனத் திரித்து அதனை எடுத்தேறு (23) என்னும் தொழிற்பெயரொடு முடிக்க.

22. வைகார்ப்பு - ஒருகாலும் இடையறாது தங்கின ஆரவாரம். மைபடுபரப்பு - கடற்பரப்பு.

இயைந்து (24) என்பதனை இயையவெனத் திரித்து, உழந்த (27) என்பதனொடு முடிக்க ; இனி ஊர்ந்த (26) என்பதனொடு முடிப்பினும் அமையும்.

25. காலுளையென்றது காற்றானே உளைதலையுடைய வென்றவாறு. உளைதல் - விடுபடுதல்.

---

* மூட்டு - முடிச்சு.

† மலர்ந்த வேங்கைமரம் புலியைப்போன்ற தோற்றத்தை அளித்தலமையின் அது காரணமாயிற்றென்றார் ; "கதழ்வாய் வேழம், இருங்கேழ்வயப் புலி வெரீஇ யயலது, கருங்கால் வேங்கை யூறுபட மறலிப், பெருஞ்சினந் தணியுங் குன்ற நாடன் " (நற். 217 : 2 - 5) ; "உறுபுலி யுருவேய்ப்பப் பூத்த வேங்கையைக், கறுவுகொண் டதன்முதற் குத்திய மதயானை " (கலி. 38 : 6 - 7) ; "புலிக்கேழ் வேங்கைப் பூஞ்சினை புலம்ப, முதல்பாய்ந்திட்ட முழுவலி யொருத்தல் " (அகநா. 227 : 8 - 9.)

நெடுந்தகை, காண்குவந்தேன் (16) ; நின் (26) கடலுழுந்த தாள் (27) தாவலுய்யுமோ (17) எனக் கூட்டி வினைமுடிவு செய்க.

இதனாற் சொல்லியது அவன் வென்றிச் சிறப்புக் கூறியவாயிற்று.

நின் கடலுழுந்த தாள் தாவலுய்யுமோ என்றதனாற் காட்சிவாழ்த் தாயிற்று.

(கு - ரை.) 1. மத்தளத்தின் தாளத்தோடு கூடின, முறுக்கிய நரம்பின் இனிதாகிய கட்டு முதிர்ந்த.

2. வளைதல் அமைந்த நல்ல யாழை இளைய மகளிர் தாங்க ; " வணர் கோட்டுச் சீறியாழ் " (புறநா. 155 : 21.)

3. தன் கண்களிலே பண் அமைந்த மத்தளமும் ஒருகண்மாக்கிணையும் பிற வாத்தியங்களும் ; பண்ணென்றது சுருதியை. பண் அமை முழவு - பண் ணுதல் அமைந்த மத்தளமெனலும் ஆம். பதலை - ஒரு பக்கத்தில் மாத்திரம் அடித்தலையுடைய ஒருவகைப் பறை.

4. கண் அறுத்து இயற்றிய தூம்பு - மூங்கிலின் கணுக்களை அறுத்து இயற்றப்பட்ட பெருவங்கியம் ; இது களிற்றுயிர்த்தூம்பு என்று கூறப் படும் (மலைபடு. 6 ; அகநா. 111 : 8 - 9 ; புறநா. 152 : 15) ; இது மூங்கி லாற் செய்யப்படுவது ; " கழைவளர் தூம்பின் கண்ணிட மிமிர " (மலைபடு. 533.)

5. காவில் தகைத்த - காவடியில் கட்டிய. துறை கூடு கலப்பையர் - ஆடற்றுறைக்கு வேண்டுவன எல்லாம் கூடின முட்டுக்களையுடையராய்.

1 - 5: மலைபடு. 3 - 13 ; புறநா. 103 : 1 - 2, 139 : 1 - 2, 152 : 14 - 7.

6. யாழ்வாசித்தலில் வல்ல இளையர் கடவுளை வாழ்த்த.

7. மறப்புலிக் குழூஉக்குரல் செத்து - மறத்தையுடைய புலிக் கூட் டத்தினது குரலாகக் கருதி. வயக்களிறு - வன்மையை யுடைய ஆண் யானை.

8 - 9. வரை சேர்பு எழுந்த - பக்கமலையைப் பொருந்தி வளர்ந்த. ஒளிவிடும் பூக்களையுடைய வேங்கையினது பொலிவையுடைய பெரிய கிளையை வளைத்துப் பிளந்து. 10. கரிய பெரிய தலையில் அழகுபெறச் சூடி.

6 - 10. இளையர் கடவுளை வாழ்த்தும் ஒலியினைப் புலியினது முழக்க மென்று எண்ணிய யானை, பூத்துப் பொலிந்த வேங்கைமரத்தைப் புலி யென எண்ணிச் சிதைத்தது.

11. சேஎர் உற்ற - திரளுதல் பொருந்திய. செல்படை மறவர் - பகை வர்மேற் செல்கின்ற சேனையிலுள்ள வீரர் ; சேர் - திரளுதலென்னும் பொருள்படும் உரிச்சொல் (தொல். உரி. 65.)

12. தண்டை யுடைய வெற்றியை யுடையவராகிப் போரை ஏற்றுக் கொண்டு ஆரவாரித்தாற்போல (பதிற். 54 : 14) வேங்கைமரத்தின் கிளையை ஏந்தியமையின் அக்களிற்றுக்குத் தண்டுடை வலத்தரை உவமை கூறினர்.

13. சுரபுன்னைகள் நெருங்கி வளர்ந்த அகன்ற காடு எதிரொலி செய் யும்படி முழங்கும்.

களிறு (7), பிளந்து (9) மிலைச்சிப் (10) போரெதிர்ந்தாங்குப் (12) பிளி றும் (13) அத்தம் (14) என இயைக்க.

14. மழை பெய்தல் நீங்கிய மூங்கில் வாடிய அரிய வழிகள் ; " இரும் பனை திரங்கப் பெரும்பெய லொளிப்ப.........அருவி யற்ற பெருவறற்

காலையும் " (பதிற். 43 : 12 - 4) ; "கழைகாய்ந் துலறிய வறங்கூர் நீளிடை" (புறநா. 370 : 9.)

14 - 5. அரிய வழிகள் ஒன்று இரண்டு அல்லாதனவாகிய பலவற்றைக் கடந்துவந்து.

15 - 6. திண்ணிய தேரையுடைய பழியில்லாத நெடுந்தகை, நின்னைக் காணும்பொருட்டு வந்தேன். நெடுந்தகை : விளி. வந்திசின் : இசின் தன்மைக்கண் வந்தது (புறநா. 22 : 36, உரை.)

17. தாவல் உய்யுமோ - வருத்தத்தினின்றும் நீங்குமோ. மற்று : அசை.

17 - 8. வருத்தமின்றித், தாம் கூறிய சபதங்களை நிறைவேற்றிய, தம் தலைவர் கூறுவதையே தாமும் கூறும் ஒன்றுகிய மொழியையுடைய வீரர்.

19 : பதிற். 34 : 10 - 11.

19 - 21. முரசையுடைய பெரிய போரின்கண் அரசர்கள் இறக்கும்படி வெல்லவேண்டியும், வெம்மையின் மிகுதி பெருகவும் பகைவரது கரிய தலையை உலக்கையால் இடித்த மிளகைப்போல இடித்து. கடந்து - கடக்க ; எச்சத்திரிபு. மிளகெறியுலக்கையினென்பதனை, உலக்கையெறி மிளகின் என மாறுக.

22. வைகு ஆர்ப்பு எழுந்த-இடையருமல் தங்கின ஆரவாரம் எழுந்த. மை படு பரப்பின் - கருமையுண்டாகின்ற கடற்பரப்பில்.

23. எடுத்தேறு ஏய - எடுத்தெறிதலை ஏவிய (பதிற். 84 : 1) ; கடல்பிறக் கோட்டியவனுதலின் இது கூறினுர்.

கடிப்பு உடை வியல் கண் - குறுந்தடியால் அடிக்கப்படுதலையுடைய அகன்ற கண்ணையுடைய முரசத்தால் ; வியன்கண் முரசிற்கு ஆயிற்று.

24. வெற்றியால் உண்டான மிக்க புகழ் ஒருங்குசேர்ந்து பொருந்தி ; சீர்த்தி : உரிச்சொல்.

25. காற்றல் ஒலித்தலையுடைய மிக்க பிசிராக உடையும்படி.

25 - 7. வெள்ளிய தலையாட்டத்தை அணிந்த, விரைந்த செலவையுடைய குதிரையை ஊர்ந்த நின் ஒலிக்கின்ற அலைகளையுடைய குளிர்ச்சியையுடைய கடலிலே வருந்திய கால்கள்.

இயைந்து (24) உடைய (25) ஊர்ந்த (26) நின் தாள் (27) தாவல் உய்யுமோ (17) என முடிக்க.

சேரன் கடலுழந்தது : பதிற். 48 : 3 - 4; 'நின்தாள் கடலுழந்த வருத்தத்தினின்றும் நீங்குமோ' என்பதுபடக் கூறினராயினும் கடல்பிறக்கோட்டிய வென்றியைப் புலப்படுத்துவதே கருத்தென்று கொள்க.

(பி - ம்.) 4. கண்ணுறுத்து. 5. தசைத்த. 15. கடந்து. 27. உழந்த நாளே. (க)

---

(சஉ) இரும்பனம் புடைய லீகை வான்கழல்
மீன்றேர் கொட்பிற் பனிக்கய மூழ்கிச்
சிரல்பெயர்ந் தன்ன நெடுவெள் ளூசி
நெடுவசி பரந்த வடுவாழ் மார்பின்
அம்புசே ருடம்பினர்ச் சேர்ந்தோ ரல்லது

தும்பை சூடாது மலைந்த மாட்சி
அன்னோர் பெரும நன்னுதல் கணவ
அண்ணல் யானை யடுபோர்க் குட்டுவ
மைந்துடை நல்லமர்க் கடந்து வலந்தரீஇ
இஞ்சிவீ விராய பைந்தார் பூட்டிச்
சாந்துபுறத் தெறித்த **தசும்புதுளங் கிருக்கைத்**
தீஞ்சேறு விளைந்த மணிநிற மட்டம்
ஓம்பா வீகையின் வண்மகிழ் சுரந்து
கோடியர் பெருங்கிளை வாழ வாடியல்
உளையவிர் கலிமாப் பொழிந்தவை யெண்ணின்
மன்பதை மருள வரசுபடக் கடந்து
முந்துவினை யெதிர்வரப் பெறுதல் காணியர்
ஒளிறுநிலை யுயர்மருப் பேந்திய களிறூர்ந்து
மான மைந்தரொடு மன்ன ரேத்தநின்
தேரொடு சுற்ற முலகுடன் மூய
மாயிருந் தெண்கடன் மலிதிரைப் பௌவத்து
வெண்டலைக் குரூஉப்பிசி ருடையத்
தண்பல வரூஉம் புணரியிற் பலவே.

**துறை - செந்துறைப் பாடாண்பாட்டு. வண்ணமும் தூக்கும் அது.**
**பெயர் - தசும்புதுளங்கிருக்கை (11.)**

**(ப - ரை.)** 2 - 3. கயம் மூழ்கிச் சிரல் பெயர்ந்தன்ன நெடுவள்ளூசி யென்றது கயத்திலே மூழ்கிச் சிரல் எழுகின்ற காலத்து அதன் வாயலகை ஒக்கப் புண்களை *இழைகொள்கின்ற காலத்து அப்புண்ணின் உதிரத்திலே மறைந்தெழுகின்ற ஊசியென்றவாறு.

4. நெடுவசியென்றது அவ்வூசித்தழும்பினை. வடுவென்றது அப்புண்ணின் வடுவினை.

இனி நெடுவள்ளூசியை நெட்டையென்பதோர் கருவியென்பாருமுளர்.

5. அம்பென்றது அம்பாலாகிய தழும்பினை.

5 - 6. அம்பு சேர் உடம்பினர்ச் சேர்ந்தோரல்லது தும்பை சூடாது மலைந்த மாட்சியென்றது அரசன்வீரரில் அம்புசேருடம்பினராய்த் தம்மோடு வீரமொத்தாரோடல்லாது போர்குறித்தார்தம்மோடு தும்பை சூடாமல் மாறுபட்ட மாட்சிமையுடைய வென்றவாறு.

10 - 11. இஞ்சிவீ விராய பைந்தார் பூட்டிச் சாந்து புறத்து எறிந்த என்றது மதுநுகர்வுழி இடையிடைக் கறித்து இன்புறுதற்பொருட்டு இஞ்சியும், மோந்து இன்புறுதற்பொருட்டுப் பூவுமாக விரவித் தொடுத்த மாலை

* இழை கொள்ளல் - நூலால் தைத்தல்.

யினைப் பூட்டி *அவ்வாறு பயன்கோடற்குச் சாந்தும் புறத்தெறிந்தவென்றவாறு.

11. தசும்புதுளங்கிருக்கையென்றது தன் களிப்புமிகுதியால் தன்னையுண்டாருடல்போல †அத்தசும்பிருந்து ஆடும்படியான இருப்பென்றவாறு.

இச்சிறப்பான் இதற்கு, '**தசும்புதுளங்கிருக்கை**' என்று பெயராயிற்று.

12. சேறு - சுவை. 12 - 3. வண்மகிழ்மட்டத்தை ஓம்பாவீகையிற் சுரந்தென மாறிக் கூட்டுக.

இனி மணிநிறமட்டத்தினையும் ஓம்பாவீகையினது வளவிய மகிழ்ச்சியினையும் சுரந்தென இரண்டாக உரைத்தலுமாம்.

மன்னரேத்தக் (19) களிறூர்ந்து (18) என முடித்து அதனைக் களிறூரவெனத் திரித்து மூய (20) என்னும் வினையொடு முடிக்க.

பெரும, கணவ (7), குட்டுவ (8), கோடியர்கிளை வாழ நீ (14) சுரந்து (13) மாப்பொழிந்தவை யெண்ணின் (15), புணரியிற் பல (23) என வினைமுடிவு செய்க.

இதனாற் சொல்லியது அவன் கொடைச்சிறப்பும் வென்றிச்சிறப்பும் உடன் கூறியவாறாயிற்று.

(கு - ரை.) 1 - 6. சேரனது படைவீரர் பெருமை.

1. கரிய பனைமாலையினையும் பொன்னாற் செய்த சிறந்த வீரக் கழலையும் உடைய; இவை சேரன் படைவீரர்க்குரியன (**பதிற்**. 31 : 31, உரை.)

2. இரையின் பொருட்டு மீனை ஆராயும் சுழற்சியால், குளிர்ச்சியையுடைய குளத்தில் மூழ்கி. 3. மீன்கொத்திப் பறவை மேலே எழுந்தாற் போன்ற நெடிய வெள்ளிய ஊசியினது.

4. நீண்ட கூர்மை பரவிய தழும்பு ஆழ்ந்த மார்பினையும் உடைய.

2 - 4. சிரலின் அலகுக்குப் புண்ணைத் தைக்கும் ஊசி உவமை.

5. அம்புகள் தைத்த உடம்பினையுடையராகிச் சோர்ந்தவர்களோடல்லாமல்.

6. ஏனையாரோடு தும்பை சூடாமல் தம்மை ஒத்தாரோடு போர் செய்யும் பெருமையையுடைய.

5 - 6. "கணையும் வேலுந் துணையுற மொய்த்தலிற், சென்ற வுயிரி னின்ற யாக்கை, இருநிலந் தீண்டா வருநிலை" (**தொல்**. புறத். 16) க்கு உரியாரைச் சுட்டியபடி. 7. நன்னுதல் கணவ : **பதிற்**. 14 : 15, உரை.

9. வலியையுடைய நல்ல போரில் பகைவரை வஞ்சியாது எதிர்நின்று கொன்று வெற்றியைத் தந்து.

10 - 11. கள் இருக்கும் இடத்தின் இயல்பு. 10. இஞ்சியினையும் பூவையும் கலந்து தொடுத்த வாடாத மாலையைப் பூட்டி.

11. சந்தனத்தைப் புறத்தே பூசிய கட்குடங்கள் அசைகின்ற இருப்பிடங்களில் உள்ள.

---

* அவ்வாறு பயன் கோடலாவது கள்ளின் நாற்றத்தை மாற்ற மோந்து இன்புறுதல்.

† 'களிப்பு மிகுதியால் அசையும் மிடாவினின்றும் வார்த்த பசிய மூளையாலாக்கின கட்டெளிவை' (**மலைபடு**. 463, **ந**.)

12 - 3. இனிய சுவை முதிர்ந்த நீலமணியின் நிறத்தையுடைய கள்ளையும், தனக்கென்று ஒன்றைப் பாதுகாவாத ஈகையால் வளவிய மகிழ்ச்சியையும் அளித்து. இவை சேரன் மறவர்க்கு அளித்தன.

14. கூத்தரது பெரிய சுற்றம் மகிழும்படி.

14 - 5. ஆடும் இயல்பையுடைய தலையாட்டம் விளங்குகின்ற மனம் செருக்கிய குதிரைகளாகிய கொடுக்கப்பட்ட பொருள்களை எண்ணினால்.

16. மக்களெல்லாம் வியப்படையும் வண்ணம் பகையரசர் அழியும்படி வென்று.

17. முற்பட்ட போரானது எதிர்வரப்பெறுதலைக் காணும்பொருட்டு.

18. விளங்குகின்ற நிலையினையுடைய உயர்ந்த கொம்புகளை ஏந்திய களிற்றின்மேல் ஏறிச் சென்று.

19. மானத்தையுடைய வலிமிக்க வீரரோடு பிற மன்னர்கள் ஏத்தும்படி. 19 - 20. நினது தேரோடு நின் படைஞர் உலகமுழுதும் நெருங்கும்படி செய்த.

21. கரிய பெரிய தெளிந்த கடலினது மிக்க திரைகளையுடைய பரப்பில்.

20 - 21. கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன் படைவீரராதலின் அவர் எங்கும் பரந்து நெருங்குவதற்கு அக்கடல் காரணமாயிற்று.

22. நுரையாகிய வெள்ளிய தலையையுடைய நிறமுள்ள பிசிராக உடையும்படி.

23. தண்ணிய பலவாக வரும் அலைகளைக் காட்டிலும் பலவாகும்.

கலிமாப் பொழிந்தவை எண்ணின் (15) புணரியிற் பல (23) என்க.

உளையோடு கூடிய உருவத்தாலும் மிகுதியினாலும் குதிரைகள் வெண்டலைப் புணரியை ஒத்தன. தாவிச் செல்லுதல்பற்றியும் மிகுதிபற்றியும் அலைகளைக் குதிரைக்கு உவமை கூறுதல் மரபு; "வருதிரை மரபினெண்ணினெண்ணலாம் வாவும் வாசி" (கம்ப. அட். ச. 8.)

(பி - ம்.) 21. தெண்கழி, தெண்கமலிநிரை. (உ)

---

(உரு) கவரி முச்சிக் கார்விரி கூந்தல்
ஊசன் மேவற் சேயிழை மகளிர்
உரல்போற் பெருங்கா லிலங்குவாண் மருப்பிற்
பெருங்கை மதமாப் புகுதரி னவற்றுள்
விருந்தின் வீழ்பிடி யெண்ணுமுறை பெறாஅக்
கடவு ணிலைய கல்லோங்கு நெடுவரை
வடதிசை யெல்லை யிமய மாகத்
தென்னங் குமரியொ டாயிடை யரசர்

முரசுடைப் பெருஞ்சமந் ததைய வார்ப்பெழச்
சொல்பல நாட்டைத் தொல்கவி னழித்த
போரடு தாணைப் பொலந்தார்க் குட்டுவ
இரும்பணை திரங்கப் பெரும்பெய லொளிப்பக்
குன்றுவறங் கூரச் சுடர்சினந் திகழ
அருவி யற்ற பெருவறற் காலையும்
அருஞ்செலற் பேராற் றிருங்கரை யுடைத்துக்
கடியேர் பூட்டுநர் கடுக்கை மலைய
வரைவி லதிர்சிலை முழங்கிப் பெயல்சிறந்
தார்கலி வானந் தளிசொரிந் தாஅங்
குறுவ ரார வோம்பா துண்டு
நகைவ ரார நன்கலஞ் சிதறி
ஆடுசிறை யறுத்த நரம்புசே ரின்குரற்
பாடு விறலியர் பல்பிடி பெறுக
துய்வீ வாகை நுண்கொடி யுழிஞை
வென்றி மேவ லுருகெழு சிறப்பிற்
கொண்டி மள்ளர் கொல்களிறு பெறுக
மன்றம் படர்ந்து மறுகுசிறைப் புக்குக்
கண்டி நுண்கோல் கொண்டுகளம் வாழ்த்தும்
அகவலன் பெறுக மாவே·யென்றும்
இகல்வினை மேவலை யாகலிற் பகைவரும்
தாங்காது புகழ்ந்த தூங்குகொளை முழவிற்
றொலையாக் கற்பநின் னிலைகண் டிகுமே
நிணஞ்சுடு புகையொடு கனல்சினந் தவிராது
நிரம்பகல் பறியா **வேறு வேணி**
நிறைந்து நெடிதிராத் தசும்பின் வயிரியர்
உண்டெனத் தவாஅக் கள்ளின்
வண்கை வேந்தேநின் கலிமகி ழானே.

**துறை - இயன்மொழி வாழ்த்து. வண்ணமுந் தூக்கும் அது.**
**பெயர் - ஏறு வேணி (33.)**

(ப - ரை.) 1. முச்சி - கொண்டைமுடி. கவரிபோலும் கூந்தலெனக் கூட்டுக.

5. விருந்தின் வீழ்பிடியென்றது எண்ணுகின்ற மகளிர்க்கு விருந் தாகி அம்மகளிர் விரும்பிய பிடியென்றவாறு.

இனிக் காட்டியானைக்கு விருந்தாகிய அவ்வியானைகள் விரும்பும் *பார்வைப்பிடியென்பாருமுளர். பிடியினையே எண்ணியது தங்கள் நடையொப்புமைபற்றியென்க.

மகளிர் (2) என்னும் எழுவாய் பெரு (5) என்னும் பயனிலைகொண்டது.

5. பிடியது எண்ணென்க. எண்ணுமுறையாவது †சங்கு ‡பற்பமுள்ளிட்ட தொகை.

கல்லோங்குநெடுவரையாகிய (6) இமயம் (7) தென்னங்குமரியொடு (8) வடதிசையெல்லையாக (7) வென மாறிக் கூட்டுக.

எல்லையாகவென்னும் வினையெச்சத்திற்கு இவ்வாறு எல்லையானவென ஒரு பெயரெச்சச் சொல் வருவித்து அப்பெயரெச்சத்திற்கு § ஆயிடை (8) என்புழி அவ்வென்னும் வகரவீற்றுப் பன்மைச் சுட்டுப்பெயரை முடிபாக்குக.

10. சொல்பல நாடென்றது ஆயிடை அரசர் நாடெல்லாவற்றையும்.

12 - 4. பணை திரங்கும்வண்ணம் பெயல் ஒளித்தலானும் குன்று வறங்கூரும்வண்ணம் சுடர் சினம் திகழ்கையானும் அருவியற்றவெனக் கூட்டியுரைக்க.

15. அருஞ் செலற் பேராறு - புனல் நிறைந்த ஆறு; யாறென்பது ஆறென மருவிற்று.

15 - 8. கரையையுடைத்துத் தளி சொரிந்தாங்கென உடைத்தற்றொழிலை வானத்தின் தொழிலாக்குக; இந்நீரென ஒரு பெயர் வருவித்து உடைக்கவெனத் திரிக்கவுமாம்.

17. சிலைமுழங்கியென்றது சிலைத்தலொடு முழங்கியென்றவாறு.

21. ஆடு சிறையறுத்த நரம்பென்றது கின்னரமென்னும் புள்ளின் இசையெழுகின்ற சிறகினைத் தோற்பித்த யாழ்நரம்பென்றவாறு.

இனிச் சிறையென்றதை அந்நரம்பின் ஒலியெழாமற் சிறைப்படுத்தி நிற்கும் அதன் குற்றமென்பாரும் உளர்.

23. வாகையுழிஞையென்றது வாகையை முடிவிலேயுடைய உழிஞையென்றவாறு.

இனி வாகையும் உழிஞையுமென இரண்டாக்கலுமாம்.

25. கொண்டி - கொள்ளை.

27. $ நுண்கோல் - பிறப்புணர்த்துங்கோல்; நரம்பென்பதுமொன்று.

28. அகவலன் - பாடும் பாணன்.

---

* பார்வைப்பிடி - காட்டுயானைகளைப் பிடிக்கும்பொருட்டு வேட்டுவர்களால் வைக்கப்பெறும் பெண்யானை; இத்தகைய விலங்குகளைப் பார்வை மிருகமென்பர்; "பார்வை யாத்த பறைதாள் விளவின்" (**பெரும்பாண்.** 95.)

† சங்கு - ஒரு பேரெண்; 'சங்கு முதலாகிய பேரெண்ணினை உடைத்தாக நினது வாழ்நாள்' (**புறநா.** 18 : 5 - 6, உரை.)

‡ பற்பம் - பத்மம்; தாமரையென்னும் பேரெண் (**தொல்.** புள்ளி மயங்கு, 98.)

§ **பதிற்.** 11 : 24, உரை.

$ 'நமது பிறப்புணர்த்தும் கரிய கோலைக் கையின்கண்ணே தாருங்கோள்' (**புறநா.** 152 : 18, உரை.)

என்றுமென்புழி உம்மையை இசைநிறையும்மையாக்கி, அவ்வென்றென்பதனை முன் எண்ணிநின்ற வியங்கோட்களுடன் கூட்டிப் பின் அதனை இகல்வினை மேவலை (29) என்னும் வினையொடு முடிக்க.

இனி, என்றுமென்பதனை முன்னின்ற வியங்கோட்களுடன் கூட்டலும் ஒன்று.

முன்னின்ற உண்டு (19) சிதறி (20) என்னும் எச்சங்களையும் மேவலை (29) என்பதனொடு முடிக்க.

30. தூங்குகொளை முழவென்றது மந்தகதியையுடைய ஆடற்கேற்ற முழவு.

31. கற்பவென்றது கல்வியுடையாயென்றவாறு; பிறிதும் உவைப்ப. நின்னிலை கண்டிருமென்றது நின்செல்வத்தின் பெருமைநிலையெல்லாம் கண்டேமென்றவாறு.

32. தவிராதென்றது குறைதலறியாதென்றவாறு.

33. * ஏரு ஏணியென்றது கோக்காலி.

அதனை ஏருவேணியென்று வெளிப்படுத்த சிறப்பான் இதற்கு, 'ஏரு வேணி' என்று பெயராயிற்று.

34. நிறைந்து நெடிதிராவென்றது உண்பார்க்கு வார்த்தலால் நிறைந்து நெடும்பொழுதிராதவென்றவாறு.

நிரம்பகல்பறியாத (33) நிறைந்து நெடிதிராத தசும்பு (34) எனப் பெயரெச்சமறையடுக்காக்குக.

35. உண்டெனத் தவாவென்றது உண்ணவுண்ண அக்குடங்களை மேன்மேலும் நிறைத்தலிற் † குறையாதவென்றவாறு.

குட்டுவ (11), தொலையாக் கற்ப (31), வேந்தே, நின் கலிமகிழின் கண்ணே (36) நின்னிலை கண்டேம் (31) என மாறிக் கூட்டியுரைக்க.

வேந்தேயென்னும் விளி முன்னின்ற விளிகளோடு கூடுதலின் மாறாயிற்று.

இதனாற் சொல்லியது அவன் செல்வமகிழ்ச்சி கூறியவாறாயிற்று.

(கு - ரை.) 1. கவரியை அணிந்த உச்சிக்கொண்டையையும் மேகத்தைப்போன்ற விரிந்த கூந்தலையும்.

2. ஊசலை விரும்புதலையும் செவ்விய ஆபரணங்களையும் உடைய மகளிர்; இவர் இமயமலைச் சார்பிலுள்ளார்.

3. உரல்போன்ற பெரிய காலையும் விளங்குகின்ற ஒளியையுடைய கொம்பையும்; "உரற்கால் யானை" (குறுந். 232 : 4.)

4 - 5. பெரிய துதிக்கையையும் மதத்தையும் உடைய யானைகள் புகுந்தால் அவற்றினிடையே, தமக்கு விருந்தாக விரும்பப்பெறும் பிடிகளை எண்ணுதற்குரிய முறையின் கண் அடக்கப்பெறுத. மகளிர் (2) பெறு (5) என்க.

1 - 5. இமயமலைச் சார்பிலுள்ள மகளிர் அங்கே உலவும் யானைக் கூட்டத்தைக் கண்டு அக்கூட்டத்தே பெண்யானை எத்துணையுளவென எண்ணப்புகுங்கால் அவை மிகுதியால் எண்ணில் அடங்காது நின்றன.

---

* இங்ஙனம் கூறியது வெளிப்படையென்னும் இலக்கணத்தின்பாற் படும். † "அறாஅ நிலைச்சாடி யாடுறு தேறல்" (பு. வெ. 2.)

மகளிர் பிடியின்மீதே ஊருதல் வழக்கமாதலின் அவற்றை, 'விருந்தின் வீழ்பிடி' என்றார். மகளிர் விலங்கு முதலியவற்றை எண்ணிப் பார்த்தல் இயல்பு; "கோடுதுணர்ந்தன்ன குருகொழுக் கெண்ணி" (நற். 159 : 4.)

6. தெய்வங்களின் நிலையையுடைய கற்கள் ஓங்கிய உயர்ந்த பக்க மலைகளையுடைய. 'கடவு ணிலைஇய' என்று பாடம் இருப்பின் சிறக்கும். கடவுள் - முனிவரெனினுமாம்.

6 - 7. நெடுவரையையுடைய இமயம் வடதிசை எல்லையாக.

7 - 8. இமயம் குமரி யென்னும் அவற்றின் இடையிலே உள்ள அரசர். இமயமும் குமரியும் : பதிற். 11 : 23-4, உரை.

9. முரசையுடைய பெரிய போர் கெடும்படி ஆரவாரம் எழ.

மு. பதிற். 34 : 10.

10. முன்னே சொல்லப்பட்ட பல நாட்டைப் பழைய அழகு அழித்த.

11. போரில் பகைவரைக் கொல்லுகின்ற படையையும் பொன்னாற் செய்த மாலையையுமுடைய குட்டுவனே.

12 - 5. பேராற்றின் சிறப்பு. 12. பெரிய மூங்கில் வாடவும் மிக்க மழை பெய்யாமல் மறையவும் (பதிற். 41 : 14.)

13. குன்று வறுமை மிகவும் சூரியன் வெம்மை மிக்கு விளங்கவும்.

14. அருவி நீரின்றி அற்றுப்போன பெரிய வறட்சிக்காலத்தும். வறன் - வளப்பமில்லா வறுமை.

12 - 4. "கன்மிசை வேய்வாடக் கனைகதிர் தெறுதலால்" (கலி. 11:14.)

15 - 8. மேகத்தின் இயல்பு.

15. அரிய செலவையுடைய பேராற்றின் பெரிய கரையை உடைத்து. மழையில்லாமல் வறட்சி மிக்க காலத்தும் பேராறு நீரறாது பாயு மென்றபடி. இவ்வியல்பு பிற நதிகள் பலவற்றிற்கு இன்மையின், 'அருஞ் செலற் பேராறு' என்றார்.

16. புதிய ஏரைப் பூட்டி உழும் உழவர் கார்காலத்தில் பூத்த கொன் றைப்பூவைச் சூட. ஆடவர் கொன்றையை அணிதல் : பதிற். 67 : 13 - 4.

17. கணக்கில்லாத அதிர்கின்ற முழக்கங்களைச் செய்து பெய்தல் மிக்கு.

18. நிறைந்த முழக்கத்தையுடைய மேகம் துளியைச் சொரிந்தாற் போல. 19. தன்னை உற்றவர் நிரம்ப உண்ணும்படி தனக்கென்று ஒன்றும் பாதுகாவாமல் அவரோடு சேர்ந்து உண்டு.

20. இன்பத்திற்குக் காரணமான பாணர் முதலியோர் நிறையப் பெறும்படி நல்ல அணிகலங்களைக் கொடுத்து. மு. பதிற். 37 : 4.

18 - 20. கொடைக்கு வானம் : மலைபடு. 75 - 6, அடிக்.

21. அசைகின்ற சிறையையுடைய கின்னரத்தை வென்ற யாழ்நரம் பின் இசையோடு ஒன்றுபட்டுச் சேர்ந்த இனிய குரலையுடைய. ஆடுசிறை - வெற்றிபெற்ற சிறை யெனலுமாம். சிறை : ஆகுபெயர்; இங்கே பறவைக் காயிற்று. யாழ்நரம்பின் இசையும் குரலும் ஒத்தல் : "விரல்கவர்ந்தெடுத்த கீத மிடறெனத் தெரித றேற்றார்" (சீவக. 723.)

22. 'பாடுவல் விறலியர்' என்ற பாடம் இருப்பின் ஓசை சிறக்கும் (புறநா. 172 : 3.) மகளிர் பிடியை ஊர்தலே மரபாதலின் விறலியருக்குப் பிடி அளிக்கப்பெற்றது.

23. உளையையுடைய பூக்களையுடைய வாகையை முடியிலே பெற்ற நுண்ணிய கொடியாகிய உழிஞையின் பூவையும்; என்றது மதில்வளைத் தலைச் செய்தற்கு அடையாளமாகிய பூவையணிந்தாரென்றபடி. அவர் முயற்சி வெற்றியாக முடியுமாதலின் வெற்றிப்பூவை முடியிலே உடைய தாயிற்று. 24. எப்பொழுதும் வெற்றியை விரும்பும் விருப்பத்தையும், பகைவர்க்கு அச்சம்பொருந்திய சிறப்பினையும்.

25. கொண்டி மள்ளர் - பகைப்புலத்தே கொள்ளும் கொள்ளையையு முடைய படைவீரர். கொண்டி - கொள்ளை; "கொண்டி யுண்டித் தொண்டையோர்" (**பெரும்பாண்.** 454.)

26. ஊரிலுள்ள பொதுவிடத்தே சென்று மறுகுசிறையென்னும் இசைத்துறையிலே தொடங்கி (**பதிற்.** 23 : 5 - 6, உரை.)

27 - 8. துணிக்கப்பட்ட (?) நுண்ணிய கோலைக் கைக்கொண்டு போர்க்களத்தை வாழ்த்தும் பாணன் குதிரைகளைப் பெறுக. களம் வாழ்த் தல் : **பதிற்.** 40 : 26. அகவலன் : குலத்தோரெல்லோரையும் அழைத்துப் புகழ்தல்பற்றிப் பாணர்க்கு இப்பெயராயிற்று (**மதுரைக்.** 223, **ந.**)

நுண்கோல் அகவலன் : **அகநா** . 152 : 4, 208 : 3. அகவலர்க்கு மா அளித்தல் : "நாளீண்டிய நல்லகவர்க்குத், தேரோடு மாசிதறி" (**மதுரைக்.** 223 - 4.) என்று - என்று கூறி ; உம்மை இசைநிறைபற்றி வந்தது.

29. இகல்வினை மேவலை ஆகலின் - போராகிய வினையை விரும்புதலை யுடையை ஆதலால்.

29 - 31. பகைவர்களும் மனம் அடங்காமல் புகழ்ந்த, மந்த ஓசையை யுடைய முழவினையுடைய, அழியாத கல்வியை உடையோய், நின் நிலைமை யைக் கண்டோம். கற்பு - கல்வி (**பதிற்.** 80 : 17.)

32. நிணத்தைச் சுடுதலால் உண்டான புகையோடு நெருப்பு வெம் மையை நீங்காமல்.

33. நிரம்புதலையும் அகலுதலையும் அறியாத கோக்காலியினிடத்தே.

34. நிறைந்து நெடுநேரம் இராத பானைகளில் உள்ள.

34 - 6. கூத்தர் உண்டனராகக் குறையாத கள்ளை அளித்தலை யுடைய வளவிய கையையுடைய அரசே, நின் ஆரவாரம் மிக்க மகிழ்ச்சிக் காலத்தே கண்டிகுமெனக் கூட்டி முடிக்க.

(**பி - ம்.**) 5. எண்ணுமெய். 10. சொல்புனவட்டை. 12. பனிதிரங்க. 18. தளி பொழிந்தாஅங்கு. (௩)

---

(சச) நிலம்புடைப் பன்னவார்ப் பொடுவிசும்பு துடையூ
வான்றோய் வெல்கொடி தேர்மிசை நுடங்கப்
பெரிய வாயினு மமர்கடந்து பெற்ற
அரிய வென்னு தோம்பாது வீசிக்
கலஞ்செலச் சுரத்த லல்லது கனவினும்
களைகென வறியாக் கசடி னெஞ்சத்
தாடுநடை யண்ணனிற் பாடுமகள் காணியர்
காணி லியரோநிற் புகழ்ந்த யாக்கை

முழுவலி துஞ்சு நோய்தபு நோன்றொடை
நுண்கொடி யுழிஞை வெல்போ ரறுகை
சேண னாயினுங் கேளென மொழிந்து
புலம்பெயர்ந் தொளித்த களையாப் பூசற்
கரண்கடா வுறீஇ யணங்குநிகழ்ந் தன்ன
மோகூர் மன்னன் முரசங் கொண்டு
நெடுமொழி பணித்தவன் வேம்புமுத றடிந்து
முரசுசெய முரச்சிக் களிறுபல பூட்டி
ஒழுகை யுய்த்த கொழுவில் பைந்துணி
வைத்தலை மறந்த துய்த்தலைக் கூகை
கவலை கவற்றுங் குராலம் பறந்தலை
முரசுடைத் தாயத் தரசுபல வோட்டித்
துளங்குநீர் வியலக மாண்டினிது கழிந்த
மன்னர் மறைத்த தாழி
வன்னி மன்றத்து விளங்கிய காடே.

**துறை - செந்துறைப் பாடாண் பாட்டு.**
**வண்ணமும் தூக்கும் அது. பெயர் - நோய்தபு நோன்றொடை (9.)**

(ப - ரை.) ஆர்ப்பொடு (1) அமர்கடந்து (3) எனக் கூட்டுக.

5. கலமென்றது தான் அணிந்த ஆபரணங்களை.

8. நிற்புகழ்ந்த யாக்கையென்றது நின்னை எல்லா வீரரும் சொல்லிப் புகழ்தற்குக் காரணமாகிய யாக்கையென்றவாறு.

யாக்கையாகிய (8) நோய்தபு நோன்றொடை (9) என்க.

யாக்கையை இங்ஙனம் சிறப்பித்துக் கூறினமையான் இதற்கு, 'நோய்தபு நோன்றொடை' என்று பெயராயிற்று.

10. அறுகையென்பான் மோகூர்மன்னனுக்குப் பகையாய்ச் சேரனுக்கு நட்பாயிருப்பானோர் குறுநிலமன்னன்.

11. சேணனாயினும் கேளென மொழிந்தென்றது அக்கோ நீ செய்கின்ற வலிக்கு உதவிசெய்தற்குச் சேயனாயினும் எனக்கு அவன்தான் நட்பெனச் சொல்லி யென்றவாறு.

12. களையாப் பூசல் - ஒருவரால் மாற்றவொண்ணாத வருத்தம்.

13. அரண்கள் *தா உறீஇயென்றது மாற்றார் அரண்களை அழித்தற்றொழிலைத் தன்பாலே உறுவித்தென்றவாறு.

16. முரசுசெய †முரச்சியென்றது அவ்வேம்பினை முரசாகச் செய்யும்படி முற்றுவித்தென்றவாறு.

---

*தா - வருத்தம் (தொல். உரி. 46.)

†முரச்சி - முரஞ்சியென்பதன் பிறவினை; "முரஞ்சல் முதிர்வே" (தொல். உரி. 35.)

முற்றுவித்தலாவது ஒழுகையேற்றலாம்படி துண்டங்களாகத் தறிப்பித்தல். களிறென்றது மோகூர்மன்னன் களிற்றினை. களிறுபலபூட்டியென்றது அவனேறும் யானைகளை அவனை அவமதித்துச் *சாட்டிற்குக் †கடாவோபாதியாகப் பூட்டியென்றவாறு.

பூட்டியென்றதற்கு, "வாலிழை கழித்த நறும்பல் பெண்டிர், பல்லிருங் ‡கூந்தல் முரற்சியாற், குஞ்சர வொழுகை பூட்டி" என இதன் பதிகத்து வந்தமையால், அம்மகளிர் கூந்தன் மயிர்க்கயிற்றாற் பூட்டியெனக் கொள்க.

ஒழுகையுய்த்த (17) ஆடுநடையண்ணல் (7) என மாறிக் கூட்டுக.

18. கூகையையென இரண்டாவது விரிக்க.

17 - 9. பைந்துணிகள் வைத்த இடமறந்த கூகையை அதன் பெடையாகிய குரால் கவற்றுமென்க.

வைத்தலை: §விகாரம். கவலென்னும் பெயரைத் தாவென்பது போல வருத்தமென்றுரைக்க. $கவலை கவற்றல் - வருத்தல். ¶பறந்தலையென்றது இடுகாட்டிற் பிணஞ்சுடுமிடத்தை.

23. வன்னிமன்றமென்றது அக்காட்டில் வன்னிமரத்தையுடைய இடத்தினை. அதுதான் பிணத்தொடு சென்றுரெல்லாரும் இருந்து மன்றுபோறலின் மன்றெனப்பட்டது. விளங்கிய காடென்றது தன்தொழிலில் விளங்கிய காடென்றவாறு.

ஒழுகையுய்த்த (17) ஆடுநடையண்ணல் (7), நின் நோய்தபு நோன்றொடையினை (9) நிற்பாடுமகள் காண்பாளாக (7); காடு (23) காணுதொழிவதாக (8) என மாறிக்கூட்டி வினைமுடிவு செய்க.

இதனாற் சொல்லியது அவனை நீ நெடுங்காலம் வாழ்கவென வாழ்த்தியவாறாயிற்று.

(கு-ரை.) 1. நிலத்தைப் புடைப்பதைப்போன்ற முழக்கத்தோடு.

1 - 2. ஆகாயத்தைத் துடைத்து, மிக உயர்ந்த வெல்லுகின்ற கொடிகள் தேரின்மேலே அசைய.

3 - 4. பெருமையையுடையனவாயினும், போரில் வஞ்சியாது எதிர் நின்று வென்று பெற்ற பொருள்களைக் கிடைத்தற்கு அரியனவென்று கருதாமலும் அவற்றைத் தனக்கென்று பாதுகாவாமலும் பிறருக்குக் கொடுத்து; "அரியவெல்லா மெளிதினிற்கொண், டுரிய வெல்லா மோம்பாது வீசி" (மதுரைக். 145 - 6.)

5 - 6. தான் அணிந்த ஆபரணங்களை இரவலர்க்கு மிகக் கொடுத்தல்லாமல் கனவினிடத்தாயினும், 'என்னுடைய துன்பத்தை நீக்குக' என்று கூறுதலை அறியாத குற்றமில்லாத மனத்தையும்; "செல்லுறழ் தடக்கை, இரப்போர்க்குக் கவித லல்லதை யிரைஇய, மலர் பறி யாவெனக்

* சாடு - சகடம். † கடாவோபாதியாக - கடாக்களை ஒப்ப.

‡ கூந்தல் முரற்சி: "வேந்தரோட்டிய வேந்துவே னன்னன், கூந்தன் முரற்சியிற் கொடிதே" (நற். 270: 9 - 10.)

§ விகாரமென்றது, வைதலையென்னும் வினைத்தொகை துய்த்தலையென்பதற்கு ஏற்ப வைத்தலையென்று வந்ததனை. வைத்த தலை வைத்தலையாயிற்றெனலும் ஆம். $ கவலை கவற்றல்: பதிற். 67: 11.

¶ "கள்ளியம் பறந்தலை யொருசிறை யல்கி, ஒள்ளெரி நைப்ப வுடம்பு மாய்ந்தது" (புறநா. 240: 9 - 10.)

கேட்டிகு மினியே" (பதிற். 52 : 10 - 12.) அரசர் தாம் அணிந்த ஆபரணங் களை அளித்தல் : " மார்பிற் பூண்ட வயங்குகா ழாரம், மடைசெறி முன்கைக் கடகமொ டீத்தனன்" (புறநா. 150 : 20 - 21.)

கலம் : பகைவர்பால் திறையாகப் பெற்ற ஆபரணங்கள் எனலுமாம்; "வென்றுகலந் தரீஇயர் வேண்டுபுலத் திறுத்து" (பதிற். 53 : 1); "நன் கலங் களிற்றொடு நண்ணா ரேந்தி, வந்துதிறை கொடுத்து வணங்கினர் வழி மொழிந்து" (அகநா. 124 : 1 - 2.)

7. ஆடு நடை அண்ணல் - வெற்றியைத் தோற்றுவிக்கும் நடையை யும் உடைய பெருமையோய்.

7 - 9. நின்னைப் பாடும் மகள், நின்னை வீரரெல்லாரும் புகழ்தற்குக் காரணமான யாக்கையாகிய நிரம்பிய மெய்வலி தங்கும், நோய்நீங்கிய வலிய கட்டைக் காண்பாளாக. யாக்கையென்பதைப் போலத் தொடை என் பதும் உடம்பிற்கு ஒருபெயராயிற்று.

காணிலியர் - காணுதொழிவதாக. இது காடு (23) காணிலியரென முடியும்.

9 - 10. பெரும்பாண். 243 - 5, ந. மேற்.

10 - 16. மோகூர்மன்னனை வென்றமை கூறப்படும்.

10 - 11. நுண்ணிய கொடியாகிய உழிஞையினது பூவைச்சூடிய வெல்லும் போரைச் செய்யும் அறுகை யென்னும் பெயரையுடைய குறுநில மன்னன் நெடுந்தூரத்திலுள்ளானாயினும், தனக்கு நட்பினனென்று நின் னைச் சொல்லி.

12. அறுகை தன் நாட்டை விட்டு நீங்கி மோகூர் மன்னனுக்கு அஞ்சி யொளித்த, பிறரால் களையப்படாத வருத்தத்தைப் போக்கும் பொருட்டு.

13 - 4. அரண்கள் தா உறீஇ - அரண்களை வருத்தமுறச்செய்து. தெய் வம் வருத்தினாற் போன்ற மோகூர் மன்னனை பழையனென்பானது முரசத்தைக் கைப்பற்றிக்கொண்டு. மோகூருக்கு அரசன் பழைய னென்பது, " பழையன் காக்குங் கருஞ்சினை வேம்பின், முழாரை முழுமுத றுமியப் பண்ணி" (5-ஆம் பதிகம், 13 - 4) என்பதனாலும், " பழையன் மோகூ ரவையகம் விளங்க" (மதுரைக். 508) என்பதனாலும் அறியப்படும்.

15 - 6. பழையன் தன்மேம்பாட்டைக் கூறும் மொழிகளைக் குறையச் செய்து அவனுடைய காவல்மரமான வேம்பினது அடிமரத்தை வெட்டிமுரசு செய்வதற்கு அதனைச் சிறுதுண்டுகளாகச் செய்து முற்றுவித்து, அவற்றைக் கொண்டு வருவதற்கு ஆண்யானைகள் பலவற்றைப் பூட்டி. முரச்சி - முற்று வித்து.

வண்டியைச் செலுத்திய (17) ஆடுநடையண்ணல் (7) என இயைக்க.

17 - 9. கொழுப்பு இல்லாத பசிய இறைச்சித் துண்டங்களை வைத்த இடத்தை மறந்த, துய்போன்ற உச்சிக்கொண்டையையுடைய தலையை யுடைய கோட்டானினது சேவலை வருத்துகின்ற பெண்கோட்டானையுடைய இடுகாட்டிடத்தில்; " குடுமிக் கூகை குராலொடு முரல" (மதுரைக். 170.) பறந்தலை யென்றது பிணஞ்சுடும் இடத்தை.

20 - 23. முரசையுடைய பழையதாய் வருகின்ற உரிமையையுடைய பகையரசர் பலரை வென்று, அசைகின்ற நீரையுடைய கடலால் சூழப் பட்ட இடம் அகன்ற உலகத்தை இனிமையாக ஆண்டு இறந்த மன்னரைக் கவித்த தாழிகளையும், வன்னிமரம் நிற்கும் மன்றத்தையுமுடைய விளங்கிய இடுகாடு.

காடு (23) நோன்றொடையைக் (9) காணிலியர் (8) என முடிக்க.

மன்னர்மறைத்த தாழி: "நெடுமா வளவன், தேவ ருலக மெய்தின னாதலின், அன்னோற் கவிக்குங் கண்ணகன் றாழி" (புறநா. 228 : 10 - 12.) வன்னிமன்றம்: "சுடலை நோன்பிக ளொடியா வுள்ளமொடு, மடைதீ யுறுக்கும் வன்னி மன்றமும்" (மணி. 6 : 86 - 7.)

யாக்கையாகிய நோன்றொடையைப் பாடுமகள் காண்பாளாக: காடு காணாதொழிவதாக. நீ நீடூழி வாழ்கவென்பது கருத்து.

(பி-ம்.) 11. சேணோனாயினும் 18. வைத்துத் தலைமறந்த. (௪)

---

(௪௫) **பொ**லம்பூந் தும்பைப் பொறிகிளர் தூணிப்
புற்றடங் கரவி னொடுங்கிய வம்பின்
நொசிவுடை வில்லி னொசியா நெஞ்சிற்
களிறெறிந்து முரிந்த கதுவா யெஃகின்
விழுமியோர் துவன்றிய வகன்க ணாட்பின்
எழுமுடி மார்பி னெய்திய சேரல்
குண்டுக ணகழிய மதில்பல கடந்து
பண்டும் பண்டுந்தா முள்ளழித் துண்ட
நாடுகெழு தாயத்து நனந்தலை யருப்பத்துக்
கதவங் காக்குங் கணையெழு வன்ன
நிலம்பெறு திணிதோ ளுயர வோச்சிப்
பிணம்பிறங் கழுவத்துத் துணங்கை யாடிச்
சோறுவே றென்னா **வூன்றுவை யடிசில்**
ஓடாப் பீட ருள்வழி யிறுத்து
முள்ளிடு பறியா வேணித் தெவ்வர்
சிலைவிசை யடக்கிய மூரி வெண்டோல்
அனைய பண்பிற் றானை மன்னர்
இனியா ருளரோநின் முன்னு மில்லை
மழைகொளக் குறையாது புனல்புக நிறையாது
விலங்குவளி கடவுந் துளங்கிருங் கமஞ்சூல்
வயங்குமணி யிமைப்பின் வேலிடுபு
முழங்குதிரைப் பனிக்கடன் மறுத்திசி னோரே.

**இதுவுமது. பெயர் - ஊன்றுவை யடிசில்** (13.)

(ப - ரை.) மதில்பல கடந்து (7) உள்ளழித்து உண்ட (8) அருப்பத்துப் (9) பிணம் பிறங்கவழுத்துத் (12) தோளோச்சிப் (11) பண்டும் பண்டும் (8) துணங்கையாடி (12) என மாறிக் கூட்டுக.

13. * சோறுவேறென்ற அடிசிலென்றது அரசனுக்கு அடுசோற்றில் இச்சோறு வேறென்று சொல்லப்படாத அடிசிலென்றவாறு.

இவ்வடைச்சிறப்பானே இதற்கு, 'ஊன்றுவையடிசில்' என்று பெயரா யிற்று.

16 - 7. தோல் அனைய பண்பென்றது தான் அம்புபடில் தளராது பிறர்க்கு அரணமாகும் தோற்கடகுபோன்ற பண்பென்றவாறு.

குறையாது நிறையாது (19) என்னும் எச்சங்களைக் கடவும் (20) என்னும் வினையொடு முடித்து அதனைக் கடவப்படுமெனவுரைக்க.

21. மணியிமைப்புப்போலும் மின்னுக்கு மணியிமைப்பென்பது பெயராயிற்று. † வேலிடுபென்றது வேலை ஏற்றி நடப்பித்தென்றவாறு.

22. கடன்மறுத்தலென்றது கடலிற் புக்கு ஒருவினை செய்தற்கு அரிதென்பதனை மறுத்தலை.

சேரல் (6), கடன்மறுத்திசினோராகிய (22) தானைமன்னர் (17) இனி யாருளரோ? நின்முன்னுமில்லை (18) எனக் கூட்டி வினைமுடிவு செய்க.

இதனாற் சொல்லியது அவன் வென்றிச் சிறப்புக் கூறியவாறாயிற்று.

(கு-ரை.) 1 - 2. பொன்னாற் செய்யப்பட்ட அழகிய தும்பைப்பூவினையும், தீப்பொறிகள் மேலே எழுகின்ற தூணியில், புற்றில் அடங்கிய பாம்பைப் போல ஒடுங்கிய அம்புகளையும் உடைய. பொலம்பூந்தும்பை : புறநா. 2 : 14.

பலவகைச் சித்திரங்கள் கிளர்ந்த தூணியெனலுமாம். தூணிக்குப்புற்றும், அம்புகளுக்குப் பாம்பும் உவமை. அம்புகளுக்கு அரவு : "புற்றினூடு நுழை நாக மன்னபுகை வேக வாளிகள்" (கம்ப. நாகபாசப். 86.)

3. வளைதலையுடைய வில்லையும், ஒடுங்காத மனவெழுச்சியையும் ; நொசிவு - துவளுதல்.

4. ஆண்யானைகளைக் குத்தி வளைந்த, வடுக்களைப்பெற்ற வேலையுமுடைய. தும்பையையும், அம்பினையுடைய வில்லையும், நெஞ்சினையும், எஃகினையுமுடைய விழுமியோர் (5) என முடிக்க.

யானைப் போருக்கு வேல் உரியதாதலின் களிறெறிந்து முறிந்த என்றார்; "கைவேல் களிற்றொடு போக்கி" (குறள். 774.) கதுவாய் - வடு ; "கதுவாய் போகிய துதிவா யெஃகமொடு" (புறநா. 353 : 15.)

5. நிலையாமை எப்பொழுதும் நெஞ்சில் தங்குதலால் வீரத்தில் சிறந்தோராகிய படைஞர் நிறைந்த போர்க்களத்தில் ; வீரரை, "காஞ்சி சான்ற வயவர்" (பதிற். 65 : 4) என்று கூறுதல்பற்றி விழுமியோர் என்றார்.

6. ஏழுமுடிகளாற் செய்யப்பட்ட ஆரத்தை மார்பின்கண்ணே அணிந்த சேரனே (பதிற். 14 : 11, உரை.)

7. ஆழ்ந்த இடத்தையுடைய அகழியையுடைய மதில்கள் பலவற்றை வஞ்சியாது எதிர்நின்று வென்று கைக்கொண்டு.

---

* "இடம்படு புகழ்ச்சனகர் கோனினிது பேணக், கடம்படு களிற்றரச ராதியிடை கண்டோர், தடம்படு புயத்தசிறு தம்பியர்கள் காறும், உடம்பொடு துறக்கநக ருற்றவரை யொத்தார்" (கம்ப. கடிமணப். 1.)

† வேலுக்கு மின்னல் : "கூர்நுனை, வேலு மின்னின் விளங்கும்" (புறநா. 42 : 3-4.)

8. முற்காலங்களில் தாம் உள்ளே புகுந்து அழித்து அவ்விடத்தே சோறுசமைத்து உண்ட (பதிற். 58 : 6 - 7.) இது முற்றுமுதிர்வென்னும் துறையாகும் (பு. வெ. 117.)

9. நாட்டில் பொருந்திய பழையனவாய் வரும் உரிமையையுடைய அகன்ற இடத்தையுடைய அரண்களில்; அருப்பம் - அரண்; "அம்புமி ழயிலருப்பம்" (மதுரைக். 67.) நாட்பின் (5) கடந்து (7) உண்ட (8) அருப் பத்துக் (9) கதவம் (10) என்க.

10 - 11. கதவுகளைக் காக்கும் திரண்ட கணையமரத்தைப்போன்ற, பகைவர் நிலத்தைப் பெறுதற்குக் காரணமான திணிந்த கையை உயரவீசி; தோள் - கை; "தோளுற்றொரு தெய்வந் துணையாய்த்துயர் தீர்த்த வாறும்" (சீவக. 10.) கையை வீசி ஆடுதல்: பதிற். 40 : 10 - 12.

தோளுக்குக் கணையமரம்: பதிற். 31 : 19 - 20, உரை.

12. பிணங்கள் உயர்ந்த போர்க்களப்பரப்பில் துணங்கைக் கூத்தை ஆடி; "மன்பதை பெயர வரசுகளத் தொழியக், கொன்றுதோ ளோச்சிய வென்றாடு துணங்கை" (பதிற். 77 : 3 - 4.)

13. அரசனுக்குச் சோறு வேறு உளதென்று சொல்லாத எல்லோருக் கும் ஒருபடித்தாக உயர்ந்த ஊனையும் துவையலையும் உடைய உணவை உண்ட; சோற்றை வேறாகப்பிரித்து அறிய இயலாத ஊனும் துவையுமெனலு மாம்; "செவ்வூன் றோன்றா வெண்டுவை முதிரை" (பதிற். 55 : 7.) இது பிண்டமேய பெருஞ்சோற்று நிலையைக் கூறியபடி (பதிற். 30, உரை.) ஊன்றுவையடிசில்: "அமிழ்தன மரபி னூன்றுவை யடிசில்" (புறநா. 390 : 17.) 14. புறங்கொடுத்து ஓடாத பெருமையையுடைய வீரர் உள்ள விடத்தே விட்டுத் தங்கி.

15. அரிய வழிகளை அடைத்தற்கு முள்ளிடுதலை யறியாத எல்லையை யுடைய பகைவரது; "இனநன்மாச் செலக்கண்டவர், கவைமுள்ளிற் புழையடைப்பவும்" (புறநா. 98 : 7 - 8.)

16 - 7. வில்லிலிருந்து வரும் அம்பின் வேகத்தை அடங்கச்செய்த வன்மையையுடைய, வெள்ளிய கிடுகுபடையைப்போன்ற பண்பினையுடைய சேனையையுடைய அரசர். அடக்கிய தானை, அனைய தானையென்க. "கழிப் பிணிக் கறைத்தோல்" (அகநா. 24 : 14) எனக்கருங்கடகும் உண்டாதலின் வெண்டோல் என்பது இனமுள்ள அடை.

அசையாமைக்குத் தோலுவமை: "தோல், துவைத்தம்பிற் றுளைதோன் றுவ, நிலைக்கொராஅ விலக்கம்போன்றன" (புறநா. 4 : 5 - 6.)

17 - 8. மன்னர் இனி யார் உள்ளார்? நினக்கு முன்னும் இல்லை.

19 - 21. மேகம் முகந்துகொள்ளக் குறையாமலும், ஆற்றுநீர் புக மிகாமலும், குறுக்காக வீசுகின்ற காற்றுச் செலுத்துகின்ற அசையும் பெரிய நிறைந்த நீரினிடத்தே, விளங்குகின்ற மணி விட்டுவிளங்குதலைப் போல வேலை ஏற்றி முழங்குகின்ற அலையையுடைய கடலில் புக்கு ஒரு தொழிலைச் செய்தற்கு மறுத்தோராகிய மன்னர் (17) என இயைக்க.

19 - 22. "மழைகொளக் குறையாது புனல்புக மிகாது, கரைபொரு திரங்கு முந்நீர் போல" (மதுரைக். 424 - 5.)

மன்னராகிய (17) மறுத்திசினோர் (22) நின் முன்னும் இல்லை; இனி யார் உளர் (18) என முடிக்க. (ரு)

---

(சசு) இழையர் குழையர் நறுந்தண் மாலையர்
சுடர்நிமி ரவிர்தொடி செறித்த முன்கைத்
திறல்விடு திருமணி யிலங்கு மார்பின்
வண்டுபடு கூந்தன் முடிபுனை மகளிர்
தொடைபடு பேரியாழ் பாலை பண்ணிப்
பணியா மரபி னுழிஞை பாட
இனிதுபுறந் தந்தவர்க் கின்மகிழ் சுரத்தலிற்
சுரம்பல கடவுங் **கரைவாய்ப் பருதி**
ஊர்பாட் டெண்ணில் பைந்தலை துமியப்
பல்செருக் கடந்த கொல்களிற் றியானைக்
கோடுநரல் பௌவங் கலங்க வேலிட்
டுடைதிரைப் பரப்பிற் படுகட லோட்டிய
வெல்புகழ்க் குட்டுவற் கண்டோர்
செல்குவ மென்னார் பாடுபு பெயர்ந்தே.

**இதுவுமது. பெயர் - கரைவாய்ப் பருதி (8.)**

(ப - ரை.) இழையர் குழையர் (1) மாலையர் ஆகிய மகளிர் (4) எனக் கூட்டுக.

3. பிற ஒளியிற் றிறலுடைமையான் இவ்வொளிக்கு ஆகுபெயரால் திறலென்று பெயராயிற்று.

7. இன் மகிழ் சுரத்தல் - இனிய மகிழ்ச்சியைச் சுரத்தல்.

இதனாற் பயன் முற்கூறிய புறந்தருதலாகிய கொடையோடே இவர்களை மயக்கிய முகனமர்தலும் உடையனென்றவாறு.

8. சுரம்பலவென்றது பகைவரொடு பொருங்களத்தில் தேர் செலுத்தற்கு அரிதாம்படி படையொடு விலங்கும் அரிய இடங்கள் பலவற்றினு மென்றவாறு.

பருதியென்றது வட்டம்; அதனை உடைமையால் தேருருளை பருதியெனப்பட்டது.

9. ஊர்பாட்டு எண்ணில் பைந்தலை துமியவென்றது பைந்தலையைத் துமித்தற்கென்று தேரை வலியச் செலுத்துவதன்றி அப்பருதி தான் ஊர்கின்ற பாடுதன்னிலே யானை செய்கின்ற போர்க்கு அஞ்சி ஓடி மடிந்தாருடைய அளவிறந்த பைந்தலை துமியவென்றவாறு.

இவ்வாறு பின்வந்த அடைச்சிறப்பான் இதற்கு, '**கரைவாய்ப் பருதி**' என்று பெயராயிற்று.

12. கடலோட்டியவென்றது தன்னுள் வாழ்வார்க்கு அரணாகிய கடல் வலியை அழித்தவென்றவாறு.

13 - 4. குட்டுவற் பாடிக் கண்டோர் பெயர்ந்து செல்குவ மென்னாரென மாறிக் கூட்டுக.

மகளிர் (4) உழிஞை பாட (6) மகிழ்சுரத்தலிற் (7) குட்டுவற் (13) பாடிக் (14) கண்டோர் (13) பெயர்ந்து செல்குவமென்னார் (14); நிற்கவெனக் கருதுவரென மாறிக் கூட்டி வினைமுடிவு செய்க.

இதனாற் சொல்லியது அவன் கொடைச் சிறப்புக் கூறியவாறாயிற்று.

(கு - ரை.) 1 - 4. விறலியரது வருணனை.

இழையை அணிந்தவரும் தளிரை அணிந்தவரும் நறுமணத்தையுடைய குளிர்ந்த மாலையை அணிந்தவருமாகிய, ஒளி மிகுகின்ற விளங்கிய தொடியை அணிந்த முன்கையையும், சிறந்த ஒளியை விடுகின்ற அழகிய மணி விளங்குகின்ற மார்பினையும் உடைய, வண்டுகள் ஒலிக்கின்ற கூந்தலைக் கொண்டையாக அணிந்த பாண்சாதிமகளிர்.

5. நரம்புக்கட்டுப் பொருந்திய பேரியாழில் பாலைப் பண்ணை அமைத்து (பதிற். 57 : 8, 66 : 2.)

6 - 7. பகைவர்க்குப் பணியாத இயல்பையுடைய உழிஞைத்திணையைப் புகழ்ந்து பாட, அவரை இனிமையாகப் பாதுகாத்து அவர்களுக்கு இனிய மகிழ்ச்சியை அளித்தலினால்.

8 - 9. போர்க்களத்தில் படையோடு கூடித் தடுக்கும் அரிய இடங்கள் பலவற்றிலும் செலுத்தப்படும் தேரினது தேய்ந்த வாயையுடைய உருளை, தான் ஊர்கின்ற போக்கிலே வீரருடைய எண்ணில்லாத பசிய தலைகள் வெட்டப்பட.

10. பல போர்களை வஞ்சியாது எதிர்நின்று வென்ற, கொல்லுகின்ற களிறுகிய யானைகளையுடைய.

யானைக் (10) குட்டுவன் (13) என இயைக்க.

11 - 3. சேரன் கடல்பிறக்கோட்டியது.

11 - 4. சங்குகள் ஒலிக்கின்ற கடல் கலங்கும்படி வேலை ஏற்றி நடப்பித்து, கரையிலே வந்து மோதி உடைகின்ற அலைகளையுடைய பரப்பினையுடைய படுகடலினது அரணுகின்ற வலியை அழித்த, வெல்லுதலால் வரும் புகழையுடைய குட்டுவனைக் கண்டோர், அவனைப் பாடி மீண்டு செல்வோமென்று கருதார்.

குட்டுவன் கடலோட்டியது : பதிற். 48 : 3 - 4 ; "மட்டவிழ் தெரியன் மறப்போர்க் குட்டுவன், பொருமுரண் பெறாஅது விலங்குசினஞ் சிறந்து, செருச்செய் முன்பொடு முந்நீர் முற்றி, ஓங்குதிரைப் பௌவ நீங்க வோட்டிய, நீர்மா ணெஃகம்" (அகநா. 212 : 16 - 20) ; "சினமிகு தானை வானவன் குடகடற், பொலந்தரு நாவா யோட்டிய வவ்வழிப், பிறகலஞ் செல்கலா தனையேம்" (புறநா. 126 : 14 - 6) ; "கொடும்போர் கடந்து நெடுங்கட லோட்டி" (சிலப். 28 : 119.) (சு)

---

(சஎ) அட்டா னானே குட்டுவ னடுதொறும்
பெற்றா னாரே பரிசிலர் களிறே
வரைமிசை யிழிதரு மருவியின் மாடத்து
வளிமுனை யவிர்வருங் கொடி நுடங்கு தெருவிற்
சொரிசுரை கவரு நெய்வழி புராலிற்

பாண்டில் விளக்குப் பரூஉச்சுட ரழல
நன்னுதல் விறலிய ராடும்
தொன்னகர் வரைப்பினவ னுரையா னுவே.

இதுவுமது. பெயர் - நன்னுதல் விறலியர் (7.)

(ப - ரை.) தெருவின் (4) தொன்னகர் (8) எனக் கூட்டுக.

5. சொரி சுரை கவரும் நெய்யென்றது நெய்யைச் சொரியும் உள்ளூப்புடையுண்டாயிருக்கின்ற திருக்குழாய் தான் ஏற்றுக்கொண்ட நெய்யென்றவாறு.

சுரையென்றது திரிக்குழாய்க்கு ஆகுபெயர்.

6. பாண்டில் விளக்கு - கால்விளக்கு.

7. நன்னுதல் விறலியரென்றது தமது * ஆடல்பாடற்கேற்ப நூலுட் சொல்லப்பட்ட அழகையுமுடையாரென்றவாறு.

அவ்வழகினை நுதன்மேலிட்டுக் கூறியவாற்றான் இதற்கு, '**நன்னுதல் விறலியர்**' என்று பெயராயிற்று.

8. தொன்னகர் - † அரசுடைய பழைய நகரிகள்.

நெய் வழிபு உராலிற் (5) சுடரழல (6) ஆடும் (7) என்றதனாற் சொல்லியது அந்த நகரிகளது செல்வமுடைமை.

குட்டுவன் அட்டு ஆனான் ; அடுதொறும் (1) பரிசிலர் களிறு பெற்று ஆனார் (2) ; தொன்னகர் வரைப்புக்களில் அவன் உரை ஆனா (8) எனக் கூட்டி வினைமுடிவு செய்க.

இதனாற் சொல்லியது அவன் கொடையினையும் அக்கொடைக்கு வருவாயாகிய பகைவரைக் கோறலையும் உடன்கூறியவாறாயிற்று.

(கு - ரை.) 1. 'அட்டானானே குட்டுவன்' என்றாற்போல்வன கடைச்சங்கத்திற்காயின சொற்கள் இக்காலத்திற்கு ஆகாவாயின (தொல். செய். 80, ந.)

1 - 2. குட்டுவன் பகைவரைக் கொன்று அச்செயல் போதுமென்று அமையான் ; இஃது, "ஐயைந் திரட்டி சென்றதற்பின்னும், அறக்கள வேள்வி செய்யா தியாங்கணும், மறக்கள வேள்வி செய்வோ யாயினை" (சிலப். 28 : 130 - 32) என்பதனாலும் அறியப்படும். அங்ஙனம் அவன் அடுந்தோறும் பரிசிலர் களிறுகளை ஓரளவில் அமையாது பெற்றனர் ; "துடியடிக் குழவிய பிடியிடை மிடைந்த, வேழ முகவை நல்குமதி" (புறநா. 369 : 26 - 7.)

3 - 4. மலையின்மேலிருந்து வீழ்கின்ற அருவியைப்போல, மாடத்தில் காற்றினிடத்தே விளங்குகின்ற கொடிகள் அசைகின்ற தெருவினையுடைய.

5 - 6. சொரியப்பட்ட நெய்யையுடைய திரிக்குழாயானது தான் ஏற்றுக்கொண்ட அந்நெய் மேலே வழிந்து பரவுதலால், காலையுடைய விளக்கினது பருமையையுடைய சுடர் ஒளியை வீச ; "சுடரும் பாண்டிற்றிருநாறு விளக்கத்து" (பதிற். 52 : 13) ; "நெய்யுமிழ் சுரையர் நெடுந்திரிக் கொளீஇக், கையமை விளக்க நந்துதொறு மாட்ட" (முல்லைப். 48 - 9.)

---

* "ஆடலும் பாடலு மழகு மென்றிக், கூறிய மூன்றி னொன்று குறைபடாமல்" (சிலப். 3 : 8 - 9) † இவை பகையரசர் நகரங்கள்.

6. மு. நெடுநல். 175; "துகிலின் வெண்கிழித் துய்க்கடை நிமிடி, உள்ளிழு துறீஇய வொள்ளழற் பாண்டில்" (பெருங். 1. 33 : 92 - 3.)

7 - 8. அழகிய நெற்றியையுடைய விறலியர் ஆடுகின்ற பழைய நகரங்களின் எல்லையில் சேரனைப் பற்றிய புகழ்ச்சியமைந்த வார்த்தைகள் அமையா.

மகளிர்க்கு நெற்றி சிறுத்திருத்தல் உத்தம இலக்கணமாதலின் அழகிய நுதலென்றது சிறிய நுதலை; "நுதலடி நுசுப்பென மூவழிச் சிறுகி" (கலி. 108 : 3.)

இப்பாட்டில், அமையாத செய்திகள் மூன்று சொல்லப்பட்டன. (எ)

---

(சஅ) **பை**ம்பொற் றாமரை பாணர்ச் சூட்டி
ஒண்ணுதல் விறலியர்க் காரம் பூட்டிக்
கெடலரும் பல்புகழ் நிலைஇ நீர்புக்குக்
கடலொ டுழந்த பனித்துறைப் பரதவ
ஆண்டுநீர்ப் பெற்ற தார மீண்டிவர்
கொள்ளாப் பாடற் கெளிதினி னீயும்
கல்லா வாய்மைய னிவனெனத் தத்தம்
கைவ லிளையர் நேர்கை நிரைப்ப
வணங்கிய சாயல் வணங்கா வாண்மை
முனைசுடு கனையெரி யெரித்தலிற் பெரிதும்
இதழ்கவி னழிந்த மாலையொடு சாந்துபுலர்
பல்பொறி மார்பநின் பெயர்வா ழியரோ
நின்மலைப் பிறந்து நின்கடன் மண்டும்
மலிபுன னிகழ்தருந் தீநீர் விழவிற்
பொழில்வதி வேனிற் **பேரெழில் வாழ்க்கை**
மேவரு சுற்றமோ டுண்டினிது நுகரும்
தீம்புன லாய மாடும்
காஞ்சியம் பெருந்துறை மணலினும் பலவே.

**துறை - இயன்மொழி வாழ்த்து.**

**வண்ணமும் தூக்கும் அது. பெயர் - பேரெழில் வாழ்க்கை (15.)**

(ப - ரை.) 3. நிலைஇயென்றது நிலைப்பித்தென்னும் பிறவினை.

4. கடலொடுழந்தவென்னும் ஒடு * வேறுவினையொடு. 'பரதவ' என்றதனாற் சொல்லியது, அக்கடலின் உழத்தற்றொழிலொப்புமைபற்றி

---

* கடலுக்கு வினையின்மையின், 'வேறு வினையொடு' என்றார்; மாலையொடு என்றவிடத்தும் இஃது ஒக்கும்.

அக்கடற்றுறை வாழும் நுளையற்குப் பெயராகிய பரதவனென்னும் பெயரான் * இழித்துக்கூறினன்போலக் குறிப்பான் உயர்த்து வென்றிகூறினனாகக் கொள்க.

5 - 9. தாரத்தையென விரித்து ஈயும் (6) என்பதனோடு முடித்து, ஈயுமென்னும் பெயரெச்சத்தினைக் கல்லா வாய்மையன் (7) என்னும் † காரணப் பெயரொடு முடித்து, அப்பெயரை இக்கவிகூறுகின்றான் பிறர்கூற்றினைக்கொண்டு கூறுதற்கண் வந்த எனவொடு புணர்த்து, கடலுட் போர் செய்து அரிதிற்பெற்ற பொருளை எளிதாக, மனங்கொள்ளாப் பாடலையுடைய ‡ தரம்போதாதார்க்குக் கொடுக்கும் பேதை இவனென இழித்துக் கூறற்கு ஏற்பக் கைவலிளையர் அடைவே தத்தம் கையைச் சுட்டிநிரைக்கும்படி இரவலரிடத்து வணங்கிய மென்மையென வுரைக்க. ஆண்டு நீர்ப் போந்து பெற்ற தாரத்தையென்றான், இக்கவிகூறுகின்றான்; அவ்வுருபிற்கு முடிபாகிய ஈயுமென்றது கூறுகின்றார் கைவலிளையர். அக்கைவலிளையர் கூறிற்றாக இக்கவி கூறுகின்றானுக்குக் கொண்டுகூட்டாகப் புகுந்தமையான், அவ்விரண்டாவதற்கு அவ்வீயுமென்னும் வினை முடிபாமெனக் கொள்க. இதற்குப் பிறவாறும் கூறுப.

7. கல்லா வாய்மையனென்றது கல்லாத தன்மையை உண்மையாக உடையனென்றவாறு.

11. மாலையொடென்னும் ஒடு வேறுவினையொடு.

11 - 2. சாந்து புலர் மார்பவெனக் கூட்டுக.

14. மலிபுனலையுடைமையின் யாறு மலிபுனலெனப்பட்டது. நிகழ்தரும் தீநீரென்றது அவ்வியாறுகளிலே புதிதாக வருகின்ற இனிய (புது)நீரென்றவாறு.

15. பொழில் வதி வேனிற் பேரெழில் வாழ்க்கையென்றது வேனிற் காலத்து மனையில் வைகாது பொழில்களிலே வதியும் பெரிய செல்வ அழகையுடைய இல்வாழ்க்கையென்றவாறு. வேனில் பொழில்வதியென்க.

வாழ்க்கையையுடைய (15) ஆயம் (17) எனக் கூட்டுக.

இச்சிறப்பானே இதற்கு, '**பேரெழில் வாழ்க்கை**' என்று பெயராயிற்று.

இனிப் பொழில்வய வேனிலென்பது பாடமாயின், பொழில்வயப்படுவதான பொருளுண்டாகிய வேனிலென உரைக்க.

16. இனிது நுகருமென்றது சுற்றத்தோடு உண்டலேயன்றிச் செல்வமுடையார் அச்செல்வத்தாற் கொள்ளும் பயன்களெல்லாம் கொள்ளுமென்றவாறு.

17. புனலாயம் - புனலாடற்கு வந்த திரள்.

பரதவ (4), வணங்கிய சாயலையும் வணங்கா ஆண்மையினையுமுடைய (9) சாந்துபுலர் (11) மார்ப நின்பெயர் (12) பெருந்துறை மணலினும் பல (18) வாழியர் (12) எனக் கூட்டி வினைமுடிவு செய்க.

இதனாற் சொல்லியது அவனை நீடுவாழ்கவென வாழ்த்தியவாறாயிற்று.

---

* பழிப்பதுபோலப் புகழ்புலப்படுத்தல் என்னும் அணி.

† காரணப் பெயரென்றது ஈதற்குக் காரணமான வாய்மையையுடையவன் எனப் பொருள்படுதல்பற்றி.

‡ தரம் - வரிசை.

(கு - ரை.) 1. பசுமையான பொன்னாற் செய்த தாமரைப் பூவைப் பாணர்க்குச் சூட்டி.

2. ஒள்ளிய நெற்றியையுடைய விறலியர்க்கு முத்துமாலைகளைப் பூணும்படி கொடுத்து (பதிற். 12 : 23.)

1 - 2. "வாடா மாலை பாடினி யணியப், பாணன் சென்னிக் கேணி பூவா, எரிமரு டாமரைப் பெருமலர் தயங்க" (புறநா. 364 : 1 - 3) என்பதன் அடிக்குறிப்பைப் பார்க்க.

3 - 4. சேரன் கடலோட்டிய செய்தி கூறப்படும்.

கெடுதற்கரிய பலவகையான புகழை நிலைபெறச் செய்து, கடல் நீரிலே புகுந்து அதன்கண்ணே வருந்தி முயன்ற குளிர்ச்சியையுடைய துறையையுடைய பரதவனே.

5 - 7. இளையர் கூற்று.

5 - 8. அவ்விடத்தில் நீரிற்பெற்ற அரிய பொருள்களை இவ்விடத்தே இவருடைய மனங்கொள்ளாப் பாடலுக்கு எளிதிலே கொடுக்கும், கொடுத்தற்றொழிலையன்றிப் பிறதொழிலைக் கல்லாத வாய்மையையுடையவன் இவனென்று தங்கள்தங்களுடைய ஒத்த கைகளைத் தம் தொழிலில் வல்ல இளையர் வரிசையாக நீட்ட. கொள்ளாப் பாடல் - சேரன் புகழை முழுதும் கொள்ளாத பாடல் எனலுமாம் (புறநா. 53 : 6 - 8.) அதற்கும் எளிதினின் ஈவானென்றது அவனது கொடைமடத்தைக் கூறியவாறு.

9. மகளிரிடத்து வணங்கிய மென்மையையும், பகைவரிடத்து வணங்காத ஆண்மையையும் உடைய; "மகளிர் சாயன் மைந்தர்க்கு மைந்து" (புறநா. 221 : 5); வணங்கிய சாயல் - நட்பினரிடத்தே வணங்கிய மென்மை எனலுமாம் (பதிற். 63 : 2 - 3); "கூற்றம் வரினுந் தொலையான்றன் னட்டார்க்குத், தோற்றலை நாணுதோன்" (கலி. 43 : 10 - 11.) உரையாசிரியர் வேறு கூறுவர்.

10 - 12. பகைவர் முனைகளைச் சுடுகின்ற மிக்க நெருப்புத் தீத்தலினால் மிகவும் இதழ்கள் அழகு அழியப்பெற்ற மாலை அணிதலோடு, பூசிய சந்தனமும் புலர்ந்த, பல வரிகளையுடைய மார்பையுடையாய், நின்பெயர் அழியாமல் வாழ்க.

மாலை வாடுதல்: "வாடுக விறைவநின் கண்ணியொன்னார், நாடுசுடு கமழ்புகை யெறித்தலானே" (புறநா. 6 : 21 - 2.) பொறிமார்பு : பதிற். 88 : 30, உரை; "அம்பகட்டு மார்பிற், செம்பொறி வாங்கிய" (முருகு. 104 - 5.) பொறி மூன்றுதலின் பல்பொறி என்றார்; "வரையகன் மார்பிடை வரியு மூன்றுள" (சீவக. 1462.)

13 - 5. நினது மலையிலே தோன்றி நினக்கு உரிய மேல்கடலிலே விரைந்து செல்லும் ஆற்றினிடத்தே புதிதாகவரும் இனிய நீர்விழாவையும், வேனிற்காலத்தே குளிர்ச்சியின் பொருட்டுச் சோலைகளில் வாழும் பெரிய அழகையுடைய இல்வாழ்க்கையையும் உடைய; நீர்விழாவின்கண் வேனிற் காலத்துப் பொழிலில் தங்குகின்ற பெரிய அழகையுடைய வாழ்க்கை எனலுமாம்; "புள்ளொலிப் பொய்கைப் பூந்துறை முன்னித், தண்பொழில் கவைஇய சண்பகக் காவிற், கண்டோர் மருளக் கண்டத் திருத்த, விழா மலி சுற்றமொடு" (பெருங். 1. 38 : 277 - 80.) மலிபுனல் : ஆற்றுக் காயிற்று.

16. விரும்புதல் வருகின்ற சுற்றத்தோடு உண்டு, மற்ற இன்பங்களையும் இனிமையாக நுகர்கின்ற.

17 - 8. மக்களின் தொகுதி ஆடுகின்ற இனிய புனலையுடைய காஞ்சியென்னும் ஆற்றின் அழகிய பெரிய துறையிடத்தே உள்ள மணலைக்காட்டிலும் மிகப் பலகாலம். இளையர் கைநிறைப்ப (8) மணலினும் பல (18) நின் பெயர் வாழியர் (12) என முடிக்க.

காஞ்சி : இது கொங்குநாட்டில் உள்ளதோர் ஆறு ; " மீகொங்கிலணி காஞ்சிவாய்ப் பேரூரர் பெருமானை " (தே. சுந்தர.) ; " பூஞ்சோலை யணி புறவிற் காஞ்சிவாய்ப் பேரூர் புக்கு " (சாஸனம்.) இது நொய்யலென வழங்கும்.

ஆற்றின் மணலினும் பலகாலம் வாழ்கவென்றல் மரபு : " மண்ணாள் வேந்தே நின்வா ணாட்கள், தண்ணான் பொருநை மணலினுஞ் சிறக்க, அகழ் கடன் ஞால மாள்வோய் வாழி " (சிலப். 28 : 125 - 7) ; " சிறக்கநின் னாயுள், மிக்குவரு மின்னீர்க் காவிரி, எக்க ரிட்ட மணலினும் பலவே " (புறநா. 43 : 21 - 3.) (அ)

---

(௪௰) **யா**முஞ் சேறுக நீயிரும் வம்மின்
துயலுங் கோதைத் துளங்கியல் விறலியர்
கொளைவல் வாழ்க்கைநுங் கிளையினி துணீஇயர்
களிறுபரந் தியலக் கடுமா தாங்க
ஒளிறுகொடி நுடங்கத் தேர்திரிந்து கொட்ப
எஃகுதுரந் தெழுதருங் கைகவர் கடுந்தார்
வெல்போர் வேந்தரும் வேளிரு மொன்றுமொழிந்து
மொய்வளஞ் செருக்கி மொசிந்துவரு மோசூர்
வலம்படு குழூஉநிலை யதிர மண்டி
நெய்த்தோர் தொட்ட **செங்கை மறவர்**
நிறம்படு குருதி நிலம்படர்ந் தோடி
மழைநாட் புனலி னவற்பரந் தொழுகப்
படுபிணம் பிறங்கப் பாழ்பல செய்து
படுகண் முரசு நடுவட் சிலைப்ப
வளனற நிகழ்ந்து வாழுநர் பலர்படக்
கருஞ்சினை விறல்வேம் பறுத்த
பெருஞ்சினக் குட்டுவற் கண்டனம் வரற்கே.

**துறை - விறலியாற்றுப்படை. வண்ணமும் தூக்கும் அது.**
**பெயர் - செங்கை மறவர் (10.)**

(ப - ரை.) 4. * கடுமா தாங்கவென்றது கால் கடிய குதிரைமேல் ஆட்கள் வேண்டிய அளவுகளிலே செலவை விலக்கிச் செலுத்தவென்ற வாறு.

5. திரிந்து கொட்பவென்றது மறிந்து திரியவென்றவாறு.

6. கைகவர் கடுந்தாரென்றது மாற்றார்படையில் வருத்து நிறுத்தின † கைகளைச் சென்று கவரும் கடிய தூசிப்படையென்றவாறு.

கடுந்தாரையுடைய (6) வேந்தர் (7) எனக் கூட்டுக.

8. மொய்வளஞ் செருக்கியென்றது வலியாகிய செல்வத்தானே மயங்கி யென்றவாறு.

மொய் என்பது ஈண்டு வலி.

10. நெய்த்தோர் தொட்ட செங்கை மறவரென்றது பகைவருடலில் தாங்கள் எறிந்த ‡ வேல்முதலிய கருவிகளைப்பறிக்கின்ற காலத்து அவருடைய உடலுகு குருதியை அளைந்து சிவந்த கையையுடைய மறவரென்றவாறு.

இச்சிறப்பானே இதற்கு, '**செங்கை மறவர்**' என்று பெயராயிற்று.

மறவரது (10) குருதி (11) எனக் கூட்டுக.

குழூஉநிலை அதிர மண்டிக் (9) குருதி (11) ஒழுகப் (12) பிணம்பிறங்கப் பாழ்பல செய்து (13) முரசம் நுடிவட்சிலைப்ப (14) வளனற நிகழ வாழுநர் பலர்பட (15) விறல்வேம்பறுத்த (16) என முடிக்க.

15. வளன் அற நிகழ்ந்தென்றது செல்வமானது அறும்படியாகக் கொள்ளை நிகழவென்றவாறு. நிகழவெனத் திரிக்க.

இனி வளனறவெனவும் நிகழ்ந்து வாழுநரெனவும் அறுத்து, நிகழ்தலை வாழ்வார்மே லேற்றி நிகழ்ந்துவாழ்தலென்றலுமாம்.

ஆண்டு, நிகழ்தல் - விளக்கம்.

குட்டுவற்கண்டனம் வரற்கு (17) யாமும் சேறுகம் (1) ; நும் கிளை இனிது உணீஇயர் (3) ; விறலியர் (2), நீயிரும் வம்மின் (1) எனக்கூட்டி வினைமுடிவு செய்க.

இதனாற் சொல்லியது அவன் வரையா ஈகை கூறியவாறாயிற்று.

(கு - ரை.) 1. யாமும் செல்லுவோம் ; நீங்களும் வாருங்கள்.

2. அசைகின்ற மாலையையணிந்த அசைகின்ற இயல்பையுடைய விறலியரே ; விறலியர் : விளி.

3. இசைப்பாட்டில் வல்ல நும் சுற்றத்தார் இனிதாக உண்ணுக ; உணீஇயர் : முற்று.

4 - 9. மோகூர் மன்னனை வென்றமை கூறப்படும்.

4. களிறுகள் பரந்து செல்லவும் விரைந்து செல்லும் குதிரைகளை அவற்றின்மேல் உள்ள வீரர் அடக்கிச் செலுத்தவும்.

---

* "நீரழுவ நிவப்புக்குறித்து, நிமிர்பரிய மாதாங்கவும்" (**புறநா.** 14 : 6 - 7.)

† கை - சேனையின் இருபுறத்தும் அதன் கைபோலுள்ள வீரர்.

‡ வேல் சிறப்புடைய கருவியாதலின் 'வேல் முதலிய' என்றார் ; "முருகற்கு வேல் படையாதலானும், சான்றோர் வேற்படையே சிறப்பப் பெரும்பான்மை கூறலானும்" (**தொல். புறத்.** 21, **ந.**)

5. விளங்குகின்ற கொடிகள் அசையும்படி தேர் மறிந்து சுழலவும்.

6. வேலைச் செலுத்தி எழுகின்ற, பகைவர் படையின் கையென்னும் உறுப்பைக் கவர்கின்ற விரைந்த தூசிப்படையையுடைய; கை - பக்கப் படை.

7. வெல்லும் போரைச் செய்யும் முடியுடையரசரும் குறுநில மன்னரும் வஞ்சினம் கூறி.

8 - 9. வலிமிகுதியால் மனம் செருக்குக்கொண்டு தம்மிற் கூடிவரும் மோகூருக்கு அரசனை பழையனென்பானது வெற்றி பெறுதற்குக்காரணமான ஒன்றாகக் கூடிய கூட்டத்தின் நிலை நடுங்கும்படி மிக்குச் சென்று. மோகூர் : ஆகுபெயர். 10 - 13. போர்க்கள வருணனை

10. பகைவரது உடலிற் புக்க ஆயுதங்களைப் பறிக்கும்போது அவருடைய இரத்தத்தை அளைதலால் சிவந்த கையையுடைய வீரரது; வீரர் மோகூர் மன்னனது படையிலுள்ளார்.

11. நிறம் உண்டாகின்ற இரத்தம் நிலத்தில் தவழ்ந்து ஓடி.

12. மழை பெய்யும் நாளிலுண்டான செங்கலங்கல் நீரைப் போலப் பள்ளங்களிலே பரவிப் பாய.

11 - 2. குருதிக்குச் செம்புனல் : "செந்நில மருங்கிற் செஞ்சால் சிதைய, மரஞ்சுமந் திழிதருங் கடும்புனல் கடுப்பக், குருதிச் செம்புனல் போர்க்களம் புதைப்ப" (பெருங். 1. 46 : 67 - 9.)

13. இறந்த பிணம் உயரும்படி பாழ்பலவற்றைச் செய்து.

14. ஒலிக்கின்ற கண்ணையுடைய வீரமுரசம் போர்க்களத்தின் நடுவே ஒலிப்ப. மு. பதிற். 54 : 13.

15 - 7. நாட்டின் வளன் அழியவும், விளங்கி வாழ்வார் பலர் இறப்பவும், கரிய கொம்புகளையும் மற்றக்காவல்மரங்களை வென்ற வெற்றியையும் உடைய வேம்பை வெட்டிய பெரிய சினத்தையுடைய குட்டுவனைக் கண்டு வருவதற்கு. விறலைப் புலப்படுத்தும் வேம்பெனலுமாம். வேம்பு மோகூர் மன்னது காவல் மரம் (பதிற். 44 : 14 - 5; 5-ஆம் பதிகம், 13 - 4); "பழையன் காக்குங் குழைபயி னெடுங்கோட்டு, வேம்புமுத றடிந்த வேந்து வாள் வலத்துப், போந்தைக் கண்ணிப் பொறைய" (சிலப். 27 : 124 - 6.) நிகழ்ந்து - நிகழ; எச்சத்திரிபு.

குட்டுவற் கண்டனம் வரற்கு (17) யாமும் சேறுகம் (1); விறலியர் (2), நீயிரும் வம்மின் என முடிக்க.

வளஞ்செருக்கிய மோகூர் மன்னனது நாட்டை அழித்ததைக் கூறினூர் நம்போன்ற இரவலர்க்கு வரையாது கொடுக்க அவ்வளம் உளதாயிற்றென்னும் கருத்துப்பற்றி. (கூ)

---

(ரு0) **மா**மலை முழக்கின் மான்கணம் பனிப்பக்
கான்மயங்கு கதழுறை யாலியொடு சிதறிக்
கரும்பமல் கழனிய நாடுவளம் பொழிய
வளங்கெழு சிறப்பி னுலகம் புரைஇச்
செங்குணக் கொழுகுங் கலுழி மலிர்நிறைக்
காவிரி யன்றியும் பூவிரி புனலொரு

மூன்றுடன் கூடிய கூட லனையை
கொல்களிற், றுரவுத்திரை பிறழ வவ்வில் பிசிரப்
புரைதோல் வரைப்பி னெஃகுமீ னவிர்வர
விரவுப்பணை முழங்கொலி வெரீஇய வேந்தர்க்
கரண மாகிய **வெருவரு புனற்றூர்**
கன்மிசை யவ்வுங் கடலவும் பிறவும்
அருப்ப மமைஇய வமர்கடந் துருத்த
ஆண்மலி மருங்கி னாடகப் படுத்து
நல்லிசை நனந்தலை யிரிய வொன்னார்
உருப்பற நிரப்பினை யாதலிற் சாந்துபுலர்பு
வண்ண நீவி வகைவனப் புற்ற
வரிஞிமி றிமிரு மார்புபிணி மகளிர்
விரிமென் கூந்தன் மெல்லணை வதிந்து
கொல்பிணி திருகிய மார்புகவர் முயக்கத்துப்
பொழுதுகொண் மரபின் மென்பிணி யவிழ
எவன்பல கழியுமோ பெரும பன்னாட்
பகைவெம் மையிற் பாசறை மரீஇப்
பாடரி தியைந்த சிறுதுயி லியலாது
கோடுமுழங் கிமிழிசை யெடுப்பும்
பீடுகெழு செல்வ மரீஇய கண்ணே.

**துறை - வஞ்சித்துறைப் பாடாண்பாட்டு.**
**வண்ணம் - ஒழுகுவண்ணமும் சொற்சீர்வண்ணமும்.**
**தூக்கு - செந்தூக்கு. பெயர் - வெருவரு புனற்றூர் (11.)**

(ப - ரை.) மாமலைக்கண்ணே (1) உறை சிதறி (2) எனக்கூட்டி அதனைச் சிதறவெனத் திரிக்க.

4. உலகம் புரைஇயென்றது உலகத்தைப் புரந்தென்றவாறு.

7. மூன்றுடன் கூடிய கூடலென்றது அக்காவிரிதானும் ஆன்பொருநையும் * குடவனாறுமென † இம்மூன்றும் சேரக்கூடிய கூட்டமென்றவாறு.

காவிரி அனையையாவதேயன்றி (6) மூன்றுடன் கூடிய கூட்டத்தனையை (7) எனக் கொள்க.

---

* குடவனென்றாற் போல்வதோர் யாறுமெனவும் பிரதிபேதமுண்டு.

† இவ்விடம் திருமுக்கூடலென்று வழங்கப்படும். இங்கே பழையதாகிய சிவாலயம் ஒன்றுண்டு.

8. உரவுத்திரை பிறழவென்றது வலிய திரைகள் தம்மில் மாறுபட்டுப் புடைபெயரவென்றவாறு.

அவ்வில் பிசிரவென்றது அவ்விற்கள் அத்திரைக்குப் பிசிராகவென்ற வாறு.

பிசிரவென்றது பெயரடியாகப் பிறந்த வினை.

பிறழ (8) என்றது முதலாக நின்ற செயவெனெச்சங்களை நிரப்பினை (16) என்னும் பிறவினையோடு முடிக்க.

10. பணையாகிய முழங்கொலியென இருபெயரொட்டு.

ஒலியையுடைய (10) புனல் (11) எனக் கூட்டுக.

10. வெரீஇய வேந்தரென்றது தம் பகையை வெருவி இவன்றன்னுடன் நட்பாகிய வேந்தரென்க.

11. வெருவரு புனற்றுரென்றது தன்னை அடைத்தார் வெருவரத் தக்க புனற்றுரென்றவாறு.

இச்சிறப்பானே இதற்கு, '**வெருவரு புனற்றுர்**' என்று பெயராயிற்று.

புனற்றுரென்றதனைத் தார்ப்புனலென்றவாருகக் கொள்க.

16. உருப்பென்றதனைச் சினத்தீயென்றவாருகக் கொள்க.

ஆதலினென ஏதுப்பொருட்கண் நின்ற ஐந்தாதவற்கு யான் நின்னை ஒன்று கேட்கின்றேனென்று ஒருசொல் வருவிக்க.

சாந்து புலர (16) வண்ணம் நீவ (17) எனத் திரிக்க.

18. மார்புபிணி மகளிரென்றது மார்பாற் பிணிக்கப்பட்ட மகளிரென்றவாறு.

வதிந்து (19) என்னும் எச்சத்தினைப் பொழுதுகொள் (21) என்னும் வினையொடு முடிக்க.

முயக்கத்துப் (20) பொழுதுகொண் மரபின் மென்பிணி (21) என்றது முயக்கத்திலே இராப்பொழுதைப் பயன்கொண்ட முறைமையினையுடைய மெல்லிய உறக்கமென்றவாறு.

மென்பிணியென்றது புணர்ச்சி *யவதிக்கண் அப்புணர்ச்சியலேயலான் வந்த சிறுதுயிலே; † கண்ணைப் பூவென்னும் நினைவினுய்ப் பிணியவிழ வெனப் பூத்தொழிலாற் கூறிஞனென்க.

22. நாள்பல எவன்கழியுமோவென நாளென்பது வருவிக்க.

பின்னின்ற பன்னுள் (22) என்பதனைப் பாசறை மரீஇ (23) என்பதனேடு கூட்டுக. மரீஇயென்பதனை மருவவெனத் திரித்து மருவுகையாலென்க.

24. பாடரிது இயைந்த சிறுதுயிலென்றது ‡ இராப்பொழுதெல்லாம் பகைவரை வெல்கைக்கு உளத்திற்சென்ற சூழ்ச்சி முடிவிலே அரிதாகப் பெறுதல் இயைந்த சிறிதுயிலென்றவாறு.

---

* அவதி - எல்லை.

† இது சமாதியென்னும் குணவணியின் பாற்படும். "கொழுநகைக் குறும்போது குறிப்பிற் பிரியாப், புணர்ச்சி மகளிர் போகத்துக் கழுமித், துயிற்கண் டிறந்த தோற்றம் போல, நறவுவாய் திறந்து நாண்மதுக் கமழ" (பெருங். 2. 15 : 21 - 4.)

‡ "நெடிதுநினைந்து, பகைவர்ச் சுட்டிய படைகொ ேஞன்விரல்...... இன்றுயில் வதியுநற் காணுள்" (முல்லைப். 76 - 80.)

சிறு துயிலையுடைய (24) கண் (26) எனக் கூட்டுக.

இயலாது (24) இசையெடுப்பும் (25) எனக் கூட்டுக.

25. இமிழிசையென்றது இமிழிசையையுடைய * இயமரங்களை.

கோடு - சங்கு. முழங்கென்றது அவ்வியமரங்களுக்கு இடையிடையே முழங்குகின்றவென்றவாறு.

26. பீடுகெழு செல்வமென்றது படைச்செல்வம் ; பீடு - வலி.

மரீஇய கண்ணென்றது அப்படைமுகத்திலே நாள்தோறும் அமர்ந்தும் துயிலெழுந்தும் உலவிப் பழகின கண்ணென்றவாறு.

நீ கூடலனையை (7) ; பெரும (22), தார்ப்புனலை (11) ஒன்னார் (15) உருப்பற நிரப்பினையாகையாலே (16), யான் நின்னை ஒன்று கேட்கின்றேன் ; பீடுகெழு செல்வம் மரீஇய கண் (26) முயக்கத்துப் (20) பொழுது கொண்மரபின் மென்பிணி அவிழ (21) நாள்பல நினக்கு எவன் கழியுமோ (22) எனக் கூட்டி வினைமுடிவு செய்க.

இதனாற் சொல்லியது † அவன் காமவேட்கையிற் போர்வேட்கை மிகுத்துக் கூறியவாறாயிற்று.

தார்ப்புனலை (11) ஒன்னார் (15) உருப்பற நிரப்பினை (16) என எடுத்துச் செலவினை மேலிட்டுக் கூறினமையால், துறை வஞ்சித்துறைப் பாடாண் ஆயிற்று.

8. 'கொல்களிறு' என்பது கூன்.

(கு - ரை.) 1 - 7. குட்டுவனுக்கு முக்கூடல் உவமை.

1 - 6. காவிரியின் வெள்ளச் சிறப்பு.

1. பெரிய மலையின்கண்ணே இடியோசையால் விலங்கின் கூட்டங்கள் நடுங்கும்படி.

2. காற்றோடு மயங்கிய விரைந்த துளிகளை ஆலங்கட்டியோடு சிதறி.

3. கரும்பு தழைத்து நெருங்கிய வயல்களையுடைய நாடு வளத்தை மிகக் கொடுக்கும்படி.

4. வளம்பொருந்திய சிறப்பினையுடைய உலகத்தைப் பாதுகாத்து. சிதறிப் (2) புரைஇயென இயைக்க.

5 - 6. "காவிரிப்பாவை, செங்குணக் கொழுகி" (மணி. பதி. 12 - 3.)

5 - 7. நேர்கிழக்கே ஒழுகுகின்ற கலங்கலாகிய நிறைந்த வெள்ளத்தையுடைய காவிரியொன்று அல்லாமலும், பூக்கள் விரிந்த நீரையுடைய மூன்று ஆறுகளும் ஒருங்கு கூடிய முக்கூடலைப் போன்றாய்.

8 - 11. சேனையைப் புனலாக உருவகம் செய்கின்றார்.

8. கொல்லுகின்ற களிறாகிய உலாவுதலையுடைய அலைகள் தம்மில் மாறுபட்டுப் புடைபெயர, அவற்றிற்கு ஏற்ப அழகிய விற்கள் அலைகளின் பிசிர்போல விளங்க.

---

* இயமரம் - வாத்தியம் ; சங்கும் வாத்தியங்களும் சேர்த்துக் கூறப்படும் ; "சிலம்பின வியமரந் தெழித்த சங்கமே" (சீவக. 779.)

† "மூதில்வாய்த் தங்கிய முல்லைசால் கற்புடைய, மாதர்பாற் பெற்ற வலியளவோ-கூதிரின், வெங்கண் விறல்வேந்தன் பாசறையுள் வேனிலான், ஐங்கணை தோற்ற வழிவு" (தொல். புறத். 21, ந. மேற்.) ; பு. வெ. 169 - 70.

9. உயர்ந்த கேடகத்தின் எல்லையின்மேல் வேலாகிய மீன்விளங்க; கேடகமும் வேலும் சேர்த்துக் கூறப்படும் (பட். 78, அடிக்.); கேடகத்திற்கு ஆமையை உவமையாகக் கொள்க; "கமடமாம் பரிசை வாங்கி" (குற்றலப். திருநதிச். 21.) வேலுக்கு மீன்: "உறழ்வே லன்ன வொண்கயன் முகக்கும்", "வயற்கெண்டையின் வேல்பிறழினும்" (புறநா. 249 : 6, 287 : 4.)

10. ஒன்றேடு ஒன்று கலத்தலையுடைய முரசின் ஒலியாகிய ஓசையைக்கேட்டு அஞ்சிய, பின் நினக்கு நட்பான அரசர்க்கு. முரசொலி புனலின் ஒலிக்கு உவமை.

11. பாதுகாவலாகிய அஞ்சத்தக்க தூசிப்படையாகிய புனலை; புனற்றுரென்பதனைத் தார்ப்புனலென்று மாற்றிக்கொள்க.

12 - 4. மலைகளின்மேலுள்ளனவும் கடலின்கண்ணுள்ளனவும் பிற இடங்களில் உள்ளனவும் ஆகிய அரண்களை அமைத்த, போரின் கண்ணே வஞ்சியாது எதிர்நின்று போர் செய்து கோபித்த வீரர் மிக்க இடங்களையுடைய நாடுகளை நின்னுடையனவாகக் கொண்டு; ஆள் - வீரர்; "ஆளமர் வெள்ளம்" (பு. வெ. 32.)

15 - 6. அப்பகையரசரது நல்ல புகழ் அகன்ற இடத்தையுடைய உலகத்தினின்றும் கெட்டு ஓட, பகைவரது சினமாகிய தீ அழியும்படி நிரப்பினை யாதலால். சேனையைப் புனலாக உருவகித்ததற்கேற்ப, பகைவரது சினத்தைத் தீயாகக் கூறினர். புனற்றுரை (11) நிரப்பினை (16) என முடிக்க.

16 - 9. சேரனது இன்பச்சிறப்புக் கூறப்படும்.

பூசிய சந்தனம் புலரவும், வண்ணம் துடைக்கப்படவும், பல வகையான அழகு பொருந்திய, கோடுகளையுடைய வண்டுகள் ஒலிக்கும் மார்பாற் பிணிக்கப்பட்ட மகளிரது, விரிந்த மெல்லிய கூந்தலாகிய மெல்லிய படுக்கையிலே தங்கி. கூந்தல் மெல்லணை : குறுந். 254 : 5, ஒப்பு.

20 - 22. வருத்துகின்ற காமமாகிய நோயை நீக்கும் பொருட்டு, அவரது மார்பை விரும்பிச் சேர்ந்த புணர்ச்சியால் இராப்பொழுதைப் பயன் கொண்ட முறைமையினல் உண்டான மெல்லிய சிறுதுயில் நீங்குவதற்குப் பெரும, நாள் எவ்வளவு பல செல்லுமோ? பாசறையில் இன்னும் எவ்வளவு காலம் இருக்க நேருமோ என்றபடி. திருகிய - திருக.

22 - 6. பகைவரது கொடுமையினல் பலநாள் பாசறையிலே தங்கிப் பழகுதலால் தூங்குதல் அரிதாகப் பொருந்தும் சிறுதுயிலும் இயலாமல் சங்கொலியும், பிறவாத்தியங்களின் ஓசையும் எழுப்புகின்ற, பெருமை பொருந்திய படையாகிய செல்வத்திற் பழகிய கண்கள்.

மரீஇய கண் (26) எவன்பல கழியுமோ (22) என இயைக்க. (கo)

---

இதன் பதிகத்துக் கடவுட்பத்தினி (4) என்றது கண்ணகியை.

9. இடும்பில் என்றது இடும்பாதவனத்தை. புறம் - அவ்விடம்.

15. வாலிழை கழித்த பெண்டிரென்றது அப்பழையன் பெண்டிரை.

16. கூந்தன்முரற்சி என்றது அவர் கூந்தலை அரிந்து திரித்த கயிற்றினை.

17. குஞ்சரவொழுகை பூட்டியது அப்பழையன் வேம்பினை ஏற்றிக் கொண்டுபோதற்கு.

18. குடிக்குரியோரென்றது அரசிற்குரியாரை.

## (பதிகம்)

**வ**டவ ருட்கும் வான்றோய் வெல்கொடிக்
குடவர் கோமா னெடுஞ்சேர லாதற்குச்
சோழன் மணக்கிள்ளி யீன்ற மகன்
கடவுட் பத்தினிக் கற்கோள் வேண்டிக்
கானவில் கானங் கணையிற் போகி
ஆரிய வண்ணலை வீட்டிப் பேரிசை
இன்ப லருவிக் கங்கை மண்ணி
இனந்தெரி பல்லான் கன்றொடு கொண்டு
மாறா வல்வி லிடும்பிற் புறத்திறுத்
துறுபுலி யன்ன வயவர் வீழச்
சிறுகுர னெய்தல் வியலூர் நூறி
அக்கரை நண்ணிக் கொடுகூ ரெறிந்து
பழையன் காக்குங் கருஞ்சினை வேம்பின்
முழாரை முழுமுத றுமியப் பண்ணி
வாலிழை கழித்த நறும்பல் பெண்டிர்
பல்லிருங் கூந்தன் முரற்சியாற்
குஞ்சர வொழுகை பூட்டி வெந்திறல்
ஆராச் செருவிற் சோழர்குடிக் குரியோர்
ஒன்பதின்மர் வீழ வாயிற்புறத் திறுத்து
நிலைச்செருவி னாற்றலை யறுத்துக்
கெடலருந் தானையொடு

**கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவனைக் கரணமமைந்த காசறு செய்யுட் பரணர்** பாடினார் பத்துப்பாட்டு.

அவைதாம்: சுடர்வீவேங்கை, தசும்புதுளங்கிருக்கை, ஏறுவேணி, நோய்தபுநோன்றொடை, ஊன்றுவையடிசில், கரை வாய்ப்பருதி, நன்னுதல் விறலியர், பேரெழில்வாழ்க்கை, செங்கை மறவர், வெருவருபுனற்றார்.
இவை பாட்டின் பதிகம்.

பாடிப் பெற்ற பரிசில்: உம்பற்காட்டு * வாரியையும் தன் மகன் குட்டுவன் சேரலையுங் கொடுத்தான் அக்கோ.

கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன் ஐம்பத்தையாண்டு வீற்றிருந்தான்.

(கு - ரை.) 1. வடவர் உட்கும் - வடநாட்டிலுள்ள அரசர் அஞ்சுதற்குக் காரணமான. வான் தோய் வெல்கொடி - மிகவுயர்ந்த வெல்லும் கொடியையுடைய; வான்றோய் என்பது இலக்கணை வழக்கு.

* வாரி - வருவாய்.

2. குடவர்கோமான் - குடநாட்டிலுள்ளார்க்கு அரசனாகிய.

4. கடவுட் பத்தினிக் கல்கோள் வேண்டி - தெய்வமாகிய கண்ணகியின் படிவம் அமைத்தற்பொருட்டுக் கல்கொள்ளுதலை விரும்பி ; "விற்றலைக் கொண்ட வியன்பே ரிமயத்துக், கற்கால் கொள்ளினுங் கடவு ளாகும்", "பொற்கோட் டிமயத்துப் பொருவறு பத்தினிக், கற்கால் கொண்டனன்", "வடபே ரிமயத்து வான்தரு சிறப்பிற், கடவுட் பத்தினிக் கற்கால் கொண்டபின்" (சிலப். 25 : 118 - 9, 26 : 253 - 4, 27 : 1 - 2.)

5. கான் நவில் கானம் - காட்டின் தன்மை மிக்க காட்டில். கணையின் போகி - அம்பைப்போல விரைந்து சென்று.

6. ஆரிய அண்ணலென்றது முன்னொருகால் இவனுக்குத் தோற்ற ஆரியமன்னருள் தலைவனை. வீட்டி - தோற்கச் செய்து ; "உடன்று மேல் வந்த வாரிய மன்னரைக், கடும்புனற் கங்கைப் பேர்யாற்று வென்றோய்" (சிலப். 28 : 120 - 21.)

7. இனிய பல அருவிகளையுடைய கங்கையில் அக்கல்லை நீர்ப்படுத்து ; "கங்கைப் பேர்யாற்றுக் கரையகம் புகுந்து, பாற்படு மரபிற் பத்தினிக் கடவுளை, நூற்றிறன் மாக்களி னீர்ப்படை செய்து" (சிலப். 27 : 14 - 6.)

8. நல்ல இனமென்று ஆராயப்பட்ட பல பசுக்களை அவற்றின் கன்றுகளோடு கைக்கொண்டு.

9. நீங்காத வல்வில்லையுடைய இடும்பாதவனத்தினிடத்தே தங்கி ; இங்கே வல்வில்லென்றது பல இலக்குக்களை ஒரே காலத்தில் ஊடுருவிச் செல்லும்படி எய்யும் திறமையுடைய விற்படையை ; வல்வில் : புறநா. 152: 1 - 6.

10. வலி மிக்க புலியைப்போன்ற வீரர் வீழும்படி : வீரர்க்குப் புலி : "உறுபுலித் துப்பி னோவியர் பெருமகன்" (சிறுபாண். 122.)

11. சிறிய கொத்தாகிய நெய்தற் பூக்களையுடைய வியலூரை அழித்து; "சிறுகுர னெய்தல் வியலூ ரெறிந்தபின்" (சிலப். 28 : 115.); வியலூர் நன்னன் வேண்மானுடையதென்று, "நறவுமகி ழிருக்கை நன்னன் வேண்மான், வயலை வேலி வியலூர்" (அகநா. 97 : 12 - 3) என்பதனால் தெரிய வருகின்றது. சிறுகுரனெய்தல் : அகநா. 120 : 16.

12. கொடுகூர் : ஓரூர்.

13 - 4. பழையன் என்னும் குறுநிலமன்னன் தன் காவல்மரமாகக் காத்துவந்த, கரிய கிளைகளையுடைய வேம்பினது முழவைப்போன்ற அடிமரத்தை வெட்டச்செய்து (சிலப். 27 : 124 - 5.)

முழாரை ; மரூஉ. 'முழவுத்தா ளெரிவேங்கை" (கலி. 44 : 4) ; "முழாவரைப் போந்தை" (புறநா. 85 : 7.)

15. கணவனை இழந்த மகளிர் இழை கழித்தல் : "மெல்லியன் மகளிரு மிழைகழித் தனரே" (புறநா. 224 : 17.) வாலிழை யென்றது முத்தாரத்தை. நறும்பல் பெண்டிரென்றது அவருடைய இயற்கைமணத்தைக் கூறியபடி. 16. ஐம்பாலாதலின் பல்லிருங் கூந்தலென்றார் ; குறுந். 19 : 5, உரை, ஒப்பு.

17. பழையனது யானைகளைச் சகடவொழுங்கிற்கடாக்களாகப் பூட்டி.

18 - 9. செய்து செய்து அமையாத போரையுடைய சோழரது குடியில் அரசிற்கு உரியோராகிய ஒன்பதுபேர் போரில் விழும்படி நேரிவாயிலின் புறத்தே தங்கி ; "பெருவளக் கரிகான் முன்னிலைச் செல்லார், சூடா வாகைப் பறந்தலை யாடுபெற, ஒன்பது குடையு நன்பக லொழித்த, பீடின்

182—9

மன்னர்" (அகநா. 125 : 18 - 21); "மைத்துன வளவன் கிள்ளியொடு பொருந்தா, ஒத்த பண்பின ரொன்பது மன்னர், இளவரசு பொருஅ ரேவல் கேளார், வளநா டழிக்கு மாண்பின ராதலின், ஒன்பது குடையு மொருபக லொழித்தவன், பொன்படு திகிரி யொருவழிப் படுத்தோய்", "ஆர்புனை தெரிய லொன்பது மன்னரை, நேரி வாயி னிலைச்செரு வென்று, நெடுந் தேர்த்தானையோ டிடும்பிற் புறத்திறுத்துக், கொடும்போர் கடந்து" (சிலப். 27 : 118 - 23, 28 : 116 - 9.) நேரிவாயிலை வாயிலென்றது முதற் குறை; 'நேரிவாயில் : உறையூர்த் தெற்கில் வாயிலதோரூர்' (சிலப். 28 : 117, அரும்பத.)

20. நிலைச்செருவின் ஆற்றலை அறுத்து - நாடோறும் செய்யும் போரின் வலியைக் குறைத்து.

மு. 'இக்கதையைப் பதிற்றுப்பத்தினுள் அஞ்சாம் பத்தின் முடிவின் கண், "வடவ ருட்கும்" என்னும் கவியுள்ளும்.........காண்க' (சிலப். பதி. 1 - 2, அடியார்.)

ஐந்தாம்பத்து முற்றிற்று.

---

## ஆறாம் பத்து

(ருக) **து**ளங்குநீர் வியலகங் கலங்கக் கால்பொர
விளங்கிரும் புணரி யுருமென முழங்கும்
கடல்சேர் கானற் குடபுல முன்னிக்
கூவற் றுழந்த தடந்தா ணாரை
குவியிணர் ஞாழன் மாச்சினைச் சேக்கும்
வண்டிறை கொண்ட தண்கடற் பரப்பின்
அடும்பம லடைகரை யலவ னாடிய
வடுவடு நுண்ணயி ரூதை யுஞற்றும்
தூவிரும் போந்தைப் பொழிலணிப் பொலிதந்
தியலின ளொல்கின ளாடு மடமகள்
வெறியுறு நுடக்கம் போலத் தோன்றிப்
பெருமலை வயின்வயின் விலங்கு மருமணி
அரவழங்கும் பெருந்தெய்வத்து
வளைஞர லும் பனிப்பௌவத்துக்
குணகுட கடலோ டாயிடை மணந்த
பந்த ரந்தரம் வேய்ந்து
வண்பிணி யவிழ்ந்த கண்போ னெய்தல்
நனையுறு நறவி னாடுடன் கமழச்
சுடர்நுதன் மடநோக்கின்

வாணகை யிலங்கெயிற்
றமிழ்துபொதி துவர்வா யசைநடை விறலியர்
பாடல் சான்று நீடினை யுறைதலின்
வெள்வே லண்ணன் மெல்லியன் போன்மென
உள்ளுவர் கொல்லோநின் னுணரா தோரே
மழைதவழும் பெருங்குன்றத்துச்
செயிருடைய வரவெறிந்து
கடுஞ்சினத்த மிடறபுக்கும்
பெருஞ்சினப்புய லேறனையை
தாங்குநர், தடக்கை யானைத் தொடிக்கோடு துமிக்கும்
எஃகுடை வலத்தர்நின் படைவழி வாழ்நர்
மறங்கெழு போந்தை வெண்டோடு புனைந்து
நிறம்பெயர் கண்ணிப் பருந்தூ றளப்பத்
தூக்கணை கிழித்த மாக்கட் டண்ணுமை
கைவ லிளையர் கையலை யழுங்க
மாற்றருஞ் சீற்றத்து மாயிருங் கூற்றம்
வலைவிரித் தன்ன நோக்கலை
கடியையா னெடுந்தகை செருவத் தானே.

**துறை - வஞ்சித்துறைப்பாடாண் பாட்டு.**
**வண்ணம் - ஒழுகு வண்ணமும் சொற்சீர் வண்ணமும்.**
**தூக்கு - செந்தூக்கும் வஞ்சித்தூக்கும். பெயர் - வடுவடு நுண்ணயிர் (8.)**

(ப - ரை.) 3. குடபுலமென்றது தன் நகரிக்கு மேல்பாலாம்.

மாச்சினைச் சேக்கும் (5) பொழில் (9), வண்டு இறைகொண்ட (6) பொழில் (9), அடைகரைப் (7) பொழில் (9) எனக் கூட்டுக.

8. வடுவையடுதல் - வடுவை மாய்த்தல். ஊதை உளுற்றுதல் - அவ்வடு மாயும்படி நுண்ணிய அயிரை முகந்து தாவுதலிலே முயல்கை; அயிர் - நுண்மணல்.

வடுவை மாய்க்கும் நுண்ணயிரெனற்பாலதனை வடுவடு நுண்ணயிரென்று கூறிய சிறப்பானே இதற்கு, '**வடுவடு நுண்ணயிர்**' என்று பெயராயிற்று.

9. பொழிற்கண் ஒப்பனையாற் பொலிவுபெற்றென்றவாறு.

10. இயலுதல் - உலாவுதல். ஒல்குதல் - அசைதல்.

11. வெறியுறு நுடக்கம் - இயல்பாக நுடங்கலன்றித் தெய்வமேறிய விகாரத்தால் நுடங்குதல். 13. அரவழங்குதல் - அரவாடுதல்.

11 - 3. வெறியுறு நுடக்கம்போல அரவழங்குமெனக் கூட்டுக.

அரவழுங்கும் (13) பெருமலைப் (12) பெருந்தெய்வம் (13) என மாறிக் கூட்டுக. 12. பெருமலை : இமயம்.

குண குடகடல் (15) எனக் கிழக்கும் மேற்கும் எல்லை பின்கூறுகின்ற மையான், வளைஞரலும் பனிப்பௌவம் (14) என்றது தென்னெல்லையாம்.

தெய்வத்து (13), பௌவத்து (14) என்னும் அத்துக்கள் ஈண்டுச் சாரியைப் பொருண்மையைச் செய்யாமையின் அசைநிலையெனப்படும்.

15. ஒடு : எண்ணொடு. ஆயிடையென்றது அவற்றின் நடுவென்றவாறு.

பெருந்தெய்வம் (13) பனிப்பௌவம் (14) குணகடல் குடகடல் (15) ஆகிய அவ்வெனக் கூட்டுக.

15. * அவ்வென்னும் சுட்டுமுதல் வகாரவீற்றுப்பெயர் ஆயிடையென முடிந்தது.

15 - 6. ஆயிடை மணந்த பந்தரென்றது ஆயிடையிலுள்ள அரசரும் பிறரும் சேவித்தற்கு வந்து பொருந்தின பந்தரென்றவாறு.

ஆயிடையென்றது ஆயிடையிலுள்ளாரை.

16. பந்த ரந்தரமென்றது பந்தரின் உள்வெளியை. வேய்தல் - வேய்ந் தாற்போல நெய்தன்மாலைகளை நாற்றுதல். வேயவெனத் திரிக்க.

18. நறவினொடுவென ஒடு விரிக்க.

22. பாடல்சான்றென்பதனைச் சாலவெனத் திரிக்க.

23. மெல்லியனென்றது ஐம்புலன்களிடத்தும் மனநெகிழ்ச்சியுடையனென்றவாறு.

கடுஞ்சினத்த (27) அரவு (26) என மாறிக் கூட்டுக.

30. படைவழிவாழ்நரென்றது படையிடமாக வாழும் படையாளரை.

மறங்கெழு (31) கண்ணி (32) எனக் கூட்டுக.

32. நிறம்பெயர்தல் - உதிரத்தால் நிறம்பெயர்தல். ஊறளத்தல் - உறுதற்கு ஆராய்தல்.

கையலை யழுங்க (34) என்னும் எழுவாயையும் பயனிலையையும் ஒரு சொல்நீர்மைப்படுத்தித் தண்ணுமை (33) என்னும் எழுவாய்க்குப் பயனிலையாக்குக.

36. நோக்கென்றது மாற்றார்படையைத் தப்பாமல் ஒன்றுகக் கொல்லக் கருதின நோக்கென்றவாறு.

பருந்தூறளப்பக் (32) கையலையழுங்க (34) என நின்ற செயவெனெச் சங்களை நோக்கலை (36) என்னும் முற்றுவினைக்குறிப்பொடு முடிக்க.

நீ குடபுலமுன்னிப் (3) போந்தைப் பொழிலணிப் பொலிதந்து (9) நெய்தல் (17) நறவினொடு கமழ (18) விறலியரது (21) பாடல் சாலப் புறத்து வினையின்மையின் (22) † விநோதத்திலே நீடியுறைதலாலே, நீ அவ்வாறு நீடியதறியாது அண்ணல் மெல்லியன்போன்மென (23) நின்னை உணராதோர் உள்ளுவர்களோ (24)? நீதான் அரவோடொக்கும் நின்பகைவரைக் கடுக அழிக்க வேண்டுநிலைமையில் அவ்வரவினைக் கடுக அழிக்கும் (26) உருமேற்றினையொப்பை (28) ; அவ்வாறு விரையச் செய்யும் நிலைமைக்

* பதிற். 11 : 24, உரை.

† விநோதம் - பொழுதுபோக்கு.

கண் நினக்கேற்ப நின்படைவழி வாழ்நரும் * காலாண்மேற் செல்லாது (30) தாங்குநர் யானைக்கோடு துமிக்கும் (29) எஃகுடை வலத்தராயிருப்பர் (30); அவ்வாறு நீ அழியாது மாறுபாடாற்றிப் பொருதழிக்கும்வழி நின்முடிக் கண்ணியை, உதிரம் தெறித்தலால் நிறம்பெயர்தலிற் பருந்து உறுதற்கு அளப்ப (32), நின்முன்னர் வழங்கும் மாக்கட் டண்ணுமை நின்னெதிர் நின்று மாற்ருரெய்தலையுடைய அம்பு கண்கிழித்தலால் (33) ஒலியொழியக் (34) கூற்றம் (35) வலைவிரித்தாற்போலக் களத்தில் எதிர்ந்த மாற்ருர் படையை யெல்லாம் ஒன்ருகக் கொல்லக்கருதி நோக்கின நோக்கினை யுடையை (36); நெடுந்தகாய், இவ்வாறு செருவத்துக் கடியை (37) என வினைமுடிவு செய்க.

இதனாற்சொல்லியது அவன்வினைத்து மென்மையும் செருவகத்துக் கடுமையும் உடன்கூறியவாருயிற்று.

29. தாங்குநர் தடக்கையானைத் தொடிக்கோடு துமிக்குமென்று † எதிருன்றினர் மேற்சேறல் கூறினமையான், இஃது எடுத்துச்செலவின் மேற்ருய் வஞ்சித்துறைப் பாடாணுயிற்று.

'அரவழுங்கும்' (13) என்பது முதலாக இரண்டு குறளடியும், 'பந்தரந்தரம் வேய்ந்து' (16) என ஒரு சிந்தடியும், 'சுடர்நுதல்' (19) என்பது முதலாக இரண்டு குறளடியும், 'மழைதவழும்' (25) என்பது முதலாக நாலு குறளடியும் வந்தமையான் வஞ்சித்தூக்குமாயிற்று.

'தாங்குநர்' (29) என்பது கூன்.

(கு - ரை.) 1 - 22. சேரனது பொழுதுபோக்குச் சிறப்புக் கூறப்படும்.

1 - 9. கடற்கரைச் சோலையின் இயல்பு.

1 - 3. அசைகின்ற நீரையுடைய அகன்ற கடற்பரப்புக் கலங்கும்படி காற்று அடித்தலால் விளங்குகின்ற பெரிய அலைகள் இடியோசைபோல முழங்குகின்ற கடலைச் சேர்ந்த சோலையையுடைய தன் நகரத்தின்மேல் பாலுள்ள இடத்துக்குச் செல்லக் கருதி.

4 - 9. பனங்காட்டின் இயல்பு.

4 - 5. பள்ளங்களில் இரையின்பொருட்டுத் துழாவிய வளைந்த காலையுடைய நாரை, குவிந்த பூங்கொத்துக்களையுடைய ஞாழல்மரத்தினது பெரிய கிளையினிடத்தே தங்கும்.

6 - 9. வண்டுகள் தங்குதல்கொண்ட குளிர்ந்த கடற்பரப்பில், அடம்பங் கொடிகள் தழைத்து வளர்ந்த நீரையடைந்த கரையில் நண்டுகள் விளையாடியதனால் உண்டான சுவடுகளை மறைக்கின்ற நுண்ணிய மணலைக் காற்று வீசுகின்ற, தூய கரிய பனஞ்சோலையில் அலங்காரத்தாற் பொலிவு பெற்று.

சேக்கும் (5) கொண்ட (6) உஞற்றும் (8) என்னும் எச்சங்களைப் பொழில் (9) என்னும் பெயரோடு முடிக்க.

10. "ஒருதிறம், பாடனல் விறலிய ரொல்குபு நுடங்க" (பரி. 17: 15.)

10 - 13. உலாவினளாய், அசைந்தனளாய் ஆடுகின்ற மடப்பத்தையுடைய மகளது, தெய்வம் ஏறியதனால் அசைகின்ற அசைவைப்போலத் தோன்றி, இடந்தோறும் இடந்தோறும், குறுக்கிட்டுக்கிடந்து விளங்கும் அரிய

* பதிற். 54 : 16 - 7, உரை.

† எதிருன்றினர் - காஞ்சித்திணைக்குரியோர்; "உட்கா, தெதிருன்றல் காஞ்சி" (பழம் பாட்டு.)

மணிகளையுடைய பாம்புகள் ஆடுகின்ற, பெரிய மலையாகிய பெருந் தெய்வமும்; தெய்வத்து: அத்து வேண்டா வழிச் சாரியை. பாம்பு ஆடுதலுக்கு விறலி ஆடுதல் உவமை.

14. சங்குகள் ஒலிக்கும் குளிர்ச்சியையுடைய கடலும்; பௌவத்து: அத்து வேண்டாவழிச் சாரியை.

15. குணகடலும் குடகடலும் ஆகிய எல்லையையுடைய அவ்விடத்தே உள்ள அரசரும் பிறரும் ஒன்று கூடினர்; கூடியது சேரனைச் சேவித்தற் பொருட்டு.

16. பந்தரின் உள்ளிடத்தை வேய்ந்தாற்போல (நெய்தல் மாலைகளை)த் தொங்கவிடுதலால்; வேய்ந்து - வேய; எச்சத்திரிபு.

17 - 8. வளவிய முறுக்கு அவிழ்ந்த கண்ணைப்போன்ற நெய்தல் தேன் பொருந்திய நறவம்பூவோடு நாடுமுழுவதும் நறுமணம் வீச; நறவு: ஒருவகை மலர் (பரி. 7 : 63 - 4.)

19 - 21. விறலியரது வருணனை.

ஒளிபொருந்திய நெற்றியையும், மடப்பம் பொருந்திய பார்வையையும், மிக்க ஒளியையுடைய விளங்குகின்ற பற்களையும், அமிழ்துபோன்ற நீரை அடக்கிய சிவந்த வாயையும், தளர்ந்த நடையையுமுடைய விறலியரது.

வாள்நகை : ஒரு பொருட்பன்மொழி.

22. பாடல் மிகுதலின் அங்கே தாமதித்தனையாய்த் தங்குதலால்.

23 - 4. வெள்ளிய வேலையுடைய சேரன் ஐம்புலன்களிடத்தும் நெகிழ்ச்சியுடையான் போலுமென்று நின் இயல்பை முற்ற உணராதோர் நினைப்பார்களோ ?

25 - 8. சேரனுக்கு இடி உவமை.

மேகங்கள் தவழ்கின்ற பெரிய மலையில், குற்றமுடைய பாம்புகளை உருட்டி அவற்றின் மிக்க கோபத்தையுடைய வன்மையைக் கெடுக்கும் மிக்க சினத்தையுடைய மேகத்தில் தோன்றும் சிறந்த இடியை ஒப்பாய்.

பகையரசர்க்குப் பாம்பும் சேரனுக்கு இடியும் உவமை; "வரையுதிர்க்கும், நரையுருமி னேறனையை" (மதுரைக். 62 - 3): "இளைய தாயினுங் கிளையரா வெறியும், அருநரை யுருமிற் பொருநரைப் பொறுஅச் செருமாண் பஞ்சவ ரேறே" (புறநா. 58 : 6 - 8.)

29 - 30. சேரனுடைய படைவீரரது சிறப்பு.

தம்மைத் தடுத்து நிற்பவரது வளைந்த துதிக்கையையுடைய யானையினது பூணை அணிந்த கொம்பை வெட்டும் வாளையுடைய வெற்றியையுடையர் நின் படையில் வாழும் வீரர்.

31 - 7. போர்க்களத்தில் சேரனுடைய நிலை.

31 - 2. வீரம்பொருந்திய பனையின் வெள்ளிய ஓலையை அணிந்து, இரத்தத்தால் தன் நிறம் நீங்கிய போர்க்கண்ணியிடத்தே உறுதலைப் பருந்து ஆராயவும். இரத்தம் படிந்த பனந்தோட்டைப் பருந்து ஊனென்று மயங்கி அதனைக் கொத்தக் கருதியது. புனைந்து நோக்கலை (36) என இயையும்.

33 - 4. மாமிசத்தையுடைய அம்பு கிழித்த கரிய கண்ணையுடைய தண்ணுமை வாசித்தலிற் கைவல்ல இளையர்தம் கையால் வருந்துதல் கெடவும். தூக்கணை : "புலவுக்கணை" (பு. வெ. 10.)

35 - 7. நெடுந்தகாய், பரிகாரம் இல்லாத கோபத்தையுடைய கரிய பெரிய கூற்றுவன் தன் வலையை விரித்தாற்போன்ற பார்வையையுடையை

யாய்ப் போர்க்களத்தில் பகைவர்க்கு அச்சத்தைச் செய்தலையுடையாய் ; "நீயே, மருந்தில் கணிச்சி வருந்த வட்டித்துக், கூற்றுவெகுண் டன்ன முன்பொடு, மாற்றிரு வேந்தர் மண்ணோக் கினையே" (புறநா. 42 : 22 - 4.)

விறலியர் பாடலை நுகரும்பொழுது உருகுதலும் வண்மையும் உடையனாகி மெல்லியன் போலத் தோற்றினும் பகைவரை அடுதலில் மிகவலியானென்றபடி.

(பி - ம்.) 12. விலங்கு மட்டுமணி. 13. அரவு வழங்கும்.
33. தூகணைகிழித்த. 35. மாவருங் கூற்றம்.
37. கடியை நெடுந்தகை செருவகத் தானே. (க)

---

(ருஉ) கொடிநுடங்கு நிலைய கொல்களி றிடைந்து
வடிமணி நெடுந்தேர் வேறுபுலம் பரப்பி
அருங்கலந் தரீஇயர் நீர்மிசை நிவக்கும்
பெருங்கலி வங்கந் திசைதிரிந் தாங்கு
மையணிந் தெழுதரு மாயிரும் பஃறோல்
மெய்புதை யரண மெண்ணா தெஃகுசுமந்து
முன்சமத் தெழுதரும் வன்க ணாடவர்
தொலையாத் தும்பை தெவ்வழி விளங்க
உயர்நிலை யுலக மெய்தினர் பலர்பட
நல்லமர்க் கடந்தநின் செல்லுறழ் தடக்கை
இரப்போர்க்குக் கவித லல்லதை யிரைஇய
மலர்பறி யாவெனக் கேட்டிகு மினியே
சுடரும் பாண்டிற் றிருநா றுவிளக்கத்து
முழாவிமிழ் துணங்கைக்குத் தழூஉப்புணை யாகச்
சிலைப்புவல் லேற்றிற் றலைக்கை தந்துநீ
நளிந்தனை வருத லுடன்றன ளாகி
உயவுங் கோதை யூரலந் தித்தி
ஈரிதழ் மழைக்கட் பேரிய லரிவை
ஒள்ளித ழவிழகங் கடுக்குஞ் சீறடிப்
பல்சில கிண்கிணி சிறுபர டலைப்பக்
கொல்புனற் றளிரி னடுங்குவன ணின்றுநின்
எறிய ரோக்கிய சிறுசெங் குவளை
ஈயென விரப்பவு மொல்லா ணீயெமக்
கியாரை யோவெனப் பெயர்வோள் கையதை
கதுமென வுருத்த நோக்கமோ டதுநீ
பாஅல் வல்லா யாயினை பாஅல்

யாங்குவல் லுநையோ வாழ்கநின் கண்ணி
அகலிரு விசும்பிற் பகலிடந் தரீஇயர்
தெறுகதிர் திகழ்தரு முழுகெழு ஞாயிற்
றுருபுகிளர் வண்ணங் கொண்ட
வான்றோய் வெண்குடை வேந்தர்தம் மெயிலே.

**துறை - குரவைநிலை. வண்ணம் - ஒழுகுவண்ணம்.**
**தூக்கு - செந்தூக்கு. பெயர் - சிறுசெங் குவளை. (22.)**

(ப - ரை.) வங்கம் திசைதிரிந்தாங்குக் (4) கொல்களிறுமிலைடந்து (1) என மாறிக் கூட்டுக.

13. திருநாறு விளக்கென்றது செல்வமுடைமையெல்லாம் தோன்றும் விளக்கு. 16. நளிதல் - தன்னைச் * சேவிக்கும் மகளிரொடு குரவையாடிச் செறிதல்.

17. ஊரலந்தித்தி - ஊரலையுடைய் தித்தி ; அம்முச் சாரியை. 18. ஈரிதழ் - குளிர்ந்த இமை. 19. அவிழகமென்றது அவிழ்ந்த பூவினை.

22. தான் அவனை எறிதற்கு ஒக்கிய சிறியதொரு செங்குவளையெனச் சிறுமையால் அவள்மென்மை கூறிய சிறப்பான் இதற்கு, '**சிறு செங்குவளை**' என்று பெயராயிற்று.

இரப்ப (23) என்னும் செயவெனெச்சத்தினைக் கையதை (24) என்னும் முற்றுவினைக்குறிப்பொடு முடிக்க.

சிறுசெங்குவளை (22) பெயர்வோள் கையதை (24) என முற்றாக அறுத்து, அது (25) எனப் பின் கூட்டிற்றாக்குக.

28. பகலிடம் - பகற்பொழுது.

30. உருபு கிளர் வண்ணம் - நிறம் விளங்கின தன்மை.

வண்ணங்கொண்ட (30) வேந்தர் (31) எனக்கூட்டி † ஞாயிறுபோலக் கோபித்து எதிர்நின்ற வேந்தரென உரைக்க.

நல்லமர்க் கடந்த நின்தடக்கை (10) இரப்போர்க்குக் கவிதலல்லதை இரைஇய (11) மலர்பறியாவெனக் கேட்டிகும் (12) ; இனி, துணங்கைக்குத் (14) தலைக்கை தந்து நீ (15) நளிந்தனைவருதல் உடன்றனளாகி (16) நின்னரிவை (18) நின் (21) எறியர் ஒக்கிய சிறுசெங்குவளையானது (22) நீ (25) ‡ ஈயென்று இழிந்தோன்கூற்றான் இரப்பவும் நினக்கு ஈந்துபோகாது நின்இரப்பிற்கு ஒல்லாளாய் நீ எமக்கு (23) யாரென்று பெயர்வோள் கையதாயிருந்தது (24) ; அவ்வாறு இரந்து நீ பெறாது அவளை உருத்த நோக்கமொடு அதை அவள்பானின்றும் (25) பகுத்துக்கொள்ளமாட்டாயாயினை (26) ; அவ்வாறு அது பகுக்கமாட்டாத நீ வேந்தர்களெயிலைப் (31) பகுத்துக்கோடல் (26) யாங்கு வல்லையாயினாய் ? நின் கண்ணி வாழ்க (27) என மாறி வினைமுடிவு செய்க.

பாஅல் (26) யாங்கு வல்லுநையோ (27) என்றதன்முன் எயில் (31) என்பது கூட்ட வேண்டுதலின் மாறாயிற்று.

இதனாற் சொல்லியது அவன் கைவண்மையொடும் வென்றியொடும் படுத்து அவன் காமவின்பச்சிறப்புக் கூறியவாறாயிற்று.

---

* முருகு. 212, உரை. † பொருந. 135 - 6. ‡ தொல். எச்ச. 49.

இப்பாட்டு, துணங்கையாடுதல் காரணமாகப் பிறந்த ஊடற்பொருட் டாகையாற் குரவைநிலை யென்றவாருயிற்று.

(கு - ரை.) 1 - 2. சேரனுடைய பகைவரது படைச்சிறப்பு.

1. கொடிகள் அசைகின்ற நிலையையுடைய ஆண்யானைகள் நெருங் கப்பெற்று. யானையின்மீது கொடி விளங்குதல்: **நெடுநல்.** 87; **பதிற்.** 69 : 1 - 2, 88 : 17. 2. திருந்திய தொழிலையுடைய மணிகளைக் கட்டிய உயர்ந்த தேர்களை வேறிடங்களில் பரவச்செய்து.

3 - 4. பிறநாடுகளிலுள்ள அரிய ஆபரணங்களைத் தரும்பொருட்டுக் கடல்நீரில் உயர்ந்துசெல்லும் பெரிய ஆரவாரத்தையுடைய கப்பல் திசை களிலே திரிந்தாற்போல, திரிந்தாங்குக் (4) களிறு மிடைந்து (1) என இயைக்க; "விழுமிய நாவாய் பெருநீ ரோச்சுநர், நனந்தலைத் தேஎத்து நன்கல னுய்ம்மார், புணர்ந்துடன் கொணர்ந்த புரவி" (**மதுரைக்.** 321 - 3.) யானைக்குக் கப்பல் : **மதுரைக்.** 379 - 83; **நற்.** 74 : 3 - 4; **புறநா.** 26 : 1 - 3.

5. மேகத்தை ஒத்து எழுகின்ற கரிய பெரிய பரிசைப்படையினையும்; பரிசைக்கு மேகம் உவமை: **பதிற்.** 62 : 2; "மழையென மருளும் பஃ றோல்" (**புறநா.** 17 : 34.) அணிந்து : உவமவுருபு. மை அணிந்து - மை பூசப்பெற்று எனலுமாம்.

6 - 7. உடலை மூடுகின்ற கவசத்தையும் வேண்டுமென்று எண்ணுமல் வேலையும் தாங்கிப் போர்க்களத்தின்முன்னே புறப்பட்டுச் செல்லும் அஞ்சா மையையுடைய வீரர்; இவர் காலாட்படையிலுள்ள வேல்வீரர்.

8 - 9. தோல்வியடையாமைக்குக் காரணமான தும்பையானது பகை வரிடத்தே விளங்கும்படி, உயர்ந்த நிலையையுடைய வீரசுவர்க்கத்தை அடைந்தனராய்ப் பலர் இறக்கும்படி; பலர் இறந்து வீரசுவர்க்கத்தை யடைய என்பது கருத்தாகக் கொள்க. பகைவரிடத்தே பொருங்கால் அதி ரப் பொருது சிறத்தலின் அவர் அணிந்த தும்பை விளங்குவதாயிற்று.

10 - 12. சேரனது கொடைச் சிறப்பு.

நல்ல போர்களை வஞ்சியாது எதிர்நின்று வென்ற நினது, இடியை ஒத் துப் பகைவரை அழிக்கின்ற பெரிய கைகள், நின்பால் வந்து இரப்பவர் களுக்கு அவர்கள் வேண்டியவற்றைக் கொடுத்தற்பொருட்டுக் கவிதல் அல் லாமல், பிறரிடம் சென்று இரத்தற்கு விரிதலை அறியா எனக் கேட்டோம்; இப்பொழுதோ எனின். **பதிற்.** 44 : 5 - 6.

செல்லுறழ் தடக்கை; **முருகு.** 5, **ந.**

13 - 6. சேரன் தன்னைச் சேவிக்குமகளிரோடு குரவையயர்தல்.

13. ஒளிவிடும் காலையுடைய, செல்வமெல்லாம் விளங்கித் தோன்றும் விளக்கின் ஒளியிலே.

14 - 6. முழவு ஒலிக்கின்ற, மகளிர் ஆடுகின்ற துணங்கைக் கூத்திற் குத் தழுவுதலையுடைய தெப்பமாக, முழங்குதலில் வல்ல ஏற்றைப்போல முதற்கையைக் கொடுத்து நீ அவர்களோடு செறிந்துவருதலை அறிந்து சினம் கொண்டவளாகி; "நிரைதொடி நல்லவர் துணங்கையுட் டலைக்கொள்ள, கரையிடைக் கிழிந்தநின் காழகம்வந் துரையாக்கால்" (**கலி.** 73 : 16 - 7); "மெல்லிணர்க் கண்ணி மிலைந்த மைந்தர், எல்வளை மகளிர் தலைக்கை தரூஉந்து" (**புறநா.** 24 : 8 - 9.)

17 - 8. வருந்துகின்ற மாலையைப்போன்ற தன்மையையும், பரவுதலை யுடைய தேமலையும், குளிர்ந்த இமைகளையுடைய மழைபோன்ற கண்களை யும் உடைய பெரிய இயல்பையுடைய நின் தேவி.

19 - 22. சேரன் பெருந்தேவியின் ஊடல் கூறப்படும்.

19 - 20. ஒள்ளிய இதழையுடைய பூவைப்போன்ற சிறிய அடியின் கண் அணிந்த, பலவாகிய இரண்டு கிண்கிணிகள் சிறிய பரட்டை வருத்த; "பைம்பொற் கிண்கிணி பரட்டுமிசை யார்க்கும், செந்தளிர்ச் சீறடி" (பெருங். 2. 3 : 85 - 6.) உறுப்பு வகையினாற் பலவாகவும், எண்ணால் இரண் டாகவும் அமைதலின், 'பல் சில கிண்கிணி' என்றார்.

21. கரையை இடிக்கின்ற நீரிலேயுள்ள தளிரைப்போல நடுங்குகின்ற வளாய் நின்று.

கோபத்தாலும் கரணத்தாலும் நடுங்கிற்றெனை ஊடலும் கூடலுமுணர்த் திற்று (சீவக. 134, ந.)

21 - 2. நின்மீது எறிதற்பொருட்டுத் தூக்கிய சிறிய செங்குவளை மலர்.

23 - 4. இரப்போன் கூற்றால் அதனை எனக்கு ஈயென்று நீ கேட்ப வும் தான் அதற்கு மனம் பொருந்தாளாய், "நீ எமக்கு என்ன முறையை யுடையையோ?" என்று சினத்தால் கூறி நீங்குவோளாகிய நின் தேவியின் கையிலுள்ளது; எமக்கு என்றது தன் பெருமிதந்தோன்றக் கூறியது (சிலப். 20 : 12, அரும்பத.); "தொடிய வெமக்குநீ யாரை" (கலி. 88 : 3.) கையதை; ஐகாரம் : அசைநிலை. சிறு செங்குவளை கையது என்க; கை யது : குறிப்பு முற்று.

25 - 6. கோபித்த பார்வையோடு அக் குவளைமலரை நீ நின்பால் விரையப் பகுத்துக்கொள்ளுதலை மாட்டாயாயினாய்.

26 - 7. பகுத்துக்கொள்ளுதலை எவ்வாறு வல்லேயாயினாய்; நின் கண்ணி வாழ்வதாக. கண்ணியை வாழ்த்தல் : பதிற். 56 : 3; "வார்கழல் வேந்தே வாழ்கநின் கண்ணி" (மணி. 5 : 28.)

28 - 9. மற்ற நான்கு பூதங்களும் விரிதற்குக் காரணமான பெரிய ஆகாயத்தில் பகற்பொழுதைச் செய்யும்பொருட்டுச் சுடுகின்ற கிரணங்கள் விளங்குகின்ற அச்சம் பொருந்திய சூரியனது.

30. நிறம் விளங்கின தன்மையைக்கொண்ட : உருபு - உருவமுமாம்.

31. வான்றோய் வெண்குடை வேந்தர்தம் எயில் - வானைத் தோயும் உயர்ந்த வெண்குடையையுடைய பகைவேந்தருடைய மதில்களை.

வண்ணங்கொண்ட (30) வேந்தர் (31) என்க.

எயிலைப் (31) பாஅல் (26) யாங்குவல்லுநையோ (27) என இயைக்க.

இச்செய்யுளில் ஒன்றற்கு ஒன்று முரண்பாடாகத் தோற்றும் இரு வகைச் செய்திகள் சொல்லப்பட்டன. சேரன் பிறர்பால் இரக்கும் இயல் பினன் அல்லனாயினும் ஊடிய தேவியின்பால் சிறு செங்குவளையை இரப்பவ னானான்; பகைவருடைய பெரிய மதில்களைக் கைக்கொள்ளும் வன்மையை யுடையவனாயினும் தன் தேவியினிடமிருந்து சிறு செங்குவளையையும் கொள் ளும் வன்மையிலனானான்.

29 - 31. சினங்கொண்ட அரசர்க்குச் சூரியன் உவமை : "ஊழியிற் சினவும், பருதி மண்டில மெனப்பொலி முகத்தினன்" (கம்ப. வருணனை வழி. 15.)

(பி - ம்.) 6. என்னாது. 17. உயலுங். 18. பேரிலரிவை. 20. பல் செல், பல்செங். 22. எறியரோச்சிய. 27. வல்லினையோ. (உ)

(ருரு) வென்றுகலந் தரீஇயர் வேண்டுபுலத் திறுத்தவர்
வாடா யாணர் நாடுதிறை கொடுப்ப
நல்கினை யாகுமதி யெம்மென் றருளிக்
கல்பிறங்கு வைப்பிற் கடறரை யாத்தநின்
தொல்புகழ் மூதூர்ச் செல்குவை யாயிற்
செம்பொறிச் சிலம்பொ டணித்தழை தூங்கும்
எந்திரத் தகைப்பி னம்புடை வாயிற்
கோள்வன் முதலைய குண்டுகண் ணகழி
வானுற வோங்கிய வளைந்துசெய் புரிசை
ஒன்னாத் தெவ்வர் முனைகெட விலங்கி
நின்னிற் றந்த மன்னெயி லல்லது
முன்னும் பின்னுநின் முன்னோ ரோம்பிய
எயின்முகப் படுத்தல் யாவது வளையினும்
பிறிதாறு சென்மதி சினங்கெழு குருசில்
எழூஉப்புறந் தரீஇப் பொன்பிணிப் பலகைக்
குழூஉநிலைப் புதவிற் கதவுமெய் காணிற்
றேம்பாய் கடாத்தொடு காழ்கை நீவி
வேங்கை வென்ற பொறிகிளர் புகர்நுதல்
ஏந்துகை சுருட்டித் தோட்டி நீவி
மேம்படு வெல்கொடி நுடங்கத்
தாங்க லாகா வாங்குநின் களிறே.

**துறை - செந்துறைப் பாடாண்பாட்டு.**
**வண்ணமும் தூக்கும் அது. பெயர் - குண்டுகண்ணகழி (8.)**

(ப - ரை.) 1. அவரென்றது அவ்வாறு இறுக்கும்படி நின்னொடு எதிர்ந்த அரசரென்றவாறு. 2. நாடு திறைகொடுப்பவென்றது நாட்டைத் திறைகொடுப்பவென்றவாறு.

திறை தரவென்றதற்குத் திறைகொடுப்பவென்றது * இடவழுவமைதி.

நல்கினையாகுமதி எம் என்று (2) திறைகொடுப்ப (3) எனக் கூட்டுக.

4. வைப்பு - இடம். கடற்றரையென இரண்டாவது விரிக்க.

சிலம்பும் தழையும் (6) புரிசைக்கண் தங்கின (9) என்றது † ஈண்டுப் பொருவீருளீரேல் நும் காலிற் கழலினையும் அரையிற் போர்க்குரிய உடை

* தொல். கிளவி. 29 - 30.

† "வரிப்புனை பந்தொடு பாவை தூங்க" (முருகு. 68) என்பதும், 'பகைவரை மகளிராக்கி அவர் கொண்டு விளையாடுதற்குத் தூக்கின வென்றவாறு' என்னும் அதன் உரையும் இங்கே அறிதற்பாலன.

யினையும் ஒழித்து இச்சிலம்பினையும் தழையினையும் அணிமினென அவரைப் பெண்பாலாக இகழ்ந்தவாறென்க.

இனி, அவற்றை அம்மதிலில் வாழும் * வெற்றிமடந்தைக்கு அணியென்பாரும் உளர்.

8. கோள்வன் முதலையவென்று முன்வந்த அடைச்சிறப்பான் இதற்கு, '**குண்டுகண் ணகழி**' என்று பெயராயிற்று. 9. வளைந்துசெய்புரிசையென்பதனை வளையச்செய் புரிசையெனத் திரித்துக் காலவழுவமைதியாகக் கொள்க.

வளைந்துசெய்புரிசை (9) ஆகிய நின்னிற்றந்த மன்னெயில் (11) என இருபெயரொட்டு.

11. நின்னிற்றந்த மன்னெயிலென்றது நின்னுற் கொண்டு பிறர்க்குக் கொடுக்கப்பட்ட மன்னெயிலென்றவாறு.

கொடுத்தவென்பதற்குத் தந்தவென்பது இடவழுவமைதி. கொடுத்தவெனவே கொண்டுகொடுத்தவெனக் கோடலென்பது போந்தபொருளாய் விளங்கிற்று. தரப்பட்டவென்பதனைத் தந்தவெனச் † செயப்படுபொருளைச் செய்ததுபோலச் சொல்லிற்றுக்குக. மன்னெயிலல்லதென்புழி மன்னெயிற் கண்ணென ஏழாவது விரித்து அதனைப் பின்வருகின்ற எயின்முகப் படுத்தல் (13) என்பதிடமாகப் படுத்தலென்பதோர் சொல் வருவித்து அதனொடு முடிக்க.

12. முன்னும் பின்னுமென்றது முன்னோர் தாங்கள் இறப்பதற்கு முன்னும் இறந்ததற்குப் பின்னுமென்றவாறு.

பின்னோம்புதலாவது முன்னோர் தமக்குப்பின்னும் இவ்வரசாள்வாரும் நம்மைப்போல இவ்வாறு ஓம்புகவென நியமித்துவைத்தல்.

13. யாவதென்றது அஃது என்ன காரியம்? நினக்குத் தகுவதொன்றன்றென்றவாறு.

16. குழூஉநிலைப்புதவென்றது பல நிலமாகச் செய்த கோபுரவாயிலென்றவாறு. 17. தேமென்றது தேனீ. கடாம் - மதில்கண்டுழிப் போர் வேட்கையாற் பிறக்கும் மதம்.

நீ வேண்டுபுலத்து இறுத்து அவர் (1) திறைகொடுப்ப (2) அருளி (3) நின் (4) மூதூர்ச்செல்குவையாயின் (5) குருசில் (14), வளையினும் (13) பிறிதாறு செல் (14); செல்லுதற்கு யாது காரணமெனின், புதவிற்கதவு மெய் காணின் (16), ஆங்கு நின் களிறு தாங்கலாகா (21); தாங்கவேண்டுவதேல், நின்னிற்றந்த எயின்முகத்துப் படுத்துவதல்லது (11) நின் முன்னோரோம்பிய (12) எயின்முகத்துப்படுத்தல் யாவது (13) என மாறிக்கூட்டி வினைமுடிவு செய்க.

'செல்குவையாயின்' (5) என்பதன்பின் 'பிறிதாறு சென்மதி' (14) என்பதனையும், 'தாங்க லாகா வாங்குநின் களிறு' (21) என்பதன்பின் 'எயின்முகப்படுத்தல்யாவது' (13) என்பதனையும் கூட்டவேண்டுதலின் மாறாயிற்று.

இதனாற் சொல்லியது, அடைந்தவர்க்கு அருளலொடு படுத்து அவன் வென்றிச் சிறப்புக் கூறியவாறாயிற்று.

---

* வெற்றிமடந்தை - துர்க்கை.

† தொல். வினை. 49.

(கு - ரை.) 1. பிறநாடுகளை வென்று அந்நாட்டரசர் திறையாகக் கொடுக்கும் ஆபரணங்களைக் கொணரும்பொருட்டுத் தான் வேண்டிய இடத்திலே படையோடு சென்று தங்கி ; "நாடுகெட வெருக்கி நன்கலந் தரூஉம்", "யாண்டுதலைப் பெயர வேண்டுபுலத் திறுத்து" (பதிற். 83 : 7, 15 : 1.)

பகைவர் கலங்களைத் திறையாகத் தருதல் : பதிற். 90 : 6 - 8 ; "நன் கலங் களிற்றொடு நண்ணா ரேந்தி, வந்துதிறை கொடுத்து" (அகநா. 124 : 1 - 2.)

1 - 3. அப்பகையரசர், 'எம்மைக் காப்பாயாக' என்று கூறிக் குறையாத புதுவருவாயையுடைய தம் நாட்டைத் திறையாகக் கொடுப்ப, அவர்களுக்கு அருள்செய்து ; "ஒல்குபு நிழல்சேர்ந்தார்க் குலையாது காத்தோம்பி, வெல்புக ழுலகேத்த விருந்துநாட் டுறைபவர்" (கலி. 26 : 11 - 2.) நல்கினையாகுமதி யென்று திறைகொடுப்பவெனக் கூட்டுக.

4 - 5. சேரன் தன் நகர்க்கு மீண்டு செல்லுதல்.

கற்கள் விளங்கிய இடங்களையுடைய காடுகளைத் தன் அரையிலே கட்டினாற்போன்று விளங்குகின்ற நினது பழையதாகிய புகழையுடைய பழைய நகருக்கு மீண்டு செல்வாயானால். கடறு - காடு ; காடென்றது மதிலைச் சூழ்ந்த காவற் காட்டை. மலைநாடாதலின் கல்பிறங்கு வைப்பிற் கடறென்றார்.

6 - 9. மதிலின் சிறப்பு.

6 - 7. சிவந்த மூட்டுவாயையுடைய சிலம்போடு அணியாகிய தழை தங்குகின்ற எந்திரக்கட்டினையும், அம்பையுடைய வாயிலையும் ; பொறி - மூட்டுவாய் ; "பொறி, புனைவினைப் பொலங்கோதை" (பரி. 11 : 64 - 5.) "எய்பெரும் பகழி வாயிற் றூக்கி" (தொல். புறத். 12, ந, மேற்.)

8. நீந்திச் செல்ல முயல்வாரைக் கொள்ளுதல் வல்ல முதலையையும் குழிந்த இடத்தையும் கொண்ட அகழியையும் உடைய ; "கராஅங் கலித்த குண்டுகண் ணகழி" (புறநா. 37 : 7.)

9. ஆகாயத்தைப் பொருந்தும்படி உயர்ந்த, அவ்வகழியை வளையும்படி செய்த மதில், புரிசை ஆகிய மன்னெயில் (11) என இயைக்க.

10 - 11. நின்னோடு பொருந்தாத பகைவரது போர் கெடும்படி தடுத்து, நின்னாற் கைக்கொண்டு கொடுக்கப்பட்ட நிலைபெற்ற மதில்களிடத்துச் செலுத்துவதே அல்லாமல்.

12 - 3. தாம் இறப்பதற்கு முன்னும் இறந்தபின்னும் நின்குலத்து முன்னோர் அளித்த மதில்களிடத்தே செல்லுவது நினக்கு என்ன காரியம் ? அது நின்பெருமைக்குப் பொருந்துவது அன்று.

13 - 4. சினம்பொருந்திய குரிசிலே ! வளைந்து செல்லவேண்டியதாயினும், வேறு வழியே செல்லுவாயாக.

15 - 6. மதிற்கதவின் சிறப்பு.

கணையமரத்தால் பாதுகாக்கப்பட்டு, இரும்பினாற் பிணித்தலையுடைய பலகையாற் செய்யப்பட்ட, பலநிலைகளையுடைய கோபுரவாயிலிலேயுள்ள கதவை மெய்யாகக் கண்டால்.

17 - 8. சேரனது யானையின் சினம்.

17. உண்ணும் பொருட்டுத் தேனீக்கள் பரவிய மதத்தால் குத்துக்கோலைக் கடந்து ; மதம் போர்வேட்கையால் பிறந்தது.

18. நிறத்தால் வேங்கைமலரைவென்ற புள்ளிகள் விளங்கித்தோன்றுகின்ற நெற்றியினிடத்தே ; புகர்நுதல் : வாளா பெயர் மாத்திரையாய் நின்றது.

19. ஏந்திய கையைச் சுருட்டி அங்குசத்தைக் கடந்து ; "மதமாக் கொடுந்தோட்டி கைந்நீவி" (பரி. 10 : 49.)

20. மேம்பட்ட என்றமையால் எடுத்த கொடி தன்மீது அசைய.

21. நின்களிறுகள் அவ்விடத்தே அடங்குதல் ஆகா.

கதவு மெய்காணின் தாங்கலாகாவென்றதன் கருத்து அக்கதவைத் தன் கொம்பாற் குத்தச் செல்லுமென்றபடி ; "நீண்மதி லரணம் பாய்ந்தெனத் தொடிபிளந்து, வைந்நுதி மழுகிய தடங்கோட் டியானை" (ஐங். 444.)

நின்முன்னோராற் பாதுகாக்கப்பட்ட வேந்தரது மதில்வழியே செல்லற்க ; வேறுவழியே செல்க என்பது கருத்து.

(பி - ம்.) 4. கடறரையார்த்த. 6. செம்பொற் சிலம்பு. 17. காழக நீவி. (௩)

---

(ருச) **வ**ள்ளியை யென்றலிற் காண்குவந் திசினே
உள்ளியது முடித்தி வாழ்கநின் கண்ணி
வீங்கிறைத் தடைஇய வமைமருள் பணைத்தோள்
ஏந்தெழின் மழைக்கண் வனைந்துவர லிளமுலைப்
பூந்துகி லல்குற் றேம்பாய் கூந்தல்
மின்னிழை விறலியர் நின்மறம் பாட
இரவலர் புன்கண் டீர நாடொறும்
உரைசா னன்கலம் வரைவில வீசி
அனையை யாகன் மாறே யெனையதூஉம்
உயர்நிலை யுலகத்துச் செல்லா திவணின்
றிருநில மருங்கி னெடிதுமன் னியரோ
நிலந்தப விடூஉ மேணிப் புலம்படர்ந்து
படுகண் முரச நடுவட் சிலைப்பத்
தோமர வலத்தர் நாமஞ் செய்ம்மார்
ஏவல் வியங்கொண் டிளையரொ டெழுதரும்
ஒல்லார் யானை காணின்
**நில்லாத் தானை** யிறைகிழ வோயே.

**துறை - காட்சி வாழ்த்து. வண்ணமும் தூக்கும் அது. பெயர் - நில்லாத் தானை (17.)**

(ப - ரை.) 1. வள்ளியனென்பதற்கு வள்ளியையென்றது * இடவழுவமைதி.

2. உள்ளியது முடித்தியென்றது யான் † நினைத்துவந்த காரியத்தை முடியென்றவாறு.

---

* படர்க்கைக்கு முன்னிலை வந்தது. † "முன்ன முகத்தி னுணர்ந்த வர், இன்மை தீர்த்தல் வன்மை யானே" (புறநா. 3 : 25 - 6.)

முடித்தியென்றது ஈண்டு முன்னிலே யேவல்வினை.

3. நடைஇய அமை - பெருத்த மூங்கில்.

நின் மறம் பாட (6) வீசி (8) எனக் கூட்டி, நின் மறம் பாடாநிற்க அதனைக் கேட்டிருந்து வீசியெனவுரைக்க.

வீசி (8) என்னும் வினையெச்சத்தினை ஆகல் (9) என்னும் தொழிற் பெயரொடு முடிக்க.

9. அனையையாகன்மாறேயென்றது அவ்வீசுதற்கு ஏற்ற அத்தன்மையையுடையையாகையானென்றவாறு.

மாறென்பது ஆனென்னும் உருபின் பொருள்படுவதோர் இடைச் சொல்.

அத்தன்மையாவது இன்முகமும் இன்சொல்லு முதலாயின.

எனையதூஉமென்றது சிறிதுகாலமுமென்றவாறு; உம்மை நெடுங் காலமேயன்றிச் சிறிதுகாலமுமென எச்சவும்மை.

12. நிலந்தப இடூஉம் ஏணிப்புலமென்றது நிலவகலம் குறைபட இட்ட எல்லையையுடைய பாசறையென்றவாறு. என்றது மாற்றார்பாசறையை.

முரசம் நடுவட் (13) படர்ந்து (12) சிலைப்ப (14) எனக் கூட்டி * முரசம் பாசறைநடுவேதான் நின்று தன்னொலி பாசறையெங்கும் படர்ந்துகொண்டு படையை ஏவியொலிப்பவெனவுரைக்க.

14. தோமரம் - தண்டாயுதம். வலத்தரென்றது வினையெச்ச வினைக் குறிப்புமுற்று.

நாமஞ்செய்ம்மார் (14) இளையரொடெழுதரும் (15) ஒல்லார் (16) எனக் கூட்டுக.

15. ஏவல் வியங்கொண்டென்றது இளையரை முன்பு போர்க்குக் கையும் அணியும் வகுப்புழி ஏவித் தாமும் ஏவல்களைச் செய்துகொண் டென்றவாறு.

ஏவலையுடைய வியமென இரண்டாவது விரிக்க. வியம் - ஏவல்.

யானை காணின் (16) நில்லாத்தானை (17) என்றது † காலாள்முதலாயின வற்றைத் தரமல்லவென்று கழித்துநின்று யானை காணின் நில்லாது செல் லும் தானையென்றவாறு.

இச்சிறப்பானே இதற்கு, '**நில்லாத் தானை**' என்று பெயராயிற்று.

17. இறைகிழவோயென்றது இறைவனுதற் றன்மையையுடையா யென்றவாறு.

இறைகிழவோய், நின்னை (17) வள்ளியனென்று யாவரும் கூறுத லானே நின்னைக் காண்பேன் வந்தேன் (1); யான் உள்ளியதனை நீ முடிப்பா யாகவேண்டும்; நின்கண்ணி வாழ்வதாக (2); விறலியர் நின் மறம் பாட (6) இரவலர்புன்கண் தீரும்படி (7) நன்கலங்களை வரைவில வீசி (8) அத்தன் மையையாகையாலே, என்போலும் இரவலரது ஆக்கத்தின்பொருட்டுச் சிறிதுகாலமும் (9) இவ்வுலகத்திலே நின்று உயர்நிலையுலகத்திற் செல்லாதே

---

* **பதிற்**. 39 : 5, உரை.

† 'நின்படைவழி வாழ்நரும் காலாண்மேற் செல்லாது தாங்குநர் யானைக் கோடு துமிக்கும் எஃகுடைவலத்தராயிருப்பர்' (**பதிற்**. 51 : 29, உரை.)

(10) இவ்விருநிலமருங்கிலே நெடுங்காலம் நிலைபெறுவாயாக (11) எனக் கூட்டி வினைமுடிவு செய்க.

இதனாற் சொல்லியது அவன் கொடைச்சிறப்பும் தன்குறையும் கூறி வாழ்த்தியவாறாயிற்று.

(கு - ரை.) 1. மக்களெல்லாரும் நின்னை வண்மையையுடையா யென்று கூறுதலால் நின்னைக் காணவந்தேன்.

2. யான் நினைத்ததை அங்ஙனமே முடிப்பாய்; நின் கண்ணி வாழ்க.

3 - 6. விறலியரது வருணனை. 3. வீங்கிய சந்துகளையுடைய, திரண்ட மூங்கிலைப்போன்ற பெருத்த தோளையும் (கலி. 45 : 13 - 5.)

4. ஏந்திய எழுச்சியையுடைய குளிர்ந்த கண்களையும், எழுதப்பட் டாற் போன்று எழுதலையுடைய இளைய நகிலையும்.

5. பூத்தொழிலையுடைய துகிலையணிந்த அல்குலையும், தேனீக்கள் பரவிய கூந்தலையும்; "சுரும்புண வொலிவரு மிரும்பல் கூந்தல்" (அகநா. 161 : 10.) தேம் - தேனீ (பதிற். 53 : 17, உரை.)

6. மின்னுகின்ற இழையையும் உடைய விறலியர் நினது வீரத்தைப் பாட (பதிற். 46 : 1 - 6); "புறம்பெற்ற வயவேந்தன், மறம்பாடிய பாடினி யும்மே" (புறநா. 11 : 10 - 11.)

7 - 9. சேரனது கொடைச்சிறப்பு.

7 - 8. இரவலர் துன்பம் நீங்கும்படி நாள்தோறும் புகழ்ச்சியமைந்த நல்ல ஆபரணங்களைத் தனக்கென்று வரைதல் இல்லாதனவாகக் கொடுத்து.

9. அத்தன்மையையுடையாயாதலால் சிறிது காலமும்.

10 - 11. சேரனை வாழ்த்துதல்.

உயர்ந்த நிலையையுடைய தேவருலகத்துச் செல்லாமல் இவ்வுலகத்தே நிலைபெற்றுப் பெரிய பூமியிலே நீண்ட காலம் வாழ்வாயாக.

12. நிலத்தின் அகலம் குறைபட இடப்பட்ட எல்லையையுடைய பாசறையையுடைய பகைவர் நாட்டினிடத்தே சென்று. நிலத்தின் பரப்பி னும் பாசறைகள் மிகுதியாயின வென்றபடி.

13. ஒலிக்கின்ற கண்ணையுடைய வீரமுரசு போர்க்களத்தின் நடுவே ஒலிக்கும்படி; "படுகண் முரசங் காலை யியம்ப, வெடிபடக் கடந்து" (மது ரைக். 232 - 3.)

14. தண்டாயுதத்தை வலப்பக்கத்தில் ஏந்தியவராய்ப் பகைவர்க்கு அச்சத்தைச் செய்யும்பொருட்டு.

15 - 6. இளையரை ஏவுதலையுடைய வியத்தைக்கொண்டு அவ்விளைய ரொடு எழுகின்ற பகைவரது யானைப் படையைக் கண்டால்.

17. நில்லாமல் அதன்மேற் செல்கின்ற தானையையுடைய இறை யாதற்றன்மையையுடையாய்.

இறைகிழவோய் (17), வள்ளியை என்றலிற் காண்கு வந்திசின் (1); நின் கண்ணி வாழ்க; உள்ளியது முடித்தி (2); நெடிது மன்னியர் (11) என முடிக்க.

(பி - ம்.) 3. வீங்கறை. 8. வரைவிலை. (௪)

(ருரு) ஆன்றோள் கணவ சான்றோர் புரவல
நின்னயந்து வந்தனெ னடுபோர்க் கொற்றவ
இன்னிசைப் புணரி யிரங்கும் பௌவத்து
நன்கல வெறுக்கை **துஞ்சும் பந்தர்க்**
கமழுந் தாழைக் கானலம் பெருந்துறைத்
தண்கடற் படப்பை நன்னாட்டுப் பொருந
செவ்வூன் றோன்றா வெண்டுவை முதிரை
வாலூன் வல்சி மழவர் மெய்ம்மறை
குடவர் கோவே கொடித்தே ரண்ணல்
வாரா ராயினு மிரவலர் வேண்டித்
தேரிற் றந்தவர்க் கார்பத னல்கும்
நகைசால் வாய்மொழி யிசைசா றோன்றல்
வேண்டுவ வளவையுள் யாண்டுபல கழியப்
பெய்துபுறந் தந்து பொங்க லாடி
விண்டுச் சேர்ந்த வெண்மழை போலச்
சென்றா லியரோ பெரும வல்கலும்
நனந்தலை வேந்தர் தாரழிந் தலற
நீடுவரை யடுக்கத்த நாடுகைக் கொண்டு
பொருதுசினந் தணிந்த செருப்புக லாண்மைத்
தாங்குநர்த் தகைத்த வொள்வாள்
ஓங்க லுள்ளத்துக் குருசினின் னளே.

**துறை - செந்துறைப் பாடாண்பாட்டு. வண்ணமும் தூக்கும் அது.**
**பெயர் - துஞ்சும் பந்தர் (4.)**

(ப - ரை.) பௌவத்து (3) நன்கல வெறுக்கை (4) என்றது பௌவத்திலே வந்த நன்கலமாகிய செல்வமென்றவாறு.

4. பந்தர் - பண்டசாலைகள்.

நன்கல வெறுக்கை துஞ்சுமென்ற சிறப்பானே இதற்கு, '**துஞ்சும் பந்தர்**' என்று பெயராயிற்று.

7. செவ்வூன்றோன்றா வெண்டுவையென்றது அரைத்துக் கரைத்தமையால் தன்னிற் புக்க செவ்வூன் தோன்றாத வெள்ளிய துவையென்றவாறு.

முதிரையென்றது அவரை துவரை முதலாயினவற்றை.

8. வாலூனென்றது வெண்ணிண ஊனென்றவாறு.

வல்சி மழவரென்றது தம் செல்வச்செருக்கானே சோறுண்பது பெரிதன்றி முன்பு எண்ணப்பட்டவற்றையே உணவாகவுடைய வீரரென்றவாறு. 10. இரவலரையென்னும் இரண்டாவது விகாரத்தால் தொக்கது;

இரவலரை வேண்டியென்றது தன்னுட்டு இரவலரின்மையின் அவரைப் பெற விரும்பியென்றவாறு.

11. தேரிற்றந்தென்றது அவ்விரவலருக்கு அவர் உள்வழித் தேரைப் போகவிட்டு அதிலே அவர்களை வரப்பண்ணியென்றவாறு. தேரானென உருபு விரிக்க ; தேரெனத் தேர்ச்சியாக்கி, அவ்விரவலரை *அவருள்ள விடத்தில் தேடி அழைத்தென்றுமாம்.

14. பொங்கலாடியென்றது †எஃகின பஞ்சுபோல வெளுத்துப் பொங்கி யெழுதலைச் செய்தென்றவாறு.

வெண்மழை போலச் (15) சென்றுலியர் (16) என்றது அம்மழை பெய்துபுறந்தருங் கூற்றையொத்து அது பெய்து வெண்மழையாகக் கழியுங் கூற்றை ஒவ்வாது ஒழிகவென்றவாறு.

18. நீடுவரையடுக்கமெனா விரிக்க ; அடுக்கம் - ஈண்டு அடுக்குதல்.

அல்கலும் (16) நாடு கைக்கொண்டு (18) வேந்தர் தாரழிந்து அலறப் (17) பொருது சினந்தணிந்த செருப்புகலாண்மை (19) என மாறிக்கூட்டுக.

ஆண்மையினையும் (19) வாளினையும் (20) உள்ளத்தினையும் (21) உடைய குருசிலென்க.

15. மழையை அவன்றன்னோடு உவமியாது அவன் நாளோடு (21) உவமித்தது, அவனோடு ‡அவன் நாளுக்குள்ள ஒற்றுமை பற்றியென்க.

ஆன்றோள் கணவ, சான்றோர் புரவல (1), நின்னயந்து வந்தனென் ; கொற்றவ (2), பொருந (6), மழவர்மெய்ம்மறை (8), கோவே, அண்ணல் (9), தோன்றல் (12), பெரும (16), குருசில், நின்னாள் (21) வெண்மழை போலச் (15) சென்றுலியரோ (16) என மாறிக்கூட்டி வினைமுடிவு செய்க.

பெரும, குருசிலென்னும் விளிகள் முன்னின்ற விளிகளோடு கூட்ட வேண்டுதலின் மாறுயிற்று.

இதனாற் சொல்லியது அவன் உலகுபுரத்தலும் தன் குறையும் கூறி வாழ்த்தியவாறாயிற்று.

(கு - ரை.) 1. கற்பினாற் சிறந்தோளுடைய தலைவ, நற்குணங்களால் நிரம்பியவர்களைப் புரத்தலில் வல்லோய். ஆன்றோள் கணவ : **பதிற்.** 14 : 15, உரை. சான்றோர் - வீரரெனலுமாம். 2. கொல்லுகின்ற போரைச் செய்யும் அரசே நின்னைக் காண விரும்பி வந்தேன்.

3 - 6. சேரநாட்டின் செல்வச் சிறப்பு.

இனிய ஓசையையுடைய அலைகள் ஒலிக்கும் கடலிலே வந்த நல்ல ஆபரணங்களாகிய செல்வம் தங்கும் பண்டசாலைகளையும், மணம் வீசுகின்ற தாழைகளையுடைய கடற்கரைச் சோலைகள் பொருந்திய அழகிய பெரிய துறைகளையும் உடைய குளிர்ந்த கடற்பக்கத்தையுடைய நல்ல நாட்டுக்கு

---

* " துறைதுறை தோறு மிறைகொண் டோருள், அணியா தோரை யாராய்ந் துழிதரும், பணியா வேந்தன் பணிநரைக் காண்மின் " (**பெருங்.** 1. 40 : 242 - 4.)

† " எழிலி, எஃகுறு பஞ்சிற் றாகி...நெடுவரையாடும் " (**நற்.** 247 : 3-5); " பொங்கல் வெண்மழை, எஃகுறு பஞ்சித் துய்ப்பட் டன்ன, துவலை " (**அகநா.** 217 : 1 - 3.)

‡ இக்காலத்தும் திருவாங்கூரரசர் நாளின்பெயரால் வழங்கப்படுதல் அறியத்தக்கது ; " நின்று நிலை இயர்நின் னாண்மீன் " (**புறநா.** 24 : 24.)

உரிய ஒப்பற்றோய். பொருநன் - தான்பிறர்க்கு உவமிக்கப்படுவான் (மதுரைக். 42, ந.; பதிற். 73 : 2 - 3 ; புறநா. 377 : 10 - 11.)

7 - 8. சிவந்த இறைச்சி தனியே வேறுபட்டுத் தோன்றாத வெள்ளிய துவையலையும் அவரை துவரை முதலியவற்றைக் கலந்த வெள்ளிய நிணத்தையுடைய இறைச்சியாகிய உணவையுமுடைய மழவர்க்குக் கவசம் போன்றாய் ; " சான்றோர் மெய்ம்மறை " (பதிற். 14 : 12.)

9. குடநாட்டிலுள்ளார்க்கு அரசே, கொடிகளையணிந்த தேரையுடைய தலைவனே. குடவர்கோ : சிலப். 24 ; பாட்டுமடை.

10 - 12. நின்நாட்டில் வறுமையில்லாமையால் இரவலர் வாராரானாலும், அவர்களைப் பெறவிரும்பித் தேரை அவர்கள் உள்ள பிறநாடுகளிலே அனுப்பி அதில் அவர்களைக் கொணர்ந்து அவர்களுக்கு உணவைத்தரும், பகைவரும் கேட்டற்கு விருப்பம் மிகுதற்குக் காரணமான உண்மையான மொழியையுடைய புகழ் மிக்க தலைவனே. ஆர்பதம் : பதிற். 66 : 9.

நசைசால் வாய்மொழி : " கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும், வேட்ப மொழிவதாஞ் சொல் " (குறள். 643) என்பதும் அதன் உரையும் இங்கே அறிதற்பாலன.

13. நீ வேண்டிய கால அளவில் ஆண்டுகள் பல கழியும்படி.

14. நெடுநெல். 19 ; அகநா. 217 : 1.

14 - 6. பெருமையையுடையாய், மழையைப் பெய்து, உலகத்தைக் காப்பாற்றிப் பின்பு பன்னின பஞ்சைப்போலப் பொங்கியெழுதலைச் செய்து மலையைச் சேர்ந்த வெளுத்த மேகத்தைப்போல செல்லாதொழியாதாக.

16 - 9. நாள்தோறும் அகன்ற இடத்திலுள்ள பகையரசர், தம் தூசிப் படை அழிந்து அலறும்படி போர்செய்து, உயர்ந்த மலைகளின் அடுக்குக்களையுடைய நாடுகளைக் கைப்பற்றிக்கொண்டு, அதனால் சினம் குறைந்த போரை விரும்புகின்ற வீரத்தையும்.

20. தன்னைத் தடுப்பாரை அது செய்யவொட்டாமல் தடுத்த வாளினையும். 21. ஓங்குதலையுடைய ஊக்கத்தையும் உடைய தலைவ, நினது நாள். உள்ளம் - ஊக்கம்.

நின் நாள் (21) சென்றுலியர் (16) என இயைக்க.

(பி - ம்.) 15. மழைபோலாச். 18. நெடுவரை. 19. பொருதுமுரண் செருக்கிய. (ரு)

---

(ருசு) **வி**ழவுவீற் றிருந்த வியலு ளாங்கட்
கோடியர் முழவின் முன்ன ராடல்
வல்லா னல்லன் வாழ்கவவன் கண்ணி
வலம்படு முரசந் துவைப்ப வாளுயர்த்
திலங்கும் பூணன் பொலங்கொடி யுழிஞையன்
மடம்பெரு மையி னுடன்றுமேல் வந்த

வேந்துமெய்ம் மறந்த வாழ்ச்சி
வீந்துகு போர்க்களத் தாடுங் கோவே.

துறை *ஒள்வாளமலை. வண்ணமும் தூக்கும் அது.
பெயர் - வேந்துமெய்ம் மறந்த வாழ்ச்சி (7.)

(ப - ரை.) 5. பூணன் உழிஞையனென்பன வினைக்குறிப்புமுற்று.

7. வேந்துமெய்ம்மறந்த வாழ்ச்சியென்றது மாற்றுவேந்தர் அஞ்சித் தங்கள் மெய்யை மறந்த வாழ்வென்றவாறு.

வாழ்ச்சி, மெய்ம்மறத்தல் காரணமாக அதன் காரியமாய் வந்ததாகலான், மெய்ம்மறந்தவென்னும் பெயரெச்சம் †நிலமுதற்பெயர் ஆறுமன்றிக் காரியப்பெயரென வேறோர்பெயர்கொண்டதெனப்படும். வாழ்வு - வெற்றிச் செல்வம்.

இச்சிறப்பானே இதற்கு, 'வேந்துமெய்ம்மறந்த வாழ்ச்சி' என்று பெயராயிற்று.

வாழ்ச்சிக் (7) களம் (8) எனக் கூட்டுக.

முரசம் துவைப்ப வாள்உயர்த்து (4) இலங்கும் பூணனாய்ப் பொலங் கொடி உழிஞையனாய்ப் (5) போர்க்களத்து ஆடும் கோ (8) வியலுளாங்கட் (1) கோடியர் முழவின்முன்னர் ஆடல் (2) வல்லானல்லன்; அவன் கண்ணி வாழ்க (3) என மாறிக் கூட்டி வினைமுடிவு செய்க.

'வல்லானல்லன்' என்பதன்முன் கோவென்பது கூட்டவேண்டுதலின் மாறாயிற்று.

இதனாற் சொல்லியது அவன் வென்றிச்சிறப்புக் கூறியவாறாயிற்று.

(கு - ரை.) 1 - 3. விழா பெருமையோடு விளங்கிய அகன்ற தன் ஊரினிடத்தே, கூத்தரது முழவின் முன்னர் ஆடுதலை வல்லவன் அல்லன்; அவன் கண்ணி வாழ்வதாக.

4. வெற்றியுண்டாதற்குக் காரணமான முரசம் ஒலிப்ப, வாளை உயர வீசி. வலம்படு முரசம் : பதிற். 17 : 5, உரை.

5. விளங்குகின்ற ஆபரணங்களை அணிந்து, பொன்னாற் செய்த கொடியாகிய உழிஞையினது பூவைச் சூடி.

6 - 8. அறியாமை மிகுதலால் பகைகொண்டு படையெடுத்துவந்த பகைவேந்தர் தம் உடம்பை மறத்தற்குக் காரணமான வெற்றிச்செல்வம் அழிந்துகெட்ட போர்க்களத்தில் ஆடும் அரசன்; "கழித்துவா ளமலை யாடிக் காட்டுவார்" (சீவக. 783.)

ஆடும் கோ (8) ஆடல் (2) வல்லானல்லன்; அவன் கண்ணி வாழ்க (3) என முடிவுசெய்க.

கண்ணியை வாழ்த்தல் : பதிற். 54 : 2, உரை.

மு. 'தேரின்கண்வந்த அரசர்பலரையும் வென்ற வேந்தன் வெற்றிக் களிப்பாலே தேர்த்தட்டிலேநின்று போர்த்தலைவரோடு கைபிணைந்து ஆடும் குரவை' (தொல். புறத். 21. ந.) (சு)

---

* பு. வெ. 147. † தொல். வினை. 37.

(ருள) ஓடாப் பூட்கை மறவர் மிடறப
இரும்பனம் புடையலொடு வான்கழல் சிவப்பக்
குருதி பனிற்றும் புலவுக்களத் தோனே
துணங்கை யாடிய வலம்படு கோமான்
மெல்லிய வகுந்திற் சீறடி யொதுங்கிச்
செல்லா மோதில் **சில்வளை விறலி**
பாணர் கையது பணிதொடை நரம்பின்
விரல்கவர் பேரியாழ் பாலை பண்ணிக்
குரல்புண ரின்னிசைத் தழிஞ்சி பாடி
இளந்துணைப் புதல்வர் நல்வளம் பயந்த
வளங்கெழு குடைச்சூ லடங்கிய கொள்கை
ஆன்ற வறிவிற் றோன்றிய நல்லிசை
ஒண்ணுதன் மகளிர் துனித்த கண்ணினும்
இரவலர் புன்க ணஞ்சும்
புரவெதிர் கொள்வனைக் கண்டனம் வரற்கே.

**துறை - விறலியாற்றுப்படை. வண்ணமும் தூக்கும் அது.**
**பெயர் - சில்வளை விறலி (6.)**

(ப - ரை.) மறவர் மிடறபக் (1) களத்தோன் (3) எனக் கூட்டுக.

3. பனிற்றுதல் - தூவுதல்; பனிற்றுவது புண்பட்ட வீரருடலெனக் கொள்க. களமென்றது ஈண்டுக் களத்தையணைந்த பாசறையினை.

5. *வகுந்து - வழி.

6. சில்வளை விறலியென்றது பல்வளையிடுவது பெதும்பைப் பருவத்தாகலின், அஃதன்றிச் சில்வளையிடும் பருவத்தாளென அவள் ஆடல் முதலிய துறைக்குரியளாதல் கூறியவாறு.

இச்சிறப்பானே இதற்கு, '**சில்வளை விறலி**' என்று பெயராயிற்று.

8. விரல்கவர் யாழென்றதனாற் பயன் வாசித்துக் கைவந்த யாழென்றவாறு.

9. தழிஞ்சி - தழிஞ்சியென்னும் துறைப்பொருண்மேல் தந்த பாடல். தழிஞ்சியைக் குரல்புண ரின்னிசையிலே பாடியெனக் கொள்க.

10. புதல்வராகிய நல்வளமென இருபெயரொட்டு.

11. குடைச்சூல் - சிலம்பு.

சில்வளை விறலி (6), புரவெதிர்கொள்வனைத் (15) தழிஞ்சிபாடிக் (9) கண்டனம் வரற்குச் (15) செல்லாமோ (6); அப்புரவெதிர்கொள்வனாகிய (15) வலம்படு கோமான் இதுபொழுது தான் அவ்வெதிர்கோடற்கேற்ப வருவாயினையுடைய (4) புலவுக்களத்தோன்காண் (3) என மாறிக்கூட்டி வினைமுடிவு செய்க.

---

* வகுந்து : " வரைசேர் வகுந்திற் கானத்துப் படினே " (மலைபடு. 242.)

வரற்குச் (15) செல்லாமோ (6) எனக் கூட்டவேண்டுதலின் மாறு யிற்று.

இதனாற் சொல்லியது அவன் வென்றிச்சிறப்போடு அவன் கொடைச் சிறப்பும் உடன்கூறியவாறாயிற்று.

(கு - ரை.) 1. புறங்கொடுத்து ஓடாமைக்குக் காரணமாகிய மேற் கோளையுடைய வீரரது வலி கெடும்படி. ஓடாப் பூட்கை : **பதிற்.** 34 : 2.

2 - 3. பெரிய பனந்தோடாகிய மாலையோடு சிறந்த வீரக்கழல் சிவக் கும்படி இரத்தத்தைத் தூவுகின்ற புலால்நாற்றத்தையுடைய களத்தை யணைந்த பாசறையிலுள்ளான் (**பதிற்.** 42 : 1, உரை.)

4. போர்க்களத்தில் துணங்கைக் கூத்தை ஆடிய வெற்றியுண்டாகும் சேரன். கோமான் (4) புலவுக்களத்தோன் (3) என முடிக்க.

5 - 6. சிலவாகிய வளையை அணிந்த விறலி, நிலம் மெல்லியவழியில் சிறிய அடியால் நடந்து, செல்லாமோ ; செல்லாமோ : செல்லுவாமோ என் பதன் மரூஉ. ‘மெல்லங்கழி : மென்மை, நிலத்தின் மென்மை’ (**சிறு.** 177, **பேர்.**) 8 : **பதிற்.** 66 : 1 - 2.

7 - 9. பாணரது கையின்கண் உள்ளதாகிய பணிந்த கட்டினையுடைய நரம்பினையுடைய, விரலால் வாசித்துப் பழகிய பேரியாழைப் பாலைப்பண் ணுக அமைத்து, மிடற்றுக்குரலோடு ஒன்றுபட்ட இனிய இசையிலே தழிஞ்சி யென்னும் துறைப்பொருள் அமைந்த பாடல்களைப் பாடி ; தழிஞ்சி: ‘வேந்தர் தம்படையாளர்முன்பு போர்செய்துழிக் கணையும் வேலும் முதலிய படை களைத்தம்மிடத்தே தடுத்துக்கொண்டழிந்தவர்களைத் தாம் சென்று பொருள் கொடுத்தும் வினவியும் தழுவிக்கோடல் ; தழிச்சுதல் : தழிஞ்சியாயிற்று’; “ தழிச்சிய வாட்புண்ணோர் தம்மில்லந் தோறும், பழிச்சியசீர்ப் பாசறை வேந்தன் - விழுச்சிறப்பிற், சொல்லிய சொல்லே மருந்தாகத் தூர்ந்தன, புல்லணலார் வெய்துயிர்க்கும் புண் ” (**தொல்.** புறத். 8, **ந.** மேற்.) ; “ அழிகு நர் புறக்கொடை யயில்வா ளோச்சாக், கழிதறு கண்மை காதலித் துரைத் தன்று ” (**பு. வெ.** 55.)

10. இளைய துணையாகிய புதல்வராகிய நல்ல செல்வத்தைப் பெற்ற.

11. **மு. பதிற்.** 90 : 48.

11 - 3. தொழில்வளம் பொருந்திய சிலம்பையும், அடங்கிய கொள் கையையும், நிறைந்த அறிவையும், உண்டாகிய புகழையும், ஒள்ளிய நெற்றி யையும் உடைய மகளிர் ஊடலாற் சினந்து பார்த்த பார்வைக்கு அஞ்சுதலைக் காட்டிலும். ‘குடைச்சூல் - புடைதாழ்த்தல் ; புடைபட்டு உட்கருவையுடைத் தாதல் ; குடைபடுதல்’ (**சிலப்.** 16 : 118, **அரும்பத ; அடியார்.**)

14 - 5. இரவலரது துன்பத்தை அஞ்சுகின்ற, நம் குடியைப் புரத்தலை ஏற்றுக்கொள்வோனைக் கண்டுவருதற்பொருட்டு.

கண்டனம் வரற்கு (15) விறலி, செல்லாமோ (6) என முடிக்க.

(**பி - ம்.**) 3. புலக்களத்தோனே. 11. குடச்சூல். 13. துணித்த. (எ)

(௫அ) ஆடுக விறலியர் பாடுக பரிசிலர்
வெண்டோட் டசைத்த வொண்பூங் குவளையர்
வாண்முகம் பொறித்த மாண்வரி யாக்கையர்
செல்லுறழ் மறவர்தங் கொல்படைத் தரீஇயர்
இன்றினிது நுகர்ந்தன மாயி னாளை
மண்புனை யிஞ்சி மதில்கடந் தல்ல
துண்குவ மல்லேம் புகாவெனக் கூறிக்
கண்ணி கண்ணிய வயவர் பெருமகன்
பொய்படு பறியா வயங்குசெந் நாவின்
எயிலெறி வல்வி லேவிளங்கு தடக்கை
ஏந்தெழி லாகத்துச் சான்றோர் மெய்ம்மறை
வான வரம்ப னென்ப கானத்துக்
கறங்கிசைச் சிதடி பொரியரைப் பொருந்திய
சிறியிலை வேலம் பெரிய தோன்றும்
புன்புலம் வித்தும் வன்கை வினைஞர்
சீருடைப் பல்பக டொலிப்பப் பூட்டி
நாஞ்சி லாடிய கொழுவழி மருங்கின்
அலங்குகதிர்த் திருமணி பெறூஉம்
அகன்கண் வைப்பி னாடுகிழ வோனே.

**துறை - செந்துறைப் பாடாண்பாட்டு. வண்ணமும் தூக்கும் அது. பெயர் - ஏவிளங்கு தடக்கை (10.)**

(ப - ரை.) 2. வெண்டோடு - பனந்தோடு; தோட்டின்கண்ணென விரிக்க. அசைத்தல் - தங்குவித்தல். 3. வாண்முகம் - வாள்வாய்.

குவளையர் (2) என்பது வினையெச்ச வினைக்குறிப்புமுற்று; அதனைக் கூறி (7) என்பதனொடு முடிக்க.

யாக்கையராகிய (3) மறவர் (4) என இருபெயரொட்டு.

8. கண்ணி கண்ணுதல் - தாங்கள் சூடிய போர்க்கண்ணிக்கு ஏற்ப வினைசெயக் கருதுதல்.

10. * எயிலெறி வல்விலென்றது விற்படையினை. ஏ விளங்கு தடக்கையென்றது ஏத்தொழிலுக்குள்ள கூறுபாடெல்லாம் விளங்கிய தடக்கையென்றவாறு.

இச்சிறப்பானே இதற்கு, 'ஏவிளங்கு தடக்கை' என்று பெயராயிற்று.

14. பெரிய தோன்றுமென்றது பெருகத் தோன்றுமென்றவாறு.

16. பல்பகட்டையென விரித்துப் பகட்டை அவை ஒலிப்பப் பூட்டியெனக் கொள்க.

---

* 'படைவெள்ளத்தை ஆரெயிலென்றது அரசன்றனக்கு ஆரெயில் போல அரணாய் நிற்றலினெனக் கொள்க' (பதிற். 33 : 6 - 11, உரை.)

பூட்டித் (16) திருமணி பெறூஉம் (18) என முடிக்க.

வயவர் பெருமகன் (8) சான்றோர் மெய்ம்மறையாகிய (11) வானவரம் பனைப் (12) புன்புலம் வித்தும் வன்கை வினைஞர் தம் (15) கொழுவழி மருங்கின் (17) திருமணி பெறும் (18) நாடுகிழவோன் (19) என்று சொல்லு வார்கள் (12); அவன் அவ்வாறு செல்வக்குறையிலனாதலான், அத்தரத்திற்கு ஏற்ப நமக்கு வேண்டுவன தருதலிற் குறையுடையனல்லன்; வந்தமைக் கேற்ப விறலியராயுள்ளீர், ஆடலைக் குறையறச் செலுத்துமின்; பரிசிலரா யுள்ளீர், நீயிரும் நும் கவிகளைப் பாடிக் கைவரப் பண்ணுமின் (1) என்று மாறிக்கூட்டி வினைமுடிவு செய்க.

வானவரம்பன் (12) நாடுகிழவோன் (19) எனக் கூட்டவேண்டுதலின் மாறாயிற்று.

இதனாற் சொல்லியது அவனாட்டுச் செல்வமும் அதற்கேற்ற அவன் கொடையும் கூறியவாறாயிற்று.

ஆடுக பாடுகவென்றதற்கு அவன்பாற் சென்று ஆடுக பாடுகவெனக் கூறாது இவ்வாறு கூறியதன் கருத்து, *ஆற்றுப்படையென்னாது †செந் துறைப் பாடாணென்று கிடந்தமையானெனக் கொள்க.

(கு - ரை.) 1. விறலியரே ஆடுக; பரிசிலரே பாடுக.

2 - 4. பகைவரது இயல்பு.

2. வெள்ளிய பனந்தோட்டிலே தொடுத்துக் கட்டிய ஒள்ளிய பொலிவு பெற்ற குவளைப்பூவைச் சூடியவராய். பூக்களைப் பனந்தோட்டிலே தொடுத் தல்: "வேங்கை யொள்ளிணர் நறுவீப், போந்தையந் தோட்டிற் புனைந் தனர் தொடுத்து" (புறநா. 265 : 2 - 3.)

3. வாளினது வாய் தன் அடையாளத்தை எழுதிய மாட்சிமைப்பட்ட தழும்புகளையுடைய உடம்பினராகிய. மு. பதிற். 67 : 14.

4. இடியை ஒத்த மறவரது கொல்லுகின்ற படையைக் கொணரும் பொருட்டு.

5 - 7. வயவரது வஞ்சினம்.

5. இன்றைக்கு இனிதாக நுகர்ந்தோமானால் நாளைக்கு.

6. அரைத்த மண்ணால் கட்டப்பட்ட இஞ்சியையுடைய மதிலைக்கடந்த ல்லாமல்; "அரைமணிஞ்சி நாட்கொடி நுடங்கும்" (புறநா. 341 : 5.)

7. புகாஉண்குவம் அல்லேம் எனக்கூறி-உணவை உண்ணமாட்டேம் என்று வஞ்சினம் கூறி; இது தொல்லெயிற்கிவர்தலென்றும் முற்றுமுதிர் வென்றும் கூறப்படும்; "இற்றைப் பகலு ளெயிலகம் புக்கன்றிப், பொற்றரான் போனகங்கைக் கொள்ளானால்" (தொல். புறத். 12, ந. மேற்.) "காலை முரச மதிலியம்பக் கண்கனன்று, வேலை விறல்வெய்யோ னேக்குத லும் - மாலை, அடுக மடிசிலென் றம்மதிலு ளிட்டார், தொடுகழலார் மூழை துடுப்பு" (பு. வெ. 117.)

8. தாம் சூடிய போர்க்கண்ணிக்கு ஏற்ற வினைசெய்யக் கருதிய வீரர் களையுடைய பெருமையையுடையான். 9. தாம் கூறிய வஞ்சினங்கள் பொய்படுதலை அறியாதனவாய் விளங்குகின்ற செவ்விய நாவினையும்.

10. மதில்களை எறிகின்ற வல்வில்லின்கண்ணே அம்புகளைத் தொடுத்தற்குரிய கூறுபாடுகளெல்லாம் முற்றக் கற்று விளங்கிய பெரிய

* தொல். புறத். 36. † பதிற். 11, துறை.

கையினையும் ; எயிலெறி வல்வில் என்றது, விற்படையொன்றனையே துணை யாகக் கொண்டு பகைவர் மதிலைக் கொள்ளுவரென்றபடி.

11. சான்றோர் மெய்ம்மறை : பதிற். 14 : 12.

11 - 2. அழகை ஏந்திய மார்பினையும் உடைய வீரருக்குக் கவசம் போன்றவனாகிய வானவரம்பனென்று அறிந்தோர் சொல்லுவர்.

12 - 5. புன்புலத்தின் இயல்பு.

12 - 4. காட்டினிடத்தே ஒலிக்கின்ற ஓசையையுடைய சிள்வீடு பொரிந்த அடிமரத்தின்கண்ணே பொருந்திய சிறிய இலைகளையுடைய வேலமரம் பெருகத் தோன்றும் ; சிறிய இலை சிறியிலையென்றாயிற்று ; தொகுத்தல் ; "சிறியிலை வெதிரின்" (புறநா. 109 : 4.) சிதடி : பதிற். 23 : 2.

15. புன்புலத்தில் வித்துக்களை விதைக்கின்ற வலிய கையையுடைய தொழில்செய்வோர். 16. சிறப்பையுடைய பல கடாக்களை அவை ஒலிக்கும்படி நுகத்தின் கண்ணே பூட்டி உழுதலால். பூட்டி : எச்சத்திரிபு.

17. கலப்பைகள் உழுத கொழுவினது படைச்சாலின் பக்கத்தே.

18 - 9. அசைகின்ற ஒளியையுடைய அழகிய மணியைப் பெறுதற்கு இடமான, அகன்ற இடத்தையுடைய ஊர்களையுடைய நாட்டுக்கு உரிமையுடையோனை.

காட்டில் மணிபெறுதல் : பதிற். 21 : 20 - 22, 66 : 19 - 20, 76 : 14 - 5.

நாடுகிழவோனை (19) மெய்ம்மறையாகிய (11) வானவரம்பனென்ப (12) என முடிவு செய்க.

(பி - ம்.) 7. புகவென. 9. படுவறியா. 11. மேமறை. 17. மருங்கில்.(அ)

---

(௫௬) **ப**கனீ டாகா திரவுப்பொழுது பெருகி
மாசி நின்ற **மாகூர் திங்கட்**
பனிச்சுரம் படரும் பாண்மக னுவப்பப்
புல்லிருள் விடியப் புலம்புசே ணகலப்
பாயிரு ணீங்கப் பல்கதிர் பரப்பி
ஞாயிறு குணமுதற் றோன்றி யாஅங்
கிரவன் மாக்கள் சிறுகுடி பெருக
உலகந் தாங்கிய மேம்படு கற்பின்
வில்லோர் மெய்ம்மறை வீற்றிருங் கொற்றத்துச்
செல்வர் செல்வ சேர்ந்தோர்க் கரணம்
அறியா தெதிர்ந்து துப்பிற் குறையுற்றுப்
பணிந்துதிறை தருபநின் பகைவ ராயிற்
சினஞ்செலத் தணியுமோ வாழ்கநின் கண்ணி
பல்வேறு வகைய நனந்தலை யீண்டிய
மலையவுங் கடலவும் பண்ணியம் பகுக்கும்
ஆறுமுட் டுறாஅ தறம்புரிந் தொழுகும்

நாடல் சான்ற துப்பிற் பணைத்தோட்
பாடுசா னன்கலந் தரூஉம்
நாடுபுறந் தருத னினக்குமார் கடனே.

**இதுவுமது. பெயர் - மாகூர் திங்கள் (2.)**

(ப - ரை.) நீடாகாது பெருகி (1) என நின்ற பகலிரவென்னும் சினை மேல் வினையெச்சம் மாசி நின்ற (2) என்னும் தம் முதலது வினையொடு முடிந்தன.

2. மாசியென்றது மாசித்தன்மையை. இனி, அவ்வெச்சங்களைத் திரிப்பினும் அமையும். மா *கூர்தல் - மாக்கள் குளிராலே உடல்வளைதல். இச்சிறப்பானே இதற்கு, '**மாகூர் திங்கள்**' என்று பெயராயிற்று. திங்கள் - மாதம். 4. புலம்பு - உலகத்து உயிர்கள் புலம்பு.

13. சினஞ்செலத் தணியுமோவென்றது நின்பாற் சினமானது நின் பால்நின்றும் கையறப்போம்படி சிறுகத் தணிவுபிறக்குமோவென்றவாறு. இனி, உம்மும் ஓவும் அசையாக்கித் தணியென்பதனை முன்னிலைவினை யாக்கி உரைப்பாரும் உளர்.

14. நனந்தலையென்றது பரமண்டலங்களை.

ஈண்டிய (14) பண்ணியம் (15) என்றது, அம்மண்டலங்களில் தன் பகைவர்பால் ஈண்டிய பண்டங்களை.

15. மலையவும் கடலவுமாகியவென ஒரு சொல் வருவிக்க.

16. முட்டுறுமலெனத் திரிக்க. அறம்புரிதல் - நாடுகாவலாகிய அறத் திலே மேவுதல்.

15 - 6. பகுக்கும் ஆறென்றது அப்பண்ணியங்களைப் பலர்க்கும் பகுத்துக் கொடுக்கும் நெறியென்றவாறு.

17 - 8. தோட்கலனென்றது தோளிற்கேற்ற கலமென்றவாறு; தோட்குத் தருமென்றுமாம். 19. மார் : அசை.

வில்லோர்மெய்ம்மறை (9) செல்வ, சேர்ந்தோர்க்கரணம் (10), நின் தோட்கேற்ற (17) நன்கலங்களைத் திறைதரும் (18) நாடுகளைப் புறந்தருதல் நின் கடனாயிருக்குமாகலான் (19) நின் பகைவர் (12) அறியாது எதிர்ந்து துப்பிற்குறையுற்றுப் (11) பணிந்து திறைதருவராயின் (12), சினஞ்செலத் தணியுமோ; நின்கண்ணி வாழ்க (13) என மாறிக் கூட்டி வினைமுடிவுசெய்க. 'நாடு புறந்தருதல் நினக்குமார் கடன்' (19) என்பதன்பின், 'சினஞ் செலத் தணியுமோ' (13) என்பதைக் கூட்ட வேண்டுதலின், மாறாயிற்று.

இதனாற்சொல்லியது அவன் வென்றிச்சிறப்புக் கூறியவாறாயிற்று.

(கு - ரை.) 1 - 2. பகல் நீடுதல் ஆகாமல், இராப்பொழுது மிக்கு, மாசியின் தன்மை நிலைபெற்ற, மாக்களெல்லாம் குளிரால் உடம்பு நடுங்கு கின்ற மாதத்தில்.

*கூர்தல் : 'மந்திகூர - குரங்கு குளிர்ச்சிமிக; குன்றுக்க என்பாரும் உளர்' (நெடுநல். 9, ந.); "துவலைப் பி னனைந்த புறத்த தயலது, கூர விருக்கை யருளி" (நற். 181 : 6 - 7); "இறைமிசை, மாரிச் சுதைப் பி னீர்ம் புறத் தன்ன, கூரற் கொக்கின் குறும்பறைச் சேவல்" (அகநா. 346 : 1 - 3.)

3. குளிர்ச்சியையுடைய அரிய வழியிலே செல்லும் பாணன் உவப்பவும். 4. புல்லிய இராப்பொழுது நீங்கவும், உலகத்து உயிர்களுடைய வருத்தம் நெடுந்தூரத்தே அகலவும்.

5. உலகெங்கும் பரவிய இருள்நீங்கும்படி பல கிரணங்களைப் பரப்பி.

6. சூரியன் கீழ்த்திசையிலே தோன்றினாற்போல.

உவப்ப, விடிய, அகல, நீங்க, பரப்பி, தோன்றியாங்கு என இயையும்.

7 - 8. இரத்தலையுடைய பரிசிலருடைய சிறிய குடும்பங்கள் வளர்ச்சியடையும்படி, உலகத்தைத் தாங்கிய மேம்பட்ட கல்வியையுடைய.

9. விற்படையையுடையோரது கவசம்போன்றாய்; வில்லோர் மெய்ம்மறையென்பது அனைத்தும் ஒரு பெயராய் நின்றது.

9 - 10. ஏனையரசரினும் வேறாகிய பெரிய உரிமையையுடைய, செல்வர்க்குள் மேம்பட்ட செல்வத்தையுடையாய், நின்னை அடைந்தோர்க்குப் பாதுகாவலாகவுள்ளாய்.

11. துப்பின் அறியாது எதிர்ந்து துறையுற்று - தம் வன்மையால் நினது வலியை அறியாமல் நின்னோடு மாறுபட்டுத் தோற்று.

12. நின்னுடைய பகைவர் நினக்கு அடங்கித் திறைகளைத் தருவராயின். 13. நின்னிடத்தினின்றும் நீங்கும்படி நின் சினம் தணியுமோ? நின் கண்ணி வாழ்க.

14. பல வேறுவகையவாகிய, பகைவருடைய அகன்ற நாடுகளில் நெருங்கிய.

15 - 6. மலையினிடத்தனவும், கடலினுள்ளனவுமாகிய பண்டங்களைப் பலர்க்கும் பகுத்துக்கொடுக்கும் வழி முட்டுப்படாமல், தன்னாட்டைக் காத்தலாகிய அறத்தை விரும்பி ஒழுகுகின்ற.

17 - 9. நாடல் சான்ற துப்பின் நினக்குப் பாடுசால் நன்கலம் தரூஉம் நாடு பணைத்தோள் புறந்தருதல் கடன் - பகைவர் ஆராய்தல் அமைந்த வன்மையையுடைய நினக்குப் புகழ்ச்சி மிக்க நல்ல ஆபரணங்களைத் தருகின்ற நாடுகளை நினது பெருத்த தோள்களில் வைத்துப் பாதுகாத்தல் நின் கடனாகும்; நாட்டைத் தோளில் வைத்துப் பாதுகாப்பதாகக் கூறுதல் மரபு; 'சிறந்த நல்நாடு செகில்கொண்டு - ஏனையோர் நாட்டிற்சிறந்த நன்னாட்டைத் தோளிலே வைத்து' (பொருந. 137 - 8, ந.) உரையாசிரியர் வேறு முடிபு கூறுவர்.

(பி - ம்.) 1. பகனீடாதிரவு. (க)

---

(சுO) **கொ**லைவினை மேவற்றுத் தானை தானே
இகல்வினை மேவலன் றண்டாது வீசும்
செல்லா மோதில் பாண்மகள் காணியர்
மிஞிறுபுற மூசவுந் தீஞ்சுவை திரியா
தரம்போழ் கல்லா **மரம்படு தீங்கனி**
அஞ்சே றமைந்த முண்டை விளைபழம்
ஆறுசென் மாக்கட் கோய்தகை தடுக்கும்

மறாஅ விளையு ளறாஅ யாணர்த்
தொடைமடி களைந்த சிலையுடை மறவர்
பொங்குபிசிர்ப் புணரி மங்குலொடு மயங்கி
வருங்கட லூதையிற் பனிக்கும்
துவ்வா நறவின் சாயினத் தானே.

**துறை - விறலியாற்றுப்படை. வண்ணமும் தூக்கும் அது.**
**பெயர் - மரம்படு தீங்கனி (5.)**

(ப - ரை.) 4. மிஞிறு புறமூசவும் தீஞ்சுவை திரியாமை அப்பழத்தின் புறத்து வன்மையால்.

5. அரம்போழ்கல்லாவென்றது புறத்து வன்மையால் அரிவாளும் போழமாட்டாவென்றவாறு. 'அரம்போழ் கல்லா மரம்படு தீங்கனி' என்றது *புறக்காழனவாகிய பனை முதலியவற்றின் தீங்கனியை நீக்குதற்கு.

இச்சிறப்பானும் முன்னும் பின்னும் வந்த அடைச்சிறப்பானும் இதற்கு, '**மரம்படு தீங்கனி**' என்று பெயராயிற்று.

6. முண்டை விளைபழம் - முட்டைகள்போலும் விளைபழம்; முட்டையென்றது †மெலிந்தது.

மரம்படு தீங்கனியாகிய (5) முட்டை விளைபழம் (6) என இருபெயரொட்டு.

ஓய்தகை தடுக்கும் (7) துவ்வா நறவு (12) எனக்கூட்டுக.

8. அறாஅ யாணரென்றது இடையறாத கடல்வருவாய் முதலாய செல்வங்களை. 9. தொடைமடி - அம்புதொடுத்து எய்தலில் மடிதல்.

10. புணரியொடு மங்குலொடு என ஒடுவை இரண்டிடத்தும் கொள்க. மயங்கவெனத் திரிக்க; மயங்குவது வருகின்ற ஊதை (11) எனக் கொள்க.

மறவர் (9) கடலூதையிற் பனிக்கும் (11) நறவு (12) எனக்கூட்டி, ஆண்டு வாழும் மறவர் ‡கடலூதையால் மட்டும் நடுங்கும் நறவென்க.

12. நறவு - ஓரூர்; துவ்வா நறவு - வெளிப்படை.

அவன்றான், இப்பொழுது துவ்வாநறவின் சாயினத்தான் (12); இனித் தானே கொலைவினை மேவற்று; ஆகலால் தான் (1) இகல்வினை மேவலன்; இன்னபொழுது இன்னவிடத்து எழுமெனத் தெரியாது (2); பாண்மகளே, நாம் அவனைக் காணியர் செல்லாமோ; செல்லின் (3), தண்டாது வீசும் (2) எனக் கூட்டி வினைமுடிவு செய்க.

இதனாற் சொல்லியது அவன் கொடைச்சிறப்பொடு வென்றிச்சிறப்பும் கூறியவாறாயிற்று.

(கு-ரை.) 1. சேரனது சேனை கொலையாகிய தொழிலை விரும்புதலையுடையது.

---

*" புறக்கா ழனவே புல்லென மொழிப " (தொல். மரபு. 85.)

†தொல். எச்ச. 7.

‡" செஞ்ஞாயிற்றுத் தெறலல்லது, பிறிதுதெற லறியார்நின் னிழல் வாழ் வோரே " (புறநா. 20 : 8 - 9) என்பதனோடு ஒப்பு நோக்குக.

1 - 2. சேரன்தான், போராகிய வினையை விரும்புதலையுடையனாகி அவ்விடத்தே பெற்ற அரிய பொருள்களை ஓரளவில் அமையாது கொடுப்பான்.

3. விறலி, ஆதலால் அவனைக் காணும்பொருட்டுப் போதலை விரும்புவோமோ ; தில், விழைவுப்பொருளில் தன்மையிடத்து வந்தது.

4 - 5. வண்டுகள் நறுமணத்தால் புறத்தே மொய்க்கவும் தம் இனிய சுவை மாறுபடாமல், புறத்து வன்மையால் அரிவாளும் பிளத்தற்கு இயலாத மரங்களில் விளைந்த இனிய பழங்களாகிய.

6. அழகிய சாறு நிரம்பிய, முட்டைபோல முதிர்ந்த பழங்கள்; முட்டை : இங்கே பலாப்பழத்தின் வடிவிற்கு உவமை ; அஞ்சேறு என்பதற்கு ஏற்ப முட்டை முண்டையென்றாயிற்று ; மெலித்தல் விகாரம்.

7. வழியிலே செல்லுகின்ற மக்களுக்கு, நடந்துசெல்லுதலால் உண்டான ஓய்ந்த தன்மையைத் தடுக்கும் ; அறத்தின்பொருட்டு வழிச்செல்வோர் உண்ணும்படி பழமரங்களை வளர்த்தல் மரபு ; “அறந்தலைப் பட்ட நெல்லியம் பசுங்காய்” (குறுந். 209 : 1) ; “நெடுஞ்சேண் வந்த நீர்நசை வம்பலர், செல்லுயிர் நிறுத்த சுவைக்காய் நெல்லி” (அகநா. 271 : 6 - 7.)

8. மருஅ விளையுள் - முற்காலத்து விளைந்தேனென மறுக்காத நிலத்தின் விளைவையும் ; “தொல்லது விளைந்தென நிலம்வளங் கரப்பினும், எல்லா வுயிர்க்கு மில்லால் வாழ்க்கை” (புறநா. 203 : 2 - 3.) அருஅ யாணர் - இடையறுதல் வருகின்ற ஏனைய புதுவருவாய்களையும் உடைய.

தடுக்கும் (7) யாணர்த் (8) துவ்வா நறவு (12) என இயையும்.

9. அம்புகளைத் தொடுத்து எய்தலால் மடிதலைக் களைந்த வில்லையுடைய மறவர். 10. பொங்குகின்ற பிசிரையுடைய அலைகளோடும் மேகங்களோடும் கலந்து. மங்குலொடு என்பதிலுள்ள ஒடுவைப் புணரி யென்பதனோடும் கூட்டுக.

11. வருகின்ற கடலினது குளிர்ந்த காற்றால் உடல் நடுங்குகின்ற ; என்றது அம்மறவர், சேரனது வன்மைகாரணமாக, பகைவருக்கு நடுங்குதல் இலரென்றபடி.

12. உண்ணப்படாத நறவென்னும் ஊரின்கண்ணே, மென்மையையுடைய மகளிரினத்திடையேயுள்ளான் ; துவ்வா நறவு : வெளிப்படை. சாயினம் - மெல்லிய மகளிராயம் ; இவர் பாட்டாலும், கூத்தாலும், வார்த்தையாலும் சேரனுக்கு மகிழ்ச்சி செய்யும் மகளிர் ; “இன்னகை யாயமோ டிருந்தோற் குறுகி” (சிறுபாண். 220.) (கο)

---

இதன் பதிகத்துத் தண்டாரணியம் (3) என்றது ஆரிய நாட்டிலே உள்ளதோர் நாடு. கபிலை (5) என்றது குராற்பசு.

## (பதிகம்)

குடக்கோ நெடுஞ்சேர லாதற்கு வேளள்
ஆவிக் கோமான் றேவி யீன்றமகன்
தண்டாரணியத்துக் கோட்பட்ட வருடையைத்
தொண்டியுட் டந்து கொடுப்பித்துப் பார்ப்பார்க்குக்
கபிலையொடு குடநாட் டோரூ ரீத்து

வான வரம்பனெனப் பேரினிது விளக்கி
ஏனை மழவரைச் செருவிற் சுருக்கி
மன்னரை யோட்டிக்
குழவிகொள் வாரிற் குடிபுறந் தந்து
நாடல் சான்ற நயனுடை நெஞ்சின்
**ஆடுகோட் பாட்டுச் சேரலாதனை**
யாத்த செய்யு ளடங்கிய கொள்கைக்

**காக்கைபாடினியார் நச்செள்ளையார்** பாடினார் பத்துப் பாட்டு.

அவைதாம் : வடுவடு நுண்ணயிர், சிறுசெங்குவளை, குண்டுகண் ணகழி, நில்லாத்தானை, துஞ்சும்பந்தர், வேந்துமெய்ம்மறந்த வாழ்ச்சி, சில்வளைவிறலி, ஏவிளங்குதடக்கை, மாகூர்திங்கள், மரம்படுதீங்கனி. இவை பாட்டின் பதிகம்.

பாடிப் பெற்ற பரிசில் : கலனணிகவென்று அவர்க்கு ஒன்பது [1]காப் பொன்னும் நூறாயிரங்காணமுங்கொடுத்துத் தன்பக்கத்துக் கொண்டான் அக்கோ.

ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் மூப்பத்தெட்டியாண்டு வீற்றிருந்தான்.

(கு - ரை.) 1. குடக்கோ - குடநாட்டிலுள்ளார்க்குத் தலைவன்.

3. தண்டாரணியம் - தண்டகாரணியம் என்பதன் சிதைவு ; “ தண்டா ரணியத்துத் தாபதப் பள்ளி ” (சீவக. 337.) கோட்பட்ட வருடையை - பகைவரால் கொள்ளப்பட்ட மலையாடுகளை.

4. தொண்டியுள் தந்து - மேல்கடற்கரையிலுள்ள தொண்டிநகரத்தே கொண்டுவந்து ; “ திண்டேர்ப் பொறையன் றொண்டி ”, “ விறற்போர்க் குட்டுவன், தெண்டிரைப் பரப்பிற் றொண்டி ” (அகநா. 60 : 7, 290:12 - 3.)

3-4. இவ்வடிகளில் தலைவன் பெயர்க் காரணம் அமைந்துள்ளது.

4-5. அந்தணருக்குப் பசுக்களோடு குடநாட்டிலுள்ள ஒரூரைக் கொடுத்து ; இது ‘ கபிலை கண்ணிய வேள்விநிலை ’ (தொல். புறத். 35) எனப் படும்.

6. வானத்தைத் தன் ஆணைக்கு எல்லையாக உடையவனென்று தன் பேரை இனிதாக விளங்கச் செய்து. 7. மற்ற மழவரென்னும் வகையாரைப் போரிற் கொன்று குறையச் செய்து.

8. பகையரசர்களைப் போர்க்களத்தினின்றும் புறங்கொடுத்து ஓடச் செய்து. 9. குழந்தையைப் பாதுகாப்பாரைப்போலக் குடிகளைக் காப்பாற்றி (புறநா. 4 : 18, 5 : 7, அடிக்.)

10. அறத்தையே ஆராய்தல் அமைந்த அன்புடைய நெஞ்சினையுடைய.

12. ஐம்புலன்களும் அடங்கிய கோட்பாட்டையுடைய.

(பி - ம்.) 11. ஆடுகோட்பாடுசேரலாதன்.

## ஆறும் பத்து முற்றிற்று.

---

[1] கா - ஒரு நிறையின் பெயர் ; “ காவெ னிறையும் ” (தொல். தொகை மரபு. 27.) காணம் - பொற்காசு ; “ காண மிலியெனக் கையுதிர்க் கோடலும் ” (மணி. 16 : 10) ; பழங்காசு (சீவக. 1117, ந.)

## ஏழாம் பத்து

(சுக) பலாஅம் பழுத்த பசும்புண் ணரியல்
வாடை துரக்கு நாடுகெழு பெருவிறல்
ஓவத் தன்ன வினைபுனை நல்லிற்
பாவை யன்ன நல்லோள் கணவன்
பொன்னி னன்ன பூவிற் சிறியிலைப்
புன்கா லுன்னத்துப் பகைவ னெங்கோ
புலர்ந்த சாந்திற் புலரா வீகை
மலர்ந்த மார்பின் மாவண் பாரி
முழவுமண் புலர விரவல ரினைய
வாராச் சேட்புலம் படர்ந்தோ னளிக்கென
இரக்கு வாரே னெஞ்சிக் கூறேன்
ஈத்த திரங்கா னீத்தொறு மகிழான்
ஈத்தொறு மாவள் ளியனென நுவலுநின்
நல்லிசை தரவந் திசினே யொள்வாள்
உரவுக் களிற்றுப் **புலாஅம் பாசறை**
நிலவி னன்ன வெள்வேல் பாடினி
முழவிற் போக்கிய வெண்கை
விழவி னன்னநின் கலிமகி ழானே.

**துறை - *காட்சி வாழ்த்து. வண்ணம் ஒழுகுவண்ணம்.**
**தூக்கு - செந்தூக்கு. பெயர் - புலாஅம் பாசறை (15.)**

(ப - ரை.) 1. பலாஅம் பழுத்த - பலாப்பழுத்தவென்னும் பகர வொற்று மெலிந்தது. பசும்புண்ணென்றது புண்பட்ட வாய்போலப் பழுத்து விழுந்த பழத்தினை. அரியலென்றது, அப்பழத்தினின்றும் பிரிந்து அரித்து விழுகின்ற தேனை.

10. படர்ந்தோனென்றது முற்று. அளிக்கென வென்றது நீ எம்மை அளிப்பாயாகவெனச் சொல்லியென்றவாறு.

11. இரக்கென்றது தன்மைவினை. எஞ்சிக் கூறேனென்றது உண்மையின் எல்லையைக் கடந்து பொய்யே புகழ்ந்துசொல்லேனென்றவாறு.

12. ஈத்ததற்கென நான்காவது விரிக்க. ஈத்தொறு மகிழானென்றது ஈயுந்தோறெல்லாம் தான் அயலாயிருத்தலல்லது ஈயாநின்றேமென்று ஒரு மகிழ்ச்சியுடையனல்லனென்றவாறு.

13. நுவலுமென்றதற்கு உலகம் நுவலுமென வருவிக்க.

---

*பதிற். 41, துறை.

15. புலாஅம் பாசறையென்றது வீரரெல்லாரும் போர்செய்து புண் பட்ட மிகுதியாற் புலால் நாறுகின்ற பாசறையென்றவாறு.

இச்சிறப்பானே இதற்கு, 'புலாஅம் பாசறை' என்று பெயராயிற்று.

16. வேலேயென இரண்டாவது விரித்துப் பாடினியிற் பாடுதலொடு முடிக்க. 17. வெண்கையென்றது பொருள்களை அபிநயிக்கும் *தொழிற்கை யல்லாத, வெறுமனே தாளத்திற்கு இசைய விடும் எழிற்கையினை.

18. கலிமகிழென்றது கலிமகிழையுடைய ஓலக்கத்தை.

யான் பாரி (8) சேட்புலம் படர்ந்தோன்; நீ அளிக்கவெனச் சொல்லி (10) இரக்கென்று வந்து சில புகழ்ந்து சொல்லுகின்றேனுமல்லேன்; அஃ தன்றி உண்மையொழியப் புகழ்ந்து சொல்லுகின்றேனுமல்லேன் (11); ஈத்ததற்கு இரங்காமை முதலாகிய அப்பாரிகுணங்கள் நின்பாலும் உளவாக (12) உலகம் சொல்லும் நின் (13) புகழை நின்பாலே தர வந்தேன் (14), நின் பாசறையின் கலிமகிழின்கண்ணே (18) என வினைமுடிவுசெய்க.

இதனாற் சொல்லியது அவன்வென்றிச்சிறப்பொடு படுத்து அவன் கொடைச்சிறப்புக் கூறியவாறாயிற்று.

(கு - ரை.) 1. பலாமரத்திற் பழுத்த, பசிய புண்பட்ட வாய்போல வெடித்த பழத்திலிருந்து அரித்து விழுகின்ற தேனை; பலாப்பழுத்தவென்பது மெலித்தல் விகாரம் பெற்றது. பழத்தின் வெடித்தவாய் புண்ணின் வாய் போன்றிருத்தலால் பசும்புண் எனப்பட்டது; "புண்ணரிந், தரலை யுக்கன நெடுந்தா ளாசினி", "கலைதொடு பெரும்பழம் புண்கூர்ந் தூறலின்" (மலைபடு. 138 - 9, 292.)

2. காற்றுனது வீசுகின்ற பறம்புநாடு பொருந்திய பெருவிறலை யுடையவன்.

3-4. சித்திரத்தைப்போன்ற தொழில் புனைந்த நல்ல மனையின் கண்ணேயுள்ள கொல்லிப்பாவையைப் போன்ற வடிவையுடைய நல்லோ ளுடைய கணவன் (பதிற். 88 : 28 - 9); "ஓவத் தன்ன விடனுடை வரைப் பிற், பாவை யன்ன நப்புறங் காக்கும்" (நற். 182 : 2-3); "ஓவத் தன்ன வினைபுனை நல்லிற், பாவை யன்ன பலராய் மாண்கவின்" (அகநா. 98 : 11-2); "ஓவத் தன்ன விடனுடை வரைப்பிற், பாவை யன்ன குறுந் தொடி மகளிர்" (புறநா. 251 : 1-2.)

நல்லோள் கணவன் : பதிற். 14 : 15, உரை.

5-6. பொன்னைப்போன்ற நிறத்தையுடைய பூவினையும், சிறிய இலை களையும், பொலிவற்ற அடிமரத்தையும் உடைய உன்னமரத்துக்குப் பகைவனாகிய எம்முடைய அரசன். உன்னத்துப்பகைவன் : பதிற். 40 : 17, உரை.

ஓடா உடல்வேந்தடுக்கிய உன்னநிலை (தொல். புறத். 5, ந.)

7-8. பூசிப் புலர்ந்த சந்தனத்தையும் வற்றாத ஈகையையும் மகளிர்க்கு மலர்ந்த மார்பினையும் பெரிய கொடையையுமுடைய பாரி யென்பான்.

பெருவிறல் (2) நல்லோள் கணவன் (4) எங்கோ (6) ஆகிய பாரி (8) என்க.

* தொழிற்கை - தொழில்பெறக் காட்டும் கை; எழிற்கை - அழகு பெறக் காட்டும் கை; "பிண்டியும் பிணையலு மெழிற்கையுந் தொழிற்கை யும்" (சிலப். 3 : 18.)

9. முழவு என்னும் வாத்தியம் தன்னிடத்தே பூசிய மார்ச்சனைமண் காயவும் பரிசிலர் துன்பமடையவும்; முழவு அழிய என்று கூறல் இன்னாதாதலின், மண்புலர எனத் தகுதிபற்றிக் கூறப்பட்டது; என்றதன் கருத்து அதனால் தொழில் கொள்வாரின்மையின், அது பயனிழந்ததென்பது.

10. மீண்டு வாராத உயர்ந்த இடத்திற்குச் சென்றான்; நீ எம்மைக் காப்பாற்றுக வென்று. அளிக்கென : தொகுத்தல்.

11. இரப்பேனாகி வாரேன்; அதனால் நின் பெருமையைக் குறைத்துக் கூறமாட்டேன்; "விரிப்பி னகலுந் தொகுப்பி னெஞ்சும்......கைம்முற் றலநின் புகழே" (புறநா. 53 : 6 - 8.)

12-3. சேரனுடைய அருங்குணங்கள்.

12. தான் ஈந்த பொருள்களைப் பற்றிக் கழிவிரக்கங் கொள்ளான்; இரவலர்க்குக் கொடுக்குந்தோறும் தான் அயலாய் இருத்தலாக நினைத்தலேயன்றித் தான் ஈகின்றதாக எண்ணி மகிழமாட்டான்.

13-4. ஈயுந்தோறும் பெரிய கொடையையுடையவனென உலகத்தாரும் புலவரும் சொல்லுகின்ற, உரையும் பாட்டுமாகிய நின்னுடைய நல்ல புகழ் என்னை நின்னிடத்துச் செலுத்தலால் வந்தேன்; "புகழ்சால் சிறப்பினின் னல்லிசை யுள்ளி, வந்தன னெந்தை யானே......நின்னைக் காண்டல் வேண்டிய வளவை" (புறநா. 135 : 9 - 20.)

14-5. ஒள்ளிய வாளால் வெட்டப்பட்ட வன்மையையுடைய களிறுகளையுடைய புலால்நாற்றம் வீசும் பாசறையிடத்து.

16. நிலவைப் போன்ற வெள்ளிய வேலைப் பாடுகின்ற விறலி.

17-8. முழவின்கண்ணே செலுத்திய தாளத்திற்கு இசைய விடும் எழிற் கையையுடைய விழாவைப்போன்ற நின்னுடைய ஆரவாரத்தையுடைய ஓலக்கத்தின்கண்ணே.

கலிமகிழின்கண் (18) வந்திசின் (14) என முடிக்க.

(பி - ம்.) 2. தூக்கும். 6. எங்கோன். 12. ஈதொறு. (௧)

---

(௬௨) இழையணிந் தெழுதரும் பல்களிற்றுத் தொழுதியொடு
மழையென மருளு மாயிரும் பஃறோல்
எஃகுபடை யறுத்த கொய்சுவற் புரவியொடு
மைந்துடை யாரெயில் புடைபட வளைஇ
வந்துபுறத் திறுக்கும் பசும்பிசி ரொள்ளழல்
ஞாயிறு பல்கிய மாயமொடு சுடர்திகழ்
பொல்லா மயலொடு பாடிமிழ் புழிதரும்
மடங்கல் வண்ணங் கொண்ட கடுந்திறற்
றுப்புத்துறை போகிய கொற்ற வேந்தே
புனல்பொரு கிடங்கின் வரைபோ லிஞ்சி
அணங்குடைத் தடக்கையர் தோட்டி செப்பிப்
பணிந்துதிறை தருபநின் பகைவ ராயிற்

புல்லுடை வியன்புலம் பல்லா பரப்பி
வளனுடைச் செறுவின் விளைந்தவை யுதிர்ந்த
களனறு குப்பை காஞ்சிச் சேர்த்தி
அரிய லார்கை வன்கை வினைநர்
அருவி யாம்பன் மலைந்த சென்னியர்
ஆடுசிறை வரிவண் டோப்பும்
பாடல் சான்றவவ ரகன்றலை நாடே.

**துறை - செந்துறைப் பாடாண்பாட்டு. வண்ணமும் தூக்கும் அது. பெயர் - வரைபோ லிஞ்சி (10.)**

(ப - ரை.) 2. பஃறேருவொடுவென்னும் ஒடு விகாரத்தால் தொக்கதாக்கி விரிக்க.

5. புறத்திறுக்குமென்றதற்கு நின் தானை புறத்திறுக்குமென வருவிக்க.

ஞாயிறு பல்கிய மாயமொடு (6) உழிதரு (7) மடங்கல் (8) எனக் கூட்டி, உலகம் கடல்கொண்டு கிடந்த காலத்து அக்கடல்நீரெல்லாம் வற்ற எறித்தற்குத் தோன்றும் ஆதித்தர் பலவான மாயத்தோடே கூடி அந்நீர் வற்றும்படி திரிதரு வடவைத்தீயென்றுரைக்க.

மாயம்போறலான் மாயமெனப்பட்டது.

சுடர்திகழ்பு (6) ஒல்லா மயலொடு பாடிமிழ்பு உழிதரு (7) மடங்கல் (8) என்றது சுடர் திகழ்ந்து உயிர்கட்குப் பொறுக்கமுடியாத மயக்கத்தைச் செய்தலோடே ஒலித்துத் திரிதரும் மடங்கலென்றவாறு.

ஒள்ளழல் (5) மடங்கல்வண்ணம் கொண்ட (8) எனக்கூட்டி, ஒள்ளழலானது மடங்கலாகிய அழலின் வண்ணத்தைக் கொள்கைக்குக் காரணமாய் நின்றவெனவுரைக்க.

இனி ஞாயிறுபலவாதலை (6) அவன் பகைவர் நாட்டில் * உற்பாதமாகத் தோன்றும் ஆதித்தர் பலராக்கி, மடங்கல் (8) என்றதனைக் கூற்றமாக்கி, சுடர்திகழ்பு என்றதனைத் திகழவெனத் திரித்து, ஒள்ளழலானது ஞாயிறு பல்கிய மாயமொடு சுடர்திகழ மடங்கல்வண்ணம்கொண்ட வேந்தேயென உரைப்பாரும் உளர்.

தடக்கையராகிய (11) நின் பகைவர் (12) என மாறிக் கூட்டுக.

வரைபோல் இஞ்சியை அரணாகவுடையராயிருந்தே (10) திறைதருப (12) எனச் சொன்ன சிறப்பானே இதற்கு, 'வரைபோ லிஞ்சி' என்று பெயராயிற்று.

திறைதருபவாயின் (12) நாடு பாடல் சான்ற (19) எனக் கூட்டுக. சான்ற (19) என்றது முற்று.

14. விளைந்தென்றதனை விளையவெனத் திரிக்க. 15. களனறு குப்பையென்றது களத்திற் கடாவிடுதற்றொழிலற்ற † தூற்றுப்பொலியை.

---

* 'வெங்கதிர்க்கனலி துற்றவும் - வெய்ய சுடரையுடைய ஞாயிறு பல விடத்தும் செறிந்து தோன்றவும்' (புறநா. 41; 6, உரை.)

† பொலி - நெற்குவியல்; "பகடூர் பிழிந்த பின்றைத் துகடப, வையுந் துரும்பு நீக்கிப் பைதறக், குடகாற் றெறிந்த குப்பை" (பெரும்பாண்.238-40).

பரப்பி (13) என்னும் வினையெச்சத்தினைச் சேர்த்தி (15) என்னும் வினையொடு முடித்து, அதனை வரிவண்டோப்பும் (18) என்னும் வினையொடு முடிக்க.

18 - 9. வண்டோப்பு நாடென மாறிக் கூட்டுக.

கொற்றவேந்தே (9), நின் பகைவர் (12) தோட்டி செப்பிப் (11) பணிந்து திறை தருபவாயின் (12), அவர் அகன்றலைநாடு பாடல் சான்ற (19) என மாறிக் கூட்டி வினைமுடிவு செய்க.

இதனாற் சொல்லியது அவன்வென்றிச்சிறப்புக் கூறியவாறாயிற்று.

(கு - ரை.) 1 - 9. சேரன் பகைவரை வெல்லுதல்.

1. ஓடை முதலிய ஆபரணங்களை அணிந்து எழுகின்ற பலவாகிய ஆண்யானைகளின் தொகுதியோடும்.

2. மேகமென்று மயங்குதற்குக் காரணமான கரிய பெரிய பலவாகிய கிடுகுபடையோடும்; தொழுதியொடு என்பதிலுள்ள ஒடுவைத் தோலொடு என்றும்கூட்டுக (பதிற். 52 : 5, உரை); "மழையுருவின தோல்பரப்பி" (புறநா. 16 : 2); "புரைதவ வுயரிய மழைமருள் பஃறோல்" (மலைபடு. 377); "எயிலூர் பஃறோல் போலச், சென்மழை தவழுமவர் நன்மலை நாட்டே" (நற். 197 : 11 - 2.)

3. அம்பு முதலியன பக்கரை முதலிய கலனையை அறுத்த, கத்திரிகையிட்டு நறுக்கின பிடரிமயிரையுடைய குதிரைப்படையோடும்; "தோறுமிபு, வைந்நுனைப் பகழி மூழ்கலிற் செவிசாய்த், துண்ணா துயங்கு மாசிந் தித்தும்" (முல்லை. 72 - 4.) மு. பதிற். 64 : 9.

4. வன்மையையுடைய அரிய மதில்களைப் பக்கத்தே நெருங்கும்படி வளைத்து. 5. வந்து அவ்விடத்தே நினது சேனை தங்கும்; தங்கும் : முற்று. பசிய பிசிரையுடைய ஒளியையுடைய நெருப்பு.

6. ஊழியினிறுதிக் காலத்தில், சூரியர்கள் பலவாகத் தோன்றி மாயத் தோடு ஒளி திகழப்பெற்று. 7. உயிர்களுக்குப் பொறுத்தற்கு இயலாத மயக்கத்தைச் செய்தலோடு ஒலியைச் செய்து திரிகின்ற.

8. ஊழித்தீயின் வண்ணத்தைக் கொள்ளுதற்குக் காரணமான கடிய திறலால்.

5 - 8. ஒள்ளழல் மாயமொடு, சுடர்திகழ்பு, மயலொடு, பாடிமிழ்பு, ஊழிதரு மடங்கல் என முடிக்க. கொண்ட : காரணப்பொருளில் வந்த பெயரெச்சம்.

9. பகைமையின் துறைகளெல்லாம் முற்ற முடித்த வெற்றியையுடைய அரசே; "துப்புத்துறை போகிய துணிவுடை யாண்மை" (பதிற். 14 : 6.) 8 - 9. சேரனுக்கு வடவைத்தீ உவமை.

10 - 11. தன்னிடத்துள்ள நீர் மதிலைப் பொருகின்ற அகழியினையும், மலையைப்போன்ற மதிலையும் உடைய, தம் பகைவரை வருத்துதலையுடைய பெரிய கையையுடையராய் வணக்கத்தைச் சொல்லி; "தோட்டியின் வணக்கம் வேட்டவன் விரும்பி" (பெருங். 1. 45 : 64.) தோட்டி வளைந் திருத்தலின் வணக்கத்திற்குப் பெயராயிற்று. வரைபோலிஞ்சி : பதிற். 16 : 1, உரை.

12. நின்னுடைய பகைவர் வணங்கித் திறை கொடுப்பாராயின்.

13. புல்லையுடைய அகன்ற முல்லைநிலத்தில் பல பசுக்களைப் பரவச் செய்து. மு. பதிற். 21 : 21.

14 - 5. வளப்பத்தையுடைய வயல்களில் விளைந்த பயிர்களினின்றும் உதிர்ந்த, களத்தில் கடாவிடுதலில்லாத தூற்றுப் பொலியைக் காஞ்சிமரத்தின் நிழலில் தொகுத்து.

16. “கள்ளா ருவகைக் கலிமகி ழுழவர்” (அகநா. 346 : 5.)

16 - 8. கள்ளை யுண்ணுதலையுடைய வலிய கையையுடைய தொழில் செய்யும் உழவர், நீரினிடத்தே வளர்ந்த ஆம்பற்பூவைத் தலையின் கண்ணே சூடியவராய், அதனிடத்தே மொய்த்தற்கு வரும் ஆடுகின்ற சிறகையும் கோடுகளையுமுடைய வண்டுகளை ஓட்டுதற்கு இடமான.

அருவியாம்பல் : பதிற். 71 : 2.

19. அப்பகைவருடைய அகன்ற இடத்தையுடைய நாடுகள், பாடல் மிக்கன ஆகும்.

(பி - ம்.) 6. மல்கிய. 7. எழுதரு. 11. கொட்டி செப்பி. 12. பகைஞர். (உ)

---

(சுரு) **பா**ர்ப்பார்க் கல்லது பணிபறி யலையே
பணியா வுள்ளமொ டணிவரக் கெழீஇ
நட்டோர்க் கல்லது கண்ணஞ் சலையே
வணங்குசிலை பொருதநின் மணங்கம ழகலம்
மகளிர்க் கல்லது மலர்ப்பறி யலையே
நிலந்திறம் பெயருங் காலை யாயினும்
கிளந்த சொன்னீ பொய்ப்பறி யலையே
சிறியிலை யுழிஞைத் தெரியல் சூடிக்
கொண்டி மிகைபடத் தண்டமிழ் செறித்துக்
குன்றுநிலை தளர்க்கு முருமிற் சீறி
ஒருமுற் றிருவ ரோட்டிய வொள்வாட்
செருமிகு தானை வெல்போ ரோயே
ஆடுபெற் றழிந்த மள்ளர் மாறி
நீகண் டனையே மென்றனர் நீயும்
நுந்நுகங் கொண்டினும் வென்றோ யதனாற்
செல்வக் கோவே சேரலர் மருக
காறிரை யெடுத்த முழங்குகுரல் வேலி
நனந்தலை யுலகஞ் செய்தநன் றுண்டெனின்
அடையடுப் பறியா **வருவி யாம்பல்**
ஆயிர வெள்ள வூழி
வாழி யாத வாழிய பலவே.

இதுவும் அது. பெயர் - அருவி யாம்பல் (19.)

(ப - ரை.) 2. பணியாவுள்ளமென்றது நட்பு நின்ற நிலையின் ஒரு நாளும் தாழ்வுபடாத உள்ளமென்றவாறு.

கெழீஇ (2) என்னும் எச்சத்தினை நட்டல் (3) என்னும் தொழிலொடு முடிக்க.

அகலம் (4) மகளிர்க்கல்லது மலர்ப்பறியலையே (5) என்றது நின்னொடு பொருவாரின்மையின் நின் அகலத்தை நின் மகளிர்போகத்துக்கு இடமாக வல்லது மலர்வித்தலை அறியாயென, "மகளிர் மலைத்த லல்லது மள்ளர், மலைத்தல் போகிய சிலைத்தார் மார்ப" (புறநா. 10 : 9 - 10) என்றது போலக் கொள்க.

8. சிறியவிலையென்றது கடைக்குறை. 9. தமிழ்செறித்தென்றது மாற்றாரது தமிழப்படையையெல்லாம் இடையறப் படுத்தியென்றவாறு.

11. ஒரு முற்று - ஒருவளைப்பு. இருவர் : சோழனும் பாண்டியனும். இருவரையென்னும் உருபு விகாரத்தால் தொக்கது.

13. ஆடு பெற்று அழிந்த மள்ளரென்றது முன்பு பிறரொடு பொருது வென்றிபெற்றுப் பின் நினக்கு அழிந்த மள்ளரென்றவாறு.

மாறியென்றது நின்னொடு பகைமாறி யென்றவாறு.

14. நீ கண்டனையேமென்றது இன்றுமுதல் நின்னாலே படைக்கப் பட்டாற் போல்வேமென்றவாறு.

19. அருவியாம்பலென்றது வீ அரிய எண்ணும்பலென்றவாறு.
வீயென்பது குறுகிற்று ; அருவி : பண்புத்தொகை.
'அடையடுப் பறியா வருவி யாம்பல்' எனக் கூறிய இச்சிறப்பானே இதற்கு, '**அருவி யாம்பல்**' என்று பெயராயிற்று.
பல (21) ஆம்பல் (19) என மாறிக் கூட்டுக.

நீ (7) பார்ப்பார்க்கல்லது பணிபறியலை (1) ; நட்டோர்க் கல்லது கண்ணஞ்சலை (3) ; நின் அகலம் (4) மகளிர்க்கல்லது மலர்ப்பறியலை (5) ; கிளந்த சொற் பொய்ப்பு அறியலை (7) ; இவை நின்னியல்பு ; இவையேயன்றி வெல் போரோய், முன் பிறர்பால் (12) வெற்றிபெற்று நினக்கு அழிந்த மள்ளர் நின்னொடு பகைமாறி (13) நீகண்டனையேமென்று தாழ்வுகூற (14) அதற்கு ஏற்ப நீயும் நின்பெருமையும் கண்ணோட்டமுமாகிய நும் நுகங்கொண்டு இன்னும் வென்றிகூர்ந்தனை ; நின் குணங்கள் இவ்வாறாகிய அதனானே (15) ; செல்வக்கோவே, சேரலர்மருகனே (16), வாழியாதனே (21), உலகஞ்செய்த நன்றுண்டெனிற் (18) பல (21) ஆம்பலாகிய (19) ஆயிரவெள்ள வூழி (20) வாழ்க (21) என மாறிக் கூட்டி வினைமுடிவு செய்க.

'வாழியாத' (21) என்னும் விளி 'செல்வக்கோவே' (16) என்பது முதலாய விளிகளின்பின் நிற்கவேண்டுதலின் மாறாயிற்று.

இதனாற் சொல்லியது அவன் பலகுணங்களையும் ஒருங்கு கூறி வாழ்த்தியவாறாயிற்று.

(கு - ரை.) 1. அந்தணருக்குப் பணிதல் அல்லாமல் பிறருக்குப் பணிதலை அறியாய் ; பணிபு - பணிதல் ; "மனங்கவல் பின்றி மாழாந்தெழுந்து" (பொருந. 95) என்புழிக் கவல்பு கவற்சியெனப் பொருள்பட்டாற் போல்வது இது. "இறைஞ்சுக பெருமநின் சென்னி சிறந்த, நான்மறை முனிவ ரேந்துகை யெதிரே" (புறநா. 6 : 19 - 20.)

2 - 3. நட்பின் நிலையில் தாழ்வுபடாத மனத்தால், அழகு பொருந்த மனம் பொருந்தி நின்னோடு நட்புச் செய்தோர்க்கல்லது கண்ணோட்டத்தால் அஞ்சமாட்டாய்.

4 - 5. வளைந்த வில் உராய்ந்த நினது மணம் பரக்கின்ற மார்பை, நின் மகளிர்க்குப் போகத்தின் பொருட்டு மலர்வித்தலை யல்லாமல் பகைவர்க்கு மலர்வித்தலை அறியாய் (**சிறுபாண்.** 232, ந.; **சீவக.** 283, ந.) சிலை பொருதலாவது, அம்பை எய்தற்கு நாணை இழுக்கும்போது அது மார்பிற் படுதல்; "மாண்வினைச் சாப மார்புற வாங்கி, ஞாண்பொர விளங்கிய வலிகெழு தடக்கை" (**பதிற்.** 90 : 32 - 3.)

இளையோர் மகளிரென்னும் பொருளில் வரும் (**சிறுபாண்.** 232, ந.)

6 - 7. நிலம் தன் கூறுபாடு எல்லாம் நீங்கும் ஊழிக்காலத்தாயினும் நீ சொன்ன சொல்லைப் பொய்த்தலை அறியாய்; "நிலம்புடை பெயர்வ தாயினுங் கூறிய, சொற்புடை பெயர்தலோ விலரே" (**நற்.** 289 : 2 - 3); "நிலம்புடை பெயரினும்" (**குறுந்.** 373 : 1); "நிலம் பெயரினு நின்சொற் பெயரல்", "நிலம்புடை பெயர்வ தாயினு மொருவன், செய்தி கொன்றோர்க் குய்தி யில்லென" (**புறநா.** 3 : 14, 34 : 5 - 6); "அடியுறை செய்தொழிற் குடிமுதல் பிழைத்தல், இருநிலம் பெயரினு மெம்மாட் டிலவென" (**பெருங்.** 1. 58 : 91 - 2.)

8. சிறிய இலையையுடைய உழிஞைப் பூவாற் செய்யப்பட்ட மாலையைச் சூடி. சிறியிலை : தொகுத்தல் விகாரம்.

9. கொள்ளை மிகுதியாக உண்டாக, தண்ணிய தமிழ்நாட்டிலுள்ள படைகளை இடையறப்படுத்தி; தமிழ் - தமிழப்படை; "தமிழ்தலை மயங்கிய தலையாலங் கானத்து" (**புறநா.** 19 : 2); "விருந்தின் மன்னர் தம்மொடுங் கூடி, அருந்தமி ழாற்ற லறிந்தில ராங்கென", "தென்றமி ழாற்றல், அறியாது மலைந்த வாரிய மன்னரை" (**சிலப்.** 26 : 160-61, 27 : 5-6.)

10. குன்றைத் தன் நிலையினின்றும் தளரச் செய்யும் இடியைப் போலக் கோபித்து; "மரந்தின்னூஉ வரையுதிர்க்கும், நரையுருமி னேறனையை" (**மதுரைக்.** 62 - 3.)

11 - 2. ஒரே வளைப்பினால் சோழனையும் பாண்டியனையும் வென்ற ஒள்ளிய வாளினையும், போரில் விருப்பம் மிக்க சேனையையும் உடைய வெல்லும் போரைச் செய்வோய்.

13. முன்பு பிறரோடு போர் செய்து வெற்றிபெற்றுப் பின் நினக்குத் தோற்ற வீரர் தம் பகைமை நீங்கி. 14. நின்னால் மீண்டும் படைக்கப் பட்டாரைப் போன்றேம் என்று கூறினர்.

14 - 5. நீயும் நும் குலத்தாருக்குரிய வன்மையால் இன்னும் பல போர்களை வென்றோயாதலால்; நுகம் - வன்மை (**மலைபடு.** 87. ந.)

16. செல்வத்தையுடைய அரசே, சேரர்குடியில் வழித்தோன்றலாயுள்ளாய். செல்வக்கோ : இவ்வரசன் பெயர்.

17 - 8. காற்று அலைகளை உண்டாக்கிய, முழங்குகின்ற ஓசையையுடைய கடலாகிய எல்லையையும் அகன்ற இடத்தையுமுடைய உலகத்து நன்மக்கள் செய்த அறம் உண்டாயின்.

19. ஆம்பல் : **பரி.** 2 : 13, 3 : 44.

20. வெள்ள ஊழி : **மதுரைக்.** 22-3; **ஐங்.** 281 : 1 - 2.

21. இவ்வடியில் பாட்டுடைத் தலைவனது பெயர் அமைந்துள்ளது.

19 - 21. அடை அடுத்தலை அறியாத, பூக்கள் அரிதாகிய பல ஆம்பல் என்னும் எண்ணும், ஆயிரத்தாற் பெருக்கிய வெள்ளமென்னும் எண்ணும் ஆகிய எண்களின் அளவுள்ள பல ஊழிகள் நீ வாழ்வாயாக.

17 - 21. பதிற். 90 : 51 - 4; "இவ்வுலகத்துச் சான்றோர் செய்த நன்றுண்டாயின்......வாழிய பலவே" (புறநா. 34 : 19 - 23); "ஒன்றுபத் தடுக்கிய கோடிகடை யிரீஇய, பெருமைத் தாகநின் னாயுள் டானே" (ஷை. 18 : 5 - 6.)

மு. இது வாகைத்துறைப் பாடாண் பாட்டு (தொல். புறத். 26, ந.)

(பி-ம்.) 5. மலைப்பு. 9. கொண்டமை. 10. குன்றினிலை. 15. நுந்நுங்கொண்டினும் வென்றோயே. 19. கடையெடுப்பறியா. (ந.)

---

(ருச)
வலம்படு முரசின் வாய்வாட் கொற்றத்துப்
பொலம்பூண் வேந்தர் பலர்தில் லம்ம
அறங்கரைந்து வயங்கிய நாவிற் பிறங்கிய
உரைசால் வேள்வி முடித்த கேள்வி
அந்தண ரருங்கல மேற்ப நீர்பட்
டிருஞ்சே றாடிய மணன்மலி முற்றத்துக்
களிறுநிலை முணைஇய தாரருந் தகைப்பிற்
புறஞ்சிறை வயிரியர்க் காணின் வல்லே
எஃகுபடை யறுத்த கொய்சுவற் புரவி
அலங்கும் பாண்டி லிழையணிந் தீமென
ஆனாக் கொள்கையை யாதலி னவ்வயின்
மாயிரு விசும்பிற் பன்மீ னொளிகெட
ஞாயிறு தோன்றி யாங்கு மாற்றார்
உறுமுரண் சிதைத்தநின் னோன்றாள் வாழ்த்திக்
காண்கு வந்திசிற் கழறொடி யண்ணல்
மைபடு மலர்க்கழி மலர்ந்த நெய்தல்
இதழ்வனப் புற்ற தோற்றமொ டுயர்ந்த
மழையினும் பெரும்பயம் பொழிதி யதனாற்
பசியுடை யொக்கலை யொரீஇய
இசைமேந் தோன்றநின் பாசறை யானே.

துறை - * காட்சிவாழ்த்து. வண்ணமும் தூக்கும் அது.
பெயர் - உரைசால் வேள்வி (4.)

(ப - ரை.) 2. பலர்தில்லென்புழி, தில் ஒழியிசை.

4. உரைசால் வேள்வியென்றது யாகங்கள் எல்லாவற்றினும் பெரியவும் அரியவுமாக உரையமைந்த வேள்வியென்றவாறு.

இச்சிறப்பானே இதற்கு, 'உரைசால் வேள்வி' என்று பெயராயிற்று.

---

*பதிற். 41, துறை.

7. களிறு நிலே முணவுதற்குக் காரணம் இருஞ்சேறுடுதல் (6.)

தாரருந்தகைப்பென்றது ஒழுங்குபாட்டையுடைய ஆண்டு வாழ்வார்க் கல்லது பிறர் புகுதற்கரிய மாளிகைக் கட்டணமென்றவாறு.

தார் - ஒழுங்கு. தகைப்பு - *கட்டணம்.

8. புறஞ்சிறை - அதன் சிறைப்புறம். 9. எஃகுபடை - கூரிய படை.

10. பாண்டில் - தேர் பூணும் எருதுகள்.

8 - 10. புறஞ்சிறை வயிரியர்க் காணின் ஈமென்றது நம்மை அவர்கள் காணவேண்டுவதில்லே, நம் மாளிகை மதிற்புறத்து நீயிர் காணினும் கொடுமினென்றவாறு.

ஈமென்றது அவ்வீகைத் துறைக்குக் கடவாரை.

11. அவ்வயினென்றது நின்னூரிடத்தென்றவாறு.

ஈமென (10) அவ்வயின் ஆறுக் கொள்கையையாதலின் (11) என மாறிக் கூட்டுக.

ஆதலின் (11) என்பதனை மழையினும் பெரும்பயம் பொழிதி (18) என்பதனேடு கூட்டி, நின்னூரிடத்து அவ்வயின் ஆறுக்கொள்கையையாய்ப் போந்தபடியாலே ஈண்டு நின் பாசறையிடத்து மழையினும் பெரும்பயம் பொழியா நின்றுயெனவுரைக்க.

ஞாயிறு தோன்றியாங்கு மாற்றார் (13) உறுமுரண் சிதைத்த (14) என முடிக்க.

நெய்தல் (16) இதழ்வனப்புற்ற தோற்றமொடு (17) பயம்பொழிதி (18) எனக் கூட்டி, இவன்றன் நிறம் கருமையாக்கி அந்நிறத்தோற்றத்தானும் மழையோடு உவமமாக்கியுரைக்க.

பசியுடை யொக்கலே (19) அப்பசியை ஒருவியவெனப் பசி வருவிக்க.

உலகத்து வேந்தர் பலருளர் (2) ; அவராற் பெறும்பயன் என்? தகைப்பிற் (7) புறஞ்சிறை வயிரியர்க்காணின் (8) ஈமென (10) அவ்வயின் ஆறுக் கொள்கையையாதலின் (11) மழையினும் பெரும்பயம் பொழிதி (18) ; அதனல் அண்ணல் (15), தோன்றல் (20), பசியுடையொக்க லொரீஇய (19) பாசறையானே (20) நின் நோன்ருள் வாழ்த்திக் (14) காண்கு வந்திசின் (15) என மாறிக் கூட்டி வினைமுடிவு செய்க.

அதனல் (18) என்பதன்பின் 'அண்ணல்' (15), 'தோன்றல்' (20) என்னும் விளிகள் நிற்கவேண்டுதலின் மாறுயிற்று.

இதனற் சொல்லியது அவன் கொடைச்சிறப்பினை வென்றிச்சிறப் பொடு படுத்துக் கூறியவாறுயிற்று.

4 - 5. ஈயவென்றது பாடமாயின், உரைசாலென்றது கூறும். 'உரைசால், வேள்வி முடித்த கேள்வி யந்தணர், அருங்கல மேற்ப வீயநீர் பட்டு' என்று பாடமாகவேண்டும்.

(கு - ரை.) 1 - 2. வெற்றியுண்டாதற்குக் காரணமான முரசினையும், பகைவரைக் கொல்லுதலில் தப்பாத வாளையும், அரசுரிமையையும் உடைய பொன்னுற் செய்த ஆபரணங்களை அணிந்த அரசர் பலர் உலகத்துள்ளார் ; அவரால் யாது பயன்? தில் : ஒழியிசைப் பொருளில் வந்தது.

---

*தக்க. 137, உரை.

4. கேள்வி, வேள்வி: பதிற். 74 : 1 - 2.

4 - 5. "கேள்வி யந்தண ரருங்கட னிறுத்த, வேள்வித் தூணத்து" (பெரும்பாண். 315 - 6.)

3 - 5. அறத்தையே கூறி விளங்கிய செவ்விய நாவினையுடைய விளங்கிய புகழ்ச்சியமைந்த செய்தற்கரிய யாகங்களைச் செய்துமுடித்த, வேதத்தை ஓதிய அந்தணர் அரிய கலங்களைப் பெற்றுக்கொள்ள அவற்றை நீர் வார்த்துக்கொடுத்தலால், அந்நீர் பட.

நாவின் அந்தணரென இயைக்க; "அறங்கரை நாவி னான்மறை முற்றிய" (தொல். சிறப்புப்.) கேள்வியென்றது சுருதி யென்னும் பெயர்ப்பொருளது (பதிற். 21 : 1, உரை.)

7. தகைப்பு : பட். 143 ; பெருங். 1. 47 : 44, 3. 24 : 200.

6 - 7. கரிய சேறு உண்டான மணல் மிக்க முற்றத்தினிடத்தே, களிறு தான் நிற்றலை வெறுத்த ஒழுங்கையுடைய, புலவர் பொருநர் அந்தணர் என்போருக்கு அன்றிப் பிறர் புகுதற்கு அரிய கட்டணத்தில்.

8. அதனது எல்லையினிடத்தே கூத்தரைக் கண்டால், விரைய.

9. மு. பதிற். 62 : 3.

10. பாண்டில் - நாரை எருது (சிறுபாண். 260, ந.; கலி. 109 : 4, ந.)

9 - 11. கூரிய அம்பு முதலிய ஆயுதங்கள் பக்கரை முதலியவற்றை அறுத்த, கத்திரிகையால் மட்டம் செய்யப்பெற்ற பிடரிமயிரையுடைய குதிரைகளையும், விளங்கும் தேர் பூணும் எருதுகளையும் அவற்றிற்கு உரிய இழைகளை யணிந்து கொடுங்கள் என்று அவ்வீதலுக்கு உரியாரை ஏவி, அவ்வீதலினிடத்தே அமையாத விரதத்தையுடையாயாதலால்.

11 - 5. கழலும்படி இடப்பட்ட தொடியையணிந்த தலைவ, அழகிய நின்னூரினிடத்தே, கரிய பெரிய ஆகாயத்திற் பல நட்சத்திரங்கள் ஒளி கெடும்படி சூரியன் தோன்றினாற்போல, பகைவரது மிக்க மாறுபாட்டைக் கெடுத்த நினது வலிய முயற்சியை வாழ்த்திக் காண்பேனாகி வந்தேன்.

அவ்வயின் சிதைத்த என இயையும்.

16 - 8. கரிய நிறம் உண்டாகின்ற மலர்களையுடைய கழியில் மலர்ந்த நெய்தற் பூவினது இதழின் அழகை ஒத்த தோற்றத்தோடு, உயர்ந்த மேகத்தைக் காட்டிலும் பெரிய பயனை இரவலருக்குப் பொழிதலை உடையாய். நெய்தல் மலரின் கருமை சேரன் நிறத்திற்கு உவமை; நிறத்தாலும் மேகம் இவனுக்கு உவமையாயிற்று.

18 - 20. ஆதலால், பசியைத் தொன்றுதொட்டே உடைய சுற்றத்தாரை அப்பசி நீங்கும்படி செய்ய அதனால் புகழ் மேவிய தோன்றல், நின் பாசறையினிடத்தே.

நின் பாசறையான் (20) காண்கு வந்திசின் (15) என முடிக்க.

(பி - ம்.) 13. தோன்றியன்ன. 17. நோக்கமொடு. (அ)

(௬௫) **எ**றிபிணை மிடறிய செம்மறுக் குளம்பிற்
பரியுடை நன்மா விரியுளை சூட்டி
மலைத்த தெவ்வர் மறந்தபக் கடந்த
காஞ்சி சான்ற வயவர் பெரும
வில்லோர் மெய்ம்மறை சேர்ந்தோர் செல்வ
பூணணிந் தெழிலிய வணைந்துவர லிளமுலை
மாண்வரி யல்குன் மலர்ந்த நோக்கின்
வேய்புரை யெழிலிய விளங்கிறைப் பணைத்தோட்
காமர் கடவுளு மாளுங் கற்பிற்
சேணாறு நறுநுதற் சேயிழை கணவ
பாணர் புரவல பரிசிலர் வெறுக்கை
பூணணிந்து விளங்கிய புகழ்சான் மார்பநின்
**நாண்மகி ழிருக்கை** யினிதுகண் டிகுமே
தீந்தொடை நரம்பின் பாலை வல்லோன்
பையு ளுறுப்பிற் பண்ணுப் பெயர்த்தாங்குச்
சேறுசெய் மாரியி னளிக்குநின்
சாறுபடு திருவி னனைமகி ழானே.

**துறை - பரிசிற்றுறைப் பாடாண்பாட்டு.**
**வண்ணமும் தூக்கும் அது. பெயர் - நாண்மகி ழிருக்கை (13.)**

(ப - ரை.) விரியுளை சூட்டி (2) என்றதனாற் பயன் மாவிற்குப் போர் வேட்கை பிறத்தல்.

சூட்டிக் (2) கடந்த (3) என முடிக்க.

4. காஞ்சி சான்ற வயவரென்றது நிலையாமை எப்பொழுதும் உள்ளத்திற் கொண்டிருத்தலமைந்த வீரரென்றவாறு.

6. வணைந்துவரலென்பது ஒரு வாய்பாட்டு விகற்பம்.

13. அவன் ஓலக்க இருக்கையின் செல்வத்தை நாண்மகிழிருக்கை யெனக் கூறிய சொற்சிறப்பானே இதற்கு, '**நாண்மகி ழிருக்கை**' என்று பெயராயிற்று.

14. தீந்தொடை - *பாலைக்கோவைகளாகிய வீக்குநிலை.

பையுளுறுப்பிற் பண்ணுப் பெயர்த்தாங்கு (15) அளிக்கும் (16) நனை (17) எனக் கூட்டி எல்லாப் பண்களிலும் வருத்தத்தைச் செய்யும் உறுப்பினையுடைய பாலைப்பண்கள் பலவற்றையும் ஓரோவொன்றாகப் பெயர்த்து வாசிக்குமாறுபோலே ஒன்றையொன்று ஒவ்வாத இன்பத்தை உண்டவர்க்குக் கொடுக்கும் பலதிறத்து மதுவெனவுரைக்க.

---

*பாலைக்கோவைகளென்றது செம்பாலை முதலிய எழுவகைப்பாலைப் பண்களை.

17. நறவென்றது ஈண்டு மதுவிற்கெல்லாம் பொதுப் பெயராய் நின்றது.

16. மாரியினென்னும் உவமம் மதுக்களில் ஒரோவொன்றைக் கொடுக்கும் மிகுதிக்கு உவமம்.

17. சாறுபடு திருவினென்ற உவமம் அம்மருக்களைப் பானம்பண்ணுங்காலத்து அலங்காரமாகக் கூட்டும் *பூவும் விரையுமுதலாய பொருள்களுக்கு உவமம். சாறென்றது விழாவின்தன்மையை. மகிழென்றது மகிழ்ச்சியையுடைய ஓலக்கவிருப்பினை.

வயவர் பெரும (4), வில்லோர் மெய்ம்மறை, சேர்ந்தோர் செல்வ (5), சேயிழை கணவ (10), பாணர் புரவல, பரிசிலர் வெறுக்கை (11), புகழ் சான்மார்ப, நின் (12) நாண்மகிழிருக்கையின் சிறப்பெல்லாம் (13) நின் நறவமகிழின்கண்ணே (17) இனிது கண்டேம் (13) எனக் கூட்டி வினைமுடிவு செய்க.

இதனாற் சொல்லியது அவன் ஓலக்கவினோதத்தொடு படுத்து அவன் செல்வச் சிறப்புக் கூறியவாறாயிற்று.

(கு- ரை.) 1 - 4. சேரன் பகைவரை வென்றமை கூறப்படும்.

1 - 2. வெட்டப்பட்ட பிணங்களை இடறுதலால் உண்டான இரத்தத் தாற் சிவந்த கறையையுடைய குளம்பினையும், விரைந்த செலவையும் உடைய நல்ல குதிரைக்கு விரிந்த தலையாட்டத்தைச் சூட்டி.

உளையைச் சூட்டியது குதிரைக்குப் போரில் வேட்கை பிறத்தற் பொருட்டு. மறுக்குளம்பு : புறநா. 97 : 11 - 3, 98 : 5 - 7.

4. மு. பதிற். 90 : 39.

3 - 4. நின்னோடு மாறுபட்ட பகைவரது வீரம் கெடும்படி வஞ்சியாது எதிர் நின்று வென்ற, நிலையாமை எப்போதும் தம் நெஞ்சில் நிலைபெற்ற வீரருக்குத் தலைவ.

5. விற்படையாளருக்குக் கவசம்போல்வாய், நின்னை அடைந்தோருடைய செல்வமாக இருப்பாய். இல்லோரெனப் பிரித்துப் பொருளில்லாதவரெனக் கொள்ளலுமாம்.

6 - 10. சேரன் பெருந்தேவியின் சிறப்பு.

முத்தாரம் முதலியவற்றை அணிந்து அழகுபெற்ற, எழுதப்பட்டாற் போன்று வருதலையுடைய இளைய நகிலையும், மாட்சிமைப்பட்ட வரிகளையுடைய அல்குலையும், மலர்ந்த கண்களையும், மூங்கிலை ஒத்து அழகுபெற்ற விளங்கிய மூட்டுக்களையுடைய பெருத்த தோள்களையும், விரும்பத்தக்க அருந்ததியையும் வென்ற கற்பினையும், நெடுந்தூரத்தே மணம் கமழ்கின்ற நல்ல நெற்றியையும் உடைய சிவந்த ஆபரணங்களை அணிந்தோளுக்குக் கணவ. சேயிழை கணவ என்றது அவள் கற்பின் சிறப்பு நோக்கி; 'ஐயைதந்தை : ஐயை ஒரு கற்புடைய மகள்; இவள் தந்தையென்றது இவள் கற்புடைமை நோக்கி' (அகநா. 6 : 3, உரை.)

சேயிழை கணவ : பதிற். 14 : 15, உரை.

11. பாணரது குடும்பத்தைப் புரத்தலைவல்லாய்; "யாணர்க் கோளுரென்ப, பாணர்ப் பாரந் தாங்கியோன் பதியே" (யா - வி. 16, மேற்.); பரிசிலரது செல்வமாயிருப்பாய் (பதிற். 15 : 21, 38 : 9.)

* பதிற். 42 : 10 - 11, உரை.

12. அணிந்தென்னும் முதல்வினை சினைவினை கொண்டது (தொல். வினை. 34, ந.)

12 - 3. ஏழு முடியாற் செய்த ஆரம் முதலிய ஆபரணங்களை அணிந்து விளக்கமுற்ற புகழ்மிக்க மார்பையுடையாய், நின்னுடைய நாளோலக்கத்தின் செல்வச் சிறப்பை இனிமையாகக் கண்டோம்.

14 - 7. இனிய நரம்புக்கட்டையுடைய பாலையாழை வாசித்தலில் வல்லோன் பண்கள் எல்லாவற்றுள்ளும் துன்பத்தைச் செய்யும் உறுப்பையுடைய பாலைப் பண்களை மாறிமாறி வாசித்தாற்போல, சேற்றைச் செய்கின்ற மழையைப்போல அளிக்கும் விழாவின் தன்மை யுண்டான செல்வத்தைப்போன்ற மதுவால் மகிழ்ச்சியையுடைய ஓலக்க விருப்பின்கண்ணே.

பாலைப்பண் வெவ்வேறான சுவையையுடைய மதுவிற்கு உவமை ; “நல்லியாழ்ப், பண்ணுப் பெயர்த்தன்ன காவும் பள்ளியும்” (மலைபடு. 450-51) என்பதும், ‘பண் ஒன்றையொன்று ஒவ்வாது இனிதாயிருக்குமாறு போல நுகரும் பொருள்களும் ஒன்றையொன்று ஒவ்வா இனிமையுடைய என்றார்’ (ந.) என்னும் அதனுரையும் இங்கே அறிதற்பாலன.

மகிழுக்கு மாரி : “பாணர் மண்டை நிறையப் பெய்ம்மார், வாக்க வுக்க தேக்கட் டேறல், கல்லலைத் தொழுகு மன்னே” (புறநா. 115 : 2-4.) (ரு)

---

(சுசு) **வா**ங்கிரு மருப்பிற் றீந்தொடை பழுனிய
இடனுடைப் பேரியாழ் பாலை பண்ணிப்
படர்ந்தனை செல்லு முதுவா யிரவல
இடியிசை முரசமொ டொன்றுமொழிந் தொன்னார்
வேலுடைக் குழூஉச்சமந் ததைய நூறிக்
கொன்றுபுறம் பெற்ற பிணம்பயி லழுவத்துத்
தொன்றுதிறை தந்த களிற்றொடு நெல்லின்
அம்பண வளவை விரிந்துறை போகிய
ஆர்பத நல்கு மென்ப கறுத்தோர்
உறுமுரண் டாங்கிய தாரருந் தகைப்பின்
நாண்மழைக் குழூஉச்சிமை கடுக்குந் தோன்றற்
றோன்மிசைத் தெழுதரும் விரிந்திலங் கெஃகிற்
றார்புரிந் தன்ன வாளுடை விழவிற்
போர்படு மள்ளர் போந்தொடு தொடுத்த
கடவுள் வாகைத் துய்வீ யேய்ப்பப்
பூத்த முல்லைப் **புதல்சூழ் பறவை**
கடத்திடைப் பிடவின் றொடைக்குலைச் சேக்கும்
வான்பளிங்கு விரைஇய செம்பரன் முரம்பின்
இலங்குகதிர்த் திருமணி பெறூஉம்

அகன்கண் வைப்பி ஞடுகிழ வோனே.

**துறை - செந்துறைப் பாடாண்பாட்டு.**

**வண்ணமும் தூக்கும் அது. பெயர் - புதல்சூழ் பறவை (16.)**

(ப - ரை.) 3. படர்ந்தனையென்றது வினையெச்சமுற்று; படர்தல் - நினைவு. 4. ஒன்றுமொழிதல் - வஞ்சினங் கூறல்.

ஒன்றுமொழிந்து (4) கொன்றுபுறம்பெற்ற (6) எனக் கூட்டி, ஒன்று மொழிதலும் கொன்று புறம்பெறுதலும் ஒன்னாரதன்றி இவன் தொழிலாக வுரைக்க.

ஒன்னாரது (4) குழு (5) எனக் கூட்டி, கொன்றதும் புறம்பெற்றதும் அக்குழுவையேயாக வுரைக்க.

7. திறை தந்தவென்றதற்கு அவன் ஒன்னார் திறையாகத் தந்தவென வருவித்து உரைக்க. 8. அம்பணம் - மரக்கால். உறைபோதல் - *உறையிட முடியாதொழிதல். அளவை விரியவெனத் திரிக்க.

நெல்லின் (7) ஆர்பதம் (9) என இருபெயரொட்டு.

10. தாரருந் தகைப்பு - ஒழுங்குடைய மாற்றாராற் குலைத்தற்கரிய படை வகுப்பு.

11. நாண்மழை - பருவமழை. 12. தோலொடுவென ஒடு விரிக்க.

13. தார் புரிந்தன்ன வாள் - பூமாலைகள் அசைந்தாற்போல நுடங்குகின்ற வாள்.

தகைப்பினையும் (10) எஃகினையுமுடைய (12) போர் (14) எனக் கூட்டுக.

15. கடவுள் வாகை - வெற்றிமடந்தையாகிய கடவுள் வாழும் வாகை.

14 - 6. கிழித்துக் குறுக நறுக்கி வாகையோடு இடைவைத்துத் தொடுத்த பனங்குருத்து முல்லைமுகைக்கு ஒப்பாகவும் வாகைவீ அம்முல்லையைச் சூழ்ந்த வண்டிற்கு ஒப்பாகவும் உவமங்கொள்ளவைத்த சிறப்பானே இதற்கு, '**புதல்சூழ் பறவை**' என்று பெயராயிற்று.

19 திருமணி பெறுவார் அந்நாட்டாராகக் கொள்க.

அவனை நினைத்துச்செல்லு முதுவாயிரவலனே (3), நின் நினைவிற் கேற்ப நாடுகிழவோன் தனக்குப் போரின்மையான்வென்று கொடுப்பதின்றி (20) ஒன்னார் (4) பிணம்பயிலழுவத்துத் (6) திறையாகத் தந்த களிற்றெடு தன்னாட்டு விளைந்த நெல்லாகிய (7) உணவினைக் கொடாநின்றானென்று எல்லாரும் சொல்லுவார்கள் (9); ஆதலால், அவன்பால் ஏகு எனக்கூட்டி வினைமுடிவு செய்க.

இதனாற் சொல்லியது அவன் வென்றிச்சிறப்புடன் படுத்துக் கொடைச் சிறப்புக் கூறியவாறாயிற்று.

'படர்ந்தனை செல்லும்' என்று பாணன் தன்னில் நினைவன கூறினமையால், துறை பாணாற்றுப்படையன்றிச் செந்துறைப்பாடாணாயிற்று.

(கு - ரை.) 1 - 2. வளைந்த கரிய தண்டினையுடைய, இனிய நரம்புக் கட்டு இசையில் முதிர்ந்த, இடமுடைய பேரியாழென்னும் யாழைப் பாலைப் பண்ணாக அமைத்து.

---

*உறையிடுதல் - தானியங்களை அளக்குங்கால் அத்தானியங்களைக் கொண்டே அளவு குறித்தல்.

3. சேரனை நினைந்து செல்லுகின்ற பேரறிவு வாய்ந்த இரவலனே. படர்ந்தனை : முற்றெச்சம். முதுவாயிரவல் : முருகு. 284; புறநா. 48 : 7.

4 - 5. இடியினைப்போன்ற முரசத்தோடு வஞ்சினத்தைக் கூறி, பகைவரது வேலைப்பெற்ற திரளுதலையுடைய போர் கெடும்படி அழித்து.

6. கொன்று அவர் முதுகுகாட்டி ஓடுதலைப்பெற்ற, பிணங்கள் நெருங்கிய போர்க்களப்பரப்பில். 7. பழைய திறையாகத் தந்த ஆண் யானைகளோடு நெல்லாகிய. களிற்றைத் திறையாகத் தருதல் : பதிற். 90 : 6 - 7.

ஒன்றுமொழிந்து (4) கொன்று புறம்பெற்ற (6) என இயைக்க.

8. அம்பணம் : பதிற். 71 : 5; ஐங். 43 : 1; சிலப். 14 : 209.

8 - 9. மரக்காலின் அளவையால் அளந்து உறையிடமுடியாத உணவை அளிப்பானென்று சொல்லுவர்.

7 - 9. நெல்லின் ஆர்பதமென இயைக்க.

9 - 10. கோபங்கொண்ட பகைவரது மிக்க மாறுபாட்டைத் தடுத்த, ஒழுங்கையுடைய பகைவரால் குலைத்தற்கு முடியாத படைவகுப்பையும்.

11 - 2. விடியற்காலத்தே மேகத்தின் கூட்டத்தையுடைய சிகரத்தை ஒத்த தோற்றத்தையுடைய பரிசைப்படையின் மேல்தாகி எழுகின்ற ஒளி பரவி விளங்குகின்ற வேலையும்; பரிசைக்கு மேகம் உவமை (பதிற். 52 : 5, உரை.) எஃகு தோலின்மேற் றேன்றுதல் : பதிற். 50 : 9.

13. பூமாலைகள் அசைந்தாற்போலச் சுழலுதலையுடைய வாள்விழாவையும் உடைய. வாளுக்குப் பூமாலை உவமை: "தூவலி னனைந்த தொடலை யொள்வாள்" (ஐங். 206 : 3.)

தகைப்பினையும் (10) எஃகினையும் (12) விழவினையும் (13) உடைய மள்ளர் (14) என இயைக்க.

14 - 5. போர் உண்டாகின்ற வீரர், பனங்குருத்தோடு சேர்த்துத் தொடுத்த, தூர்க்கை வாழ்தலையுடைய வாகைமரத்தினது துய்களையுடைய பூவைப்போல. 14 - 6. பனந்தோட்டோடு பூவைத் தொடுத்தல் : பதிற். 67 : 13; புறநா. 100 : 3 - 5, 265 : 2 - 3.

16 - 7. பூத்த முல்லைக் கொடியினது புதலைச் சூழ்ந்த வண்டாகிய பறவை, காட்டினிடத்தே பிடாமரத்தின் தொடுத்தலையுடைய பூக்குலையிலே தங்குதற்கு இடமான. முல்லைப்பூவிற்கு வெள்ளிய பனங்குருத்தின் துண்டுகளும், வாகைப் பூவிற்கு வண்டும் உவமை.

18 - 20. உயர்ந்த பளிங்கு கலந்த சிவந்த பருக்கைக் கற்களையுடைய மேட்டு நிலத்தில், விளங்குகின்ற கிரணங்களையுடைய அழகிய மணியை அவ்விடத்தே வாழ்வார் பெறும் அகன்ற இடத்தையுடைய ஊர்களையுடைய நாட்டுக்குரியோன்.

காட்டில் மணி பெறுதல் : பதிற். 21 : 22, 58 : 18 - 9, உரை.

நாடுகிழவோன் (20) களிற்றொடு நெல்லின் (7) ஆர்பதம் நல்கும் என்ப (9) என முடிக்க.

(பி - ம்.) 2. யாழ்ப்பாலை. 3. கடறுழந்து செல்லும். (சு)

(சுஎ) **கொ**டுமணம் பட்ட நெடுமொழி யொக்கலொடு
பந்தர்ப் பெயரிய பேரிசை மூதூர்க்
கடனறி மரபிற் கைவல் பாண
தெண்கடன் முத்தமொடு நன்கலம் பெறுகுவை
கொல்படை தெரிய வெல்கொடி நுடங்க
வயங்குகதிர் வயிரொடு வலம்புரி யார்ப்பப்
பல்களிற் றினநிரை புலம்பெயர்ந் தியல்வர
அமர்க்க ணமைந்த வவிர்நிணப் பரப்பிற்
குழூஉச்சிறை யெருவை குருதி யாரத்
தலைதுமிந் தெஞ்சிய வாண்மலி யூபமொ
டுருவில் பேய்மகள் கவலை கவற்ற
நாடுட னடுங்கப் பல்செருக் கொன்று
நாறிணர்க் கொன்றை **வெண்போழ்க் கண்ணியர்**
வாண்முகம் பொறித்த மாண்வரி யாக்கையர்
நெறிபடு மருப்பி னிருங்கண் மூரியொடு
வளைதலை மாத்த தாழ்கரும் பாசவர்
எஃகா டூனங் கடுப்பமெய் சிதைந்து
சாந்தெழின் மறைத்த சான்றோர் பெருமகன்
மலர்ந்த காந்தண் மாறா தூதிய
கடும்பறைத் தும்பி சூர்நசைத் தாஅய்ப்
பறைபண் ணழியும் பாடுசா னெடுவரைக்
கல்லுயர் நேரிப் பொருநன்
செல்வக் கோமாற் பாடினை செலினே.

**துறை - பாணாற்றுப்படை. வண்ணமும் தூக்கும் அது. பெயர் - வெண்போழ்க் கண்ணி** (13.)

(ப - ரை.) 1. கொடுமணமென்றது ஓரூர்.

2. பந்தர்ப் பெயரிய - பந்தரென்னும் பெயரைப் பெற்ற.

5. * சொட்டையாளர் படைதெரியவென ஒருசொல் வருவிக்க. வெல் கொடி நுடங்கவென்றது மாற்றாரெதிரே அவர் கண்டு நடுங்கும்படி பண்டு வென்ற கொடி நுடங்கவென்றவாறு.

7. களிறு இனநிரை புலம்பெயர்ந்து இயல்வரவென்றது களிற்றின நிரை களத்திலே போர்வேட்டுப் புடைபெயர்ந்து திரிய வென்றவாறு.

---

* சொட்டை - ஒருவகையாயுதம்; "சொட்டை வாள்பரிசை", "உகிரெனும் பெரும்பெயர் பெற்ற சொட்டைகள்" (வி. பா. கண்ணன்றூது. 101, 17-ஆம் போர். 156.)

கொல்படை தெரிய (5) என்பதுமுதல் இயல்வர (7) என்பது ஈறாக நின்ற வினையெச்சம் நான்கினையும் நிகழ்காலப் பொருட்டாக்கிச் செருக் கொன்று (12) என்னும் வினையொடு முடிக்க.

குருதியாரப் (9) பேய்மகள் கவலை கவற்ற (11) நாடுடன் நடுங்க (12) எனநின்ற வினையெச்சங்கள் மூன்றினையும் ஆரும்படி கவலை கவற்றும்படி நாடுடன் நடுங்கும்படியென எதிர்காலப் பொருட்டாக்கிக் கொன்று (12) என்னும் வினையொடு முடிக்க.

8. அமர்க்கண் அமைந்த பரப்பென்றது அமர்செய்யும் இடத்திற்கு இடம்போந்த பரப்பென்றவாறு.

10. ஆண்மலி யூபமென்றது ஆண்மை மிக்க யூப மென்றவாறு.

11. கவலை கவற்றவென்றது கண்டார்க்கு வருத்தத்தைச் செய்யும்படி யென்றவாறு.

12. கொன்றென்னும் வினையெச்சத்தினை மெய் சிதைந்து (17) என்னும் வினையொடு மாறிக் கூட்டுக.

13. தொடுத்தற்குரிய பூவல்லாத பனங்குருத்தினைத் தொடுக்கப்படும் கொன்றையொடு தொடுத்ததுபற்றி, 'நாறிணர்க் கொன்றை வெண்போழ்க் கண்ணி' எனக்கூறிய அடைச்சிறப்பானே இதற்கு, '**வெண்போழ்க் கண்ணி**' என்று பெயராயிற்று.

14. மெய்சிதைந்து (17) என்று உடலுருவப்பட்டமை கீழே சொன்ன மையால், வாள் முகம் பொறித்த மாண்வரி யாக்கையரென்பதற்கு வாள் முகத்திலே பொறித்த மாண்வரியையுடைய யாக்கையரென * முகத்தில் வடுவாக்கியுரைக்க. 15. இருங்கண் மூரியென்றது பெரிய உடலிடத்தை யுடைய எருதென்றவாறு.

கண்ணியர் (13) மாண்வரி யாக்கையராகிய (14) சான்றோர் பெருமகன் (18) என மாறிக் கூட்டுக.

17 - 8. மெய் சிதைந்து சாந்து எழில் மறைத்த என்றது மெய்யானது சிதைந்து அச்சிதைந்த வடுக்களானே பூசின சாந்தின் அழகை மறைத்த என்றவாறு. 19. மாறுது ஊதியவென்றது இது சூரியனுடையதென்று அறிந்தும் நீங்காது ஊதியவென்றவாறு.

20. சூர்நசைத்தாயென்றதனைச் சூர்நசைத்தாகவெனத் திரித்துக் காந் தள் சூரானது நச்சுதலையுடைத்தாகலானேயென வுரைக்க.

கைவல் பாண (3), நெடுமொழியொக்கலொடு நீ (1) சான்றோர் பெரு மகன் (18), நேரிப்பொருநனுகிய (22) செல்வக்கோமானைப் பாடிச் செல்லின் (23), பந்தர்ப்பெயரிய மூதூர்த் (2) தெண்கடன்முத்தமொடு (4) கொடுமணம் பட்ட (1) நன்கலம் பெறுகுவை (4) என மாறிக்கூட்டி வினை முடிவு செய்க.

இதனாற் சொல்லியது அவன் கொடைச்சிறப்புக் கூறியவாறாயிற்று.

(கு - ரை.) 1 - 4. சேரன் அளிக்கும் பரிசிற்பொருள்கள்.

யாழை வாசித்தலின் முறைமையை யறிந்த கைவல்ல பாணனே, கொடு மணம் என்னும் ஊரிலேயுண்டான நல்ல ஆபரணங்களை; பந்தரென்னும் பெயரையுடைய பெரிய புகழையுடைய பழைய ஊரினிடத்தே உள்ள தெளிந்த கடலில் விளைந்த முத்துக்களோடு பெறுவாய். பெயரிய : பெய ரென்னும் பெயர்ப் பகுதியடியாகப் பிறந்த பெயரெச்சம்.

---

* விழுப்புண்ணைக் கூறியபடி.

கொடுமணக்கலனும், பந்தர்முத்தும் : **பதிற்.** 74 : 5 - 6.

5. படைத்தலைவர் படைகளை ஆராய, முன்பு வென்றமையால் எடுத்த கொடிகள் விளங்க.

6. விளங்குகின்ற கிரணங்களையுடைய கொம்பென்னும் வாத்தியத்தோடு வலம்புரிச்சங்கு ஒலிக்க. வயிரும் சங்கும் : **முருகு.** 120, **அடிக்.**

7. பல களிறுகிய கூட்டத்தின் வரிசை போரை விரும்பித் தம் இருப்பிடத்தை விட்டுத் திரிய. 8 - 9. போர் செய்யும் இடத்திற்குப் பொருந்திய விளங்குகின்ற நிணத்தையுடைய களப்பரப்பில் கூட்டமாகிய சிறகுகளையுடைய பருந்து இரத்தத்தை நிரம்ப உண்ண.

10 - 11. தலை வெட்டப்பட உடல்மட்டும் மிஞ்சிய ஆண்மை மிக்க கவந்தத்தோடு, அழகிய வடிவில்லாத பேய்மகள் கண்டார்க்கு வருத்தத்தைச் செய்யும்படி. துமிந்து - துமிய.

12. நாடு முழுவதும் நடுங்கப் பல போர்களிலே கொன்று.

நுடங்க (5) ஆர்ப்ப (6) இயல்வர (7) ஆரக் (9) கவலை கவற்றக் (11) கொன்று (12) என இயையும்.

13 - 4. மணம் கமழ்கின்ற பூங்கொத்துக்களையுடைய கொன்றையினது பூவைப் பனங்குருத்தின்கண் வைத்துத் தொடுத்த கண்ணியையுடையவராகிய, வாளின்வாய் உண்டாக்கிய மாட்சிமைப்பட்ட தழும்பைப்பெற்ற உடம்பினையுடைய வீரர்.

கண்ணியர் (13) ஆகிய யாக்கையர் (14) என்க.

15 - 7. நெறித்தல் பொருந்திய கொம்பினையும் பெரிய கண்ணையும் உடைய எருத்தோடு வளைந்த தலையையுடைய மற்ற விலங்குகளையுடைய தாழ்ந்த இழிவான இறைச்சியை விற்பாருடைய வெட்டும் அரிவாளால் ஊனைக்கொத்துதலையுடைய மரக்கட்டையை ஒப்ப உடம்பு சிதைந்து; "ஊனமர் குறடுபோல விரும்புண்டு மிகுத்த மார்பின்" (**சீவக.** 2281.)

பாசவரும் ஊனரும் : **பதிற்.** 21 : 9 - 10. மெய்சிதைதல் : "செங்களந் துழவுவோள் சிதைந்துவே றாகிய, படுமகன்" (**புறநா.** 278 : 7 - 8.)

18. பூசிய சந்தனத்தின் அழகை மறைத்த வீரருடைய தலைவன்; "பாடுபுலர்ந்த நறுஞ்சாந்தின், விழுமிய பெரியோர் சுற்ற மாக" (**மதுரைக்.** 226 - 7.)

19 - 20. மலர்ந்த காந்தளினது மலரை இது தெய்வத்திற்கு உரியதென்று அறிந்தும் அதன்பால் நின்றும் நீங்காமல் ஊதிய, விரைந்த பறத்தலையுடைய தும்பியென்னும் சாதிவண்டு, அக்காந்தள் தெய்வம் விரும்புதலையுடையதாகலால். தெய்வம் விரும்பும் காந்தளில் வண்டு ஊதாமை : "சுரும்பு மூசாச் சுடர்ப்பூங் காந்தள்" (**முருகு.** 43.) நசைத்தாய் - நசைத்தாக; எச்சத்திரிபு. 21 - 2. பறத்தல் சீர்கெடுதற்கு இடமான புகழ்ச்சி மிக்க நீண்ட மலையாகிய, பக்கமலைகள் உயர்ந்த நேரிக்கு உரிய ஒப்பற்றோனாகிய.

23. செல்வத்தையுடைய கோமானை நெடுமொழியையுடைய சுற்றத்தோடு (1) பாடினையாய்ச் சென்றால்.

பரிணா (3), ஒக்கலொடு (1) பெருமகன் (18) பொருநன் (22) கோமாற் பாடினை செலின் (23) முத்தமொடு நன்கலம் பெறுகுவை (4) என முடிக்க.

(பி - ம்.) 5. தொல்படை. 12. பலசெருக்கடந்து. 16. தாழிரும் பாசகர். 17. எஃகாடுணம். (எ)

(சூ.அ) **கா**ல்கடிப் பாகக் கடலொலித் தாங்கு
வேறுபுலத் திறுத்த கட்டூர் நாப்பட்
கடுஞ்சிலை கடவுந் தழங்குகுரன் முரசம்
அகலிரு விசும்பி னாகத் ததிர
வெவ்வரி நிலைஇய வெயிலெறிந் தல்ல
துண்ணா தடுக்கிய பொழுதுபல கழிய
நெஞ்சுபுக லூக்கத்தர் மெய்தயங் குயக்கத்
தின்னா ருறையுட் டாம்பெறி னல்லது
வேந்தூர் யானை வெண்கோடு கொண்டு
கட்கொடி நுடங்கு மாவணம் புக்குடன்
அருங்க ணொடைமை தீர்ந்தபின் மகிழ்சிறந்து
நாம மறியா **ஏம வாழ்க்கை**
வடபுல வாழ்நரிற் பெரிதமர்ந் தல்கலும்
இன்னகை மேய பல்லுறை பெறுபகொல்
பாய லின்மையிற் பாசிழை ஞெகிழ
நெடும ணிஞ்சி நீணகர் வரைப்பின்
ஓவுறழ் நெடுஞ்சுவர் நாள்பல வெழுதிச்
செவ்விரல் சிவந்த வவ்வரிக் குடைச்சூல்
அணங்கெழி லரிவையர்ப் பிணிக்கும்
மணங்கமழ் மார்பநின் றாணிழ லோரே.

**துறை - செந்துறைப் பாடாண்பாட்டு. வண்ணமும் தூக்கும் அது. பெயர் - ஏம வாழ்க்கை (12.)**

(ப - ரை.) கால் கடிப்பாகக் கடல் ஒலித்தாங்கு (1) முரசம் (3) அதிர (4) எனக் கூட்டுக.

எயிலெறிந்து (5) என்ற எச்சத்திற்கு உண்ணாது (6) என்றது இடமாக உண்டலென ஒரு தொழிற்பெயர் வருவித்து முடிக்க.

உண்ணாது (6) என்றதனை உண்ணாமலெனத் திரித்து அதனை அடுக்கிய வென்னும் வினையொடு முடித்துக் கழியவென்றதனைக் கழியா நிற்கவென்னும் பொருளதாக்கி அதனைப் பெறின் (8) என்னும் வினையொடு முடிக்க.

7. ஊக்கத்தரென்றது வினையெச்சம். 11. கள் நொடைமை - கள் விலை. 12. நாமம் அறியா ஏம வாழ்க்கையென்றது துன்பம் இடைவிரவின இன்பமன்றி இடையறாத இன்பமேயாய்ச் சேறலான வாழ்க்கை யென்றவாறு.

இச்சிறப்பானே இதற்கு, 'ஏம வாழ்க்கை' என்று பெயராயிற்று.

13. வடபுலம் - போகபூமியாகிய * உத்தரகுரு.

* உத்தரகுரு : சிலப். 2 : 10.

14. இன்னகை - இனிய இன்பம். பல்லுறை - பலநாள் உறைதல். இன்னகை (14) அல்கலும் (13) மேய (14) எனக் கூட்டுக.

பாசிழை ஞெகிழ (15) நாள்பல எழுதி (17) என முடிக்க.

அரிவையர்ப் பிணிக்கும் (19) மணங்கமழ் மார்ப, நின் தாள் நிழலோர் (20) உண்ணாது அடுக்கிய பொழுது பல கழிய (6) இன்னார் உறையுள்தாம் பெறினன்றி (8) இன்னகை (14) அல்கலும் (13) மேய பல்லுறை பெறுப கொல்? பெறார் (14); அவர் அவ்வாறு அது பெறினன்றி நின் மார்பாற் பிணிக்கப்பட்ட அரிவையரும் இன்னகை அல்கலும் மேய பல்லுறைபெறு வது ஏதெனக் கூட்டி வினைமுடிவு செய்க.

இதனாற் சொல்லியது * காமவேட்கையின் ஓடாத அவன் வென்றி வேட்கைச்சிறப்புக் கூறியவாறாயிற்று.

(கு - ரை.) 1. காற்றே அடிக்கும் குறுந்தடியாக அமையக் கடல் ஒலித்தாற்போல.

2. வேற்று நாட்டினிடத்தே சென்று தங்கிய பாசறையின் நடுவே.

3 - 4. மிக்க ஓசையைப் பாசறை முழுதும் செலுத்துகின்ற ஒலிக் கின்ற ஓசையையுடைய வெற்றி முரசம், மற்ற நான்கு பூதங்கள் விரிதற்குக் காரணமான பெரிய ஆகாயத்தினிடத்தே அதிரும்படி முழங்க.

1 - 4. முரசின் ஒலிக்குக் கடலொலி உவமை: **பதிற்**. 69 : 3 - 4; "புணரி, குணில்வாய் முரசி னிரங்குந் துறைவன்" (**குறுந்**. 328 : 2 - 3.)

5 - 6. விரும்பத்தக்க சித்திரங்கள் நிலைபெற்ற மதிலை அழித்தல்லது உண்ணுதலைச் செய்யாமல் பலவாக அடுக்கிய பொழுதுகள் பல நீங்கா நிற்ப.

7 - 8. நெஞ்சு விரும்பிய ஊக்கத்தையுடையராய், உடம்பு அசையும் படிவந்த ஓய்வினையுடைய, பகைவரது உறைவிடத்தைத் தாம் பெற்றாலல்லா மல். மெய்தயங்குயக்கம் : **பதிற்**. 79 : 15.

9 - 10. பகைவேந்தர் ஏறிச் செல்லும் யானையினது வெண்கோட் டைக் கொண்டு கள்ளினது கொடி அசையும் கடைத்தெருவிலே சேரப் புக்கு.

கட்கொடி......ஆவணம்: "கள்ளின் களிநவில் கொடியொடு" (**மது ரைக்**. 372); "நெடுங்கொடி நுடங்கு நறவுமலி மறுகில்" (**அகநா**. 126 : 10.)

11. பெறுதற்கு அரிய கள்ளிற்கு விலையாகக் கொடுத்து உண்ட பிறகு மகிழ்ச்சி மிக்கு. 9 - 11. யானைக்கோட்டைக் கள்ளுக்கு விலையாகத் தரு தல் : **பதிற்**. 30 : 11 - 2, உரை.

12 - 3. துன்பத்தால் வரும் அச்சத்தை அறியாத இன்பமேயான வாழ்வையுடைய வடக்கேயுள்ள நிலமாகிய உத்தரகுருவில் வாழ்வாரைப் போலப் பெரிதும் விரும்பி நாள்தோறும்.

14. இனிய இன்பம் பொருந்திய பலநாள் உறைதலைப் பெறுவார் களோ?

15. உறக்க மில்லாமையால் பசிய பொன்னாற் செய்த இழை நழுவ; பாயல் - தூக்கம் (**பதிற்**. 19 : 12, உரை); "படலின் பாயல் வௌவி யோளே" (**ஐங்**. 195.)

* **பதிற்**. 50, உரை.

16 - 7. உயர்ந்த, மண்ணுற் செய்யப்பட்ட மதிலேயுடைய நீண்ட அரண்மனேயின் எல்லேயில், சித்திரத்தை ஒத்த அழகையுடைய உயர்ந்த சுவரில் தலேவன் பிரிந்துசென்ற நாட்களேக் கோடிட்டு எழுதி; சுவரில் எழுதுதல் : குறுந். 358 : 3, ஒப்பு. ஓவு : ஓவமென்பதன் கடைக்குறை.

18 - 9. இயல்பாகச் சிவந்த விரல் பின்னும் சிவந்த, அழகிய வரிகளே யுடைய சிலம்பையணிந்த, நோக்கிஞரை வருத்துகின்ற அழகையுடைய மகளிரை வசப்படுத்துகின்ற.

20. நல்ல மணம் கமழ்கின்ற மார்ப, நினது தாளினது நிழலில் வாழ்வோர்.

தாணிழலோர் (20) ஊக்கத்தராய் (7) இன்னுர் உறையுள் பெறினல்லது (8) பல்லுறைபெறுபகொல் (14) என முடிவு செய்க.

(பி - ம்.) 18. குடச்சூல். (அ)

---

(சுகூ) மலேயுறழ் யானே வான்றேய் வெல்கொடி
வரைமிசை யருவியின் வயின்வயி னுடங்கக்
கடல்போற் றுனேக் கடுங்குரன் முரசம்
காலுறு கடலிற் கடிய வுரற
எறிந்துசிதைந்த வாள்
இலேதெரிந்த வேல்
பாய்ந்தாய்ந்த மா
ஆய்ந்துதெரிந்த புகன் மறவரொடு
படுபிணம் பிறங்க நூறிப் பகைவர்
கெடுகுடி பயிற்றிய கொற்ற வேந்தே
நின்போல், அசைவில் கொள்கைய ராகலி னசையா
தாண்டோர் மன்றவிம் மண்கெழு ஞாலம்
நிலம்பயம் பொழியச் சுடர்சினந் தணியப்
பயங்கெழு வெள்ளி யாகிய நிற்ப
விசும்புமெய் யகலப் பெயல்புர வெதிர
நால்வேறு நனந்தலே யோராங்கு நந்த
இலங்குகதிர்த் திகிரி முந்திசி னேரே.

துறை - வஞ்சித்துறைப் பாடாண்பாட்டு.
வண்ணம் - ஒழுகுவண்ணமும் சொற்சீர்வண்ணமும்.
தூக்கு - செந்தூக்கும் வஞ்சித்தூக்கும்.
பெயர் - மண்கெழு ஞாலம் (12.)

(ப - ரை.) நடங்க (2) எனவும் உரற (4) எனவும் நின்ற வினையெச் சங்களை நூறி (9) என்னும் வினையொடு முடிக்க.

புகன்மறவரொடு என்னும் ஒடுவை (8) வாளொடு (5) வேலொடு (6) மாவொடு (7) என எங்கும் கூட்டுக.

வாள், வேல், மாவென நின்ற மூன்றும் ஆகுபெயர்.

9. நூறியென்பது ஈண்டுக் கொன்றென்னும் பொருண்மைத்து.

9 - 10. பகைவர் கெடுகுடி பயிற்றியவென்றது படுபிணம் பிறங்கப் பகைவரை நூறியபின் அப்பகைவருடைய கெட்டுப்போன குடிமக்களை அவர் நாட்டிலே பயின்று வாழ்வாராகப் பண்ணிய வென்றவாறு.

இனிப் பகைவருடைய கெட்ட குடிகளை வேற்றுநாட்டிலே பயிலப் பண்ணின வென்றுமாம்.

மன்ற என்பதனை (12) அசைவில் கொள்கையராகலின் (11) என்பத னொடு கூட்டுக.

12. * பொன்ஞாலமன்றி இம் மண்ஞாலமுழுதும் ஆண்டாரென்பது தோன்ற மண்கெழு ஞாலமென்ற இச்சிறப்பானே இதற்கு, '**மண்கெழு ஞாலம்**' என்று பெயராயிற்று.

13. நிலம் பயம் பொழியவென்றது சிலர் அரசு செய்யுங்காலங்களில் மழையும் நீரும் குறைவின்றியிருந்தும் எவ்விளைவும் சுருங்க விளையும் காலமும் உளவாம்; அவ்வாறன்றி நிலம் பயனைப்பொழிந்தாற்போல மிக விளையவென்றவாறு.

சுடர் சினம் தணியவென்றது † திங்கள் மும்மாரியும் பெய்து மழை இடையறாது வருகின்றமையின் சுடர் சினந் தணிந்தாற்போன்று தோற்ற வென்றவாறு.

14. வெள்ளியென்றது வறிதுவடக் கிறைஞ்சிய சீர்சால் வெள்ளி (**பதிற்**. 24 : 24) என்றவாறு.

பயம்கெழு ஆரியம் நிற்கவென்றது அவ்வெள்ளி மழைக்கு ‡ உடலான மற்றைநாள் கோள்களுக்குச் செல்கின்ற நல்ல நாட்களிலே நிற்கவென்ற வாறு. 15. விசும்பு மெய் அகலவென்றது அம்மழையில்லாமைக்கு உற் பாதமாகிய § தூமத்தோற்றமின்மையான், ஆகாயவெளி தன்வடிவு பண்டை யில் அகன்றாற்போலத் தோன்றவென்றவாறு.

பெயல் புரவு எதிரவென்றது மழை இவ்வுலகினை யானே புரப்பே னென்று $ ஏறட்டுக்கொண்டாற்போல நிற்பவென்றவாறு.

16. நால்வேறு நனந்தலை ஓராங்கு நந்தவென்றது நாலுதிசையும் ஒன்றுபோலே பகையின்றி விளங்க வென்றவாறு.

---

* பொன்ஞாலம் - தேவருலகம்.

† "முடிபு ணைந்தசீர் மன்னவர் நெறியினுன் முன்னவர் தவத்தாற்பைந், தொடிமடந்தையர் கற்பினுன் மதிதொறுஞ் சொரிதரு மும்மாரி" (**குற்றாலப்**. திருநாட்டுச். 39); "திங்கண்மும் மாரி பெய்க" (**சீவக**. நாலிறுதிச் செய்யுள்.)

‡ உடல் - ஆதாரம்.

§ "மைம்மீன் புகையினுந் தூமந் தோன்றினும்" (**புறநா**. 117 : 1); "கரியவன் புகையினும் புகைக்கொடி தோன்றினும்" (**சிலப்**. 10 : 102.)

$ 'மரங்களும் பல்லுயிர்க்கும் தம் பயன் கொடுத்தலை **ஏறட்டுக் கொண்டு** தழைப்ப' (**மதுரைக்**. 12, **ந**.)

கொற்றவேந்தே (10), இலங்குகதிர்த் திகிரியினையுடைய நின் முன்னோர் (17) நிச்சயமாக (12) நின்னைப்போல் அசைவில்லாத மேற்கோளையுடையராகையாலே (11), இம்மண்ஞாலத்தினை (12) நிலம் பயம் பொழிதல் முதலாக (13) நால்வேறு நனந்தலை ஓராங்கு நந்தல் (16) என்பது ஈறாக எண்ணப்பட்ட நின் புகழெல்லாம் உளவாக அசைவின்றி (11) ஆண்டோராவர் (12); அவரல்லார் இம்மண்ஞாலத்தின் ஒரோவிடங்களை ஆளுவதல்லது * முழுதும் ஆளுதல் கூடாதன்றேயெனக் கூட்டி வினைமுடிவுசெய்க.

11. 'ஆண்டோரசையாது' என்பது பாடமாக்கி அதற்கேற்ப உரைப்பாரும் உளர்.

இதனாற் சொல்லியது அவன் ஆள்வினைச்சிறப்பினை அவன் குடிவரலாற்றோடு படுத்துச் சொல்லியவாறாயிற்று.

'எறிந்துசிதைந்த' (5) என்பது முதலாக, 'மறவரொடு' (8) என்பது ஈறாக நான்கடி வஞ்சியடியாய் வந்தமையான் வஞ்சித்தூக்குமாயிற்று. அவற்றுள், முன்னின்ற † மூன்றடிகளின் ஈற்றுச்சீர்கள் அசைச்சீர்களாகவும் ‡மற்றையடியின் ஈற்றுச்சீர் பொதுச்சீராகவும் இட்டுக்கொள்க.

'நின்போல்' (11) என்றது கூன்.

(கு - ரை.) 1 - 2. மலையை ஒத்த யானையின்மேல் எடுத்த வானத்தை அளாவிய வெற்றிக்கொடி, மலையின் மேலுள்ள அருவியைப்போல இடந்தோறும் அசைய.

யானைக்கு மலையும் அதன்மேலுள்ள கொடிக்கு அருவியும் உவமை; "களிறணி வெல்கொடி கடுப்பக் காண்வர, ஒளிறுவன விழிதரு முயர்ந்து தோன் றருவி", "பெருவரை யிழிதரு நெடுவெள் ளருவி, ஓடை யானை யுயர்மிசை யெடுத்த, ஆடுகொடி கடுப்பத் தோன்றும்" (அகநா. 162 : 22-3, 358 : 12 - 4.)

3 - 4. கடல்போலப் பரந்த சேனையினிடத்தே கடிய குரலையுடைய முரசங்கள் காற்றுப் பொருந்திய கடலைப்போலக் கடுமையுடையனவாகி முழங்க (பதிற். 68 : 1 - 3.)

தானைக்குக் கடல்: "உரவுக்கடலன்ன தாங்கருந் தானையொடு" (பதிற். 90 : 31); "கடன்மரு டானை, மட்டவிழ் தெரியன் மறப்போர்க் குட்டுவன்" (அகநா. 212 : 15 - 6.)

5 - 8. பகைவரை வெட்டிச் சிதைந்த வாளையுடைய வீரரோடு, இலைவடிவம் ஆராய்ந்து அமைக்கப்பட்ட வேலையுடைய வீரரோடு, பகைவர்மீது பாய்ந்து வன்மை குறைந்த குதிரை வீரரோடு, ஆராய்ந்து தெரியப்பட்ட போரை விரும்புதலையுடைய மறற வீரரோடு.

மறவரொடு என்னும் ஒடுவை வாள், வேல், மாவென்பவற்றோடும் கூட்டுக. வாள் முதலிய மூன்றும் அவற்றையுடைய வீரரைக் குறித்தலின் ஆகுபெயர்.

9 - 10. இறந்த பிணம் உயரும்படி கொன்று பகைவருடைய கெட்ட குடிகளை மீண்டும் அவர் நாட்டிலே வாழப்பண்ணிய வேந்தே.

---

* இது, "வையங் காவலர் வழிமொழிந் தொழுகப், போகம் வேண்டிப் பொதுச்சொற் பொறாஅ, திடஞ்சிறி தென்னு மூக்கந் துரப்ப, ஒடுங்கா வுள்ளத் தோம்பா வீகைக், கடந்தடு தானைச் சேர லாதனை" (புறநா. 8 : 1-5) என்பதை நினைப்பிக்கின்றது.

† மூன்றடிகளென்றது 5 - 7-ஆம் அடிகளை. ‡ 8-ஆம் அடி.

நுடங்க (2) உரறப் (4) பிறங்க நூறிப் (9) பயிற்றிய (10) என முடிக்க.

11 - 2. நின்னைப்போலத் தெளிவாக மாறுதல் இல்லாத கொள்கையை யுடையராதலால், நடுக்கமில்லாமல் இந்த அணுச்செறிந்த மண்ணுலகத்தை ஆண்டனர்.

ஆண்டோர் (12) முந்திசினோர் (17) என்பதனோடு முடியும்.

13 - 6. முன்னோர் ஆட்சியின் சிறப்பு.

13. நிலம் பயனைப் பொழிந்தாற்போல மிக விளைய, காலத்தே தவறாமல் மழை பெய்தலால் சூரியன் வெப்பந் தணிந்தாற்போன்று விளங்க.

14. உலகத்திற்குப் பயன்பொருந்திய சுக்கிரனென்னும் கோள் மழைக்குக் காரணமான மற்ற நாள் கோள்களுக்குச் செல்கின்ற நல்ல நாட்களிலே நிற்க (பதிற். 13 : 25.)

15. தூமகேது முதலியன இல்லாமையால் ஆகாயம் தன் வடிவம் அகன்றாற்போல விளங்க, மழை உலகத்தைத் தானே காத்தலை மேற்கொண்டாற்போல விளங்க; "நிலனு மரனும் பயனெதிர்பு நந்த" (மதுரைக். 12.)

16. நான்காகிய வேறுபட்ட அகன்ற திசைகளும் ஒன்றுபோலப் பகையின்றி விளங்க. 17. விளங்குகின்ற கிரணத்தையுடைய ஆஞ்ஞா சக்கரத்தையுடைய நின் முன்னோர்.

முந்திசினோர் (17) பொழியத் தணிய (13) நிற்ப (14) அகல எதிர (15) நந்த (16) ஆண்டோர் (12) என முடிவு செய்க.

மு. இது முன்னுள்ளோர்க்கும் இயல்பென்பது படக்கூறிய இயன்மொழி வாழ்த்து (தொல். புறத். 35, ந.)

(பி - ம்.) 3. கடல்போறுணைக். (௯)

---

(எ0) களிறுகடைஇய தாள்
மாவுடற்றிய வடிம்பு
சமந்ததைந்த வேல்
கல்லலைத்த தோள்
வில்லலைத்த நல்வலத்து
வண்டிசை கடாவாத் தண்பனம் போந்தைக்
குவிமுகி ழூசி வெண்டோடு கொண்டு
தீஞ்சுனை நீர்மலர் மலைந்து மதஞ்செருக்கி
உடைநிலை நல்லமர் கடந்து மறங்கெடுத்துக்
கடுஞ்சின வேந்தர் செம்ம றொலைத்த
வலம்படு வான்கழல் வயவர் பெரும
நகையினும் பொய்யா வாய்மைப் பகைவர்
புறஞ்சொற் கேளாப் புரைதீ ரொண்மைப்
பெண்மை சான்று பெருமட நிலைஇக்

கற்பிறை கொண்ட கமழுஞ் சுடர்நுதற்
புரையோள் கணவ பூண்கிளர் மார்ப
தொலையாக் கொள்கைச் சுற்றஞ் சுற்ற
வேள்வியிற் கடவு ளருத்தினை கேள்வி
உயர்நிலை யுலகத் தையரின் புறுத்தினை
வணங்கிய சாயல் வணங்கா வாண்மை
இளந்துணைப் புதல்வரின் முதியர்ப் பேணித்
தொல்கட னிறுத்த வெல்போ ரண்ணல்
மாடோ ருறையு முலகமுங் கேட்ப
இழுமென விழிதரும் **பறைக்குர லருவி**
முழுமுதன் மிசைய கோடுதொறுந் துவன்றும்
அயிரை நெடுவரை போலத்
தொலையா தாகநீ வாழு நாளே.

**துறை - செந்துறைப் பாடாண்பாட்டு. வண்ணம் - ஒழுகுவண்ணம். தூக்கு - செந்தூக்கும் வஞ்சித்தூக்கும். பெயர் - பறைக்குர லருவி (24.)**

(ப - ரை.) 3. சமம் ததைந்த வேலென்றது மாற்றார் செய்யும் சமங்கள் சிதைதற்குக் காரணமாகிய வேலென்றவாறு.

வேலென்றது வேல்வென்றியினை.

4. கல்லலைத்த தோளென்றது வலியுடைமையாற் கல்லையலைத்த தோளென்றவாறு.

.....................................................................................

...............தாகவெனக் கூட்டி வினைமுடிவு செய்க.

இதனாற் சொல்லியது அவன்வென்றி கூறிய திறத்தானே அவற்குள்ள சிறப்புக்களைக் கூறிப் பின்னை வாழ்த்தியவாறாயிற்று.

(கு - ரை.) 1. போர்க் களத்தே ஆண் யானையைச் செலுத்திய தானையும். மு. புறநா. 7 : 1.

2. குதிரைகளோடு பொருத காலின் விளிம்பையும்; "கடுமா கடைஇய விடுபரி வடிம்பின்" (புறநா. 378 : 4.)

3. பகைவர் செய்யும் போர் கெடுதற்குக் காரணமான வேல்வெற்றியையும். 4. உலக்கல்லை வருத்திய தோளையும்; "ஆயிரர், தொட்டெடுக்க லாவுலம்மொர் தோளி னேந்தி யாடினான்" (சீவக. 690.) 5. வில்லை வருத்திய நல்ல வெற்றியையும்.

6 - 7. வண்டு பாட்டைப் பாடுதலில்லாத, குளிர்ந்த பனையினது குவிந்த அரும்பு போன்ற கூர்மையையுடைய வெள்ளிய குருத்தை அணிந்துகொண்டு; "வட்கர் போகிய வளரிளம் போந்தை, உச்சிக் கொண்ட வூசி வெண் டோடு" (புறநா. 100 : 3 - 4.)

8. கண்ணுக்கு இனிதாகிய சுனையிலுள்ள குவளையாகிய நீர்ப்பூவைச் சூடி மதம் மிக்கு; "வெண்டோட் டசைத்த வொண்பூங் குவளையர்" (பதிற். 58 : 2.)

9. பகையரசருடைய நிலையாகிய நல்ல போரை வென்று அவரது மாறுபாட்டைக் கெடுத்து. நிலை நல்லமர் - நாடோறும் செய்துவரும் நல்ல போர் (பதிற். 4-ஆம் பதிகவுரை.)

10 - 11. மிக்க சினத்தையுடைய பகையரசரது தலைமையை அழித்த, வென்றி உண்டாதற்குக் காரணமான சிறந்த கழலை அணிந்த வீரர்களுடைய தலைவனே. கழலணிதல் வெற்றிக்குக் காரணமாதல் : "கடுங்கண் மறவன் கழல்புனைந்தான் காலை, நெடுங்கடைய நோரார் நிரை" (பு. வெ. 2.)

தோடுகொண்டு (7) செருக்கிக் (8) கடந்து கெடுத்துத் (9) தொலைத்த (10) வயவர் பெரும என முடிக்க. வயவர் பெரும : அனைத்தும் ஒரு பெயர்.

1 - 11. தாளையும் வடிம்பையும், வேலையும், தோளையும், வலத்தையும் உடைய பெரும என இயையும்.

12. விளையாட்டிடத்தும் பொய்கூறுதலை யறியாமைக்குக் காரணமான வாய்மையையும்; நகை - விளையாட்டு; "நகையுள்ளு மின்னா திகழ்ச்சி" (குறள். 995.)

12 - 3. பகைவரது புறங்கூறுஞ் சொல்லைக்கேளாத, குற்றம் நீங்கிய சிறந்த அறிவையும் உடைய; "நல்ல போலவும் நயவ போலவும், தொல்லோர் சென்ற நெறிய போலவும், காத னெஞ்சினும் மிடைபுகற் கலமரும், ஏதின் மாக்கள் பொதுமொழி கொள்ளாது" (புறநா. 58 ; 24 - 7.)

14. கட்புலனுக்குத் தோன்றும் அமைதித் தன்மை மிக்குப் பெரிய மடமென்னும் குணம் நிலைபெற்று; 'பெண்மையாவது கட்புலனுயதோர் அமைதித்தன்மை' (தொல். கிளவி. 57, ந.) மடன் - செவிலியர் கொளுத்தக் கொண்டு கொண்டது விடாமை' (தொல். களவு. 8, ந.)

15 - 6. கற்பு என்னும் குணம் தங்குதல்கொண்ட, மணம் பரக்கின்ற ஒளி விடுகின்ற நெற்றியையுடைய உயர்ந்தோளுடைய கணவ, ஏழரசர் முடியாற் செய்த ஆரமாகிய ஆபரணம் விளங்குகின்ற மார்பையுடையோய்.

வாய்மையையும் (12) ஒண்மையையும் உடைய (13) புரையோள் கணவ என முடிக்க; புரையோள் கணவ : அனைத்தும் ஒரு பெயராய் நின்றது; "செறுநர்த் தேய்த்த செல்லுறழ் தடக்கை, மறுவில் கற்பின் வாணுதல் கணவன்" (முருகு. 5 - 6, ந.)

18. 'கேள்வியின்' என்றிருப்பின் நன்று.

17 - 8. அழியாத கோட்பாட்டையுடைய மந்திரி முதலிய சுற்றத்தார் சூழவிருப்ப, வேள்விகளைச் செய்ததனால் தேவர்களை உண்பித்தாய். சுற்றஞ் சுற்றல் : "சுற்றத்தாற் சுற்றப் படவொழுகல் செல்வந்தான், பெற்றத்தாற் பெற்ற பயன்" (குறள். 524.)

18 - 9. வேதத்தை ஓதினமையால் உயர்ந்த நிலையையுடைய தேவருலகத்திலுள்ள முனிவரை இன்புறச் செய்தாய்.

20. மு. பதிற். 48 : 9.

20 - 22. பெரியோரிடத்தே வணங்கிய மென்மையையும் பகைவர்க்கு வணங்காத ஆண்மையையும் உடைய இளந்துணையாகிய புதல்வர்களைப் பெற்றமையால் நின் குலத்து முன்னோர்களான பிதிரர்களைத் தாங்குவாய்;

இல்லறத்தார்க்கு உரிய பழைய கடன்களைச் செய்து முடித்த, வெல்லும் போரைச் செய்யும் தலைவனே. பேணி இறுத்தவென்க.

ஒருவன் பிறக்கும் பொழுதே உண்டாகும் கடன்களாதலால், 'தொல் கடன்' என்றார்.

17 - 22. இவ்வடிகளில் இல்லறத்தாரால் இயல்பாக இறுக்கப்படும் தேவர் கடன், முனிவர் கடன், தென்புலத்தார் கடன் என்னும் மூவகைக் கடன்களும் கூறப்பட்டன (குறள். 7-ஆம் அதி. அவதாரிகை, பரிமேல்.)

24. பறைக்குரலருவி : புறநா. 126 : 8, 229 : 14 ; சிலப். 25 : 28.

23 - 4. கற்பக முதலிய செல்வத்தையுடைய தேவர் வாழும் உலகமும் கேட்கும்படி, இழுமென்னும் அனுகரண ஓசை உண்டாகும்படி கீழே இறங்குகின்ற பறையோசையைப் போன்ற ஓசையையுடைய அருவிகள்.

இழுமென இழிதரும் அருவி : முருகு. 316 ; "இழுமென்று வந்தீங் கிழியு மருவி" (சிலப். குன்றக்.)

25 - 7. பெரியனவாகிய உச்சியையுடைய சிகரங்கள் தோறும் நிறைந்து விளங்கும் அயிரையென்னும் உயர்ந்த மலையைப்போல, நீ வாழும் நாள் அழிவில்லாததாகுக.

மலைபோல வாழ்கவென்றல் : "நடுக்கின்றி நிலியரோ வத்தை யடுக் கத்து............பொற்கோட் டிமயமும் பொதியமும் போன்றே" (புறநா. 2 : 20 - 24) ; "விளங்கொளி யிமய மென்னும், பொன்னெடுங் குன்றம் போலப் பூமிமே னிலவி" (சீவக. 2417.)

(பி - ம்.) 6. கவண்டிசை. 26. நேருயர் நெடுவரை. (௧0)

---

இதன் பதிகத்து ஒரு தந்தை. (2) என்றது பொறையன் பெருந்தேவியின் பிதாவுடையது ஒரு பெயர்.

6 - 7. வேள்வி ஆக்கிய பொழுதின் அறத்துறை போகியென்றது யாகம் பண்ணின காலத்திலே மற்றுள்ள அறத்துறைகளையும் செய்துமுடித் தென்றவாறு.

8. மாயவண்ணனை மன்னுறப்பெற்று என்றது திருமாலை வழிபட்டு அவனுடைய மனம் தன்பாலே ஆம்படி பெற்றென்றவாறு.

9. ஒகந்தூரீத்து என்றது அம்மாயவண்ணனுக்கு ஒகந்தூரென்ற ஓர் ஊரைக் கொடுத்தென்றவாறு.

10. புரோசு மயக்கி யென்றது தன் புரோகிதனிலும் தான் அறநெறி யறிந்தென்றவாறு. சிறுபுறமென்றது சிறுகொடை.

## (பதிகம்)

மடியா வுள்ளமொடு மாற்றோர்ப் பிணித்த
நெடுநுண் கேள்வி யந்துவற் கொருதந்தை
ஈன்றமகள் பொறையன் பெருந்தேவி யீன்றமகன்
நாடுபதி படுத்து நண்ணா ரோட்டி
வெருவரு தானை கொடுசெருப் பலகடந்
தேத்தல் சான்ற விடனுடை வேள்வி

ஆக்கிய பொழுதி னறத்துறை போகி
மாய வண்ணனை மனனுறப் பெற்றவற்
கோத்திர நெல்லி னொகந்தூ ரீத்துப்
புரோசு மயக்கி
மல்ல லுள்ளமொடு மாசற விளங்கிய

**செல்வக்கடுங்கோ வாழியாதனைக் கபிலர்** பாடினர் பத்துப்பாட்டு. அவைதாம்: புலாஅம்பாசறை, வரைபோலிஞ்சி, அருவியாம்பல், உரைசால் வேள்வி, நாண்மகிழிருக்கை, புதல்சூழ் பறவை, வெண்போழ்க்கண்ணி, ஏமவாழ்க்கை, மண்கெழுஞாலம், பறைக்குரலருவி. இவை பாட்டின் பதிகம்.

பாடிப் பெற்ற பரிசில்: *சிறுபுறமென நூறாயிரங்காணம் கொடுத்து † நன்றாவென்னும் குன்றேறி நின்று தன் கண்ணிற் கண்ட நாடெல்லாம் காட்டிக் கொடுத்தான் அக்கோ.

செல்வக் கடுங்கோ வாழியாதன் இருபத்தையாண்டு வீற்றிருந்தான்.

(கு - ரை.) 1. சோம்பியிராத ஊக்கத்தால் பகைவரைத் தன்னோடு சேர்த்த; உள்ளம் - ஊக்கம்; "உள்ள முடைமை யுடைமை" (குறள். 592, பரிமேல்.) 2. நீண்ட நுண்ணியவான நூற்பொருளைக் கேட்டலுடைய; நுண் கேள்வி: கேட்கப்படுகின்ற பொருளினது நுண்மை கேள்விமேல் ஏற்றப் பட்டது (குறள். 419, பரிமேல்.)

4. நாடுகளில் ஊர்களை உண்டாக்கிப் பகைவரை ஓடச் செய்து.

5. பகைவர் அஞ்சத்தக்க சேனையால், பல போர்களை வஞ்சியாமல் எதிர்நின்று வென்று.

6 - 7. புகழ்தலமைந்த செல்வத்தையுடைய வேள்விகளைச் செய்த பொழுதில் மற்ற அறத்தின் கூறுபாடுகளையும் செய்து முடித்து.

8. கரிய நிறத்தையுடைய திருமாலைத் தன்மனத்திலே மிகப்பெற்று.

8 - 9. அத்தெய்வத்திற்கு அக்கினிகோத்திரத்திற்குரிய நெல்லின் விளைவையுடைய ஒகந்தூரென்னும் ஊரைத் தேவதானமாகக் கொடுத்து; ஓத்திரநெல் என்றது இராசான்னமென்னும் நெல்லை; 'பறவைப்பெயர்ப்படு வத்தம்-பறவையின் பெயரைப் பெறுகின்ற நெல்லு; என்றது இராசான்ன மென்னும் பெயர் பெறுகின்ற நெல்லென்றவாறு. ஆகுதி பண்ணுதற்கு இந்த நெல்லுச்சோறே சிறந்ததென்று இதனைக் கூறினர்; இனி மின்மினி நெல்லென்பாரும் உளர்; இப்பெயர் வழக்கின்மையும் ஆகுதிக்குச் சிறவாமையும் உணர்க' (பெரும்பாண். 305, ந.) என்பது இங்கே அறிதற் பாலது.

10. தன் புரோகிதனைக் காட்டிலும் தான் அறநெறியிலே மேம்பட்டு; புரோசு: தொல். கிளவி. 56, சே. ந.

"மெய்யூ ரமைச்சியன் மையூர் கிழானைப், புரையறு கேள்விப் புரோசு மயக்கி" (பதிற். 9-ஆம் பதிகம், 11 - 2.)

11. வளத்தையுடைய மனத்தோடு குற்றமில்லாமல் விளங்கிய.

## ஏழாம்பத்து முற்றிற்று.

---

* சிறுபுறம் - சிறுகொடை; அறப்புறம் (சீவக. 76) என்புழிப்போல.

† பதிற். 85 : 13.

## எட்டாம் பத்து

(எக) அறாஅ யாண ரகன்கட் செறுவின்
அருவி யாம்ப னெய்தலொ டரிந்து
செறுவினை மகளிர் மலிந்த வெக்கைப்
பரூஉப்பக டுதிர்த்த மென்செந் நெல்லின்
அம்பண வளவை யுறைகுவித் தாங்குக்
கடுந்தே றுறுகிளை மொசிந்தன துஞ்சும்
செழுங்கூடு கிளைத்த விளந்துணை மகாரின்
அலந்தனர் பெருமநின் னுடற்றி யோரே
ஊரெரி கவர வுருத்தெழுந் துரைஇப்
போர்சுடு கமழ்புகை மாதிர மறைப்ப
மதில்வாய்த், தோன்ற லீயாது தம்பழி யூக்குநர்
குண்டுக ணகழிய குறுந்தாண் ஞாயில்
ஆரெயிற் றோட்டி வெளவினை யேறொடு
கன்றுடை யாயந் தரீஇப் புகல்சிறந்து
புலவுவில் லிளைய ரங்கை விடுப்ப
மத்துக்கயி றாடா வைகற்பொழுது நினையூஉ
ஆன்பயம் வாழ்நர் கழுவு டலைமடங்கப்
பதிபா ழாக வேறுபுலம் படர்ந்து
விருந்தின் வாழ்க்கையொடு பெருந்திரு வற்றென
அருஞ்சமத் தருநிலை தாங்கிய புகர்நுதற்
பெருங்களிற் றியானையொ டருங்கலந் தராஅர்
மெய்பனி கூரா வணங்கெனப் பராவலிற்
பலிகொண்டு பெயரும் பாசம் போலத்
திறைகொண்டு பெயர்தி வாழ்கநின் னூழி
உரவரு மடவரு மறிவுதெரிந் தெண்ணி
அறிந்தனை யருளா யாயின்
யாரிவ ணெடுந்தகை வாழு மோரே.

துறை - செந்துறைப் பாடாண்பாட்டு.
வண்ணம் - ஒழுகுவண்ணமும் சொற்சீர்வண்ணமும்.
தூக்கு - செந்தூக்கு. பெயர் - குறுந்தாண் ஞாயில் (12.)

(ப - ரை.) 2. *அருவியாம்பல் - நீரின் ஆம்பல்; என்றதனுற் பயன் நீர்க்குறைவற்ற ஆம்பலென்பதாம்; எண்ணின் ஆம்பலே நீக்குதற்கென்பது மொன்று.

ஆம்பலொடு நெய்தலொடு (2) நெல்லை (4) அரிந்து (2) என்று கொள்க.

அரிந்து (2) பகடு உதிர்த்த (4) எனக் கூட்டிப் பகட்டானென உருபு விரிக்க.

3. செறு வினை மகளிர் மலிந்த வெக்கையென்றது உழவர் பெண் மக்கள் விளையாடுதற்கு வயலிற் பயிர்கொள்ளாததோரிடம் இன்மையின். ஆண்டு அவர்கள் மிக்க களமென்றவாறு. வெக்கை - கடாவிடுங் களம்.

4. நெல்லிற்கு மென்மை - சோற்றது மென்மை. செந்நெலென்றது †செந்நெலென்னும் சாதியை. 5. அளவைக்கென நான்காவது விரிக்க.

6. கடுந்தேறு உறு கிளை - கடிதாகத் தெறுதலையுடைய மிக்க குளவி யினம். மொசிந்தனவென்றது மொய்த்தனவாயென்னும் வினையெச்ச முற்று. 9. உருத்து எழுந்து உரைஇ ஊர் எரி கவரவெனக் கூட்டுக.

ஊரெரி கவரப் (9) போர்சுடு கமழ்புகை மாதிரமறைப்பத் (10) தோட்டி வெளவி (13) என முடிக்க.

11. ‡தோன்றலீயாதென்றது தோன்றுதென்னும் வினையெச்சத்திரி சொல்; தோன்றலீயாமலெனத் திரிக்க.

12. குறுந்தாண் ஞாயிலென்றது இடையிடையே மதிலின் அடியிடங் களைப் பார்க்க அவற்றிற் குறுகிக்குறுகி யிருக்கும் படியையுடைய ஞாயி லென்றவாறு.

இவ்வாறு கூறின சாதிப்பண்பானும் படியைத் தாளென்று கூறினபடி யானும் இதற்கு, 'குறுந்தாண் ஞாயில்' என்று பெயராயிற்று.

13. வெளவினையென்றது வினையெச்சமுற்று.

14. ஆயம் தரீஇயென்றது ஆயுதங்களை நீ §புலவுவில்லிளையர்க்குக் கொடுப்ப (15) என்றவாறு. தரீஇயென்பதனைத் தரவெனத் திரிக்க.

15. இளையர் அங்கை விடுப்பவென்றது இளையர் அவ்வாயத்தைத் தங்கள் அங்கையினின்றும் பிறர்க்கு விடுப்பவென்றவாறு.

16. கயிருடாவென்னும் பெயரெச்சமறையை வைகலென்னும் தொழிற்பெயரொடு முடிக்க. வைகல் - கழிதல். வைகற்பொழுது: இரு பெயரொட்டு.

17. வாழ்நர் - வாழ்பவர்; இடையர். பயத்தானென விரிக்க. கழு வுளாவான் அவ்விடையர்க்குத் தலைவனுய் அக்காலத்துக் குறும்புசெய் திருந்தான் ஒருவன். முன்னர் எயில் (13) என்றது அவன் தனக்கு அரணுகக் கொண்டிருந்த மதிலினை.

18. வேறுபுலம் பதி பாழாகப் படர்ந்தென்றது அக்கழுவுள் தலை மடங்குகையாலே அவனை விட்டு வேறு திறையிடாக் குறும்பர்நாட்டிலே அந்நாட்டுப்பதி பாழாகச் சென்றென்றவாறு.

*பதிற். 63 : 19-ல் வரும் 'அருவியாம்பல்' என்பதற்குவேறு உரை கூறினர்.

†வெண்ணெல்லும் உண்டாதலின் செந்நெல்லென்னும் சாதி என்ருர்.

‡பதிற். 12 : 7, உரை. §'ஒள்வாண் மலைந்தார், ஒற்றுய்ந்துரைத்தார், புள் வாய்ப்பச் சொன்னுர்' (பு. வெ. 14) முதலியோர்.

படர்ந்து (18) திறைகொண்டு பெயர்தி (24) எனக் கூட்டுக.

19. *விருந்தின் வாழ்க்கை - நாடோறும் புதிதாகத் தாங்கள் தேடுகின்ற பொருள். பெருந்திரு - முன்னே தேடிக் கிடந்த பொருள். அற்றெனவென்றது அற்றதெனக் கருதியென்றவாறு. அற்றதென்பது கடைக்குறைந்தது.

23. † பாசம் - பேய். 25. உரவரையும் மடவரையும் என்னும் ‡ இரண்டாவது விகாரத்தால் தொக்கது. அறிவு - அவர்களறிவு.

27. வாழுமோரென்புழி, உம்மை அசைநிலை.

ஆரெயிற்றோட்டி வெளவி அதனையுடைய (13) கழுவுள் தலைமடங்கு கையாலே (17) வேறுபுலம் படர்ந்து அவ்வேறுபுலத்து நினக்கு (18) யானையொடு அருங்கலம் திறையிடார்தம் (21) விருந்தின் வாழ்க்கையொடு பெருந்திருவற்றதெனக் கருதித் தங்கள் (19) மெய்ந்நடுக்கமிக்கு நின்னை அணங்கெனக் கருதிப் பலபடப் பரவுதலான் (22) பேய் தான் பற்றினருயிரை வெளவாது தனக்கு அவர் பலியிட்டுழி அப்பலிகொண்டு பெயருமாறுபோல நீயும் அவருயிரை வெளவாது (23) திறைகொண்டு பெயராநின்றாய் (24) ; இஃதன்றே இதுபொழுது நீ செய்கின்றது ; நின்னை உடற்றியோர் (8) கடுந்தேறு உறுகிளை துஞ்சும் (6) கூடுகிளைத்த இளந்துணைமகாரைப்போலப் (7) பெருமானே, அலந்தார்கள் (8) ; இனிமேல் உள்ளத்து உரவரையும் மடவரையும் அவரவர் அறிவினைத் தெரிந்து எண்ணி (25) அவர்களிடத்துச் செய்யும் அருளறிந்து அருளாயாயின் (26), நெடுந்தகாய், இவண் வாழ்பவர் யார் (27)? நின் ஊழி வாழ்க (24) எனக் கூட்டி வினைமுடிவு செய்க.

இதனாற்சொல்லியது அவன்வென்றிச் சிறப்புக்கூறி அவற்குப் பகைவர்மேல் அருள் பிறப்பித்தவாறாயிற்று.

(கு - ரை.) 1. நீங்காத புது வருவாயையுடைய அகன்ற இடத்தையுடைய வயலில்.

2. நீரிலே நின்ற ஆம்பலோடும் நெய்தற்பூவோடும் நெல்லை அறுத்து.

3. வயலில் தொழில் செய்யும் மகளிர், அவ்விடத்தே இடமில்லாமையால் மிக நெருங்கிய கடாவிடும் களத்தில் ; வெக்கை - கடாவிடும் களம்.

4. பருமையையுடைய எருமைகளால் உதிர்க்கப்பட்ட மெல்லிய செந்நெல்லினது ; "ஈடுசால் போர்பழித் தெருமைப் போத்தினால், மாடுறத் தெழித்துவை களைந்து காலுறீஇச், சேடுறக் கூப்பிய செந்நெற் குப்பைகள்" (சீவக. 59.) நெல்லுக்கு மென்மையாவது சோற்றினது மென்மை.

5. மரக்காலால் அளத்தற்பொருட்டு உறையாகக் குவித்தாற்போல ; "நெல்லின், அம்பண வளவை விரிந்துறை போகிய, ஆர்பதம்" (பதிற். 66 : 7 - 9.)

4 - 6. செந்நெல்லுக்குக் குளவி : "கடுப்புடைப் பறவைச் சாதியன்ன பைதற விளைந்த பெருஞ்செந் நெல்லின்" (பெரும்பாண். 229 - 30.)

6 - 7. கடுமையாகக் கொட்டுதலையுடைய குளவியினது மிக்க கிளை தம்மிற் கூடினவாய்த் தூங்கும், செழுமையான கூட்டைக் கலைத்த இளந்துணை ஆகிய பிள்ளைகளைப்போல. 8. பெருமானே, நின்னோடு மாறுபட்டு பகைவர் பின் மிக்க துன்பமுற்றனர்.

---

* விருந்து - புதுமை (தொல். செய். 239.) † சீவக. 653.

‡ தொல். தொகைமரபு, 15.

1 - 8. சேரனுக்குக் கூளவிக்கூடும் அவன் பகைவர்க்கு இளந்துணை மகாரும் உவமை.

9. சினங்கொண்டு புறப்பட்டுப் புடைபெயர்ந்து உலாவி ஊர்களை நெருப்பு விரும்பி உண்ணச்செய்தலால்; உரைஇ - உலாவி; "போர்க்கு ரைஇப்புகன்று கழித்தவாள்" (புறநா. 97 : 1.)

10. போரின்கண்ணே பகைவர் ஊர்களைச் சுடுகின்ற கமழ்கின்ற புகை திசைகளை மறைப்ப; எரிபரந்தெடுத்தலென்றும், உழபுலவஞ்சி யென்றும் இது கூறப்படும்.

11. மதிலினிடத்தே வெளியே தோன்றுமல் தமது பழியைச் செய்ய முயல்பவராது; மதில் பின்வரும் கழுவுள் (17) என்னும் தலைவனுடையது.

12. ஆழ்ந்த இடத்தையுடைய அகழியையுடைய, குறிய படிகளை யுடைய முடக்கறைகளைப்பெற்ற; ஞாயில்: இஃது அம்புகள் வைக்கப்பெற்றிருக்கும் முடக்கறை; "ஏப்புழை ஞாயில்", "அம்புடை ஞாயில்" (பு. வெ. 86, 118) என்று கூறப்படும்.

13. அருமையான மதிலினது காவலைக் கைப்பற்றிக் கொண்டாய்; தோட்டி-காவல்; "நீ, உடன்றோர் மன்னெயி றோட்டி வையா" (பதிற். 25:5.)

12 - 3. அகழிய எயில், ஞாயில்எயில் எனத் தனித்தனி இயைக்க.

13 - 4. காளைகளோடு கன்றுகளையுடைய பசுவின் மந்தையை நீ கைப்பற்றித் தருதலால் விருப்பம் மிக்கு; தரீஇ - தர; எச்சத்திரிபு. இது மன்னுறு தொழிலாகிய வெட்சியில் பாதீடென்னும் துறையாகும்.

ஏறும் ஆநிரையும்: "விடையாயம்" (பு. வெ. 1.)

15. எய்த அம்பினையே மீட்டும் எய்தலால் புலால் நாறும் வில்லை யுடைய வீரர் தம் அழகிய கையினின்றும் அவ்வாயுதத்தை விடுப்ப. புலவு வில் (பதிற். 15 : 12, உரை.) இளையர் - வீரர்; "இளையோர்க்கு மலர்ந்த மார்பினை" (சிறுபாண். 232.)

16. மத்தினிடத்தே கயிறு ஆடாத, சழிதலையுடைய பொழுதுகளை நினைத்து; "மத்துரறியமனை யின்னிய மிமிழா" (பதிற். 26 : 3.)

17. ஆனினது பயத்தால் வாழ்கின்ற இடையர் தலைவனை கழுவு ளென்பவன் தலைவணங்குதலால்; ஆன்பயம் வாழ்நர்: "ஆய்மகள், அளைவிலை யுணவிற் கிளையுட னருத்தி" (பெரும்பாண். 162 - 3); "அளை விலை யுணவி னாய்ச்சியர் தம்மொடும்" (சிலப். 16 : 3.) மடங்க: காரணப் பொருளில் வந்தது. கழுவுளது ஊர் காமூரென்றும், இது பதினொருகுடி வேளிரால் அழிக்கப்பட்டதென்றும் தெரிகின்றது (அகநா. 135 : 11 - 3, 365 : 11 - 2.) "பொருமுர ணெய்திய கழுவுள் புறம்பெற்று" (பதிற். 88 : 7.)

18. ஊர்கள் பாழாகும்படி வேறு நாடுகளிலே சென்று.

19. புதிதாகத் தாம் தேடும் செல்வத்தோடு தம் முன்னோர் தேடிவைத்த பெரிய செல்வம் அற்றதெனக் கருதி. 20. தாங்குதற்கு அரிய போரில் அரிய நிலையைத் தடுத்த, புள்ளிகள் பொருந்திய நெற்றியையுடைய.

21. பெரிய ஆண்யானைகளோடு அருமையான ஆபரணங்களைத் திறையாகத் தருதலில்லாதவருடைய (பதிற். 90 : 6 - 7.)

தரார் (21) விருந்தின் வாழ்க்கையொடு பெருந்திரு அற்றெ௭ன (19) என இயைக்க.

22. உடம்பு நடுங்குதல் மிக்கு, வருத்தும் தெய்வமென்று நின்னைப் பரவுதலால்.

23 - 4. தன்னாற் பற்றப்பட்டாரது உயிரைக் கொள்ளாமல் தனக்கு இட்ட பலியை மட்டும் ஏற்றுக்கொண்டு நீங்கும் பேய்போலத் திறையைக் கொண்டு நீ மீண்டு செல்கின்றாய்; பால்வரை தெய்வத்தால் நினக்கு அறுதியிடப்பட்ட நின் நாள்கள் வாழ்க. பேய் பலியைக் கொள்ளுதல் : **மணி.** 7 : 84 - 5. நின்னூழி வாழ்க : **மதுரைக்.** 781 - 2.

பேய் பலியைப் பெற்றே போதலிற் சுரமஞ்சரியின் இன்பத்தைப் பெற்றே போகின்ற சீவகனுக்கு உவமையாயிற்றென்பதற்கு மேற்கோள் (**சீவக.** 2010, **ந.**)

25 - 6. அறிவுடையோரையும், அறிவில்லாதோரையும் அவர்களுடைய அறிவை ஆராய்ந்து நினைத்து அறிந்தனையாய் அருள் செய்யா தொழிவாயாயின். உரவர், மடவர் : **பதிற்.** 73 : 1.

27. நெடுந்தகாய், இவ்வுலகத்தில் வாழ்வோர் யார்?

மு. 'பிண்டம் மேய இருபெரு வேந்தருள் ஒருவர் ஒருவர் மிகைகண்டு அஞ்சிக் கருமச்சூழ்ச்சியால் திறைகொடுப்ப அதனை வாங்கினார்க்கு உளதாகிய விளக்கம்' (**தொல்.** புறத். 8, **ந.**)

(**பி - ம்.**) 3. செறிவனை. 17. தலைமயங்க. 18. வேற்றுப்புலம். 22. பராலின். (க)

---

(எஉ) இகல்பெரு மையிற் படைகோ ளஞ்சார்
சூழாது துணித லல்லது வறிதுடன்
காவ லெதிரார் கறுத்தோர் நாடுநின்
முன்றிணை முதல்வர்க் கோம்பின ருறைந்து
மன்பதை காப்ப வறிவுவலி யுறுத்து
நன்றறி யுள்ளத்துச் சான்றோ ரன்னநின்
பண்புநன் கறியார் மடம்பெரு மையிற்
றுஞ்ச லுறாஉம் பகல்புகு மாலை
நிலம்பொறை யொராஅநீர் ஞெமரவந் தீண்டி
உரவுத்திரை கடுகிய வுருத்தெழு வெள்ளம்
வரையா மாதிரத் திருள்சேர்பு பரந்து
ஞாயிறு பட்ட வகன்றுவரு கூட்டத்
தஞ்சாறு புரையு நின்றொழி லொழித்துப்
பொங்குபிசிர் நுடக்கிய செஞ்சுடர் நிகழ்வின்
மடங்கற் றீயி னனையை
சினங்கெழு குருசினின் னுடற்றிசி னோர்க்கே.

**துறை** - செந்துறைப் பாடாண்பாட்டு. **வண்ணம்** - ஒழுகுவண்ணம். **தூக்கு** - செந்தூக்கு. **பெயர்** - உருத்தெழு வெள்ளம் (10.)

(ப - ரை.) 1. இகல் பெருமையின் - இகலானது பெரிதாகையானே ; இகலென்னும் எழுவாய்க்குப் பெருமையை நிலைப்பயனிலையாகக் கொள்க. அஞ்சாரென்றது வினையெச்சமுற்று.

படைகோளைத் (1) துணிதல் (2) எனக் கூட்டுக.

2 - 3. உடன் காவலெதிராரென்றது பலரும் தம்முட் கூடியும் காக்க மாட்டாரென்றவாறு. 5. மன்பதை - மக்கட்பன்மை.

அறிவுவலியுறுத்தும் (5) சான்றோர் (6) எனக் கூட்டுக.

ஈண்டுச் சான்றோரென்றது மந்திரிகளை.

மடம்பெருமையையும் (7) இகல்பெருமையைப் (1) போல எழுவாயும் பயனிலையுமாகக் கொள்க.

8. துஞ்சல் - எல்லாவுயிரும் இறந்துபடுதல். பகலென்றது ஊழியை. மாலையென்றது ஊழிமுடிவினை. 9. ஒராஅ என்றதனை ஒருவவெனத் திரித்து ஈண்டியென்றதனையும் ஈண்டவெனத் திரிக்க.

10. உருத்தெழு வெள்ளமென்றது பல்லுயிரையும் ஒருங்கு தான் கொல்லுங் கருத்துடையது போலக் கோபித்தெழு வெள்ளமென்றவாறு.

இச்சிறப்பானே இதற்கு, ‘ **உருத்தெழு வெள்ளம்** ’ என்று பெயராயிற்று.

வெள்ளம் (10) பரந்து (11) என்றதனைப் பரக்கவெனத்திரித்து அதனை நுடக்கிய (14) என நின்ற செய்யியவென்னும் வினையெச்சத்தோடு முடித்து அதனைச் சுடர்நிகழ்வு (14) என்னும் தொழிற்பெயரொடு முடித்து, வெள்ளம் பரக்கையாலே அவ்வெள்ளத்தை மாய்க்கவேண்டிச் சுடர்நிகழ்தலையுடைத் தான தீ (15) எனவுரைக்க.

14. பிசிரென்றது பிசிருடைய வெள்ளத்தை. நுடக்குதல் - மாய்த்தல்.

ஞாயிறு பட்ட அகன்றுவரு கூட்டத்து (12) மடங்கற்றீ (15) என மாறிக் கூட்டி, அவ்வெள்ளத்தை மாய்த்தற்கு ஆதித்தர்பன்னிருவரும் தோற்றின பெரிய கூட்டத்தையுடைய வடவைத்தீயென உரைக்க. ஆதித்தர்கூட் டத்தை இவன் படைத்தலைவர்க்கு உவமமாகக் கொள்க.

அம் சாறு புரையும் நின் தொழிலொழித்து (13) மடங்கற்றீயின் அனையை (15) என மாறிக் கூட்டுக. அம் சாறுபுரையுந்தொழிலென்றது * அழகிய விழாப்போல எல்லார்க்கும் இன்பத்தைச் செய்யும் தொழிலென்ற வாறு.

நின்னொடு கறுத்தோர் (3) தம் மடம் பெருமையால் (7) நின் (3) மூன் குடிமுதல்வர்க்கு (4) அறிவுவலியுறுத்தும் (5) சான்றோரையொத்த நின் (6) சூழ்ச்சிப்பண்புடைமை அறிகின்றிலர் ; நீதான் சூழ்ச்சியுடையையேயன் றிக் (7) குருசிலே, நின்உடற்றிசினோர்க்குப் போர்செய்யுமிடத்து (16) மடங் கற்றீயின் அனையை (15) ; அதனையும் அறிகின்றிலராதலால், அவர் தம் இகல் பெருமையானே அஞ்சாராய்ப் படைகோளைத் (1) துணிதலல்லது (2) நாட்டைச் (3) சிறிதும் உடன் (2) காவலெதிர்கொள்ளார் (3) எனக் கூட்டி வினைமுடிவு செய்க.

இதனாற் சொல்லியது அவன் சூழ்ச்சியுடைமையும் வென்றிச்சிறப்பும் உடன்கூறியவாறாயிற்று.

---

* “ விழவுமேம் பட்டவென் னலனே ” (குறுந். 125 : 4.)

(ரு - ரை.) 1 - 2. பகைமை பெரிதாகையினாலே அஞ்சாராகிப் படை கொள்ளுதலை ஆராயாமல் நிச்சயித்ததலே அல்லாமல்.

2 - 3. தம்முட் கூடியும் நின்னோடு பகைகொண்டோர் சிறிது நேரமும் தம் தம் நாட்டைக் காத்துக்கொள்ளுதலை மாட்டாராயினார். வறிது - சிறிது ; உரிச்சொல்.

3 - 7. நின் குடியில் நினக்கு முன்பு இருந்த அரசர்களுக்குப் பாது காவலைச் செய்தனராகி வாழ்ந்து, மக்களின் தொகுதியைக் காப்பதற்கு அறிவுரையை வற்புறுத்திக் கூறும், தருமத்தை அறிந்த உள்ளத்தையுடைய மந்திரிகளைப்போன்ற நின்னுடைய சூழ்ச்சிப்பண்பைத் தம்முடைய அறியாமை பெரிதாகையால் அப்பகைவர் நன்றாக அறியமாட்டாராயினார்.

8 - 9. எல்லாவுயிர்களும் இறக்கும் ஊழி புகுகின்ற முடிவில், நிலம் பாரம் நீங்க நீரானது பரக்கும்படி வந்து நெருங்க ; ஓரா - ஒருவ ; ஈண்டி- ஈண்ட ; எச்சத்திரிபுகள். இது நீரின் ஊழியைக் கூறியது ; "பனியொடு தண்பெய றலைஇய வூழியும்" (பரி. 2 - 8 : 9.)

10. உலாவுதலையுடைய அலை விரைந்து சென்ற, உயிர்களைக் கொல்லுதற்குக் கோபித்து எழுகின்ற வெள்ளம் ; "உருத்துவரு மலிர் நிறை" (பதிற். 28 : 12.)

11. எல்லை இன்னதென்று வரையறுத்து அறிதற்கு இயலாத திசை களில் இருளொடு சேர்ந்து பரக்க. இருளொடு என ஒடு வருவிக்க.

12. அதனைப் போக்கச் சூரியர் பன்னிருவரும் தோன்றிய, சேர்ந்து வரும் கூட்டத்தையுடைய.

கூட்டத்து (12) மடங்கற்றீ (15) என இயையும்.

13. அழகிய விழாவைப்போல எல்லார்க்கும் இன்பத்தைச் செய்யும் நினது தொழிலை ஒழித்து.

14 - 5. பொங்குகின்ற பிசிரையுடைய வெள்ளத்தை வற்றச் செய் யும்பொருட்டுச் சிவந்த ஒளி நிகழ்தலையுடைய வடவை என்னும் ஊழித் தீயைப் போன்றனை ; நுடக்கிய : செய்யியவென்னும் வினையெச்சம்.

12 - 5. சூரியரோடு கூடிய வடவைத்தீ : பதிற். 62 : 6 - 8 ; சூரியர் படைத்தலைவர்க்கும், வடவைத்தீ சேரனுக்கும் உவமைகள்.

16. சினம் பொருந்திய குருசிலே, நின்னோடு மாறுபட்ட பகைவருக்கு.

உடற்றிசினோர்க்கு (16) மடங்கற்றீயின் அனையை (15) என மாறி இயைக்க.

(பி - ம்.) 3. நாடென. 4. முதல்வரோம்பினர். 8. துஞ்சலூறும். 14. பிசிருடக்கிய. (உ)

(எங) உரவோ ரெண்ணினு மடவோ ரெண்ணினும்
பிறர்க்குநீ வாயி னல்லது நினக்குப்
பிறருவம மாகா வொருபெரு வேந்தே
...................................
...................................
மருதஞ் சான்ற மலர்தலை விளைவயற்
செய்யு ணாரை யொய்யு மகளிர்
இரவும் பகலும் பாசிழை களையார்
குறும்பல் யாணர்க் குரவை யயரும்
காவிரி மண்டிய சேய்விரி வனப்பிற்
புகாஅர்ச் செல்வ பூழியர் மெய்ம்மறை
கழைவிரிந் தெழுதரு மழைதவழ் நெடுங்கோட்டுக்
கொல்லிப் பொருந கொடித்தேர்ப் பொறையநின்
வளனு மாண்மையுங் கைவண் மையும்
மாந்த ரளவிறந் தனவெனப் பன்னாள்
யான்சென் றுரைப்பவுந் தேறார் பிறரும்
சான்றோ ருரைப்பத் தெளிகுவர் கொல்லென
ஆங்குமதி மருளக் காண்குவல்
யாங்குரைப் பேனென வருந்துவல் யானே.

**இதுவும் அது. பெயர் - நிறந்திகழ் பாசிழை.**

(**ப - ரை.**) *[கூந்தலையுடைய மகளிர், ஒண்ணுதல்பொலிந்த மகளி ரெனக் கூட்டுக.

நிறந்திகழ் பாசிழையென்றது †தன்னின் அழுத்திய மணியினும் தன் நிறம் திகழும் பசும்பொன்னிலழையென்றவாறு.

இச்சிறப்பானே இதற்கு, '**நிறந்திமழ் பாசிழை**' என்று பெயராயிற்று.

உயர்திணைமகளிர் நெஞ்சத்துமென உம்மையை மாறிக் கூட்டுக.

தெய்வமென்றது தெய்வத்தன்மையை.

தெய்வந்தரூஉம் ஆன்றோரெனக் கூட்டுக. குலமகளிரை உயர் ‡திணை மகளிரென்று முன்னே கூறினமையான் ஆன்றோரென்றது பரத்தையரை யாம்; அவர்களை ஆன்றோரென்றது தம் §துறைக்குவேண்டுவன அமைந்தா ரென்றவாறு.] 4. மருதமென்றது மருதநிலத்தன்மையை.

---

* [ ] இவ்விருதலைப் பகரத்திற்கு உட்பட்ட உரைக்குரிய மூலம் ஒரு பிரதியிலும் கிடைக்கவில்லை.

† "மின்னி, மணிபொரு பசும்பொன்" (**கலி.** 143 : 3 - 4.)

‡ திணை - குலம். § **சிலப்.** 14 : 166 - 7, 22 : 138.- 9 ; **மணி.** 2 : 18 - 32 ; **பெருங்.**1.35 ; 84 - 6.

6 - 7. இரவும் பகலும் குரவை அயருமெனக் கூட்டுக.

குறும்பல்குரவையென்றது ஒன்று ஆடும் இடத்திற்கு ஒன்று அணியதாய் அவைதாம் பலவாயிருக்கின்ற குரவையென்றவாறு.

குரவையயரும் (7) புகார் (9) எனவும் காவிரி மண்டிய புகாரெனவும் கூட்டுக.

14. உரைப்பவுமென்ற உம்மை தாமே அறியக்கடவதனை யாம் சொல்லவும் அறிகிலரெனச் சிறப்பும்மை. பிறருமென்ற உம்மை அசைநிலை. 'சான்றோர்.........கொல்லென' என்றதன் பின், கருதினென ஒரு சொல் வருவித்து அதனைக் காண்குவலென்னும் வினையொடு முடிக்க.

பெருவேந்தே (3), புகார்ச்செல்வ, பூழியர் மெய்ம்மறை (9), கொல்லிப் பொருந, பொறைய (11), நின் பகைவர் நின் (11) வளனும் ஆண்மையும் கைவண்மையும் (12), உலகத்துமக்கள் அளவைக் கடந்தன; அவனொடு மாறுபடுவது நுமக்கு உறுதியன்றெனப் பன்னாள் (13) யான் சொல்லவும் தேறிற்றிலர் (14); தேறாராயினும் உலகத்து மதிப்புடைய சான்றோர் சொல்லத் தாம் தேறுவரோவெனக் கருதின் (15) அவர் சொன்னவிடத்தும் அவர்கள் மதிமருண்டதுவே காணாநின்றேன் (16); ஆகலான் நின் பெருமையை அவர்கட்கு யாங்கு உரைப்பேனென வருந்தாநின்றேன் யான் (17); இஃது என்னுறு குறை; இதனை அறிந்து நீ அவர்பால் அருளவேண்டுவலென வினைமுடிவு செய்க.

இதனாற் சொல்லியது அவன் வென்றிக்கு அடியாகிய செல்வமும் ஆண்மையும் *கைவண்மையும் உடன்கூறியவாற்றான் அவன் வென்றிச் சிறப்புக் கூறியவாறாயிற்று.

(கு - ரை.) 1. உரவோர், மடவோர் : **பதிற்.** 71 : 25 ; **குறுந்.** 20 : 3 - 4.

உரன் அறிவென்னும் பொருளில் வந்தது (**சிறுபாண்.** 189 - 90, **ந.**)

1 - 3. அறிவுடையோரை எண்ணினாலும், அறிவில்லாதோரை எண்ணினாலும் பிறர்க்கு நீ உவமையாகப் பொருந்தினல் அல்லாமல், நினக்குப் பிறரை உவமமாகக் கூறுதற்கு இயலாத ஒப்பற்ற பெருமையையுடைய அரசே; "உயர்ந்ததன் மேற்றே யுள்ளுங் காலை" (**தொல்.** உவம. 3) என்பதனால் உவமையாகக் கூறப்படும் பொருள் உயர்ந்ததாதலின் சேரனுடைய பெருமை விளக்கப்பட்டது; **முருகு.** 276; **மதுரைக்.** 42, **ந**; **புறநா.** 377 : 10 - 11 என்பவற்றைப் பார்க்க.

4. மருதம் சான்ற வயல் : **மதுரைக்.** 270.

4 - 5. ஊடலாகிய உரிப்பொருள் அமைந்த அகன்ற இடத்தையுடைய விளைகின்ற வயல்களாகிய செய்களில், பயிரை அழிக்கின்ற நாரையைத் துரத்தும் மகளிர். ஒய்தல் : **பதிற்.** 87 : 4.

மகளிர் நாரையைத் துரத்துதல் : **பதிற்.** 29 : 2 - 7.

6 - 7. பசிய பொன்னாற்செய்த ஆபரணங்களைக் களைதல் இல்லாதவராகி, ஒன்றுக்கு ஒன்று அண்மையிலுள்ளதாகி அவைதாம் பலவாயிருக்

---

* வென்றிக்கு வண்மை அடியாதல் : 'அருளிலர் கொடாமைவல்லராகுக வென்றதனாற் பயன், அவையுடையோர் தத்தம் பகைவரை வெல்வராதலால், பகையெதிர்ந்தோர் அவையிலராக என்பதாம்' (**புறநா.** 27 : 17-9, உரை.)

கின்ற புதிதுபுதிதான குரவைக் கூத்தை இரவிலும் பகலிலும் நிகழ்த்துதற்கு இடமான. இரவும் பகலும் அயருமென இயைக்க ; 'குறும்பல்லூர் நெடுஞ் சோணாட்டு - ஒன்றற்கு ஒன்று அண்ணிதாகிப் பலவாகிய ஊர்களையுடைய பெரிய சோழநாட்டில்' (பட். 28, ந.)

9. பூழியர் மெய்ம்மறை : பதிற். 90 : 27.

8 - 9. காவிரி மிக்குச் சென்ற, நெடுந்தூரத்தே விரிகின்ற அழகினை யுடைய புகார் நகரத்தையுடைய செல்வ, பூழிநாட்டிலுள்ளார்க்குக் கவசம் போன்றாய். இதனாற் சோழநாடும், பூழிநாடும் இவன் ஆட்சிக்கு உட்பட் டமை தெரிகின்றது.

11. கொல்லிப்பொருந : புறநா. 22 : 28 ; சிலப். குன்றக். பாட்டுமடை யிறுதி.

10 - 11. மூங்கில் விரிந்து எழுகின்ற மேகங்கள் தவழும் உயர்ந்த சிகரங்களையுடைய கொல்லிமலைக்குத் தலைவ ; கொடிகளையணிந்த தேரை யுடைய சேரனே.

11 - 4. நின்னுடைய செல்வமும் வீரமும் கொடையும் மக்களின் அளவைக் கடந்தனவென்று தாமே அறியவேண்டியவராக இருந்தும் யான் பலநாள்சென்று நின்பகைவரிடத்துச் சொல்லவும் அவர் அதனைத் தெளிய மாட்டாராயினர்.

14 - 5. பிறராகிய சான்றோர் அவற்றை எடுத்துச் சொல்லத் தெளி வாரோ எனக் கருதினல். பிறரும் : உம்மை அசைநிலை. கொல்லெ‌ன என்பதன்பின் கருதினென்பதை அவாய்நிலையால் வருவித்து முடிக்க.

16. அச்சான்றோர் கூறவும் பகைவரது புத்தி மயங்கக் காண்பேன்.

17. ஆதலால் யான் எவ்வாறு அவர்மனம் தெளியும்வண்ணம் உரைப்பேனென்று வருந்துவேன் ; இதனை அறிந்து நீ அவர்பால் அருள் செய்தல் வேண்டும்.

(பி - ம்.) 2. நீயாயின். 5. ஒப்பு மகளிர். 8. சேய்வரி. 14. யாஞ் சென்று. (கூ)

---

(எச) **கே**ள்வி கேட்டுப் படிவ மொடியாது
வேள்வி வேட்டனை யுயர்ந்தோ ருவப்பச்
சாயறல் கடுக்குந் தாழிருங் கூந்தல்
வேறுபடு திருவி னின்வழி வாழியர்
கொடுமணம் பட்ட வினைமா ணருங்கலம்
பந்தர்ப் பயந்த பலர்புகழ் முத்தம்
வரையக நண்ணிக் குறும்பொறை நாடித்
தெரியுநர் கொண்ட சிரறுடைப் பைம்பொறிக்
கவைமரங் கடுக்குங் கவலைய மருப்பிற்
புள்ளி யிரலைத் தோலூ னுதிர்த்துத்

தீதுகளைந் தெஞ்சிய திகழ்விடு பாண்டிற்
பருதி போகிய புடைகிளை கட்டி
எஃகுடை யிரும்பி னுள்ளமைத்து வல்லோன்
சூடுநிலை யுற்றுச் சுடர்விடு தோற்றம்
விசும்பாடு மரபிற் பருந்தூ றளப்ப
**நலம்பெறு திருமணி** கூட்டு நற்றோள்
ஒடுங்கீ ரோதி யொண்ணுதல் கருவில்
எண்ணியன் முற்றி யீரறிவு புரிந்து
சால்புஞ் செம்மையு முளப்படப் பிறவும்
காவற் கமைந்த வரசுதுறை போகிய
வீறுசால் புதல்வற் பெற்றனை யிவணர்க்
கருங்கட னிறுத்த செருப்புகன் முன்ப
அன்னவை மருண்டனெ னல்லே னின்வயின்
முழுதுணர்ந் தொழுக்கு நரைமூ தாளனை
வண்மையு மாண்பும் வளனு மெச்சமும்
தெய்வமும் யாவதுந் தவமுடை யோர்க்கென
வேறுபடு நனந்தலைப் பெயரக்
கூறினை பெருமநின் படிமை யானே.

**இதுவும் அது. பெயர் - நலம்பெறு திருமணி (16.)**

(ப - ரை.) 1. *கேள்வி கேட்டல் - யாகம் பண்ணுதற்கு †உடலான விதி கேட்டல். படிவம் - யாகம் பண்ணுதற்கு உடலாக முன்பு செலுத்தும் விரதங்கள். ஒடியாதென்பதை ஒடியாமலெனத் திரிக்க.

வேட்டனை (2) என்றதனை வினையெச்சமுற்றாக்கி அவ்வினையெச்சத்தினை அருங்கடனிறுத்த (22) என்னும் வினையொடு கூட்டுக.

2. உயர்ந்தோர் - தேவர். 4. வேறுபடு திருவின் - இவளுக்குக் கூறிய குணங்களால் அவளின் வேறாகிய நின்தேவி யென்றவாறு.

திருவின் என்னும் இன் அசைநிலை. வாழியர் (4) என்னும் வினையெச்சத்தினைச் சூடுநிலையுற்று (14) என்னும் வினையொடு முடிக்க.

7. வரையென்றது பெருமலையை. குறும்பொறையென்றது அதனை அணைந்த சிறு பொற்றைகளை.

8. தெரியுநர் கோடல் - இலக்கணக்குற்றம் அற ஆராய்ந்து கோடல். பைம்பொறியென்றது செவ்விகளையுடைய புள்ளிகளை. மேற் புள்ளியிரலை (10) என்றதனை அதன் சாதிப்பெயர் கூறியவாறாகக் கொள்க.

9. கவலையவென்னும் அகரம் செய்யுள்விகாரம்.

---

* கேள்வியென்றது வேதம்; வேதவிதிக்காயிற்று. † உடல் - ஆதாரம்.

11. பாண்டிலென்றது வட்டமாக அறுத்த தோலினை. 12. பருதி போகிய புடையென்றது வட்டமாகப் போன அத்தோலது விளிம்பினை.

அருங்கலம் (5) முத்தம் (6) பாண்டிற் (11) புடை கிளை கட்டி (12) எனக் கூட்டி அருங்கலத்தினையும் முத்தத்தினையும் அத்தோலின் விளிம்பிலே இனமாகக் கட்டியெனவுரைக்க.

13. எஃகுடை இரும்பின் உள்ளமைத்தென்றது கூர்மையையுடைய கருவிகளால் அத்தோலுட் செய்யும் தொழில்களெல்லாம் செய்தமைத் தென்றவாறு. அமைத்தென்றதனை அமைப்பவெனத் திரிக்க.

வல்லோனுல் (13) என விரித்து வல்லோனுல் நின் தேவி சூடுதல் நிலை யுறுதலால் (14) என்க.

13. வல்லோன் - யாகம் பண்ணுவிக்க வல்லவன்.

14. தோற்றமென்றது தோற்றமுடைய அத்தோலினை.

திரு (4) ஒண்ணுதல் (17) தோற்றம் (14) பருந்தூறளப்பச் (15) சூடு நிலையுற்றுக் (14) கருவில் (17) அரசுதுறை போகிய (20) எனக் கூட்டி நின் தேவியாகிய ஒண்ணுதல் அவ்வாறிழைத்த தோலினைப் பருந்தூறளக்கும்படி சூடினமையால், அவள் கருவிலேயிருந்து அரசுதுறைக்கு வேண்டுவனவெல் லாம் குறையற்றவெனவுரைக்க.

16. நலம்பெறு திருமணியென்றது மணியறிவாரால் இதுவே நல்ல தென்று சொல்லப்படுதலையுடைய திருமணியென்றவாறு.

இச்சிறப்பானே இதற்கு, '**நலம்பெறு திரு**மணி' என்று பெயராயிற்று.

18. எண் இயல் முற்றியென்றது *திங்கள் நிரம்பியென்றவாறு.

ஈரறிவென்றது இம்மையறிவு மறுமையறிவு; பெரிய அறிவெனினும் அமையும்.

21. பெற்றனையென்றது வினையெச்சமுற்று.

24. நரைமூதாளனென்றது புரோகிதனை.

நரைமூதாளனைக் (24) கூறினை (28) எனக் கூட்டி அவனைச் சொல்லி ஏவினையென ஒருசொல் வருவித்து முடிக்க.

25. மாண்பென்றது மாட்சிமையுடைய குணங்களை. எச்சமென்றது பிள்ளைப்பேற்றினை. 26. தெய்வமென்றது தம்மால் வழிபடும் தெய்வத்தினை.

தவமுடையோர்க்கெனச் (26) சொல்லி (28) என்க.

கூறினையென்பது வினையெச்சமுற்று.

27. வேறுபடு நனந்தலையென்றது துறந்துபோயிருக்கும் காட்டினை.

பெயர - அந்நரைமூதாளனைக் காட்டிலே பெயரவேண்டி.

செருப்புகன் முன்ப (22), வேட்டனையென்றும் (2) பெற்றனையென் றும் (21) நீ செய்த யாகங்களாகிய அன்னவையிற்றிற்கு (2) யான் மருண் டேனல்லேன் (23); நின்னை நல்வழி ஒழுகுவித்துநின்ற நரைமூதாளனை (24) நின் படிமையானே (28) இல்லறவொழுக்கினை ஒழித்துத் துறவற வொழுக்கிலே செல்ல (27) ஒழுகுவித்தனை (28); அவ்வாறு செய்வித்த நின் பேரொழுக்கத்தையும் பேரறிவினையும் தெரிந்து யான் மருண்டேனென வினைமுடிவு செய்க.

இதனுற் சொல்லியது அவன் நல்லொழுக்கமும் அதற்கேற்ற நல்லறி வுடைமையும் கூறியவாருயிற்று.

---

* "நாளுற்று நம்பி பிறந்தான்" (சீவக. 10.)

(கு - ரை.) 1. வேதவிதிகளைக் கேட்டு யாகத்திற்கு அங்கமாகச் செய்யப்படும் விரதங்களில் தவிராமல். ஓடிதல் - தவிர்தல்; "ஓடியா விழவி னெடியோன் குன்றத்து" (அகநா. 149 : 16.)

2. தேவர்கள் உவக்கும்படி யாகங்களைச் செய்து முடித்தனையாய். அரசர் வேள்வி செய்தல்: பதிற். 21 : 1 - 6; "ஆன்ற கேள்வி யடங்கிய கொள்கை, நான்மறை முதல்வர் சுற்ற மாக, மன்ன ரேவல் செய்ய மன்னிய, வேள்வி முற்றிய வாய்வாள் வேந்தே" (புறநா. 26 : 12 - 5)

3. நுண்ணிய கருமணலைப் போன்ற புறத்தே தாழ்ந்த பெரிய கூந்தலை யுடைய; "புறந்தாழ் பிருளிய பிறங்குகுர லைம்பால்" (அகநா. 126 : 20.)

4. தெய்வமாகிய திருமகளினின்றும் வேறுகிய நின் தேவி நின்வழியிலே வாழும்பொருட்டு. திருவின்: இன் வேண்டாவழிச் சாரியை. வாழியர்: வினையெச்சம். 5 - 6. கொடுமணம் என்னும் ஊரில் உண்டான தொழில் மாட்சிமைப் பட்ட அரிய ஆபரணங்களையும், பந்தர் என்னும் ஊரில் விளைந்த பலரும் புகழ்கின்ற முத்துக்களையும். கொடுமணக்கலமும் பந்தர்முத்தமும்: பதிற். 67 : 1 - 4. 7. பெருமலையினிடத்தே சென்று சிறிய பொற்றைகளில் தேடி.

8. ஆராய்பவராகிக் கொண்ட சிதறுதலையுடைய செவ்விய புள்ளிகளை யுடைய. சிரறுதல் - சிதறுதல் (பதிற். 22 : 13, உரை.)

9. கலையின் மருப்புக்குக் கவைமரம்: அகநா. 34 : 3 - 4.

9 - 10. கவைக்கோலைப் போன்ற பிளவுபட்ட கொம்பினையுடைய புள்ளிமானினது தோலை, ஊனை ஒழித்து.

11. தீய பாகத்தைக் களைய எஞ்சிய ஒளிவிடுகின்ற தோலினது.

12. வட்டமாகப் போன விளிம்பிலே இனமாகக் கட்டி.

பருதியென்னும் சொல் வட்டமென்னும் பொருளில் வரும் (சீவக. 2203, ந.)

அருங்கலத்தையும் (5) முத்தத்தையும் (6) கட்டி (12) என இயைக்க.

13. கூர்மையையுடைய இரும்பினுற் செய்யப்பட்ட கருவிகளால் அத்தோலுட் செய்யும் தொழில்களையெல்லாம் செய்து அமைப்ப, யாகம் செய்விக்க வல்லோனுல். அமைத்து - அமைப்ப; எச்சத்திரிபு.

14. சூடுதல் நிலையுற்றதனுல் ஒளிவிடுகின்ற தோற்றமுடைய அத்தோலை.

7 - 14. யாகஞ் செய்வோர் மான்றோலைப் போர்த்துக்கொள்ளுதல்; "வினைக்குவேண்டி நீபூண்ட, புலப்புல்வாய்க் கலைப்பச்சை, சுவற்பூண் ஞாண் மிசைப்பொலிய" (புறநா. 166: 10 - 12); "கடகரி யுரிவை போர்த்த கண்ணுதற் கடவுண் மாறி, இடம்வல மாகப் பாகத் திறைவியோ டிருந்த வாபோல், உடல்கலை யுறுப்புத் தோலி னொளித்திடப் போர்த்து வேள்விக், கடலினுக் குரிய வெல்லாங் கவினுறச் சாத்தி னுனே" (வி. பா. இராசசூயச். 104.)

15. ஆகாயத்தில் ஆடுகின்ற இயல்பையுடைய பருந்து இறைச்சியென்று கருதி அதனிடத்தே உறுதலைக் கருத.

16 - 7. மணிகளுக்கு உரிய இலக்கணங்களைப் பெற்ற அழகிய மணி சேர்ந்த நல்ல தோளையும், சுருள் என்னும் பகுதியான கூந்தலையும், ஒள்ளிய நெற்றியையும் உடைய நின் தேவியினது கருவில்.

18. பத்து மாதமும் நிரம்பி, பேரறிவை விரும்பி.

19. அன்பும் நாணும் ஒப்புரவும் கண்ணோட்டமும் வாய்மையும் நடுவு நிலையும் உளப்படப் பிற குணங்களும் ஆகிய.

21. வீறுசால் புதல்வன் : புறநா. 222 : 2 - 3.

20 - 21. குடிகளைக் காத்தற்குப் பொருந்திய அரசின் துறைகளை முற்றக் கற்ற, வேறொருவர்க்கு இல்லாத சிறப்பு அமையப்பெற்ற புதல்வனைப் பெற்றனையாய். அரசுதுறை போகிய என்பது, "அறிவறிந்த மக்கட் பேறு" (குறள். 61) என்புழி அறிந்த என்பதுபோல நின்றது.

21 - 2. இவ்வுலகத்திலுள்ளார்பொருட்டு அரிய கடனைச் செய்து முடித்த, போரை விரும்புகின்ற வன்மையுடையோய். தேவர்கடன், முனிவர் கடன், பிதிரர்கடன் என்னும் இல்லறத்தார்க்குரிய கடன்கள் மூன்றனுள், பிதிரர்கடன் புதல்வரைப் பெறுதலால் தீர்தலின் அருங்கடனிறுத்த என்றார் (பதிற். 70 : 21 - 2.)

குலந்தருதல் - புதல்வற் பயந்து மேலும் குலத்தை வளர்த்தல் என்பதற்கு மேற்கோள் (சீவக. 2141, ந.)

வேட்டு (2), பெற்று (21), இறுத்த (22) என்க.

23. வேட்டதும், புதல்வற் பெற்றதும் ஆகிய அத்தகையவற்றைக் கேட்டு வியந்தேன் அல்லேன்.

23 - 4. நின்னிடத்து, அறம் முழுவதையும் நன்றாக அறிந்து நின்னை நல்ல வழியிலே நடத்தும் பிராயம் முதிர்ந்தோனாகிய புரோகிதனை.

25 - 6. கொடுத்தலும், மாட்சிமையுடைய குணங்களும், செல்வமும், பிள்ளைப்பேறும், தம்மால் வழிபடப்பெறும் தெய்வமும், மற்ற எல்லாப் பொருளும் தவமுடையோர்க்கு உரியன எனச் சொல்லி.

27 - 8. பெருமானே, வேறுபட்டஅகன்ற இடத்தையுடைய காட்டிலே நீங்கும்படி நின்னுடைய தவவேடத்தால் ஏவினை; என்றது தன் புரோகிதனைக் காட்டிலும் சேரன் அறிவுமிக்கமை கூறியபடி; "புரோசு மயக்கி" (பதிற். 7-ஆம் பத்தின் பதிகம்: 10, உரை.)

ஆதலால் நின் தவவொழுக்கத்தையும் பேரறிவையும் கண்டு வியந்தேனென இசையெச்சமாகச் சில சொற்களை வருவித்து முடிக்க.

மு. அரசன் ஓதியவாறும் வேட்டவாறும் வந்தன (தொல். புறத். 20, ந.); அரசர்க்குரியவாகிய படை குடி கூழ் அமைச்சு நட்பு முதலியனவும் புதல்வரைப் பெறுவனவுமாகிய பொருட்டிறத்துட்பட்ட வாகைப் பகுதி (ஷை. ஷை. 21, ந.)

(பி - ம்.) 8. தெரிபுகொண்ட. 10. தோலூரொஞெதிரத்து. 14. சூடுநிலையுற்ற. 24. முதிதுணர்ந்தொழுகும். 25. வண்மையுமாண்மையும். 27. வேறுபுல. 28. கடறுவை. (௪)

(எரு) இரும்புலி கொன்று பெருங்களி றடூஉம்
அரும்பொறி வயமா னனையை பல்வேற்
பொலந்தார் யானை யியறேர்ப் பொறைய
வேந்தரும் வேளிரும் பிறருங் கீழ்ப்பணிந்து
நின்வழிப் படாஅ ராயி னென்மிக்
கறையுறு கரும்பின் **தீஞ்சேற் றியாணர்**
வருநர் வரையா வளம்வீங் கிருக்கை
வன்புலந் தழீஇ மென்பா லேறும்
அரும்பறை வினைஞர் புல்லிகல் படுத்துக்
கள்ளுடை நியமத் தொள்விலை கொடுக்கும்
வெள்வர குழுத கொள்ளுடைக் கரம்பைச்
செந்நெல் வல்சி யறியார் தத்தம்
பாடல் சான்ற வைப்பின்
நாடுட னாடல் யாவண தவர்க்கே.

**இதுவும் - அது. பெயர் - தீஞ்சேற் றியாணர் (6.)**

(**ப - ரை.**) 5 - 6. நெல் மிக்கு *அறையுறு கரும்பென்றது நெல்லின் **கண்ணே** அந்நெல்லை நெருக்கி மிக எழுந்தமையானே அறுக்கலுற்ற கரும் பென்றவாறு.

இனி, அந்நெற்றான் கரும்பின் மிக எழுந்து அதனை நெருக்கினமை யால் அந்நெல்லிற்கு இடமுண்டாக அறுத்த கரும்பெனினுமாம்.

6. தீஞ்சேறு - இனிய பாகு. யாணரென்றது அத்தீஞ்சேற்றது இடை யறவின்மையை.

இச்சிறப்பானே இதற்கு, '**தீஞ்சேற் றியாணர்**' என்று பெயராயிற்று.

வளம்வீங்கிருக்கையாகிய (7) மென்பால் (8) எனக் கூட்டுக.

† மென்பால் - மருதம்.

பொறைய, நீ (3) புலிகொன்று களிறடூஉம் (1) வயமான் அனையை ; அதனால் (2), வேந்தரும் வேளிரும் பிறரும் நின்னடிக்கீழ்ப் பணிந்து தமக் குரிய (4) மென்பால்கள்தோறும் இருந்து முன் பணிந்தவாற்றிற்கேற்ப (8) நின்வழியொழுகாராயின், அவர்கள் (5) வெள்வரகுழுத கொள்ளுடைக் கரம்பையாகிய (11) வன்பாலிலே கெட்டுப்போயிருந்து ஆண்டு விளைந்த வெள்வரகு உண்பதன்றித் தாம் பண்டு உண்ணும் (8) செந்நெல்வல்சி உண்ணக்கிடையாதபடி மிடிபடுகின்றார் (12); தத்தம் நாட்டினை ஒருங்கு ஆளுதல் அவர்க்கு யாவணது (14) என வினைமுடிவு செய்க.

இதனாற் சொல்லியது அவன் வென்றிச்சிறப்புக் கூறியவாறாயிற்று.

---

* **பொருந.** 193. † மென்பால் : **புறநா.** 42 : 18, உரை.

(கு - ரை.) 1 - 2. பெரிய புலியைக் கொன்று பெரிய களிற்றைக் கொன்று வீழ்த்துகின்ற, அரிய வரிகளையுடைய சிங்கத்தைப் போல்வாய். பொறிவயமான் : " வரிகிளர் வயமான் " (அகநா. கடவுள். 14.)

3. பொலந்தார் யானை : முருகு. 79, ந.

2 - 3. பலவாகிய வேற்படையையும், பொன்னாற் செய்த மாலையை அணிந்த யானைப்படையையும், இயலுகின்ற தேர்ப்படையையும் உடைய சேரனே. 4 - 5. முடியுடைய அரசரும் குறுநில மன்னரும் மற்றை யோரும் கீழ்ப்பணிந்து நின்வழியிலே வாராராயின்.

5 - 7. நெல் மிக்கு வளர அறுத்தலுற்ற கரும்பினது இனிய பாகின் இடையறாத வருவாயை, அவ்விடத்தே வருபவர்க்கு வரையாமல் வீசும் செல்வம் மிக்க குடியிருப்பையுடைய. நெல்லும் கரும்பும் நிலவளத்தைப் புலப்படுத்துவன. கரும்பாலையிற் சாற்றை வழங்கல் : " விசய மடூஉம் புகைசூ ழாலைதொறும், கரும்பின் றீஞ்சாறு விரும்பினிர் மிசைமின் " (பெரும்பாண். 261 - 2.)

8. காட்டைத் தம் இருப்பிடமாகக் கொண்டு, மருதநிலங்கள்தோறும்.

மென்பால் பின்வரும் நாட்டிற்குச் (14) சினை.

9. அரிய பறையையுடைய தொழில் செய்வோர், புல்லிய போரிலே பகைவரைத் தோல்வியடையச் செய்து அவர்பாற் பெற்ற பொருள்களை.

10. கள்ளை விற்றலையுடைய கடைத் தெருவில் சிறந்த விலையின் பொருட்டுக் கொடுக்கும்.

விலை கொடுக்கும் (10) நாடு (14) என இயையும்.

11. கவடி வித்துதற்கு உழுத குடைவேலையுடைய கரம்பை நிலத்தி லிருத்தலே யன்றி. வெள்வரகும் கொள்ளும் வித்தல் : புறநா. 392 : 10; பு. வெ. 120.

12 - 4. செந்நெல்லாலாகிய உணவை அறியாராய்த் தங்கள் தங்க ளுடைய, பாடல் அமைந்த ஊர்களையுடைய நாடுகளை ஒருங்கு ஆளுதல் அவர்க்கு எங்கேயுள்ளது ?

குடியிருப்பையுடைய (7) மென்பால்தோறும் (8) விலைகொடுக்கும் (10) வைப்பின் (13) நாடு (14) என இயைக்க.

நின் வழிப்படாஅராயின் (5) நாடுடன் ஆளுதல் யாவணது (14) என்க.

(பி - ம்.) 8. தழீஇய மென்பால். 11. கல்லுடைக் கரம்பை.
9. புலவிகல் படுத்து. 12. அறியாருடன. (ரு)

---

(எசு) களிறுடைப் பெருஞ்சமந் ததைய வெஃகுயர்த்
தொளிறுவாண் மன்னர் துதைநிலை கொன்று
முரசுகடிப் படைய வருந்துறை போகிப்
பெருங்கட னீந்திய மரம்வலி யுறுக்கும்
பண்ணிய விலைஞர் போலப் புண்ணொரீஇப்
பெருங்கைத் தொழுதியின் வன்றுயர் கழிப்பி

இரந்தோர் வாழ நல்கி யிரப்போர்க்
கீத றண்டா **மாசித றிருக்கை**
கண்டனென் செல்கு வந்தனென் கால்கொண்டு
கருவி வானந் தண்டளி சொரிந்தெனப்
பல்விதை யுழவிற் சில்லே ராளர்
பனித்துறைப் பகன்றைப் பாங்குடைத் தெரியல்
கழுபுறு கலிங்கங் கடுப்பச் சூடி
இலங்குகதிர்த் திருமணி பெறூஉம்
அகன்கண் வைப்பி னாடுகிழ வோயே.

**இதுவும் - அது. பெயர் - மாசிதறிருக்கை (8.)**

(ப - ரை.) 4. கடல் நீந்திய மரம் - மரக்கலம்.

8. மா சிதறிருக்கையென்றது பகைவரிடத்துக் கொள்ளப்பட்ட மாக்களை வரையாது அளவிறக்கக் கொடுக்கும் பாசறையிருக்கை யென்றவாறு.

இச்சிறப்பானே இதற்கு, '**மாசித றிருக்கை**' என்று பெயராயிற்று.

தண்டளி சொரிந்தென (10) ஏராளர் (11) கதிர்த்திருமணி பெறூஉம் (14) நாடு (15) எனக் கூட்டி, மழை பெய்தலானே ஏராளர் உழுது விளைத்துக் கோடலேயன்றி உழுத இடங்கடோறும் ஒளியையுடைய திருமணிகளை எடுத்துக் கொள்ளும் நாடென வுரைக்க.

11. பல் விதை உழவின் சில்லேராளரென்றது பல விதையுழவாற் பெரியராயிருப்பினும் தம் குலத்தானும் ஒழுக்கத்தானும் சிறிய ஏராளரென்றவாறு.

சின்மையை, *சின்னூலென்றதுபோல ஈண்டுச் சிறுமையாகக் கொள்க.

பகன்றைத் தெரியல் (12) கழுவுறு கலிங்கம் கடுப்பச் சூடித் (13) திருமணி பெறூஉம் (14) எனக் கூட்டி, பகன்றைமாலையைக் கழுவுறு கலிங்கம் ஒப்பச் சூடிக்கொண்டு நின்று திருமணிகளை எடுக்குமென வுரைக்க.

நாடுகிழவோய் (15), மன்னர் (2) பெருஞ்சமம் ததைய எஃகுயர்த்து (1) அம்மன்னர் பலர் கூடிச் செறிந்த நிலைமையைக் கொன்று (2) அருந்துறை போகிக் (3) கடலை நீந்தின மரக்கலத்தினை அழிவுசேராது வலியுறுக்கும் (4) பண்டவாணிகரைப் போலக் (5) கைத்தொழுதியின் (6) புண்ணை ஒருவுவித்து (5) வலியதுயரைக் கழித்துப் போரிடத்து வினையிலிருத்தலே †விநோதமாகக் கொண்டு (6) இரந்தோர் வாழ நல்கிப் பின்னும் இரப்போர்க்கு (7) ஈதலின் மாறாத மாசிதறிருக்கையைக் (8) கண்டு போவேன் வந்தேன் (9) எனக் கூட்டி வினைமுடிவு செய்க.

இதனாற் சொல்லியது அவன் வென்றிச்சிறப்பும் கொடைச்சிறப்பும் கூறியவாறாயிற்று.

---

*சின்னூல் - நேமிநாதம்; "சின்னூ லுரைத்த குணவீர பண்டிதன்" (**தொண்டைமண்டல சதகம்.**) †விநோதம் - பொழுது போக்கு.

(கு - ரை.) 1. ஆண்யானைகளையுடைய பெரிய போர் சிதைதலால் வேலையுயர்த்து. வென்றபின் வேலை உயர்த்தல் : புறநா. 58 : 29; பு. வெ. 199.

2. விளங்குகின்ற வாளையுடைய அரசர் தம்மில் ஒன்றுகூடின நிலையை அழித்து. 3. வெற்றிமுரசு குறுந்தடியால் அடிக்கப்படுதலை அடையும்படி அரிய போர்த்துறையை முடித்து.

4 - 5. பெரிய கடலில் நீந்திய மரக்கலத்தைப் பழுதுபார்த்து அதற்கு வன்மையைச் சேர்க்கும், பண்டங்களை விலைக்கு விற்கும் வாணிகரைப் போலப் புண்ணை ஒருவுவித்து. ஒரீஇ : பிறவினைப் பொருளில் வந்தது.

6. பெரிய துதிக்கையையுடைய யானைத்தொகுதியின் வலிய துயரைப் போக்கி.

4 - 6. யானைக்கு மரக்கலமும் அதன் புண்ணைப் போக்கும் அரசனுக்கு வாணிகரும் உவமை.

7 - 9. முன்பு வந்து இரந்தோர் மகிழும்படி கொடுத்து, பின் வந்து இரப்போருக்கு ஈதலினின்றும் மாறுத, குதிரைகளை வீசும் இருக்கையைக் கண்டு செல்வேனாகி வந்தேன்.

மா சிதறுதல் : "நாளீண்டிய நல்லகவர்க்குத், தேரோடு மாசிதறி" (மதுரைக். 223 - 4.)

9 - 10. பெய்யத்தொடங்கி மின் முதலிய தொகுதியையுடைய மேகம் குளிர்ந்த துளியைச் சொரிந்ததாக, அதனால்.

11. பலவாக விதைத்தலையுடைய உழவினையும் சிறிய ஏரையும் உடையோர். சின்மை சிறுமை என்னும் பொருளில் வந்தது.

12. குளிர்ச்சியையுடைய நீர்த்துறையினிடத்தேயுள்ள பகன்றைப் பூவினது நன்மையையுடைய மாலையை.

13. வெளுத்தலுற்ற வெள்ளிய ஆடையைப் போலச் சூடி. பகன்றைக்குக் கலிங்கம் : "போதுவிரி பகன்றைப் புதுமல ரன்ன, அகன்றுமடி கலிங்க முடீஇ" (புறநா. 393 : 17 - 8.) பகன்றை மலரைச் சூடுதல் : மலைபடு. 459 ; ஐங். 87 : 1.

14 - 5. விளங்குகின்ற கிரணத்தையுடைய அழகிய மணியைப் பெறுதற்கு இடமான, அகன்ற இடத்தையுடைய ஊர்களையுடைய நாட்டுக்கு உரிமையை யுடையோய்.

(பி - ம்.) 2. ததைநிலை. 5. பண்ணிய வினைவர். (சு)

---

(எஎ) எனைப்பெரும் படையனோ சினப்போர்ப் பொறையன்
என்றனி ராயி னாறுசெல் வம்பலிர்
மன்பதை பெயர வரசுகளத் தொழியக்
கொன்றுதோ ளோச்சிய வென்றாடு துணங்கை
மீபிணத் துருண்ட தேயா வாழியிற்
பண்ணமை தேரு மாவு மாக்களும்
எண்ணற் கருமையி னெண்ணின்றோ விலனே

கந்துகோ ளீயாது காழ்பல முருக்கி
உகக்கும் பருந்தி னிலத்துநிழல் சாடிச்
சேண்பரன் முரம்பி னீர்ம்படைக் கொங்கர்
ஆபரந் தன்ன செலவிற்பல
யானை காண்பலவன் றானை யானே.

**துறை - உழிஞை யரவம். வண்ணமும் தூக்கும் அது.**
**பெயர் - வென்றாடு துணங்கை (4.)**

(ப - ரை.) 3. மன்பதை பெயரவென்றது படை கெட்டோடவென்றவாறு.

3 - 4. அரசு களத்தொழியக் கொன்றென்றது அரசரைக் களத்திலே உடலொழிந்து கிடக்கக் கொன்றென்றவாறு.

கொன்று தோளோச்சிய (4) பிணம் (5) எனக் கூட்டி, முன்பு தம்முடன் பகைத்தவரைக் கொன்று தோளோச்சியாடி இப்பொழுது இவன் களத்திற்பட்டுக் கிடக்கின்ற வீரர்பிணமென அவ்வீரர் செய்தியை அவர் பிணத்தின்மேலேற்றிச் சொல்லியவாறாக உரைக்க.

வென்றாடு துணங்கைப் (4) பிணம் (5) என்றது ஊர்களிலேயாடும் துணங்கையன்றிக் *களங்களிலே வென்றாடின துணங்கையையுடைய பிணமென்றவாறு.

இச்சிறப்பானே இதற்கு, 'வென்றாடு துணங்கை' என்று பெயராயிற்று.

5. மீபிணத்தைப் பிணமீயெனக் கொள்க. 7. எண்ணிற்றோவென்னும் ஒற்று மெலிந்தது. 8. கந்துகோளீயாதென்றது வினையெச்ச வினைத்திரிசொல். 9. சாடியென்னும் வினையெச்சத்தினைச் செலவு (11) என்னும் தொழிற்பெயரொடு முடிக்க.

10. ஈர்ம்படை........................................

வம்பலிர் (2), பொறையன் எனைப்பெரும்படையன் (1) என்றனிராயின் (2), அவன் தானையிடத்துத் (12) தேரும் மாவும் மாக்களும் (6) எண்ணற்கருமையின் எண்ணிற்றிலன் ; ஆயின் (7), அவன் தானையின் யானை தான் எண்ணினையோவெனின், அதுவும் எண்ணினேனல்லேன் ; [கட்புலனுக்கு வரையறைப்பட்டதுபோல] ஆபரந்தாலொத்த செலவிற் பல (11) யானையை அவன்தானையானே காண்பல் (12) எனக் கூட்டி வினைமுடிவு செய்க.

இதனாற் சொல்லியது அவன் படைப்பெருமைச் சிறப்புக் கூறியவாறாயிற்று.

இப்பாட்டிற் பொதுப்படப் படையெழுச்சி கூறியதனை உழிஞையரவமென்றது ஆண்டு அப்படையெழுங்காலத்து †நொச்சிமீதிற் போர்குறித்தெழுந்ததை ஒரு காரணத்தால் அறிந்துபோலும்.

---

* "நிலம்பெறு திணிதோ ளுயர வோச்சிப், பிணம்பிறங் கழுவத்துத் துணங்கை யாடி", "புலவுக்களத் தோனே, துணங்கை யாடிய வலம்படு கோமான்" (பதிற். 45 : 11 - 2, 57 : 3 - 4.) †நொச்சி - மதில்.

(கு - ரை.) 1 - 2. வழியிலே செல்கின்ற புதியோர்களே, சினத்தாற் செய்யும் போரையுடைய சேரன் எவ்வளவு பெரிய படையையுடையவனோ என்று கேட்பீராயின்.

3 - 4. தம் பகைவரது படை கெட்டு ஓடவும், அரசர்கள் போர்க்களத்தில் இறப்பவும் கொன்று கையைவீசி ஆடிய வென்றாடுகின்ற துணங்கைக் கூத்தையாடிய. துணங்கையாடியவர் இப்பொழுது பிணமான வீரர்.

5 - 7. பிணத்தின்மேலே உருண்ட, வாய் தேயாத சக்கரத்தையுடைய, செலுத்தற்கேற்பப் பண்ணுதல்மைந்த தேரையும், குதிரைகளையும், காலாட்களையும் எண்ணுதற்கு முடியாமையின் எண்ணினேனல்லேன்.

8 - 12. சேரனது யானைப்படையின் சிறப்பு.

8 - 9. கட்டுத்தறியைக் கொள்ளாமல், குத்துக்கோல் பலவற்றை முறித்து மேலே பறக்கும் பருந்தினது நிலத்தே விழும் நிழலைக் கோபித்து.

10. உயர்ந்த பருக்கைக்கற்களையுடைய மேட்டுநிலத்தில், நீரை வெளிப்படுத்தற் பொருட்டுத் தோண்டும் குந்தாலி முதலிய ஆயுதத்தையுடைய கொங்கு நாட்டிலுள்ளாரது (பதிற். 22 : 12 - 5) ; "பரன்மட் சுவல முரணில முடைத்த, வல்வாய்க் கணிச்சிக் கூழார் கோவலர்", "பயநிரை சேர்ந்த பாழ்நாட் டாங்கண், நெடுவிளிக் கோவலர் கூவற் றோண்டிய, கொடுவாய்ப் பத்தல் வார்ந்துகு சிறுகுழி" (அகநா. 21 : 21 - 2, 155 ; 7 - 9.)

11 - 2. பசுக்கள் பரந்தால் ஒத்த செல்லுதலையுடைய பல யானைகளை அவன் சேனையினிடத்தே காண்பேன் ; பதிற். 78 : 14 ; புறநா. 5 : 2.

சாடி (9) என்னும் வினையெச்சம் செலவு (11) என்னும் தொழிற்பெயரோடு இயையும்.

சேரநாடு யானையில் மிக்கதென்பது, "வேழமுடைத்து மலைநாடு" தனிப்.) என்பதனாலும் அறியப்படும். மு. 'பகட்டினானும் மாவினானும் துகட்டபு சிறப்பிற் சான்றோர் பக்கம்' (தொல். புறத். 21, ந.)

(பி - ம்.) 5. தெய்வயாழின். (எ)

---

(எஅ) **வ**லம்படு முரசி னிலங்குவன விழூஉம்
அவ்வெள் ளருவி யுவ்வரை யதுவே
சில்வளை விறலி செல்குவை யாயின்
வள்ளிதழ்த் தாமரை நெய்தலொ டரிந்து
மெல்லியன் மகளி ரொல்குவன ரியலிக்
கிளிகடி மேவலர் புறவுதொறு நுவலப்
பல்பய னிலைஇய கடறுடை வைப்பின்
வெல்போ ராடவர் மறம்புரிந்து காக்கும்
வில்பயி லிறும்பிற் றகடூர் நூறி
பேஎ மன்ற **பிறழநோக் கியவர்**
ஓடுறு கடுமுரண் டுமியச் சென்று

வெம்முனை தபுத்த காலைத் தந்நாட்
டியாடுபரந் தன்ன மாவின்
ஆபரந் தன்ன யானையோன் குன்றே.

**துறை - விறலி யாற்றுப்படை. வண்ணமும் தூக்கும் அது. பெயர் - பிறழநோக் கியவர் (10.)**

(ப - ரை.) 2. அவ்வெள்ளருவி - அழகிய வெள்ளருவி. உவ்வரையென்றது உவ்வெல்லையென்றவாறு. அதுவென்பது அம்மலை யென்னுஞ்சுட்டு. வெள்ளருவியையுடைய அதுவெனக்கூட்டுக.

மகளிர் இயலி (5) நெய்தலொடு தாமரையரிந்து (4) கிளிகடி மேவலர் புறவுதொறும் நுவலப் (6) பல்பயன் நிலைஇய கடறு (7) எனக்கூட்டி, கிளிகடிமகளிர் நில அணுமையானே மருதநிலத்திலே சென்று நெய்தலொடு தாமரையரிந்து பின் கிளிகடிதொழிலை மேவுதலையுடையராய்ப் புறவின் புனங்கள்தோறும் கிளிகடி பாடலை நுவலப் பல்பயங்களும் நிலைபெற்ற முல்லைநிலமென உரைக்க.

வைப்பிற் (7) றகடூர் (9) எனக்கூட்டுக.

ஆடவர்காக்கும் (8) இரும்பு (9) எனக்கூட்டுக.

9. வில்பயில்இறும்பு - படைநிலை.

10. பிறழநோக்கியவரென்றது தம் சினமிகுதியானே மாற்றார் படைத் தோற்றத்ினை நெறியால் நோக்காது எடுத்தும் படுத்தும் *கோட்டியும் பல படப் பிறழநோக்கும் பகைவராகிய பல்லியமுடையரென்றவாறு.

இச்சிறப்பானே இதற்கு, '**பிறழநோக்கியவர்**' என்று பெயராயிற்று.

மாவினொடு (13) வென ஒடு விரித்து, முனைதபுத்த காலை மாவினொடு (12) ஆபரந்தன்ன யானையோன் (14) எனவுரைக்க.

சில்வளைவிறலி, செல்குவையாயின் (3), யானையோன்குன்று (14) உவ்வெல்லையில் வெள்ளருவியுடைய அது என மாறிக் கூட்டி வினை முடிவுசெய்க.

இதனாற்சொல்லியது அவன் வென்றிச்சிறப்புக் கூறியவாறாயிற்று.

(கு - ரை.) 1 - 3. சிலவாகிய வளையை அணிந்த விறலி, நீ சேரன் பாற் செல்வாயாயின், வெற்றியுண்டாகின்ற முரசொலியைப்போல ஓசை விளங்குவனவாகி மலையினின்றும் கீழே விழும் அழகிய வெள்ளிய அருவி களையுடைய உவ்வெல்லையிடத்தேயுள்ளது.

சில்வளை விறலி : **பதிற்**. 40 : 21, 57 : 6.

4 - 5. மென்மையான இயல்பையுடைய மகளிர் அசைந்துசென்று நடந்து மருதநிலத்தேயுள்ள வளவிய இதழ்களையுடைய தாமரைப்பூவை நெய்தற்பூவோடு அறுத்து.

மகளிர் இயலி அரிந்து என மாற்றிப் பொருள்கொள்க.

6. காட்டிற் புனத்தினிடத்தே கிளியைக்கடிதலை விரும்புதலையுடைய ராகி அதற்குரிய பாட்டைப்பாட. 4 - 6. இவ்வடிகளால் மருதமும் முல்லை யும் கலந்திருத்தல் கூறப்பட்டது.

---

* கோட்டி - வளைத்து ; தடங்கண் கோட்டித், தோண்முதற் பசலை தீரத் தோன்றலைப் பருகு வார்போல்" (**சீவக**. 470.)

7. பல பயன்களும் நிலைபெற்ற முல்லைநிலத்தின் ஊர்களையுடைய.

8 - 9. வெல்லும் போரைச் செய்யும் வீரர் மறத்தை விரும்பிப் பாதுகாக்கும், விற்படைகள் நிலைபெற்ற காவற்காட்டையுடைய தகடூரை அழித்து. ஆடவர் காக்கும் இறும்பு : பு. வெ. 63.

10. தெளிவாக, தம்பகைவர் படைத்தோற்றத்தை நேரே நோக்காமல் எடுத்தும் படுத்தும் வளைத்தும் பலபட மாறுபட நோக்கும் அச்சத்தையுடைய பார்வையையும் வாத்தியங்களையும் உடைய பகைவரது.

11. தம்மோடு எதிர்த்தார் ஓடுதற்குக் காரணமான மிக்க மாறுபாடு அழியும்படி படையெடுத்துச் சென்று.

12. கொடிய போரிலே கெடுத்த காலத்தில் தம்முடைய நாட்டில்.

13 - 4. ஆடுகள் பரந்தாலொத்த குதிரைகளோடு, பசுக்கள் பரந்தாலொத்த யானைகளையுடையோனது குன்று ; மாவினொடு என உருபுவிரிக்க.

குன்று (14) உவ்வரையது (2) எனமுடிக்க.

(பி - ம்.) 4. இதட்டாமரை. 9. உறுப்பிற்றகடூர். 10. பேயமன்ற. (அ)

---

(௭௬) உயிர்போற் றலையே செருவத் தானே
கொடைபோற் றலையே யிரவலர் நடுவட்
பெரியோர்ப் பேணிச் சிறியோரை யளித்தி
நின்வயிற் பிரிந்த நல்லிசை கனவினும்
பிறர்நசை யறியா வயங்குசெந் நாவிற்
படியோர்த் தேய்த்த வாண்மைத் தொடியோர்
தோளிடைக் குழைந்த கோதை மார்ப
அனைய வளப்பருங் குரையை யதனால்
நின்னொடு வாரார் தந்நிலத் தொழிந்து
கொல்களிற் றியானை யெருத்தம் புல்லென
வில்குலை யறுத்துக் கோலின் வாரா
வெல்போர் வேந்தர் முரசுகண் போழ்ந்தவர்
அரசுவா வழைப்பக் கோடறுத் தியற்றிய
அணங்குடை மரபிற் கட்டின்மே லிருந்து
தும்பை சான்ற மெய்தயங் குயக்கத்து
நிறம்படு குருதி புறம்படி னல்லது
மடையெதிர் கொள்ளா வஞ்சுவரு மரபிற்
கடவு ளயிரையி னிலைஇக்
கேடில வாக பெருமநின் புகழே.

துறை - செந்துறைப்பாடாண்பாட்டு, வண்ணமும் தூக்கும் அது.
பெயர் - நிறம்படு குருதி (16.)

(ப - ரை.) 4. பிரிந்த நின்வயின் நல்லிசையெனக் கூட்டுக; பிரிதல் - தன்னைவிட்டுத் திக்கு *விதிக்குக்களிலே போதல்.

இசை (4) அறியா (5) என முற்றாக அறுத்துரைக்க.

9. நின்னொடுவாரார் தந்நிலத்து ஒழிந்தென்றது நின்னை வழிபட்டு நின்னொடு ஒழுகாதிருத்தலேயன்றித் தந்நிலத்திலே வேறுபட்டு நின்றென்றவாறு.

யானையெருத்தம் புல்லென (10) வில்குலையறுத்துக் கோலின்வாரா (11) வேந்தர் (12) என்றது முன்பு நின்வழி ஒழுகாது ஒழிந்திருந்தவழிப் பின்பு தாம் களத்து நின்போர்வலிகண்டு இனி நின்வழி ஒழுகுதுமெனச் சொல்லித் தாம் ஏறிய யானையெருத்தம்புல்லென வில்லின் நாணியை அறுத்து நின்செங்கோல்வழி ஒழுகாத வேந்தரென்றவாறு.

13. †அழைத்தல் - வருத்தத்தாற் கதறுதல்.

தும்பை சான்ற மெய் தயங்கு உயக்கத்து (15) நிறம்படு குருதி (16) என்றது வீரருடைய, தும்பைசூடியதற்கேற்ப நின்று பொருதலாற்றலையுடைய உடலானது அசையும்படி வந்த ஓய்வினையுடைய நிறங்களைத் திறந்துவிட்ட குருதியென்றவாறு.

அல்லாத இடங்களிற் குருதிகொள்ளாமையின், ‡ நிறங்களைத் திறக்க ஆண்டு உண்டான குருதியென்பதாயிற்று.

இச்சிறப்பானே, இதற்கு, 'நிறம்படுகுருதி' என்று பெயராயிற்று.

§ கோடறுத்து இயற்றிய (13) கட்டின்மேலிருந்து (14) நிறம்படுகுருதி புறம்படினல்லது (16) மடை எதிர்கொள்ளாக் (17) கடவுள் (18) எனக் கூட்டி, அவ்வாறு செய்ததொருகட்டில் கொடுவந்திட்டதன்மேலிருந்து அவ்வாறு கொடுப்பதொரு பலியுண்டாயினல்லது பலிகொள்ளாக்கடவுளென உரைக்க.

கட்டின்மேலிருந்தல்லது (14) குருதிபுறம்படினல்லது (16) என அல்லதென்பதனை இரண்டிடத்தும் கூட்டிக்கொள்க.

18. கடவுளென்றது அவனால் இவ்வாறு வழிபடும் கொற்றவையை; அயிரை - அக்கொற்றவை உறைவதொரு மலை.

கோதைமார்ப (7), செருவத்து உயிர்போற்றலை (1); இரவலர் நடுவண் கொடைபோற்றலை (2); பெரியோரைப் பேணிச் சிறியோரை அளித்தி (3); அனைய நின்குணங்கள் அளப்பரியை; நீ அவ்வாறுஒழுகுதலாற் (8) பிரிந்த நின்வயின் நல்லிசை இனிக் கனவிலும் (4) பிறர் நச்சுதலறியா; அவ்வாறு அறியாமையின் (5), பெரும, அவ்வாறாகிய நின்புகழ் (19) நிலைஇ நின்னிடத்துக் கேடிலவாக (18) என மாறிக்கூட்டி வினைமுடிவுசெய்க.

'அனையவளப்பருங்குரையை' (8) என்றது 'சிறியோரையளித்தி' (3) என்றதன்பின்னே நிற்கவேண்டுதலின் மாறாயிற்று.

இதனாற்சொல்லியது அவன் பலகுணங்களும் ஒருங்கு புகழ்ந்து வாழ்த்தியவாறாயிற்று.

---

* விதிக்கு - கோணத்திசை. † அழைப்பு - பொருள்புணரா ஓசை (சிற். 102, பேர்.)

‡ நிறம் - உயிர்நிலை; "அறந்திறந்த வாயி லடைத்ததா லண்ணல், நிறந்திறந்த நீளிலை வேல்" (பு. வெ. 80.) § "உலமரு நெஞ்சி னொட்டா மன்னவ ரூர்ந்த யானை, வலமருப் பீர்ந்து செய்த மணிகிளர் கட்டில்" (சீவக. 2566.)

(கு - ரை.) 1. போரில் உயிரைப் பொருளாக எண்ணமாட்டாய்.

2. இரப்பாராகிய பரிசிலர்நடுவே கொடையைப் பாதுகாக்கமாட்டாய் ; என்றது அளவிறந்து கொடுப்பாயென்றபடி.

3. நின்னைக் காட்டிலும் பெரியோர்களைப் பாதுகாத்துச் சிறியோர்களுக்கு அருள் செய்வாய்.

4 - 5. நின்பால் நின்றும் பிரிந்து பல திசைகளிற் சென்ற நின் நல்லிசைகள் கனவினிடத்தாயினும் பிறரை விரும்புதலையறியா ; அறியா : முற்று. கல்வி, வீரம், கொடை முதலிய காரணங்களால் இசை பலவகைப் படுதலிற் பன்மையாற் கூறினர் ; பதிற். 12 : 8, உரை.

6. படியோர்த் தேய்த்த ஆண்மை : மலைபடு. 423.

6 - 7. மகளிர் தோளிடைக்குழைந்த தார் : புறநா. 73 : 13 - 4, அடிக்.

5 - 7. விளங்கிய பொய்கூறாத நாவினையும், பகைவரை அழித்த ஆண்மையையும் உடைய வளையை யணிந்த மகளிருடைய தோளினிடத்தே குழைந்த மாலையை யணிந்த மார்பைஉடையோய். படியோர்-பிரதியோரென்னும் வடமொழித்திரிவு (அகநா. 22 : 5, உரை.) நாவினையும், ஆண்மையையும் உடைய மார்ப என இயையும்.

8. அப்படிப்பட்ட நின்குணங்கள் அளத்தற்கரியை ; அதனால், குரை : அசைச்சொல்.

9 - 10. நின்னொடு இணங்கி வருதலிலராகித் தம்முடைய நாடுகளில் தங்கியிருந்து, பின்பு போர்க்களத்தே நின்வன்மைகண்டும், கொல்லுகின்ற களிறுகிய பட்டத்து யானையின் பிடரிக்கழுத்துப் பொலிவழிய ; "யானையெருத்தம் பொலியக் குடைநிழற்கீழ்ச், சேனைத் தலைவராய்ச் சென்றோரும்" (நாலடி. 3) என்பதற்கு மாறான நிலையைக் கூறியபடி.

11 - 2. வில்லின் நாணையறுத்து நினது செங்கோலின்கீழ் அடங்கி வாராத, முன்புவெல்லும் போரைச்செய்த அரசருடைய முரசின் கண்ணைக் கிழித்து. குலை - நாண் ; "குலையிழி பறியாச் சாபத்து வயவர்" (பதிற். 24 : 12.)

12 - 4. அவருடைய பட்டத்து யானை வருத்தத்தாற் கதறும்படி அதனுடைய கொம்பை வெட்டி அதனால் இயற்றப்பட்ட தெய்வத்தன்மையுடைய இயல்பைப்பெற்ற கட்டிலின்மேலிருந்தல்லது ; புறம்படினல்லதென்பதிலுள்ள அல்லதென்பதை இருந்தென்பதனோடும் கூட்டுக.

15. தாம் தும்பைப் பூவைச் சூடியதற்கேற்ப நின்று பொருகின்ற ஆற்றலையுடைய உடலானது அசையும்படி வந்த ஒய்வினையுடைய.

16. உயிர்நிலையினின்றும் உண்டான இரத்தம் பலியாக அளிக்கப்படும் பொருள்மேற் பட்டாலல்லாமல். "அருநிறந் திறந்த புண்ணுமிழ் குருதி" (பதிற். 11 : 8.)

17 - 8. நிவேதனமாக அளிக்கப்படும் பொருளை ஏற்றுக்கொள்ளாத அச்சம் வருகின்ற முறைமையையுடைய துர்க்கை வாழும் அயிரை மலையைப்போல நிலைபெற்று. அயிரைமலையிலுள்ள துர்க்கை சேரர்களால் வழிபடப் பெற்றமை ; பதிற். 3-ஆம் பத்துப்பதிகம், 8, உரை ; "கண்ணுதலோன் காப்பக் கடன்மேனி மால்காப்ப, எண்ணிருதோளேந்திழையாடான் காப்ப" (தொல். புறத். 35, ந. மேற்.) என்னும் புறநிலைவாழ்த்துச் செய்யுளிலும் துர்க்கை வழிபடப்பெற்றமை காண்க.

19. பெருமானே, நின்னுடைய புகழ்கள் அழிவில்லாமல் விளங்குக.

18 - 9. நின்புகழ் அயிரையின் விளங்குக என்றாராயினும் சேரனை வாழ்த்துதலே கருத்தாகக்கொள்க (பதிற். 70 : 26 - 7.)

மலைபோல் நிலைபெறுக வென்றல்: "பூமலி நாவற் பொழிலகத்துப் போய்நின்ற, மாமலைபோன் மன்னுக நீ" (பு. வெ. 226.)

(பி - ம்.) 4. பிறந்த. 8. அனையையளப். 9. வாரார்நின்னிலத் தெளிந்து. (௯)

---

(அ0) **வா**ன்மருப்பிற் களிற்றியானை
மாமலையிற் கணங்கொண்டவர்
எடுத்தெறிந்த விறன்முரசம்
கார்மழையிற் கடிதுமுழங்கச்
சாந்துபுலர்ந்த வியன்மார்பிற்
றொடிசுடர்வரும் வலிமுன்கைப்
**புண்ணுடை யெறுழ்த்தோட்** புடையலங் கழற்காற்
பிறக்கடி யொதுங்காப் பூட்கை யொள்வாள்
ஒடிவி றெவ்வ ரெதிர்நின் றுரைஇ
இடுக திறையே புரவெதிர்ந் தோற்கென
அம்புடை வலத்த ருயர்ந்தோர் பரவ
அனையை யாகன் மாறே பகைவர்
கால்கிளர்ந் தன்ன கதழ்பரிப் புரவிக்
கடும்பரி நெடுந்தேர் மீமிசை நுடங்குகொடி
புலவரைத் தோன்றல் யாவது சினப்போர்
நிலவரை நிறீஇய நல்லிசைத்
தொலையாக் கற்பநின் றெம்முனை யானே.

**துறை - வஞ்சித்துறைப் பாடாண்பாட்டு. வண்ணம் - ஒழுகுவண்ணம். தூக்கு - செந்தூக்கும் வஞ்சித்தூக்கும். பெயர் - புண்ணுடை யெறுழ்த்தோள் (7.)**

(ப - ரை.) 2. கணங்கொள்ளவெனத் திரிக்க. அவரென்றது பகைவரை. 7. புண்ணுடை எறுழ்த்தோளென்றது எப்பொழுதும் பொருது புண்ணறாத வலிய தோளென்றவாறு.

இச்சிறப்பானே இதற்கு, '**புண்ணுடை யெறுழ்த்தோள்**' என்று பெயராயிற்று.

10. புரவெதிர்ந்தோற்கென்றது கொடையேற்றிருக்கின்ற அவனுக் கென்றவாறு.

கொடி (14) தோன்றல் (15) என்றதனை எழுவாயும் பயனிலையுமாகக் கொள்க.

நின் தெம்முனைப் (17) புலவரையான் (15) என மாறிக் கூட்டுக.

தொலையாக்கற்ப (17), நின்வீரராகிய உயர்ந்தோர் (11) நின்தெவ்வ ராகிய அவருடைய (2) களிற்றியானை (1) மலையிற் கணங்கொள்ளா நிற்க (2), முரசம் (3) கடிதுமுழங்கா நிற்க (4), அவையிற்றை ஒன்றும் மதி யாதே நின்னொடு ஓடிவில் தெவ்வராகிய அவர் எதிர்நின்று பெயரா (9) இப்புரவெதிர்ந்தோனுக்குத் திறையையிடுகவெனச் சொல்லி நின்னைப் (10) பரவும்படி நீ (11) அதற்கேற்ற தன்மையையுடையை யானபடியாலே (12) நின்தெம்முனைப் (17) புலவெல்லையில் நின் (15) பகைவர் (12) தேர்மிசைக் கொடி (14) போரைக்குறித்துத் தோன்றல் யாவது (15) எனக்கூட்டி வினை முடிவுசெய்க.

இதனாற் சொல்லியது அவன் கொடைச்சிறப்பொடுபடுத்து வென்றிச் சிறப்புக் கூறியவாறாயிற்று.

தெம்முனைப் (17) புலவரைப் (15) பகைவர் (12) கொடி (14) தோன் றல் யாவது (15) என *எதிரூன்றுவாரின்மைதோன்றக் கூறிய அதனால், வஞ்சித்துறைப் பாடாணாயிற்று.

முன்னர் ஆறடியும் வஞ்சியடியாய் வந்தமையானே, வஞ்சித்தூக்கு மாயிற்று.

(கு - ரை.) 1 - 2. வெள்ளிய கொம்பையுடைய ஆண்யானைகள் பெரிய மலைகளைப்போலத் தொகுதிகொள்ள; கொண்டு - கொள்ள; எச்சத்திரிபு.

2 - 4. பகைவர் குறுந்தடியை எடுத்து அடித்த, வெற்றியைத்தரும் முரசம் கார்காலத்து மேகத்தைப்போல மிக்கு ஒலிப்ப. செய்யுளாதலின் அவ ரென்னும் சுட்டுப்பெயர் முதலில் வந்தது. விறல்முரசம்: **பதிற்**. 17 : 5, உரை.

5 - 9. பகைவரது இயல்பு.

5 - 6. பூசிய சந்தனம் புலர்ந்த அகன்ற மார்பினையும், வீரவளை ஒளி விடும் வன்மையையுடைய முன்கையையும்.

7. புடையலங்கழற்கால்: **புறநா**. 99 : 5. 8. "அடியொதுங்கிப் பிற் பெயராப், படையோர்க்கு முருகயர" (**மதுரைக்**. 37 - 8.)

7 - 8. எப்பொழுதும் போர் செய்தலால் புண்களையுடைய வன்மை யைப்பெற்ற தோள்களையும், பனைமாலையையும், கழலையணிந்த கால்களை யும், பின்னே அடியிடாமைக்குக் காரணமான மேற்கோளையும், ஒள்ளிய வாளையும் உடைய.

9. பகைமையினின்றும் தவிர்தல் இல்லாத நின் பகைவரது எதிரே நின்று உலாவி. 10 - 11. பாதுகாத்தலை ஏற்றுக்கொள்பவனாகிய எம் அரச னுக்குத் திறையை இடுகவென்று, அம்புடைய வெற்றியையுடையராகி உயர்ந்தோராகிய நின் வீரர் நின்னைப் பரவாநிற்ப.

12. நீ அதற்கேற்ற தன்மையையுடையை யாதலால்.

13. "காலியக் கன்ன கதழ்பரி கடைஇ" (**மதுரைக்**. 440.)

12 - 3. பகைவரது, காற்று எழுந்தாற்போன்ற விரைந்த செலவை யுடைய குதிரைகளால் இழுக்கப்பட்ட, விரைந்த ஓட்டத்தையுடைய உயர்ந்த தேரின்மீது அசைகின்ற கொடிகள்.

17. தொலையாக் கற்ப: **பதிற்**. 43 : 31.

---

* எதிரூன்றுவார் - காஞ்சித்திணைக்கு உரியோர்.

15 - 7. சினத்தாற் செய்யும் போரையும், நிலவெல்லையில் நிறுத்திய நல்லிசையையும் அழிவில்லாத கல்வியையும் உடையாய், நின்பகைவரது நிலவெல்லையில் தோன்றுதல் எங்கேயுள்ளது ?

கற்ப, நின்தெம்முனைப் (17) புலவரையான் (15) நுடங்குகொடி (14) தோன்றல் யாவது (15) என மாறிக் கூட்டுக.

மு. திறைகொடுத்தோரது குறைபாடு கூறியது (தொல். புறத். 8, ந.) (௧௦)

---

இதன் பதிகத்துக் கொல்லிக்கூற்றம் (3) என்றது கொல்லிமலையைச் சூழ்ந்த மலைகளையுடைய நாட்டினை.

3. நீர்கூர்மீமிசை என்றது அந்நாட்டு நீர்மிக்க மலையின் உச்சியை.

9. நொச்சிதந்து என்றது தகடூர் மதிலைக் கைக்கொண்டென்றவாறு.

## (ப தி க ம்.)

பொய்யில் செல்வக் கடுங்கோ வுக்கு
வேளாவிக் கோமான் பதுமன் றேவியீன்றமகன்
கொல்லிக் கூற்றத்து நீர்கூர் மீமிசைப்
பல்வேற் றானை யதிக மானோ
டிருபெரு வேந்தரையு முடனிலை வென்று
முரசுங் குடையுங் கலனுங்கொண்
டுரைசால் சிறப்பி னடுகளம் வேட்டுத்
துகடீர் மகளி ரிரங்கத் துப்பறுத்துத்
தகடூ ரெறிந்து நொச்சிதந் தெய்திய
அருந்திற லொள்ளிசைப் **பெருஞ்சேர லிரும்பொறையை**

* மறுவில் வாய்மொழி **யரிசில்கிழார்** பாடினார் பத்துப் பாட்டு.

அவைதாம் : குறுந்தாண்ஞாயில், உருத்தெழு வெள்ளம், நிறந்திகழ் பாசிழை, நலம்பெறுதிருமணி, தீஞ்சேற்றியாணர், மாசிதறிருக்கை, வென்றாடுதுணங்கை, பிறழநோக்கியவர், நிறம்படுகுருதி, புண்ணுடையெறுழ்த்தோள். இவை பாட்டின் பதிகம்.

பாடிப்பெற்ற பரிசில் : தானும் †கோயிலாளும் புறம்போந்து நின்று கோயிலுள்ள வெல்லாம் கொண்மினென்று காணம் ஒன்பது நூறாயிரத்தோடு ‡ அரசுகட்டிற் கொடுப்ப அவர் யான் இரப்ப இதனை ஆள்கவென்று அமைச்சுப் பூண்டார்.

§ தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும்பொறை பதினேழியாண்டு வீற்றிருந்தான்.

---

* மறு இல் வாய்மொழி - குற்றமில்லாத உண்மையான மொழியையுடைய.

†கோயிலாள் - பெருஞ்சேரலிரும்பொறையின் பெருந்தேவி. ‡ அரசுகட்டில் - சிங்காதனம். § **புறநா**. 50, கருத்து.

(கு - ரை.) பொய்யில் செல்வம் - இரவலர்க்குப் பொய்த்தலறியாத செல்வத்தையுடைய.

3. கொல்லிமலையைச் சூழ்ந்த மலைகளையுடைய நாட்டினது நீர்மிக்க மலையின் உச்சியில்.

4. பல வேற்படைகளையுடைய அதிகமானென்னும் தலைவனோடு; "உரவுச்சினங் கனலு மொளிதிகழ் நெடுவேல், அரவக்கடற் றானை யதிகனும்" (சிறுபாண். 102 - 3.) 5. சோழன், பாண்டியன் என்னும் இரண்டு பெரிய அரசர்களையும் சேர வென்று.

6. முரசையும், குடையையும், கிரீடத்தையும் கைக்கொண்டு; "அரைசுபட வமருழக்கி, உரைசெல முரசுவௌவி" (புறநா. 26 : 6 - 7.)

7. புகழ் மிக்க சிறப்பினையுடைய அட்ட களத்தில் வேள்வியைச் செய்து; "புலவுக்களம் பொலிய வேட்டோய்" (புறநா. 372 : 12.)

8. குற்றம் நீங்கிய அதிகமானுடைய உரிமை மகளிர் இரங்கும்படி வன்மையைக் கெடுத்து. 9. தகடூரை அழித்து அதன் மதிலைக் கைக்கொண்ட; தகடூரை அழித்தது : பதிற். 78 : 9.

**எட்டாம் பத்து முற்றிற்று.**

## ஒன்பதாம் பத்து

(அக) உலகம் புரக்கு முருகெழு சிறப்பின்
வண்ணக் கருவிய வளங்கெழு கமஞ்சூல்
அகலிரு விசும்பி னதிர்சினஞ் சிறந்து
கடுஞ்சிலை கழறி விசும்படையூ நிவந்து
காலை யிசைக்கும் பொழுதொடு புலம்புகொளக்
களிறுபாய்ந் தியலக் கடுமா தாங்க
ஒளிறுகொடி நுடங்கத் தேர்திரிந்து கொட்ப
அரசுபுறத் திறுப்பினு மதிர்விலர் திரிந்து
வாயில் கொள்ளா மைந்தினர் வயவர்
மாயிருங் கங்குலும் விழுத்தொடி சுடர்வரத்
தோள்பிணி மீகையர் புகல்சிறந்து நாளும்
முடிதல் வேட்கையர் நெடிய மொழியூஉக்
கெடாஅ நல்லிசைத் தங்குடி நிறுமார்
இடாஅ வேணி வியலறைக் கொட்ப
நாடடிப் படுத்தலிற் கொள்ளை மாற்றி
அழல்வினை யமைந்த நிழல்விடு கட்டி
கட்டளை வலிப்பநின் றானை யுதவி

வேறுபுலத் திறுத்த வெல்போ ரண்ணல்
முழவி னமைந்த பெரும்பழ மிசைந்து
சாறயர்ந் தன்ன காரணி யாணர்த்
தூம்பகம் பழுனிய தீம்பிழி மாந்திக்
காந்தளங் கண்ணிச் செழுங்குடிச் செல்வர்
கலிமகிழ் மேவல ரிரவலர்க் கீயும்
சுரும்பார் சோலைப் பெரும்பெயற் கொல்லிப்
பெருவாய் மலரொடு பசும்பிடி மகிழ்ந்து
மின்னுமிழ்ந் தன்ன சுடரிழை யாயத்துத்
தன்னிறங் கரந்த வண்டுபடு கதுப்பின்
ஒடுங்கீ ரோதி யொண்ணுத லணிகொளக்
கொடுங்குழைக் கமர்த்த நோக்கி னயவரப்
பெருந்தகைக் கமர்ந்த மென்சொற் றிருமுகத்து
மாணிழை யரிவை காணிய வொருநாட்
பூண்க மாளநின் புரவி நெடுந்தேர்
முனைகை விட்டு முன்னிலைச் செல்லாது
தூவெதிர்ந்து பெறாஅத் தாவின் மள்ளரொடு
தொன்மருங் கறுத்த லஞ்சி யரண்கொண்டு
துஞ்சா வேந்தருந் துஞ்சுக
விருந்து மாக நின்பெருந் தோட்கே.

**துறை - முல்லை. வண்ணம் - ஒழுகுவண்ணம்.**
**தூக்கு - செந்தூக்கு. பெயர் - நிழல்விடு கட்டி (16.)**

(ப - ரை.) 2. கமஞ்சூல் - மேகங்கள்; நிறைந்த சூலுடைமையின் மேகங்கள் கமஞ்சூலெனப்பட்டன.

4. சிலையொடு கழறியென ஒடு விரிக்க; சிலை - முழங்குதல். கழறல் - இடித்தல். நிவந்து விசும்பு அடையூவென மாறிக்கூட்டுக; விசும்படைதல் - மலையிலே படிந்தவை எழுந்து விசும்பை அடைதல்.

5. காலை இசைக்கும் பொழுதொடு புலம்புகொளவென்றது மேகங்கள் கார்காலத்தை அறிவிக்கின்ற பருவத்தானே வருத்தம் கொள்ளாநிற்க வென்றவாறு.

புலம்புகொள (5) வயவர் (9) வியலறைக் கொட்ப (14) என முடிக்க.

9. வாயில் கொள்ளா மைந்தினரென்றது தமக்குக் காவலடைத்த இடங்களைச் சென்று கைக்கொள்ளா வலியினையுடையவரென்றவாறு.

ஈண்டு, வாயில் - இடம்.

10. மா இருங்கங்குலென்றது மிகவும் கரிய இராவென்றவாறு.

கங்குலினும் (10) கொட்ப (14) என முடிக்க.

11. தோள்பிணி மீ கையரென்றது குளிராலே தோளைப்பிணித்த அத்தோள்மீது உளவாகிய கைகளையுடையாரென்றவாறு.

12. முடிதல்வேட்கையரென்றது தாம் எடுத்துக்கொண்ட போர் முடிதலிலே வேட்கையையுடையாரென்றவாறு.

15. நாடு அடிப்படுத்தலிற் கொள்ளை மாற்றியென்றது நாட்டை அடிப்படுத்தினபடியாலே அடிப்படுத்தும் காலத்து உண்டாகிச் சென்ற கொள்ளையை மாற்றியென்றவாறு.

16. அழல்வினையமைதல் - ஓட்டறுதல்.

இவ்வடைச்சிறப்பானே இதற்கு, 'நிழல்விடு கட்டி' என்று பெயராயிற்று.

17. கட்டளைவலித்தல் - இன்னார் இன்னதனைப் பெறுகவென்று தரங்களை நிச்சயித்தல். தானைக்கு உதவியென விரிக்க.

சாறு அயர்ந்தன்ன (20) தீம்பிழி (21) என முடித்து விழாக்கொண்டாடினலொத்த இனிய மதுவெனவுரைக்க.

காரணி யாணர்த் (20) தூம்பு (21) என்றது கருமையைப் பொருந்தின அழகிய மூங்கிற்குழாயென்றவாறு.

25. பெருவாய்மலர் - *இருவாட்சி. †பசும்பிடி - பச்சிலை. மகிழ்ந்து - விரும்பிச்சூடியென்றவாறு.

26. மின் உமிழ்ந்தன்ன சுடர் இழையென்றது மேகம் மின்களை உமிழ்ந்தாற்போன்ற சுடர்களையுடைய இழையென்றவாறு.

முனை கைவிட்டு முன்னிலைச் செல்லாது (33) துஞ்சா (36) என முடித்து, நின்னோடு போர்செய்கையைக் கைவிட்டு நின்முன்னே வந்து வழிபட்டு நிற்றலைச் செய்யமாட்டாமையால் துஞ்சாதவெனவுரைக்க.

34. தூ எதிர்ந்து பெறாஅத் தா இல் மள்ளரொடென்றது முன்பு நின் வலியோடு எதிர்த்துப் பின் எதிர்க்கப்பெறாத, வலியில்லாத மள்ளரொடென்றவாறு.

மள்ளரொடு (34) துஞ்சா (36) என முடிக்க.

அண்ணல் (18), நின் அரிவை காணிய (31) நின்தேர் (32) ஒருநாட் (31) புரவிபூண்பதாகவேண்டும் (32); அதுதான் நின் அரிவைக்கே உடலாகவேண்டுவதில்லை; அதனானே துஞ்சாவேந்தரும் துஞ்சுவார்களாகவேண்டும்; அதுதான் நின் (36) பெருந்தோட்கு விருந்துமாகவேண்டும்; இவ்வாறு இரண்டொரு காரியமாக இதனைச் செய்க (37) என வினைமுடிவு செய்க.

இதனாற்சொல்லியது ‡காமவேட்கையிற்செல்லாத அவன் வென்றிவேட்கைச்சிறப்புக் கூறியவாறாயிற்று.

இஃது அவனரிவை §கற்புமுல்லையைப் பற்றி வந்தமையால், துறை முல்லையாயிற்று.

(கு - ரை.) 1 - 5. மழைக்காலத்தின் இயல்பு.

1 - 2. உலகத்தைப் பாதுகாக்கும் அச்சம் பொருந்திய சிறப்பினையும், கரிய நிறத்தையும், மின் முதலான தொகுதியையும் உடைய, வளம்

* குறிஞ்சிப். 94, ந. † குறிஞ்சிப். 70, ந. ‡ பதிற். 50, உரை. § பு. வெ. 283.

பொருந்திய நிறைந்த நீரையுடைய மேகங்கள். கமஞ்சூல் மேகத்திற் காயிற்று.

3 - 4. மற்ற நான்கு பூதங்கள் அகலுதற்குக் காரணமான பெரிய ஆகாயத்தில் அதிர்தற்குக் காரணமான சினம் மிக்கு மிக்க முழக்கத்தோடு இடித்து, மலையிலே படிந்து பின் எழுந்து ஆகாயத்தை அடைந்து, நிவந்து விசும்பு அடையூ என மாறிக் கூட்டுக.

5. கார்காலத்தைத் தெரிவிக்கும் பருவத்தால் வருத்தம் கொள்ளா நிற்ப. 6. ஆண்யானைகள் பரவிச் செல்ல விரைந்த கதியையுடைய குதிரைகளை மேலாட்கள் வேண்டிய அளவிலே தடுத்துச் செலுத்த.

7. விளங்குகின்ற கொடிகள் அசையும்படி தேர்கள் சுழன்று திரிய.

6 - 7. மு. பதிற். 49 : 4 - 5.

8. தம் பகைவர்க்கு உதவியான அரசர் பக்கத்தே வந்து தங்கினாலும் நெஞ்சில் நடுக்கம் இல்லாதவராகித் திரிந்து. இது வயங்க லெய்திய பெருமையின்பாற்படும் (தொல். புறத். 8.)

9 - 11. தமக்கு வரையறுத்த இடங்களைக் காவல் கொள்ளாத வன்மையுடையராகி வீரர்கள், மிகவும் கரிய இரவிலும் சிறந்த வீரவளை ஒளிவிடும்படி, குளிராலே தோளைப்பிணித்த அத்தோள்மீது உள்ள கைகளையுடையராகிப் போரில் விருப்பம் மிக்கு. மாயிரு : ஒரு பொருட் பன்மொழி. இதிற் கூறப்பட்டது கூதிர்ப் பாசறை.

11 - 2. நாள்தோறும், போர் விரைவில் முடிதலில் விருப்பமுடையராகித் தம் மேம்பாடுகளைக் கூறி. நெடிய மொழிதல், மாராயம்பெற்ற நெடுமொழியாதலின் இவ்வீரர் அரசனால் எட்டி, காவிதி முதலிய பட்டங்களும் நாடும் ஊரும் பெற்றோராவரென்றறிக. "நெடிய மொழிதலுங் கடிய வூர்தலும்" (நற். 210 : 5.)

13 - 4. கெடாத நல்ல புகழையுடைய தங்குடியின் பெருமையை நிலை நிறுத்தும்பொருட்டு, அளவிடப்படாத எல்லையையுடைய அகன்ற பாசறையிலே சுழன்று திரிய. இடா ஏணி : பதிற். 24 : 14, உரை ; "இடாஅ வேணிநின் பாசறை யானே" (பதிற். விடுபட்டபாடல், 4 : 10.) பாசறை, அறையென முதற்குறையாயிற்று (பதிற். 24 : 14, உரை.)

15. பகைவரது நாட்டை அடிப்படுத்தினமையால், முன்பு நிகழ்ந்த கொள்ளையை மாற்றி.

16 - 8. அழலிலே உருக்கினமையால் குற்றமற்ற ஒளிவிடுகின்ற பொற்கட்டிகளுள், இன்னவர் இன்னதனைப் பெறுவாரென்று அவரவர் தரங்களை நிச்சயிக்க, நினது சேனையிலுள்ள வீரர்க்கு உதவி, வேற்று நாட்டினிடத்தே சென்று தங்கிய வெல்லும் போரைச் செய்யும் தலைவனே.

19. முழவைப்போல வடிவம் அமைந்த பெரிய பலாப்பழத்தின் சுளைகளை உண்டு ; "கலையுணக் கிழிந்த முழவுமருள் பெரும்பழம்" (புறநா. 236 : 1) ; "கானப் பலவின் முழவுமருள் பெரும்பழம்" (மலைபடு. 511.)

20 - 21. விழாக் கொண்டாடினாற் போன்ற, கருமையை அணிந்த அழகிய மூங்கிற்குழாயினிடத்தே முதிர்ந்த இனிய கள்ளையுண்டு. சாறயர்ந் தன்ன தீம்பிழி என இயைக்க. "சாறுபடு திருவி னனை மகிழானே" (பதிற். 65 : 17.)

மூங்கிற் குழாயில் தேனைவைத்து முதிரச் செய்தல் : முருகு. 195, ஒப்பு.; புறநா. 129 : 2.

22. காந்தட் பூவாலாகிய கண்ணியை அணிந்த செல்வத்தையுடைய குடியிற் பிறந்த செல்வர். 23. ஆரவாரத்தையுடைய மகிழ்ச்சியை யுடைய வராகித் தம்பால் வந்து இரப்போர்க்குக் கொடுக்கும்.

24 - 5. வண்டுகள் ஒலிக்கின்ற சோலையையும் மிக்க மழையையும் உடைய கொல்லிமலையில் உண்டான இருவாட்சிமலரோடு பச்சிலையை விரும்பிச் சூடி.

26. மேகம் மின்னலை உமிழ்ந்தாற் போன்ற ஒளிவிடுகின்ற ஆபரணங்களை அணிந்த மகளிர்திரளையுடைய. கூந்தலுக்கு மேகமும், இழைகளுக்கு மின்னலும் உவமையாகக் கொள்க.

27 - 8. தன்நிறம் மறைதற்குக் காரணமான வண்டுகள் ஒலிக்கின்ற கூந்தலையும் சுருளையும் உடைய ஒளிபொருந்திய நெற்றி அழகுகொள்ளும்படி. 29 - 31. வளைந்த காதணியோடு போர்செய்த பார்வையையும், இன்பம் வரும்படி தன் பெருங்குணங்களுக்கு ஏற்பப் பொருந்திய மென்மையான சொல்லையும், அழகிய முகத்தையும் உடைய, மாட்சிமைப்பட்ட இழைகளை அணிந்த நின் தேவி காணும்படி, ஒருநாளில்.

32. நின்னுடைய குதிரைகள் நீண்ட தேரைப் பூண்பனவாகுக; மாள : முன்னிலையசைச்சொல் (கலி. 124 : 19 ; புறநா. 146 : 11.)

33. போரைக் கைவிட்டு நின்முன்னே செல்லாமல்.

34. முதலில் நின் வலியோடு மாறுபட்டுப் பின் எதிர்க்கப்பெறாத, வன்மையில்லாத வீரரோடு.

35. பழையதாகிய குலத்தை நீ அழித்தலை அஞ்சித் தம் அரண்களைப் பாதுகாப்பாக எண்ணிக்கொண்டு.

36 - 7. தூங்காத பகையரசரும் தூங்குக ; நின்னுடைய பெருந்தோள்களுக்கு விருந்தும் ஆகுக.

துஞ்சாவேந்தர் : "வலமுறை வருதலு முண்டென் றலமந்து, நெஞ்சு நடுங் கவலம் பாயத், துஞ்சாக் கண்ண வடபுலத் தரசே" (புறநா. 31 : 15 - 7.)

செல்லாது (33) மள்ளரொடு (34) துஞ்சா (36) என இயையும்.

(பி - ம்.) 7. நுடங்கல. 22. காந்தட்கண்ணி. 27. வண்டுபடுதுப்பின். 32. புனைவினை நெடுந்தேர். 34. தூவின்மள்ளரொடு. (க)

---

(அஉ) **ப**கைபெரு மையிற் றெய்வஞ் செப்ப
ஆரிறை யஞ்சா வெருவரு கட்டூர்ப்
பல்கொடி நுடங்கு முன்பிற் செறுநர்
செல்சமந் தொலைத்த **வினைநவில் யானை**
கடாஅம் வார்ந்து கடுஞ்சினம் பொத்தி
வண்டுபடு சென்னிய பிடிபுணர்ந் தியல
மறவர் மறல மாப்படை யுறுப்பத்
தேர்கொடி நுடங்கத் தோல்புடை யார்ப்பக்
காடுகை காய்த்திய நீடுநா ளிருக்கை

இன்ன வைகல் பன்னா ளாகப்
பாடிக் காண்கு வந்திசிற் பெரும
பாடுநர், கொளக்கொளக் குறையாச் செல்வத்துச் செற்றோர்
கொலக்கொலக் குறையாத் தானைச் சான்றோர்
வண்மையுஞ் செம்மையுஞ் சால்பு மறனும்
புகன்றுபுகழ்ந் தசையா நல்லிசை
நிலந்தரு திருவி னெடியோய் நின்னே.

**துறை - காட்சி வாழ்த்து. வண்ணம் - ஒழுகுவண்ணமும் சொற்சீர்வண்ணமும். தூக்கு - செந்தூக்கு. பெயர் - வினைநவில் யானை (4.)**

(ப - ரை.) 1. பகை பெருமையின் தெய்வம் செப்பவென்றது நின் மனத்து அவரோடு பகைத்தன்மை பெரிதாகையானே நின்பகைவர் நின்னை யஞ்சித் தாம் தாம் வழிபடும் தெய்வத்தைத் தத்தமக்குக் காவலென்று சொல்லவென்றவாறு.

செப்ப (1) அஞ்சா (2) என முடிக்க.

2. ஆர் இறை அஞ்சாக் கட்டூரென்றது வீரர் அரிதாக இறுத்தலை யஞ்சாத பாசறையென்றவாறு.

பல்கொடி நுடங்கும் (3) யானை (4) என முடிக்க.

4. வினை நவில் யானையென்றது முன்பே போர்செய்து பழகின யானை யென்றவாறு.

இச்சிறப்பானும் முன்னின்ற அடைச்சிறப்பானும் இதற்கு, '**வினை நவில் யானை**' என்று பெயராயிற்று.

பிடி புணர்ந்து இயல (6) என்றது அவ்வினைநவில் யானை (4) கடாம் வார்ந்து கடுஞ்சினம்பொத்தி (5) அச்சினத்திற்கேற்பப் போர் பெறாமையிற் பாகர் அதன்சினத்தை அளவுபடுத்தற்குப் பிடியைப் புணர்க்கையான், அப் பிடியொடு புணர்ந்தும் போர்வேட்டுத் திரியவென்றவாறு.

7. மாப் படை உறுப்பவென்றது இன்ன பொழுது போர்நிகழு மென்று அறியாமையின், குதிரைகள் கலனைகட்டி நிற்கவென்றவாறு.

மாவைப் படையுறுப்பவென விரித்தலுமாம்.

8. தேர் கொடி நுடங்கவென்றது தேர் போர்குறித்துப் பண்ணி நின்று கொடிநுடங்கவென்றவாறு.

தோல் புடை ஆர்ப்ப வென்றது தோல்களும் முன்சொன்னவற்றின் புடைகளிலே போர்குறித்த நாளிடத்து ஆர்ப்பவென்றவாறு.

இயல (6) மறல உறுப்ப (7) நுடங்க ஆர்ப்ப (8) என்னும் ஐந்தினையும் பன்னாளாக (10) என்னும் வினையொடு முடிக்க.

9. காடு கைகாய்த்தியவென்றது பாசறையிருக்கின்ற நாள் குளிர் நாளாகையால் விறகெல்லாமுறித்துத் தீக்காய்ந்தவென்றவாறு.

காட்டையென இரண்டாவதனை விரித்து அதனைக் காய்த்தியவென்பத னுட் போந்த பொருண்மையொடு முடிக்க.

9 - 10. நீடுநாளிருக்கையையுடைய இன்ன வைகலென இரண்டாவது விரிக்க. 10. இன்ன வைகலென்றது இப்பெற்றியையுடைய பாசறையிருக்கின்ற நாட்களென்றவாறு.

12 - 3. செற்றோர் கொலக் கொலக் குறையாத் தானையென்றது பகைவர் போருட் கொல்லக் கொல்லக் குறைபடாத தானையென்று அதன் பெருமை கூறியவாறு.

15. புகன்று புகழ்ந்தென்பதனைப் புகன்று புகழவெனத் திரிக்க. அசையா நல்லிசை - கெடா நல்லிசை.

புகழ்க்காரணமாகிய வண்மை முதலிய குணங்களைச் (14) சான்றோர் (13) புகன்று புகழ்கையாலே கெடாது நின்ற நல்ல புகழ் (15) எனக்கொள்க.

நெடியோய் (16), பெரும (11), கட்டூரிடத்தே (2) நீடுநாளிருக்கை (9) இன்ன வைகல்தான் பன்னாளானபடியானே (10) நின்னைப் (16) பாடிக் காண்கு வந்தேன் (11) எனக் கூட்டி வினைமுடிவு செய்க.

இதனாற் சொல்லியது அவன்வென்றிச் சிறப்புக் கூறியவாறாயிற்று.

(கு- ரை.) 1 - 9. சேரன் வாடைப் பாசறைக்கண் இருத்தல் கூறப்படும்.

1. நின் மனத்தில் நின் பகைவரோடு பகையாந்தன்மை பெரிதாகையாலே அவர் நின்னையஞ்சித் தாம் தாம் வழிபடும் தெய்வங்களைத் தத்தமக்குக் காவலெனச் சொல்ல: "தொழுது விழாக்குறைக்குத் தொல் கடவுட் பேணி, அழுது விழாக்கொள்வ ரன்றே - முழுதளிப்போன், வாணுட் கோள் கேட்ட மடந்தையர் தம்மகிழ்நர், நீணுட்கோ ளென்று நினைந்து" (தொல். புறத். 13, ந. மேற்.) என்பதிலும் இக்கருத்து அமைந்துள்ளது. பகை பெருமையினென்னும் பயனிலை பண்புகொள வருதலின் பாற்பாடும்.

2. நின் வீரர் அரிதாக வந்து தங்குதலை அஞ்சாத, பகைவர் அஞ்சுகின்ற பாசறையில்; கட்டூர்: பதிற். 90 : 30; பு. வெ. 53.

3 - 6. யானையின் இயல்பு.

4. வினைநவில் யானை: பதிற். 40 : 31, 84 : 4; மதுரைக். 47; நெடுநல். 169; மலைபடு. 227; புறநா. 347 : 11.

3 - 4. பலகொடிகள் அசைகின்ற, வன்மையினால் பகைவரது மிக்குச் செல்கின்ற போர்களைத் தொலைத்த, முன்னமே போர்செய்து பழகிய யானைகள். நுடங்கு யானை, முன்பிற்றொலைத்த யானை எனக் கூட்டுக.

5 - 6. மதம் மிக்கு, மிகுதியான கோபம் மூண்டு, வண்டுகள் ஒலிக்கின்ற தலையையுடையனவாகித் தம் மதம் தணிதற்குப் பாகர் பெண்யானைகளைச் சேர்ப்ப அவற்றொடு சேர்ந்திருந்தும் போரை விரும்பித் திரிய; "மிஞிறார்க்குங் கமழ்கடாத், தயறுசோறு மிருஞ்சென்னிய, மைந்து மலிந்த மழகளிறு" (புறநா. 22 : 6 - 8.)

7. வீரர் மாறுபட, குதிரைகள் இன்னபோது போர் நிகழுமென்று அறியாமையால் கலனை கட்டி நிற்ப. 8. தேர் கொடிகள் நின்று அசைய, கிடுகுபடைகளும் முன் சொன்னவற்றின் பக்கத்தே போர்குறித்து ஒலிப்ப.

9 - 10. குளிரின் மிகுதியால் காட்டிலுள்ள மரங்களையெல்லாம் விறகாக எரித்துத் தீக்காய்ந்த, நீண்ட நாளாக இருத்தலையுடைய, இப்படிப் பட்ட நாட்கள் பல ஆதலால்; என்றது வாடைப்பாசறையைக் கூறியபடி.

11. பெருமானே, நின்னைப் பாடிக் காண்பேன் வந்தேன்.

நின்னைப் (16) பாடி (11) என இயைக்க.

12. புறநா. 70 : 7.

12 - 3. நின்னைப் புகழ்ந்து பாடுவோர் கொள்ளக் கொள்ளக் குறையாத செல்வத்தையும் பகைவர் போர்கள்தோறும் கொல்லக் கொல்லக் குறையாத சேனையையும். 16 : **தொல்**. பாயிரம் ; **சிலப்**. 28 : 3.

13 - 6. அறிவான் அமைந்தோர், கொடையையும் நடுவுநிலையையும் சால்பையும் வீரத்தையும் விரும்பிப்புகழ்தலால், கெடாத நல்ல புகழையும், பகைவரது நிலத்தைக் கொள்ளுகின்ற போரால் வரும் செல்வத்தையும் உடைய நெடியோய். புகழ்ந்து - புகழ ; எச்சத்திரிபு. நிலந்தரு திரு - வினை வெனினுமாம் (**சிலப்**. 15 : 1, **அரும்பத**.)

வண்மை முதலிய குணங்கள் புகழுக்குக் காரணமாயின.

நெடியோய் (16), பெரும (11), கட்டூரிடத்தே (2) நீடுநாளிருக்கையை யுடைய (9) வைகல் பன்னாளாக (10), பாடிக் காண்கு வந்திசின் (11) என முடிக்க.

(**பி - ம்**.) 3. முன்பிற் செல்வர். (௨)

---

(௮௫) **கார்**மழை முன்பிற் கைபரிந் தெழுதரும்
வான்பறைக் குருகி னெடுவரி பொற்பக்
கொல்களிறு மிடைந்த **பஃறோற் றொழுதி**யொடு
நெடுந்தேர் நுடங்குகொடி யவிர்வரப் பொலிந்து
செலவுபெரி தினிதுநிற் காணு மோர்க்கே
இன்னா தம்மவது தானே பன்மா
நாடுகெட வெருக்கி நன்கலந் தரூஉநின்
போரருங் கடுஞ்சின மெதிர்ந்து
மாறுகொள் வேந்தர் பாசறை யோர்க்கே.

**துறை - தும்பையரவம். வண்ணம் - ஒழுகுவண்ணம்.**
**தூக்கு - செந்தூக்கு. பெயர் - பஃறோற் றொழுதி (3.)**

(ப - ரை.) 1. கைபரிதல் - ஒழுங்கு குலைதல்.

*மழைக்கு ஒப்பாகிய யானைகளோடு தோல்களையும் (3) †ஒப்பித்துப் பெரியவாகக் கூறிய சிறப்பான் இதற்கு, '**பஃறோற்றொழுதி**' என்று பெயராயிற்று.

---

*"கடாஅ மாறிய யானை போலப், பெய்துவறி தாகிய பொங்குசெலற் கொண்மூ", "வயவுப்பிடி யினத்தின் வயின்வயிற் றோன்றி, இருங்கிளைக் கொண்மூ வொருங்குடன் றுவன்றி" (**அகநா**. 125 : 8-9, 183 : 8-9.)

†ஒப்பித்து - ஒப்புக்கூறி.

6. * பன்மாவென்றது பலபடியென்றவாறு. 7. எருக்கல் - அழித்தல்.

நின்னைக் காண்பார்க்கு நின்படை செல்கின்ற செலவு (5) † மழைக் குழாத்தின்முன்பே ஒரோருகால் ஒழுங்கு குலைந்து செல்லும் (1) கொக் கொழுங்குபோலக் (2) களிறு மிடைந்த பஃறோற்கிடுகின் தொகுதியொடு (3) தேர்களின் நுடங்குகொடி விளங்காநிற்பப் பொலிவுபெற்றுப் (4) பெருக இனிது ; அவ்வாறு அன்புறுவாரையொழிய (5) அதுதான் இன்னாது ; யார்க்கெனின் (6), மாறுகொள் வேந்தர் பாசறையோர்க்கு (9) என வினை முடிவு செய்க.

இதனாற் சொல்லியது அவன்படைச் சிறப்புக் கூறியவாயிற்று.

(கு - ரை.) 1 - 2. கார்காலத்து மேகக்கூட்டத்தின் முன்னே ஒழுங்கு குலைந்து எழுகின்ற, சிறந்த பறத்தலையுடைய கொக்கின் நீண்ட வரிசையை ஒப்ப. பொற்ப : உவம உருபு.

3 - 4. கொல்லும் ஆண்யானைகள் நெருங்கிய பல கேடகங்களின் தொகுதியோடு, உயர்ந்த தேரில் அசைகின்ற கொடிகள் விளங்காநிற்பப் பொலிவு பெற்று.

2 . 4. தேர்மீதுள்ள வெள்ளிய கொடிகளுக்குக் கொக்கு உவமை.

5. நின்னைக் காண்பார்க்கு நினது சேனை செல்லும் செலவு மிகவும் இனியது. 6. அதுதானே இன்னாதது ஆகும்.

6 - 7. பலபடியாக நாடுகள் அழியும்படி சிதைத்து நல்ல ஆபரணங் களைத் தருகின்ற நினது. 'பன்மாணாடு' என்ற பாடம் சிறக்கும் ; பலவாக மாட்சிமைப்பட்ட நாடுகளென்று கொள்க, "பாடுசா னன்கலந் தரூஉம், நாடுபுறந் தருத னினக்குமார் கடனே" (பதிற். 59 : 18 - 9.)

8 - 9. போர்செய்தற்கு இயலாத, மிக்க கோபத்தை ஏற்றுக்கொண்டு, நின்னோடு மாறுபாடுகொண்ட அரசருடைய பாசறையிலுள்ள வீரர்க்கு.

பாசறையோர்க்கு (9) இன்னாது (6) என முடிக்க.

(பி - ம்.) 2. போர்ப்ப. 6. அம்மதானே. 6 - 7. பன்மா, ணாடு. (௬)

---

(அச) எடுத்தேறேய கடிப்புடை யதிரும்
போர்ப்புறு முரசங் கண்ணதிர்ந் தாங்குக்
கார்மழை முழக்கினும் வெளில்பிணி நீவி
நுதலணந் தெழுதருந் **தொழினவில் யானைப்**
பார்வற் பாசறைத் தரூஉம் பல்வேற்
பூழியர் கோவே பொலந்தேர்ப் பொறைய
மன்பதை சவட்டுங் கூற்ற முன்ப
கொடிநுடங் காரெயி லெண்ணுவரம் பறியா

---

* பன்மாறு என்பதன் விகாரம் போலும்.

† தோல்களுக்கு மழை ஒப்பாகக் கூறப்படும் ; "மழையென மருளும் பஃறோன் மலையெனத், தேனிறை கொள்ளு மிரும்பல் யானை" (புறநா. 17 : 34 - 5.)

பன்மா பரந்தபுல மொன்றென் றெண்ணாது
வலியை யாதனற் கறிந்தன ராயினும்
வார்முகின் முழக்கின் மழகளிறு மிகீஇத்தன்
கான்முளை மூங்கிற் கவர்கிளை போல
உய்தல்யா வதுநின் னுடற்றி யோரே.
வணங்க லறியா ருடன்றெழுந் துரைஇப்
போர்ப்புறு தண்ணுமை யார்ப்பெழுந்து நுவல
நோய்த்தொழின் மலைந்த வேலீண் டழுவத்து
முனைபுகல் புகல்வின் மாறா மைந்தரொ
டுருமெறி வரையிற் களிறுநிலஞ் சேரக்
காஞ்சி சான்ற செருப்பல செய்துநின்
குவவுக்குரை யிருக்கை யினிதுகண் டிகுமே
காலை மாரி பெய்துதொழி லாற்றி
விண்டு முன்னிய புயனெடுங் காலைக்
கல்சேர்பு மாமழை தலைஇப்
பல்குரற் புள்ளி னொலியெழுந் தாங்கே.

**துறை - வாகை. வண்ணமும் தூக்கும் அது. பெயர் - தொழினவில் யானை (4.)**

(ப - ரை.) எடுத்தேறு ஏவிய (1) முரசம் (2) என முடிக்க.

கடிப்பென்பது (1) கடியெனக் கடைக்குறைந்தது. புடையானென உருபு விரிக்க.

3. முழக்கினுமென்ற உம்மை முரசினது கண்ணின் அதிர்ச்சியிலே யன்றி அதனொடொத்த மழை முழக்கினுமென * எச்சவும்மை.

4. தொழில் நவில் யானையென்றது போர்க்குரிய யானையென்று எல்லாராலும் சொல்லப்படுகின்ற யானையென்றவாறு.

இச்சிறப்பானும் முன்னின்ற அடைச்சிறப்பானும் இதற்கு, '**தொழினவில் யானை**' என்று பெயராயிற்று.

5. பார்வற்பாசறை யானை (4) தரூஉம் (5) என மாறிக்கூட்டி மாற்றாரது காவற்பாசறையிற் புக்கு அவ் யானைகளைக் கொண்டுபோதுமென்றவாறு. 7. சவட்டுதல் - உருவழித்தல்.

9. பரந்தனவென்பது பரந்தவென நின்றது. 12. கவர்தல் - அகப்படுத்தல்.

முளை மூங்கிற் (12) களிறு (11) கால் கவர் கிளைபோல (12) நின் உடற்றியோர் உய்தல் யாவது (13) என மாறிக்கூட்டி, முளையான மூங்கிலிற் களிறு காலால் அகப்படுத்தப்பட்ட கிளை உய்யாதன்றே ; அஃது அழிந்தாற் போல நின்னை உடற்றியோர் உய்தல் கூடாதெனவுரைக்க.

---

* சிறப்பும்மையென்றும் பிரதிபேதமுண்டு.

15. நுவலவென்றது படையையுற்றுப் போர்செய்கவென்று சொல்ல வென்றவாறு. 16. நோய்த் தொழில் மலைந்தவென்றது நோய்த்தொழிலாகிய போரை *ஏறட்டுக்கொண்டவென்றவாறு.

வேலீண்டழுவமென்றது மாற்றார் படைப்பரப்பினை.

19. காஞ்சி சான்றவென்றது நிலையாமை அமைந்தவென்றவாறு.

20. குவவு - படைக்குழாம். குரைத்தல் - ஆரவாரித்தல்.

செருப்பல செய்து (19) குரைத்த (20) என முடிக்க.

21. காலைமாரியென்றது மாரியிற் பெய்யும் பெயலினை.

தொழிலாற்றியென்றது உழவுத்தொழின்முதலாய தொழில்களைச் செய்வித்தென்றவாறு.

கல் சேர்பு மாமழை தலைஇ (23) என்றது, பண்டு ஒருகாலம் பெய்து ஆற்றி (21) வரைக்கட் போயின புயல் நெடுங்காலம் பெய்யாத நிலைமைக் கண்ணே பின்பு பெய்வதாகக் (22) கல்லைச் சேர்ந்து மழை பெய்ய (23) என்றவாறு.

தலைஇயென்பதனைத் தலையவெனத் திரிக்க.

பூழியர் கோவே, பொறைய (6), முன்ப (7), பகைப்புலத்து (9) ஆரெயில்கள் எண்ணுவரம்பறியா (8); பன்மா பரந்தன; ஆகையால், பகைப்புலம் நமக்கு வெலற்கு அரியதொன்றென்று எண்ணாது (9) நீ ஆண்டு வல்லுனையானபடியை முன்பு அறியாது (10) நின்னை உடற்றியோர் இன்று போர்செய்து அதனை (13) அறிந்தாராயினும் அவர் நின்னொடு (10) உடன்று எழுந்து உரைஇ அதனையே பின்னும் அறிவதல்லது நின்னை வணங்கல் அறிகின்றலர்; இனி அவர் (14) முளைமூங்கிலிற் கால்கவர் கிளை போல அழிவதல்லது (12) உய்யவுங் கருதுவது யாவது (13)? நெடுங் காலம் பெய்யாத (22) மழை பெய்தவழிப் (23) பல குரலையுடைய புள்ளின் ஒலியெழுந்தாற்போல, நெடுங்காலம் போர் செய்யாதுநின்று (24) அவ் வுடற்றியோர் (13) வேலீண்டு அழுவத்துச் (16) சான்ற செருப்பலசெய்து நின் (19) பல படைக்குழாம் ஆரவாரிக்கின்ற இருப்பினை யாம் இனிது கண்டேம் (20) என மாறிக்கூட்டி வினைமுடிவு செய்க.

'உடன்றெழுந் துரைஇ வணங்க லறியார்' (14) என்பது, 'அறிந்தன ராயினும்' (10) என்பதன்பின் நிற்கவேண்டுதலின் மாறாயிற்று.

இதனாற்சொல்லியது அவன்வென்றிச் சிறப்புக் கூறியவாறாயிற்று.

(கு - ரை.) 1 - 2. எடுத்து எறிதலை ஏவிய குறுந்தடியின் புடைத்தலால் ஒலிக்கும், தோலாற் போர்த்தலுற்ற முரசம் தன் அடிக்குமிடம் அதிர்ந்தாற் போல. குலையலங்கு காந்தள் குலையலங்காந்தள் (கலி. 40 : 12) எனவும், தழங்குகுரல் தழங்குரல் (சீவக. 40) எனவும் வந்தவற்றைப் போலக் கடிப்புப் புடை யென்றது கடிப்புடையென வந்தது.

3. கார்காலத்து மேகம் முழக்கத்தைச் செய்தாலும் கட்டுத்தறியினிடத்தே கட்டியிருத்தலை யறுத்து.

2 - 3. மேக முழக்கத்திற்கு முரசொலி: "கடிப்பிகு முரசின் முழங்கி யிடித்திடித்துப், பெய்தினி வாழியோ பெருவான்", "வென்றெறி முரசி னன்பல முழங்கிப், பெயலா னாதே வானம்" (குறுந். 270 : 3 - 4, 380 : 2 - 3); "இருங்கிளைக் கொண்மூ......போர்ப்புறு முரசி னிரங்கி" (அகநா. 188 : 1 - 3.)

* பதிற். 69 : 15, உரை.

4. நெற்றியை மேலே தூக்கி எழுகின்ற, போர்செய்து பழகிய யானை களையும்.

5 - 6. பகைவரைப் பார்த்தற்குரிய பாசறையிடத்தே தருகின்ற பல வேற்படையையும் உடைய, பூழி நாட்டார்க்குத் தலைவனே, பொன்னு லியன்ற தேரையுடைய சேரனே. 'பார்வற் பாசறை - அரண்களையுடைய பாசறை ; பார்வல் : ஆகுபெயர்' (மதுரைக். 231, ந.)

7. பகைவரான மக்கட்டொகுதியை உருவமழித்த, யமனைப்போன்ற வன்மையையுடையாய் ; சவட்டி : "வம்ப வடுகர் பைந்தலை சவட்டி" (அகநா. 375 : 14.) கூற்றமுன்ப : "நீயே, மருந்தில் கணிச்சி வருந்த வட்டித்துக், கூற்றுவெகுண் டன்ன முன்பொடு, மாற்றிரு வேந்தர் மண் ணோக் கினையே" (புறநா. 42 : 22 - 4.)

8 - 9. கொடிகள் அசைகின்ற அரிய மதில்களை எண்ணின் எல்லை அறியப்படா ; பல மாக்கள் பரந்தன ; பகைப்புலம் நம்மால் வெல்லுதற்கு அரியது ஒன்றென்று எண்ணுமல். பரந்த : பரந்தனவென்பது அன் பெறுது வந்தது ; "கானந் தகைப்ப செலவு" (கலி. 3 : 22) என்புழிப் போல.

10. நீ வன்மையுடையை யாதலை முன்பு அறியாமல் நின்னோடு போர் செய்து பின்பு அதனை அறிந்தாராயினும்.

11 - 4. அப்பகைவர் நின்னோடு மாறுபட்டுப் போர் செய்யப் புறப் பட்டு உலாவிப் பின்னும் நின்வன்மையை அறிவதல்லாமல் அவர் நின்னை வணங்குதலை அறியார் ; நீண்ட மேகத்தின் முழக்கத்தைப்போல இளைய ஆண் யானை வன்மை மிக்குக் காலால் முளைத்த மூங்கிலினது அகப்படுத்தப் பட்ட கிளைபோல அழிவதல்லாமல் அவர் தப்புதல் எங்கேயுள்ளது? "முளைவளர் முதல மூங்கின் முருக்கிக், கிளையொடு மேய்ந்த கேழ்கிளர் யானை" (அகநா. 332 : 1 - 2) ; "கழைதின் யானைக் காலகப் பட்ட, வன்றிணி நீண்முளை போலச் சென்றவண், வருந்தப் பொரேஎ னாயின்" (புறநா. 73 : 9 - 11.)

அறிந்தனராயினும் (10) உடன்று எழுந்து உரைஇ வணங்கல் அறியார் (14) ; நின் உடற்றியோர் (13) மழகளிறு (11) கான்முளை மூங்கிற் கவர்கிளை போல (12) உய்தல் யாவது (13) என இயைக்க.

15. தோலாற் போர்த்தலுற்ற தண்ணுமை ஒலித்தல் மிக்குப் படையை யுற்றுப் போர் செய்கவென்று சொல்ல ; "ஏவல் வியன்பணை" (பதிற். 39 : 5) என்பதன் உரையைப் பார்க்க.

16. துன்பத்தைச் செய்யும் தொழிலாகிய போரை மேற்கொண்ட மாற்றாரின் வேற்படைகள் நெருங்கிய படைப்பரப்பில். வேல் சிறந்த படை யாதலின் அதனைத் தலைமைபற்றிக் கூறினர்.

17. போரை விரும்புகின்ற விருப்பத்தையும் நீங்காத வன்மையையு முடைய வீரரோடு.

18. இடி வீழ்த்திய மலையைப்போலக் களிறுகள் நிலத்தில் விழ.

19. நிலையாமை தம் நெஞ்சில் அமைந்த போர் பலவற்றைச் செய்து (பதிற். 65 : 4.) 19 - 20. நினது சேனைக்குழாத்தின் ஆரவாரிக்கின்ற இருப்பினைக் கண்டோம். வீரர் ஆர்த்தல் : குறுந். 34 : 5, ஒப்பு.

21 - 2. பெய்யவேண்டும் காலத்தில் மழையைப் பெய்து உழவுத் தொழில் முதலான தொழில்களைச் செய்வித்து, மலையினிடத்தே போன

மேகம் பின்னர் நெடுங்காலம் பெய்யாத நிலைமையில். “ மழைதொழி லுதவ” (மதுரைக். 10.)

23. பின்பு பெய்வதாக மலையைச் சேர்ந்து மிக்க மழையைப் பெய்த மையால். தலைஇ : தலைய எனத் திரிக்க. 24. பலவாக வேறுபட்ட குரலை யுடைய பறவைகளின் ஒலி எழுந்தாற்போல.

புள்ளின் ஒலி எழுந்தாங்கு (24) நின் (19) குவவுக்குரை யிருக்கை இனிது கண்டிகும் (20) என முடிக்க.

20 - 24. ஆரவாரத்திற்குப் புள்ளொலி : “ பல்வேறு புள்ளி னிசை யெழுந் தற்றே, அல்லங் காடி யழிதரு கம்பலை” (மதுரைக். 543 - 4) ; “ கம்புட் கோழியுங் கனைகுர னாரையும், செங்கா லன்னமும் பைங்காற் கொக்கும், கானக் கோழியு நீர்நிறக் காக்கையும், உள்ளு மூரலும் புள்ளும் புதாவும், வெல்போர் வேந்தர் முனையிடம் போலப், பல்வேறு குழூஉக்குரல் பரந்த வோதையும் ” (சிலப். 10 : 114 - 9.)

(பி - ம்.) 9. புலமென்றெண்ணாது. (ச)

---

(அரு) நன்மரந் துவன்றிய நாடுபல தரீஇப்
பொன்னவிர் புனைசெய லிலங்கும் பெரும்பூண்
ஒன்னாப் பூட்கைச் சென்னியர் பெருமான்
இட்ட வெள்வேன் முத்தைத் தம்மென
முன்றிணை முதல்வர் போல நின்று
தீஞ்சுனை நிலைஇய திருமா மருங்கிற்
கோடுபல விரிந்த நாடுகா ணெடுவரைச்
சூடா நறவி னாண்மகி ழிருக்கை
அரசவை பணிய வறம்புரிந்து வயங்கிய
மறம்புரி கொள்கை வயங்குசெந் நாவின்
உவலை கூராக் கவலையி னெஞ்சின்
நனவிற் பாடிய நல்லிசைக்
கபிலன் பெற்ற வூரினும் பலவே.

துறை - செந்துறைப் பாடாண்பாட்டு. வண்ணமும் தூக்கும் அது. பெயர் - நாடுகா ணெடுவரை (7.)

(ப - ரை.) 3. ஒன்னாப் பூட்கை-பிறர்க்கு அப்படிச்செய்யப் பொருந் தாத மேற்கோள். சென்னியர் பெருமானை யென்பதனுள், * இரண்டாவது விகாரத்தால் தொக்கது.

4. முத்தைத் தம்மென - முன்னே தம்மினென ; † முந்தை முத்தை யென வலித்தது.

---

* உயர்திணைப் பெயரிடத்து ஒழியாது வரவேண்டுமென்பது விதியாத லின் இங்ஙனம் கூறினார். † இட்டவென்பதற்கேற்ப வலித்தல் விகாரம் பெற்றது.

முதல்வர்போல (5) அறம் புரிந்து வயங்கிய (9) என முடிக்க.

9 - 10. அறம்புரிந்து வயங்கிய கொள்கையென்றது மறம்புரியென்றது அறத்திற்கு இடையீடுபட வருவழி அதனைக் காத்தற்கு அவ்வறக் கொள்கை மறத்தொடு பொருந்துமென்றதற்கு.

7. நாடுகாண் நெடுவரையென்றது தன்மேல் ஏறி நாட்டைக் கண்டு இன்புறுதற்கு ஏதுவாகிய * ஓக்கமுடைய மலையென்றவாறு.

இச்சிறப்பானே இதற்கு, '**நாடுகாணெடுவரை**' என்று பெயராயிற்று.

8. † சூடாநறவு : மதுவிற்கு வெளிப்படை.

கொள்கையைப் (10) பாடிய (12) என இரண்டாவது விரித்து முடிக்க.

‡ நனவிற் பாடிய (12) என்றது வயங்கிய செந்நாவினுலும் (10) உவலை கூராக் கவலையில் நெஞ்சினுலும் (11) மெய்ம்மையாற் பாடிய (12) என்றவாறு.

கபிலன் (13) என்ற தொடைக்கேற்ப, நவிலப்பாடிய (12) என்பதூஉம் பாடம்.

இளஞ்சேரலிரும்பொறை, சென்னியர்பெருமானுடைய (3) நாடுகள் பலவற்றையும் எமக்குக் கொண்டுதந்து (1) அச்சென்னியர்பெருமானை (3) எம்முன்னே பிடித்துக்கொண்டுவந்து தம்மினெனத் தம் படைத்தலைவரை ஏவச் சென்னியர்பெருமான் படையாளர் பொருது தோற்றுப் போகட்ட வெள்வேல் செல்வக்கடுங்கோவாழியாதனென்பவன் (4) நாடுகாணெடுவரையின் (7) நாண்மகிழிருக்கைக்கண்ணே (8) தன் மூன்றிணை முதல்வரைப் போல (5) அரசவை பணிய அறம்புரிந்து வயங்கிய (9) மறம்புரி கொள்கையைப் (10) பாடின (12) கபிலன் பெற்ற ஊரினும் பல (13) எனமாறிக் கூட்டி வினைமுடிவு செய்க.

சென்னியர்பெருமானைத் தம்மென மாறவேண்டுதலின் மாறுயிற்று.

இனிப் பிறவாறு மாறிப் பொருளுரைப்பாரும் உளர்.

இதனுற் சொல்லியது அவன் முன்னோருடைய கொடைச்சிறப்பொடு படுத்து அவன் வென்றிச்சிறப்புக் கூறியவாருயிற்று.

(கு - ரை.) 1 - 4. சேரன் தன் படையாளர்க்குக் கூறியது,

1. நல்ல மரங்கள் நிறைந்த நாடுகள் பலவற்றை எமக்குக்கொண்டு தந்து. 2. பொன்னுற் செய்யப்பட்டு விளங்கும் அலங்கரிக்கும் தொழில் விளங்கும் பேரணிகலங்களை அணிந்த. 4. தம் : தாருமென்பதன் விகாரம் (பொருந. 101, ந.)

3 - 4. எம்மோடு பொருந்தாத மேற்கோளையுடைய சோழர்தலைவனை எம்முன்னே தாருங்களென்று நீ சொல்ல, நின்படையாளர்முன் சோழன் படையாளர் தோற்றுப் போட்ட வெள்ளிய வேல்கள். ஒன்று : ஒன்ரு வென்பதன் மரூஉ. முத்தை : முந்தை என்பதன் வலித்தல் விகாரம் ; "முத்தை முதல்வி யடிபிழைத் தாயெனச், சித்திர முரைத்த விதூஉந் திப்பியம்" (மணி. 19 : 13 - 4.) படையைப் போடுதல் தோல்விக் குறிப்பு.

---

* ஓக்கம் - ஓங்குதல் : மலைக்குரிய ஓங்கலென்னும் பெயர்ப்பொருள் இங்கு அறியத்தக்கது. † சூடப்படும் நறவம்பூவும் உண்மையின் சூடாநறவு மதுவிற்கு ஆயிற்று. ‡ நனவு - மெய்ம்மை (புறநா. 41 : 11, உரை.)

5. தனக்கு முன்னிருந்த தன் குலத்து முன்னோர்களைப் போல நிலை பெற்று (பதிற். 72 : 4.) மு. பதிற். 14 : 20.

நின்று (5) பணிய வயங்கிய (9) கொள்கை (10) என இயையும்.

7. நாடுகாணெடுவரை : "நாடுகா ணனந்தலை" (மலைபடு. 270); பெருங். 2. 10 : 70 - 74. 6 - 7. இனிய நீரையுடைய சுனைகள் நிலைபெற்ற மலைவளத்தையுடைய, பெரிய பக்கங்களைப் பெற்ற சிகரங்கள் பல ஆகாயத்தே விரிந்த, தன்மீது ஏறி நாடுமுழுவதும் காணக்கூடிய உயர்ச்சியைப் பெற்ற நன்றுவென்னும் மலையிடத்தில்.

8. சூடப்படாத நறவினையுடைய, விடியற்காலத்தே யிருக்கும் ஓலக்க விருப்பில் ; சூடாநறவு : மதுவிற்கு வெளிப்படை ; "சூடா நறவொடு காமம் விரும்ப" (பரி. திரட்டு, 1 : 56.)

9 - 10. அரசவைகள் பணியும்படி அறத்தையே விரும்பி விளங்கிய, வீரத்தை விரும்பிய கொள்கையை, விளங்குகின்ற செவ்விய நாவினாலும்.

நாவிற் (10) பாடிய (12) என இயையும்.

11. இழிவு மிகாத கவலையில்லாத மனத்தாலும் ; உவலை - இழிவு : "உவலைச் சமயங்கள்" (திருவா.) ; "சிறுமனிச ருவலையாக்கை" (திருவாய்மொழி, 1. 5 : 8.)

12 - 3. மெய்ம்மையாற் பாடிய நல்லிசையையுடைய கபிலனென்னும் புலவர் பெற்ற ஊரினும் பல ஆகும். நல்லிசைக் கபிலன் : "வெறுத்த கேள்வி விளங்குபுகழ்க் கபிலன்" (புறநா. 53 : 12.) கபிலன் பெற்ற ஊரென்றது, செல்வக் கடுங்கோ வாழியாதன் நன்று வென்னும் குன்றேறி நின்று தன் கண்ணிற் கண்ட நாடெல்லாம் காட்டிக்கொடுத்த ஊர்களை.

இட்டவேல் (4) ஊரினும் பல (13) என முடிக்க. பகைவர் இட்டவேல் இன்ன பொருளினும் பல வென்றல் : "இன்முகங் கரவா துவந்துநீ யளித்த, அண்ணல் யானை யெண்ணிற் கொங்கர்க், குடகட லோட்டிய ஞான்றைத், தலைப்பெயர்த் திட்ட வேலினும் பலவே" (புறநா. 130 : 4 - 7.) (ரு)

---

(அசு) உறலுறு குருதிச் செருக்களம் புலவக்
கொன்றமர்க் கடந்த வெந்திறற் றடக்கை
வென்வேற் பொறைய னென்றலின் வெருவர
வெப்புடை யாடூஉச் செத்தனென் மன்யான்
நல்லிசை நிலைஇய நனந்தலை யுலகத்
தில்லோர் புன்கண் டீர நல்கும்
நாடல் சான்ற நயனுடை நெஞ்சிற்
பாடுநர் புரவல னாடுநடை யண்ணல்
கழைநிலை பெறாஅக் குட்டத் தாயினும்
புனல்பாய் மகளி ராட வொழிந்த
பொன்செய் பூங்குழை மீமிசைத் தோன்றும்
சாந்துவரு வானி நீரினும்

தீந்தண் சாயலன் மன்ற தானே.

இதுவும் அது. பெயர் - வெந்திறற் றடக்கை (2.)

(ப - ரை.) 1. உறலுறுகுருதியென்றது நிலத்திலே உறுதல் மிக்க குருதி யென்றவாறு.

'உறலுறு' (1) என்பது முதலாக முன்னின்ற அடைச்சிறப்பான் இதற்கு, '**வெந்திறற் றடக்கை**' (2) என்று பெயராயிற்று.

5. நிலைஇயவென்றது ஈண்டு வினையெச்சம்.

12. வருவானியென்றது வினைத்தொகை. வானியென்பது ஓர்யாறு.

இளஞ்சேரலிரும்பொறையை எல்லாரும் வெருவரச் (3) செருக்களம் புலவக் (1) கொன்றமர்க்கடந்த தடக்கைப் (2) பொறையனென்று சொல்லு கையாலே (3), யான் அவனை வெப்பமுடையான் ஒருமகனென்று முன்பு கருதினேன்; அஃது இப்பொழுது கழிந்தது (4); அப்பொறையனாகிய பாடு நர் புரவலன், ஆடுநடையண்ணல் யான் தன்னொடு கலந்திருந்தவழித் தன் னாட்டு (8) வானியென்னும் யாற்றுநீரினும் (12) சாயலனாயிருந்தான்றான் (13) எனக் கூட்டி வினைமுடிவு செய்க.

இதனாற் சொல்லியது அவன் வன்மைமென்மைச்சிறப்புக் கூறியவா றாயிற்று.

(கு - ரை.) 1 - 3. நிலத்திலே உறுதல் மிக்க இரத்தத்தால் போர்க்களம் புலால் நாற்றம் வீசும்படி பகைவர் சேனையைக் கொன்று போரிடத்தில் வஞ் சியாது எதிர்நின்று வென்ற கொடிய திறலையுடைய பெரிய கையையும், வெற்றியைத் தரும் வேலையும் உடைய சேரனென்று உலகத்தார் சொல்லுத லால் அச்சம் பொருந்துதல் வர.

4. வெம்மையையுடைய ஆண்மகனென்று முன்பு எண்ணியிருந்தேன்; அஃது இப்பொழுது நீங்கிற்று; மன் கழிவுப்பொருளில் வந்தது.

5. நல்ல புகழை நிலைநாட்டும்பொருட்டு, அகன்ற இடத்தையுடைய உலகத்தில்.

6 - 8. பொருளில்லாதவருடைய துன்பம் நீங்கும்படி பொருளைக் கொடுக்கும், தருமத்தையே ஆராய்தல் மிக்க அன்பையுடைய மனத்தால் பாடுவோரைப் புரத்தலில் வல்லவன்; பிறரை வெல்லுதலைப்பெற்ற ஒழுக் கத்தையுடைய தலைவன்; ஆடு - வெற்றி.

9. ஓடக்கோல் நிலைபெறுதல் இல்லாத ஆழமான இடத்தின்கண் ணுயினும்: "கழைநிலை பெறாஅக் காவிரி நீத்தம்" (**அகநா**. 6 : 6.)

10 - 11. நீரிற் பாய்ந்த மகளிர் ஆடுதலால், அவர் காதினின்றும் கழன்ற பொன்னாற் செய்த அழகிய குழை யென்னும் அணி மேலே தெரிதற்கு இடமான; புனலாடு மகளிர் குழை கழலுதல்: "வண்ட லாயமொ டுண்டுறைத் தலைஇப், புனலாடு மகளி ரிட்ட பொலங்குழை" (**பெரும்பாண்**. 311 - 2.)

12 - 3. சந்தனமரம் வருகின்ற வானியென்னும் ஆற்றுநீரினும் நிச்சய மாகப் பொறையன் இனிய தண்ணிய மென்மையை யுடையான். ஆறு சந்தனமரம் கொணர்தல்: "அகிலு மாரமும், துறைதுறை தோறும் பொறையுயிர்த் தொழுகி" (**பொருந**. 238 - 9.)

நீரினும் இனிய சாயல்: "ஈர முடைமையி னீரோ ரனையை" (**பதிற்**. 90 : 14); "நீரினு மினிய சாயற், பாரி" (**புறநா**. 105 : 7 - 8, **அடிக்**.)

(**பி - ம்**.) 2. அமர்கடந்த. (சு)

(அஎ) சென்மோ பாடினி நன்கலம் பெறுகுவை
சந்தம் பூழிலொடு பொங்குநுரை சுமந்து
தெண்கடன் முன்னிய **வெண்டலைச் செம்புனல்**
ஒய்யு நீர்வழிக் கரும்பினும்
வல்வேற் பொறையன் வல்லனு லளியே.

**துறை - விறலியாற்றுப்படை. வண்ணமும் தூக்கும் அது. பெயர்-வெண்டலைச் செம்புனல் (3.)**

(ப - ரை.) 2. பூழில் - அகில். 3. முன்னியவென்றது ஈண்டுப் பெயரெச்சம்.

வெண்டலைச் செம்புனலென முரண்படக் கூறியவாற்றானும் முன்னின்ற அடைச்சிறப்பானும் இதற்கு, '**வெண்டலைச் செம்புனல்**' என்று பெயராயிற்று.

செம்புனலென்றது செம்புனலையுடைய யாற்றினை.

4. நீர்வழி ஒய்யும் கரும்பெனக் கூட்டி நீரிடத்துச் செலுத்தும் கரும்பென்க.

கரும்பென்றது *கருப்பந்தெப்பத்தினை.

பல்வேற் பொறையன் (5) வெண்டலைச் செம்புனலையுடைய யாற்றிற் (3) செலுத்தும் கருப்பம்புணையினும் (4) அளித்தல்வல்லன்; ஆதலால், அவன்பாலே (4) பாடினி, செல்; செல்லின், நன்கலம் பெறுகுவை (1)எனக் கூட்டி வினைமுடிவு செய்க.

இதனாற் சொல்லியது அவன் அருட்சிறப்புக் கூறியவாறாயிற்று.

(கு - ரை.) 1. விறலி, சேரனிடத்தே செல்லுவாயாக; சென்றால் நல்ல ஆபரணங்களைப் பெறுவாய். மோ: முன்னிலையசை. நன்கலம் - முத்து மாலை முதலியன.

2. சந்தனமரத்தோடும், அகிலோடும் பொங்குகின்ற நுரைகளைச் சுமந்து. பூழில் - அகில்; "சாத்தமரத்த பூழி லெழுபுகை" (ஐங்குறு. 212:1.)

3 - 5. தெளிந்த கடலை நோக்கிச் சென்ற நுரையாகிய வெள்ளிய மேற்பரப்பையுடைய சிவந்த நீரையுடைய ஆற்றில் நீரினிடத்தே செலுத்தும் கருப்பந்தெப்பத்தைக் காட்டிலும், பல வேற்படையையுடைய சேரன் அளித்தல்வல்லன். நீர்வழி ஒய்யுமென மாறிக் கூட்டுக. வல்லனுல்: ஆல் அசைநிலை. (எ)

---

(அஅ) **வை**யக மலர்ந்த தொழின்முறை யொழியாது
கடவுட் பெயரிய கானமொடு கல்லுயர்ந்து
தெண்கடல் வளைஇய மலர்தலை யுலகத்துத்
தம்பெயர் போகிய வொன்னார் தேயத்
துளங்கிருங் குட்டந் தொலைய வேலிட்

* "வேழ வெண்புணை" (அகநா. 6 : 8.)

டணங்குடைக் கடம்பின் முழுமுத றடிந்து
பொருமுர ணெய்திய கழுவுள் புறம்பெற்று
நாம மன்னர் துணிய நூறிக்
கால்வல் புரவி யண்ட ரோட்டிச்
சுடர்வீ வாகை நன்னற் றேய்த்துக்
குருதி விதிர்த்த குவவுச்சோற்றுக் குன்றோ
டுருகெழு மரபி னயிரை பரைஇ
வேந்தரும் வேளிரும் பின்வந்து பணியக்
கொற்ற மெய்திய பெரியோர் மருக
வியலுளை யரிமான் மறங்கெழு குருசில்
விரவுப்பணை முழங்கு நிரைதோல் வரைப்பின்
உரவுக்களிற்று வெல்கொடி நுடங்கும் பாசறை
ஆரெயி லலைத்த **கல்கால் கவணை**
நாரரி நறவிற் கொங்கர் கோவே
உடலுநர்த் தபுத்த பொலந்தேர்க் குருசில்
வளைகடன் முழவிற் றொண்டியோர் பொருந
நீநீடு வாழிய பெரும நின்வயிற்
றுவைத்த தும்பை நனவுற்று வினவும்
மாற்றருந் தெய்வத்துக் கூட்ட முன்னிய
புனன்மலி பேரியா றிழிதந் தாங்கு
வருநர் வரையாச் செழும்பஃ றூரம்
கொளக்கொளக் குறையாது தலைத்தலைச் சிறப்ப
ஓவத் தன்ன வுருகெழு நெடுநகர்ப்
பாவை யன்ன மகளிர் நாப்பட்
புகன்ற மாண்பொறிப் பொலிந்த சாந்தமொடு
தண்கமழ் கோதை சூடிப் பூண்சுமந்து
திருவிற் குலைஇத் திருமணி புரையும்
உருகெழு கருவிய பெருமழை சேர்ந்து
வேங்கை விரிந்து விசும்புறு சேட்சிமை
அருவி யருவரை யன்ன மார்பிற்
சேணுறு நல்லிசைச் சேயிழை கணவ
மாகஞ் சுடர மாவிசும் புகக்கும்
ஞாயிறு போல விளங்குதி பன்னாள்
ஈங்குக் காண்கு வந்தனென் யானே

உறுகா லெடுத்த வோங்குவரற் புணரி
நுண்மண லடைகரை யுடைதரும்
தண்கடற் படப்பை நாடுகிழ வோயே.

**துறை - செந்துறைப் பாடாண்பாட்டு. வண்ணமும் தூக்கும் அது. பெயர் - கல்கால் கவணை (18.)**

(ப - ரை.) 1. வையகம் மலர்ந்த தொழிலென்றது வையகத்திற் பரந்த அரசர் தொழிலென்றவாறு.

தொழின்முறை ஒழியாது (1) கொற்றமெய்திய (14) என முடிக்க.

2. கடவுட் பெயரிய கானமென்றது விந்தாடவியை. கடவுளென்றது ஆண்டு உறையும் *கொற்றவையினை. கடவுளினென விரிக்க. கல்லுயர வெனத் திரிக்க.

12. அயிரையென்றது †அயிரைமலையுறையும் கொற்றவையினை.

18. ‡கல் கால் கவணையென்றது கற்களைக் கான்றாற்போல இடையறாமல் விடும் கவணென்றவாறு.

இச்சிறப்பானே இதற்கு, '**கல்கால் கவணை**' என்று பெயராயிற்று.

23. துவைத்த தும்பையென்றது எல்லாராலும் புகழ்ந்து சொல்லப் பட்ட தும்பைப்போரென்றவாறு.

§ நனவுற்றுவினவும் (23) தெய்வம் (24) என்றது அத்தும்பைப்போரை நினக்கு வென்றி தருதற்கு மெய்ம்மையுற்று வினவும் கொற்றவையென்ற வாறு.

தெய்வத்துக் கூட்டமுன்னிய (24) யாறு (25) என்றது அத்தெய்வம் கூடியுறைதலையுடைய அயிரைமலையைத் தலையாகக்கொண்டு ஒழுகப்பட்ட யாறென்றவாறு. தெய்வம் கூடியுறைதலையுடைய அயிரை தெய்வத்துக் கூட்டமெனப்பட்டது.

25. இழிதந்தாங்கென்றது அவ்வியாறு மலையினின்று இழிந்தாற் போலவென்றவாறு.

சிறப்ப (27) விளங்குதி (38) என முடிக்க.

30. பொறியென்றது உத்தம இலக்கணங்களை. பொறியொடு சாந்த மொடுவென ஒடுவை இரண்டற்கும் கூட்டியுரைக்க. ஒடு : $வேறுவினை யொடு. 31. கோதையென்றது முத்தாரத்தினை.

சூடிச் சுமந்து (31) என்னும் வினையெச்சங்களை வரையன்ன (35) என் பதனுள் அன்னவென்பதனொடு முடிக்க.

விற்குலைஇ (32) வேங்கை விரிந்து (34) என்னும் வினையெச்சங்களைத் திரித்து வில்குலவ வேங்கைவிரியத் திருமணிபுரையும் (32) உருகெழுகருவிய பெருமழை சேர்ந்து (33) விசும்புறு சேட்சிமை (34) அருவியருவரை (35)

---

* விந்தியமலையிலுறைதல்பற்றித் துர்க்கைக்கு விந்தையென்று ஒரு பெயர் வழங்கும். † பதிற். 3-ஆம் பதிகம் ; 79 : 18, 90 : 19. ‡ "கல்லுமிழ் கவண்" (சிலப். 15 : 208) என்பது பொறிவகைகளுள் ஒன்று.

§ நனவு - மெய்ம்மை (பதிற். 85 : 12, உரை.) $பொறிக்கும் சந்தனத் திற்கும் தொழிலின்மையின் வேறுவினை ஒடுவாயிற்று.

என மாறிக்கூட்டி, இதனைக் *குறைவுநிலையுவமையில் வழுவமைதியாக்கிப் பொறிக்கு வேங்கைப்பூ உவமமாகவும் கோதைக்குத் திருவில் உவமமாகவும் பூணிற்கு அருவி உவமமாகவும் சாந்திற்கு உவமமில்லையாகவும் உரைக்க. இவ்வாறு இடர்ப்படாது மலையை உரைப்பினும் அமையும்.

38. விளங்குதியென்பது ஈண்டு முன்னிலையேவல்.

40. உறுகால் எடுத்த புணரியெனக் கூட்டுக.

பெரியோர் மருக (14), மறங்கெழு குருசில் (15), கொங்கர் கோவே (19), பொலந்தேர்க் குருசில் (20), தொண்டியோர் பொருந (21), பெரும (22), சேயிழை கணவ (36), நாடுகிழவோய் (42), ஈங்கு நிற்காண்கு வந்தேன் (39); நீ நீடு வாழ்வாயாக (22); பல தாரம் (26) கொளக்கொளக் குறையா மற் சிறப்ப (27) மகளிர்நாப்பட் (29) பன்னாள் ஞாயிறுபோல விளங்குவாய் (38) என மாறிக்கூட்டி வினைமுடிவு செய்க.

இதனாற் சொல்லியது அவன் கொடைச்சிறப்பும் காமவின்பச்சிறப்பும் உடன்கூறி வாழ்த்தியவாறாயிற்று.

(கு - ரை.) 1. பூமியில் பரவிய அரசர்க்கு உரிய தொழிலின் முறையில் தவறாமல்.

2. விந்தையென்னும் கடவுளால் பெயர்பெற்ற காட்டோடு கல்லுயருமபடி; கடவுளென்றது துர்க்கையை; விந்தாடவி: "மஞ்சுசூழ் நெடுவரை விஞ்சத் தடவி" (பெருங். 5. 3 : 52.) உயர்ந்து - உயர; எச்சத்திரிபு.

3 - 4. தெளிந்த கடல் வளைந்த அகன்ற இடத்தையுடைய உலகத்தில் தம் பெயர் திசைகளில் சென்ற பகைவர் அழியும்படி.

5. காற்றால் அசைகின்ற பெரிய கடலரணினது வன்மை கெடும்படி வேலை ஏற்றி நடப்பித்து; "வயங்குமணி யிமைப்பின் வேலிடுபு, முழங்கு திரைப் பனிக்கடன் மறுத்திசி னோரே", "கடலிகுப்ப வேலிட்டும்" (பதிற். 45 : 21 - 2, 90 : 20.) 6. தெய்வத்தன்மையையுடைய கடம்பமரத்தின் அடியை வெட்டி (பதிற். 11 : 12 - 3, உரை.)

7. போர் செய்தற்குக் காரணமான வன்மையை அடைந்த கழுவுளென்பான் புறங்கொடுத்து ஓடுதலைப்பெற்று. கழுவுள் : பதிற். 71 : 17, உரை. 8. அச்சத்தையுடைய அரசர் உடல் துண்டமாகும்படி அழித்து.

9. காலால் விரைந்து செல்லுதலில் வல்ல குதிரைகளையுடைய இடையரை ஓட்டி. 10. ஒளிவிடும் பூக்களையுடைய வாகையென்னும் காவல் மரத்தையுடைய நன்னனை அழித்து. நன்னனும் வாகை மரமும் : பதிற். 40 : 14 - 5, உரை. 12: பதிற். 90 : 19.

11 - 2. பகைவரது இரத்தத்தைத் தெளித்துக் கலந்த திரட்சியையுடைய சோற்றின் பிண்டங்களால் அச்சம் பொருந்திய இயல்பினையுடைய அயிரைமலையிலுள்ள துர்க்கையை வழிபட்டு. அயிரைமலையிலுள்ள துர்க்கை : பதிற். 3-ஆம் பதிகம், 8 ; 79 : 17 - 8 ; 90 : 19. குருதி கலந்த சோற்றை மடையாக அளித்தல் : பதிற். 30 : 37, 79 : 16 - 7.

13 - 4. முடியுடைய அரசரும் குறுநிலமன்னரும் வழிபட்டு வணங்கும்படி வெற்றியை யடைந்த பெரியோரது வழியில் உள்ளாய்.

ஒழியாது (1) எய்திய மருக (14) என முடிக்க.

---

* "மிகுதலுங் குறைதலுந் தாழ்தலு முயர்தலும், பான்மாறு படுதலும் பாகுபாடுடைய" (தண்டி. 32.)

15. அகன்ற பிடரிமயிரையுடைய சிங்கத்தைப்போன்று வீரம் பொருந்திய தலைவனே; "அரிமா வன்ன வணங்குடைத்துப்பின்" (பட். 298.)

16. ஒன்றோடொன்று கலத்தலையுடைய முரசுகள் ஒலிக்கின்ற, வரிசையாக அமைத்த கேடக வரைப்பினையும்.

17. உலாவுதலையுடைய களிற்றினிடத்தே வெல்லும் கொடிகள் அசையும் பாசறையையும்.

16 - 7. முழங்கும் பாசறை, வரைப்பிற் பாசறை, நுடங்கும் பாசறை யெனத் தனித்தனியே இயைக்க.

18 - 9. பகைவரது அரிய மதிலை வருத்திய கல்லைக் கக்கினாற்போல வீசும் கவணையும், நாரால் அரிக்கப்பட்ட கள்ளையுமுடைய கொங்கு நாட்டிலுள்ளார்க்குத் தலைவனே.

நாரரி நறவு : பதிற். 11 : 15, உரை.

20. மாறுபடுவோரைக் கெடுத்த, பொன்னாற் செய்த தேரையுடைய தலைவனே. 21. வளைந்த கடலின் ஓசையாகிய முழவினையுடைய தொண்டி யென்னும் கடற்றுறைப் பட்டினத்துள்ளார்க்குத் தலைவ. ஐங்குறு. 171 : 3; புறநா. 17 : 13, 48 : 4.

பொருநன் - தான் பிறர்க்கு உவமிக்கப் படுபவன். தொண்டி - மேல் கடற்கரையிலுள்ளதும் சேரர்க்குரியதுமான ஓரூர்.

22. பெருமையை யுடையாய், நீ நெடுங்காலம் வாழ்வாயாக.

22 - 4. நின்னிடத்து, எல்லாராலும் புகழ்ந்து சொல்லப்பட்ட தும்பைப்போரில் மெய்ம்மையுற்று நினக்கு வெற்றி தருதற்கு விரவுகின்ற, மாற்றுதற்கு அரிய துர்க்கையென்னும் தெய்வம் கூடிவாழ்தலையுடைய அயிரைமலையினின்றும் தோன்றிய. 25. நீர்மிக்க பேரியாறு என்னும் பெயரையுடைய ஆறு பூமியிலே இறங்கினாற்போல.

26. நின்பால் இரத்தற்பொருட்டு வருவோர்க்கு எல்லையில்லாது கொடுக்கும் செழுமையான பல பண்டம்.

27. கொள்ளக் கொள்ளக் குறையாமல் இடந்தோறும் மிகும்படி.

28 - 9. சித்திரத்தைப்போன்ற அழகையுடைய, பகைவர்க்கு அச்சம் பொருந்திய நீண்ட அரண்மனையில், கொல்லிப்பாவையைப் போன்ற வடிவழகையுடைய மகளிரது நடுவே (பதிற். 61 : 3 - 4.)

சேரனுக்குச் சூரியனை (38) உவமை கூறினமையின் மகளிருக்கு நெருஞ்சிப்பூவை உவமையாகக் கொள்க (பெருங். 2. 4 : 14 - 5.)

30. நூல்களிற் சொல்லிய மாட்சிமைப்பட்ட மூன்று வரிகளோடும், விளங்கிய சந்தனத்தோடும் : "வரையகன் மார்பிடை வரியுமூன்றுள" (சீவக. 1462.) சாந்தமொடு என்பதிலுள்ள ஒடுவைப் பொறியென்பதனோடும் கூட்டுக. மார்பிற் பொறியும் சந்தனமும் : பதிற். 48 : 11 - 2, உரை.

31. குளிர்ந்த ஒளி பரவுகின்ற முத்தமாலையைச் சூடி, பேரணிகலங்களை அணிந்து. கமழ்தல் : பரவுதல் என்னும் பொருளது; "வியலிடங் கமழ, இவணிசை யுடையோர்க் கல்லது" (புறநா. 50 : 13 - 4) என்புழிப் போல.

32 - 3. இந்திரவில்லை வளைத்து அழகிய நீலமணியைப்போன்ற நிறம் பொருந்திய, மின் முதலிய தொகுதிகளையுடைய பெரிய மேகம் சேரப் பெற்று.

32 - 5. திருவில் தோற்றுதலும், திருமணி புரைதலும் மேகத்திற் குரியன. மழை சேர்தலும், வேங்கை மலர்தலும், அருவியுடைமையும் மலைக்குரியன.

34 - 6. வேங்கைப்பூக்கள் மலரப்பெற்று, ஆகாயத்தைப் பொருந்தும் உயர்ந்த சிகரங்களையும், அருவிகளையும் உடைய அரிய மலையைப் போன்ற மார்பினையுடைய, நெடுந்தூரத்தே விளங்குகின்ற நல்ல இசையையுடைய சிவந்த ஆபரணங்களை அணிந்தோளுடைய கணவ. சேணுறு நல்லிசை : **மதுரைக்.** 209 ; **புறநா.** 10 : 11. சேயிழை கணவ : அனைத்தும் ஒருபெயர்.

37 - 8. பூமிக்கும் சுவர்க்கத்துக்கும் நடுவேயுள்ள இடம் ஒளியடையும்படி, பெரிய ஆகாயத்தில் உயர்ந்து செல்லும் சூரியனைப்போலப் பல காலம் விளங்குவாயாக. மாகம் : **பரி.** 1 : 47, **பரிமேல்.**

39. யான் இவ்விடத்தே நின்னைக் காண்பேனாகி வந்தேன்.

40 - 42. மிக்க காற்று எழுப்பிய ஓங்கிவருதலையுடைய அலை, நுண்ணிய மணலையுடைய நீரையடைந்த கரையிடத்தே வந்து உடைகின்ற, குளிர்ந்த கடற்பக்கத்தையுடைய நாட்டுக்கு உரியோய்.

மருக (14), குருசில் (15), கோவே (19), பொலந்தேர்க் குருசில் (20), பொருந (21), சேயிழை கணவ (36), யான் நின்னைக் காண்பேன் வந்தேன் (39); சிறப்ப (27), மகளிர்காப்பண் (29), ஞாயிறுபோல விளங்குதி (38) என முடிக்க.

**(பி - ம்.)** 27. சிறந்து. (அ)

---

(அக) **வா**னம் பொழுதொடு சுரப்பக் கானம்
தோடுறு மடமா னேறுபுணர்ந் தியலப்
புள்ளு மிஞிறு மாச்சினை யார்ப்பப்
பழனுங் கிழங்கு மிசையற வறியாது
பல்லா னன்னிரை புல்லருந் துகளப்
பயங்கடை யறியா வளங்கெழு சிறப்பிற்
பெரும்பல் யாணர்க் கூலங் கெழும
நன்பல் லூழி நடுவுநின் றொழுகப்
பல்வே லிரும்பொறை நின்கோல் செம்மையின்
நாளி னாளி னாடுதொழு தேத்த
உயர்நிலை யுலகத் துயர்ந்தோர் பரவ
அரசியல் பிழையாது செருமேந் தோன்றி
நோயிலை யாகியர் நீயே நின்மாட்
டடங்கிய நெஞ்சம் புகர்படு பறியாது
கனவினும் பிரியா வுறையுளொடு தண்ணெனத்
தகர நீவிய **துவராக் கூந்தல்**

வதுவை மகளிர் நோக்கினர் பெயர்ந்து
வாழ்நா ளறியும் வயங்குசுடர் நோக்கத்து
மீனொடு புரையுங் கற்பின்
வாணுத லரிவையொடு காண்வரப் பொலிந்தே.

**துறை - காவன் முல்லை. வண்ணமும் தூக்கும் அது. பெயர் - துவராக் கூந்தல் (16.)**

(ப - ரை.) 4. மிசை அறவு அறியாமலெனத் திரிக்க.

8. நடுவென்றது நடுவுநிலைமையை. 12. பிழையாமலெனத் திரிக்க.

16. துவராக்கூந்தலென்றது எப்பொழுதும் தகரமுதலியன நீவு கையால் ஈரம் புலராத கூந்தலென்றவாறு.

இச்சிறப்பானே இதற்கு, '**துவராக் கூந்தல்**' என்று பெயராயிற்று.

உறையுளொடு (15) நெஞ்சம் புகர்படுபு அறியாது (14) என மாறிக் கூட்டி அறியாதென்பதனை அறியாமலெனத் திரித்து அதனைப் புரையும் (19) என்றதனொடு முடிக்க.

உறையுளொடு மீனொடுவென நின்ற ஒடுக்கள் வேறுவினையொடு.

பல்வேலிரும்பொறை, நின்கோல் செம்மையாலே (9), வானம் சுரப்பக் கானம் (1) ஏறு புணர்ந்து இயலச் (2) சினையிற் புள்ளும் மிஞிறும் ஆர்ப்பப் (3) பழனும் கிழங்கும் மிசையறவறியாதொழிய (4) ஆனிரை புல் லருந்துகளக் (5) கூலம் செழும (7) ஊழி நடுவுநின்று ஒழுக (8) நாடு தொழு தேத்த (10) உயர்நிலையுலகத்து உயர்ந்தோர் பரவ (11) அரசியல் பிழையா தொழியச் செருவில் மேம்பட்டுத் தோன்றி (12) நீ (13) நின் அரிவையொடு பொலிந்து (20) நோயிலையாகியர் (13) எனக்கூட்டி வினை முடிவு செய்க.

இதனாற் சொல்லியது அவன் நாடுகாவற்சிறப்புக் கூறி வாழ்த்தியவா றாயிற்று.

அவ்வாறு நாடுகாவல் கூறினமையால், துறை * காவன்முல்லையா யிற்று.

(கு - ரை.) 1. மேகம் உரிய காலத்தில் மழையைப் பெய்ய; பொழு தொடு - பொழுதில்; வேற்றுமைமயக்கம்.

1 - 2. காட்டில் இனமாகப் பொருந்திய மடப்பத்தையுடைய பெண் மான் ஆண்மானோடு கூடிச் செல்ல.

3. பறவைகளும் வண்டுகளும் பெரிய மரக்கிளைகளில் ஆரவாரிப்ப; மழை பெய்தபின் பறவைகள் ஒலித்தல் : பதிற். 84 : 24.

4. பழங்களும் கிழங்குகளும் உண்ணப்படுதல் அற்றுப்போதலை அறியாமல்; என்றது இரண்டும் இடையறாது எப்பொழுதும் உண்ணுதற்குரி யனவாகிக் காலமல்லாத காலத்திலும் கிடைக்குமென்றபடி.

5. பலவாகிய பசுக்களின் நல்ல தொகுதி புல்லை மேய்ந்து களிப்பால் துள்ள; ஆர்ந்தென்பது அருந்தெனக் குறுக்கல் விகாரம் பெற்றது; 'உண் டார்ந்தென்பது உண்டருந்தெனக் குறுகி நிற்றலிற் குறுக்கும் வழிக்குறுக் கல் (தொல். எச்ச. 7, சே.)

---

* பு. வெ. 178 - 9.

6 - 7. பயன் ஒழிதலை அறியாத வளம்பொருந்திய சிறப்பினையுடைய பெரிய பலவாகிய புதுவருவாயையுடைய பல தானியங்கள் நெருங்க.

8. நல்ல பலவான ஊழிகள் நடுவுநிலைமையால் நிலைபெற்று நடப்ப; "நல்லூழி யடிப்படர" (மதுரைக். 21.) 9. பலவாகிய வேற்படையை யுடைய இரும்பொறை, நினது ஆட்சி செவ்வியதாகையாலே.

9. பல்வே லிரும்பொறை: "பல்வேன் மன்னன்" (மதுரைக். 234.)

செங்கோற் சிறப்பால் மழை தவறாமற் பெய்தல் முதலியன நிகழ்தல்: **புறநா.** 117.

10. நாள்தோறும் நாள்தோறும் நாட்டிலுள்ளார் நின்னைக் கையால் தொழுது நாவால் புகழும்படி. நாளினாளினென்பது, "நாட்டி னாட்டி னூரி னூரின்" (**குறுந்.** 130 : 3) என்பதுபோல நின்றது.

11. உயர்ந்த நிலையையுடைய உலகத்திலுள்ள தேவர் புகழ; தேவர் புகழ்தற்குக் காரணம் சேரநாடு தம் உலகம்போல விளங்குதல்; "மாந்தரஞ் சேர லிரும்பொறை யோம்பிய நாடே, புத்தே ளுலகத் தற்றெனக் கேட்டு வந்து" (**புறநா.** 22 : 34 - 5); தமக்குச் செய்யும் கடன்களை உரிய காலத்தே குறைவின்றிச் செய்தலும் ஒரு காரணமாம். 12 - 3. இராசதருமம் தவறாமல் போரிலே மேம்பட்டுத் தோன்றி, நீ நோயிலை ஆகுக.

13 - 5. நின்னிடத்தே ஒடுங்கிய மனம் குற்றப்படுதலை அறியாமல் கனவின் கண்ணும் பிரியாத உறைதலோடு.

16. துவர்தல் - உலர்தல் (**குறிஞ்சிப்.** 60.)

15 - 7. குளிர்ச்சி யடையும்படி மயிர்ச்சாந்து தடவப்பட்ட, எப்பொழுதும் ஈரம் புலராத கூந்தலையுடைய மணமகளிர் நோக்கினராய் மறுபடியும்.

18 - 20. வாழ்நாளை அறிந்து கொள்ளுதற்குக் காரணமான விளங்குகின்ற ஒளியை நோக்குதலை யுடைய அருந்ததியோடு ஒத்த கற்பினையும், ஒளிபொருந்திய நெற்றியையும் உடைய நின் தேவியோடு அழகுபொருந்த விளங்கி. அரிவை: பருவப் பெயரன்று; பெண்பாற் பெயர். அருந்ததியால் வாழ்நாளை அறிதல்: "உலந்தநா ளவர்க்குத் தோன்றா தொளிக்குமீன் குளிக்குங் கற்பு" (**சீவக.** 2141.)

இரும்பொறை (9), அரிவையொடு பொலிந்து (20) நீ நோயிலை ஆகியர் (13) என முடிக்க.

(**பி - ம்.**) 9. இரும்பொறைகோஒல். 18. வாழுநாள். (௯)

---

(௯0) **மீ**ன்வயி னிற்ப வானம் வாய்ப்ப
அச்சற் றேம மாகி யிருடீர்ந்
தின்பம் பெருகத் தோன்றித் தந்துணைத்
துறையி னெஞ்சாமை நிறையக் கற்றுக்
கழிந்தோ ருடற்றுங் கடுந்தூ வஞ்சா
ஒளிறுவாள் வயவேந்தர்
களிறொடு கலந் தந்து
தொன்றுமொழிந்து தொழில்கேட்ப

அகல்வையத்துப் பகலாற்றி
மாயாப் பல்புகழ் வியல்விசும் பூர்தர
வாள்வலி யுறுத்துச் செம்மை பூஉண்
டறன்வாழ்த்த நற்காண்ட
விறன்மாந்தரன் விறன்மருக
ஈர முடைமையி னீரோ ரனையை
அளப்பரு மையி னிருவிசும் பனையை
கொளக்குறை படாமையின் முந்நீ ரனையை
பன்மீ னாப்பட் டிங்கள் போலப்
பூத்த சுற்றமொடு பொலிந்து தோன்றலை
உருகெழு மரபி னயிரை பரவியும்
கடலிகுப்ப வேலிட்டும்
உடலுநர் மிடல்சாய்த்தும்
மலையவு நிலத்தவு மருப்பம் வௌவிப்
பெற்ற பெரும்பெயர் பலர்கை யிரீஇய
கொற்றத் திருவி னுரவோ ரும்பல்
கட்டிப் புழுக்கிற் கொங்கர் கோவே
மட்டப் புகாவிற் குட்டுவ ரேறே
எழாஅத் துணைத்தோட் பூழியர் மெய்ம்மறை
இரங்குநீர்ப் பரப்பின் மரந்தையோர் பொருந
வெண்பூ வேளையொடு சுரைதலை மயக்கிய
விரவுமொழிக் கட்டூர் வயவர் வேந்தே
உரவுக்கட லன்ன தாங்கருந் தானையொடு
மாண்வினைச் சாப மார்புற வாங்கி
ஞாண்பொர விளங்கிய வலிகெழு தடக்கை
வார்ந்துபுனைந் தன்ன வேந்துகுவவு மொய்ம்பின்
மீன்பூத் தன்ன விளங்குமணிப் பாண்டில்
ஆய்மயிர்க் கவரிப் பாய்மா மேல்கொண்டு
காழெஃகம் பிடித்தெறிந்து
விழுமத்திற் புகலும் பெயரா வாண்மைக்
காஞ்சி சான்ற வயவர் பெரும
வீங்குபெருஞ் சிறப்பி னோங்குபுக ழோயே
கழனி யுழவர் தண்ணுமை யிசைப்பிற்
பழன மஞ்ஞை மழைசெத் தாலும்

தண்புன லாடுந ரார்ப்பொடு மயங்கி
வெம்போர் மள்ளர் தெண்கிணை கறங்கக்
கூழுடை நல்லி லேறுமாறு சிலைப்பச்
செழும்பல விருந்த கொழும்பஃ றண்பணைக்
காவிரிப் படப்பை நன்னா டன்ன
வளங்கெழு குடைச்சூ லடங்கிய கொள்கை
ஆறிய கற்பிற் றேறிய நல்லிசை
வண்டார் கூந்த லொண்டொடி கணவ
நின்னாள், திங்க ளனைய வாக திங்கள்
யாண்டோ ரனைய வாக யாண்டே
ஊழி யனைய வாக வூழி
வெள்ள வரம்பின வாகென வுள்ளிக்
காண்கு வந்திசின் யானே செருமிக்
குருமென முழங்கு முரசிற்
பெருநல் யானை யிறைகிழ வோயே.

**துறை - காட்சி வாழ்த்து. வண்ணம் - ஒழுகுவண்ணமும் சொற்சீர்வண்ணமும். தூக்கு-செந்தூக்கும் வஞ்சித்தூக்கும். பெயர்-வலிகெழு தடக்கை (33.)**

(ப - ரை.) 2. அச்சமென்பது கடைக்குறைந்தது. இருள் - துன்பம்.

3. தோன்றி இன்பம் பெருகவெனக் கூட்டுக.

3 - 4. தந்துணைத் துறையென்றது பார்ப்பார் முதலாயினர் தத்தமக்கு அளவான துறைநூல்களை. 4. கற்றென்றதனைக் கற்கவெனத் திரிக்க.

5. கழிந்தோர் - வலியின் மிக்கோர். 7. தந்தென்றது இடவழுவமைதி.

9. வையத்துப் பகலாற்றியென்றது வையத்தார்கண்ணே நடுவுநிலைமையைச் செய்தென்றவாறு.

11. செம்மைபூண்டென்றது செவ்வையைத் தான்பூண்டென்றவாறு.

12. அறனென்றது அறக்கடவுளை. நன்காண்டவென்றது வலித்தது.

20. கடவிகுப்பவென்றது கடலைத் தாழ்க்கவேண்டியென்றவாறு.

அருப்பம் வெளவி (22) மிடல் சாய்த்து (21) எனக் கூட்டுக.

23. பெயரென்றது பொருளை.

25. கட்டிப்புழுக்கு - கட்டியொடு கூட்டின அவரைப்பரல் முதலான புழுக்கு. 26. மட்டப்புகா - மதுவாகிய உணவு.

27. எழாத் துணைத்தோள் -போரில் முதுகிட்டார்மேற் செல்லாத இணைமொய்ம்பு. 33. ஞாண் பொர - நாண் உரிஞுதலால்.

இவ்வடைச்சிறப்பானே இதற்கு, '**வலிகெழு தடக்கை**' என்று பெயராயிற்று.

மொய்ம்பினையுடைய (34) தடக்கை (33) என மாறிக் கூட்டுக.

35. பாண்டிலென்றது பாண்டிலையுடைய பக்கரையை.

காழெஃகம் பிடித்தெறிந்தும் (37) விழுமத்திற் புகலும் (38) என்றதற்குப் பகைவரென்னும் பெயரை வருவித்து, காம்பையுடைய வேலைப்பிடித்தெறிந்து அப்பகைவர்க்கு இடும்பைசெய்கையிலேயே விரும்புமென்றவாறு.

ஆலும் (42) நாடு (47) என முடிக்க.

45. ஏறு மாறு சிலைப்பவென்றது ஏறுகள் ஒன்றற்கொன்று மாறாக முழங்கவென்றவாறு.

நன்றுடன்ன (47) ஒண்டொடி (50) என முடிக்க.

மருக (13), உம்பல் (24), கொங்கர் கோவே (25), குட்டுவரேறே (26), பூழியர் மெய்ம்மறை (27), மரந்தையோர் பொருந (28), வயவர் வேந்தே (30), வயவர்பெரும (39), ஓங்குபுகழோய் (40), ஒண்டொடி கணவ (50), இறைகிழவோய் (57), ஈரம் உடைமையின் நீரோரனையை (14); அளப்பருமையின் விசும்பனையை (15); கொள்ளக் குறைபடாமையின் முந்நீரனையை (16); பூத்த சுற்றமொடு பொலிந்துதோன்றுதலையுடையை (18); ஆதலால் நினக்கு அடைத்த நாட்கள் உலகத்தில் திங்களனையவாக வென்றும் நின்னுடைய திங்கள் (51) யாண்டனையவாக வென்றும் நின்னுடை யாண்டு (52) ஊழியனையவாகவென்றும் நின் யாண்டிற்கு ஒப்பாகிய அப் பல்லூழி தம் அளவிற்பட்ட பலவாய்நில்லாது (53) வெள்ளவரம்பினவாகவென்றும் நினைத்து (54) நின்னைக் காண்பேன்வந்தேன் (55) எனக் கூட்டி வினைமுடிவு செய்க.

இதனாற் சொல்லியது அவன் தண்ணளியும் பெருமையும் கொடையும் சுற்றந்தழாலும் உடன்கூறி வாழ்த்தியவாறாயிற்று.

'ஒளிறு' (6) என்பது முதலாக நான்கடியும், 'அறன்வாழ்த்த' (12) என்பதுமுதலாக இரண்டடியும், 'கடலிருப்ப' (20) என்பதுமுதலாக இரண்டடியும், 'காழெஃகம் பிடித்தெறிந்து' (37) என ஓரடியும் வஞ்சியடியாக வந்தமையான் வஞ்சித்தூக்குமாயிற்று.

'நின்னாள்' (51) என்பதுகூன்.

(கு - ரை.) 1. நட்சத்திரங்கள் தாம் இருத்தற்குரிய இடங்களிலே இருப்ப அதனால் மழை பருவம் பொய்யாமற் காலத்திற் பெய்ய; "வியனாண்மீனெறி யொழுக" (மதுரைக். 6.)

2. உயிர்க்கு அச்சம் இல்லாமல் காவலாகித் துன்பம் தீர்ந்து: "அச்சமறியா தேம மாகிய, மற்றை யாமம்" (மதுரைக். 652 - 3.) அச்சு: அச்சமென்பதன் கடைக்குறை; "நகையச் சாக நல்லமிர்து கலந்த" (பரி. 3 : 33); "அச்சா றாக வுணரிய வருபவன்" (கலி. 75 : 20.)

3 - 4. இன்பம் உண்டாகிப் பெருகும்படி அந்தணர் முதலியோர் தமக்கு அளவான துறைநூல்களைக் குறையாதபடி நிறையக் கற்று. சேர நாட்டிற் கல்வி நிறைந்ததைக் கூறியபடி. 8. மு. மதுரைக். 72, 124.

5 - 8. வன்மையில் மிக்கோர் போர்செய்யும் மிக்க வன்மைக்கு அஞ்சாத, விளங்குகின்ற வாளையுடைய வலிய அரசர் ஆண்யானைகளோடு அணிகலன்களைத் திறையாகக் கொடுத்துத் தம்முடன் பழமையைச் சொல்லி நீ ஏவிய தொழிலைச் செய்ய. களிறொடு கலம் தருதல்: "இருங்கண் யானையொ டருங்கலந் துறுத்துப், பணிந்துவழி மொழித லல்லது" (தொல். புறத். 6, இளம். மேற்.)

9. அகன்ற பூமியில் நடுவுநிலைமையைச் செய்து; பகல் - நடுவு நிலைமை; "நெடுநுகத்துப் பகல்போல, நடுவுநின்ற நன்னெஞ்சினோர்" (பட். 206 - 7.) 10. அழியாத பலவகையான புகழ் அகன்ற ஆகாயத்திலே பரவ. பல்புகழ்: பதிற். 12 : 8, உரை. ஊர்தல் - பரத்தல்; "அழலம்பூ நறவார்ந்தழலூர்தர" (சீவக. 939.)

11 - 3. வாளின் வலியைப் பகைவரிடத்தே உறுவித்துச் செவ்வையை மேற்கொண்டு, அறக்கடவுள் வாழ்த்தும்படி நன்கு ஆண்ட வெற்றியை யுடைய மாந்தரனென்னும் சேரவரசனது, விறலையுடைய வழித்தோன்ற லாக உள்ளாய். விறலென்றது பிறரினும் மேம்பட்டுத் தோன்றுதல்; "விறன்மலை" (கலி. 8 : 6.)

14. அன்புடைமையினால் நீரோடு ஒத்தனை. 15. நின் சூழ்ச்சி அளப்ப தற்கு அருமையின் பெரிய ஆகாயத்தைப் போன்றனை (புறநா. 2 : 2 - 7); "விசும்பி னன்ன சூழ்ச்சி" (தொல். உவம. 6. பேர். மேற்.)

16. என்றும் வறியோர் தாமே கொள்ளச் செல்வம் குறைபடாமை யால் மேகம் முகந்துகொள்ளக் குறைபடாத கடலைப்போன்றாய் (பதிற். 45 : 19 - 22, 88 : 26 - 7; மதுரைக். 424-5.)

வீரரும் வறியோரும் கொள்ளவும் செல்வம் குறையாமை: "கன்றும் வயவ ரினங்கள் பலகவர்ந்தும், என்றும் வறிஞ ரினங்கவர்ந்தும் - ஒன்றும் அறிவரிதா நிற்கு மளவினதா லம்ம, செறிகதிர்வேற் சென்னி திரு" (தண்டி. 72, மேற்.)

17 - 8. பல நட்சத்திரங்களுக்கு நடுவே சந்திரனைப்போலப் பொலிவு பெற்ற சுற்றத்தோடு விளங்கித் தோன்றுதலை யுடையை. பூத்த சுற்ற மென்றது இயலிசை நாடகங்களாலும் இனிய வார்த்தைகளாலும் இனிய மகிழ்ச்சியைச் செய்யும் மகளிர் திரளை; கலை நிறைந்தமைபற்றிச் சேரனுக் குத் திங்கள் உவமையாயிற்று (சிறுபாண். 220, ந.); "பன்மீ னடுவட்டிங்கள் போலவும், பூத்த சுற்றமொடு பொலிந்தினிது விளங்கி" (மதுரைக். 769-70); "கோன்மின்னு மீன்சூழ் குளிர்மாமதித் தோற்றமொத்தே" (சீவக. 882.)

19. அச்சம் பொருந்திய இயல்பினையுடைய அயிரைமலையில் எழுந் தருளியிருக்கும் துர்க்கையை வழிபட்டும். 20. கடலின் வன்மையைத் தாழ்க்கவேண்டி வேலை ஏற்றி நடப்பித்தும்.

21 - 2. மலையிலுள்ளனவும், மருதநிலத்திலுள்ளனவும் ஆகிய அரண் களைக் கைப்பற்றி, மாறுபட்டோருடைய வன்மையைக் கெடுத்தும். நிலம் - மருதநிலம்; "அகநாடு புக்கவ ரருப்பம் வௌவி" (மதுரைக். 149.)

23. பெயர்: பொருள் என்னும் பொருளில் வந்தது (பதிற். 21 : 1, உரை); (முருகு. 269, ந.); (பெருங். 1. 35 : 113, 3. 10 : 18.)

23 - 4. அவ்வரண்களிலே பெற்ற பெருமையுள்ள பொருள்களைப் பரிசில் பெறுவார் பலருடைய கையிலே இருத்திய, வெற்றியால் வரும் செல்வத்தையுடைய வலியோருடைய வழித்தோன்றலே.

25. சர்க்கரைக் கட்டியோடு கூட்டின அவரை முதலியவற்றின் விதையாகிய உணவினையுடைய கொங்கர்களுக்குத் தலைவனே.

26. கள்ளாகிய உணவினையுடைய குட்டநாட்டிலுள்ளார்க்குத் தலை வனே. மட்டம் - கள்; "தீஞ்சேறு விளைந்த மணிநிற மட்டம்" (பதிற். 42 : 12); "மட்டம் பெய்த மணிக்கலத் தன்ன, இட்டுவாய்ச் சுனைய" (குறுந். 193 : 1 - 2.)

27. போரில் முதுகுகாட்டி ஓடினார்மேல் செல்லாத இணையான தோள்களையுடைய பூழிநாட்டார்க்குக் கவசம்போன்றாய் (மதுரைக். 177, ந.)

பூழியர் மெய்ம்மறை: பதிற். 73 : 9.

28. ஒலிக்கின்ற நீர்ப்பரப்பினையுடைய மரந்தை நகரத்திலுள்ளாருக்குத் தலைவனே. மரந்தை : "குட்டுவன் மரந்தை" (குறுந். 34 : 6); "குரங்குளைப் புரவிக் குட்டுவன், மரந்தை யன்னவென் னலந்தந்து சென்மே" (அகநா. 376 : 17 - 8.) பொருநன் - தான் பிறர்க்கு உவமிக்கப் படுவான். 29 : பதிற். 15 : 9.

29 - 30. வெள்ளிய பூவையுடைய வேளைச்செடியோடு சுரைக்கொடி இடந்தோறும் கலப்பச்செய்த, பலவாக வேறுபடுதலையுடைய மொழிகளை யுடைய பாசறையிலுள்ள வீரர்க்கு அரசே.

விரவுமொழிக் கட்டூர்: "விரவுமொழிக் கட்டூர் வேண்டுவழிக் கொளீஇ" (அகநா. 212 : 14); 'வேறுபல் பெரும்படை நாப்பண் - பாஷை வேறுபட்ட பலவாகிய பெரிய படைக்கு நடுவே' (முல்லைப். 43, ந.)

31. கரையிலே வந்து உலாவுதலையுடைய கடலைப்போன்ற, பகைவரால் தடுத்தற்கு அரிய சேனையோடு. 32. மாட்சிமைப்பட்ட தொழிலை யுடைய வில்லை மார்பிற் பொருந்த வளைத்து.

33 - 4. நாண் உராய்தலால் தழும்பு விளங்கிய வன்மை பொருந்திய பெரிய கைகளையும் நீண்டு அலங்கரித்தாலொத்த ஏந்திய திரண்ட தோள் களையு முடைய; "வலிதுஞ்சு தடக்கை" (புறநா. 54 : 14); "ஆவஞ் சேர்ந்த புறத்தை தேர்மிசைச், சாவ நோன்ஞாண் வடுக்கொள வழங்கவும்.........வலிய வாகுநின் றடோய் தடக்கை" (புறநா. 14 : 8 - 11.)

35 - 6. நட்சத்திரங்கள் பூத்தாற்போன்ற விளங்குகின்ற மணிகளை யுடைய வட்டமான பக்கரையையும் மெல்லிய மயிரையுடைய கவரியையும் அணிந்த குதிரையின் மேற்கொண்டு.

குதிரைக்குக் கவரியணிதல்: "முரசுடைச் செல்வர் புரவிச் சூட்டு, மூட்டுறு கவரி தூக்கி யன்ன" (அகநா. 156 : 1 - 2); "ஒருதனிமா, ஞாங்கர் மயிரணியப் பொங்கி" (பு. வெ. 90.) 39 : பதிற். 65 : 4.

37 - 9. காம்பையுடைய வேலைப் பிடித்து எறிந்து பகைவர்க்குத் துன்பத்தைச் செய்தலில் விரும்பும் நீங்காத ஆண்மையுடைய, நிலையாமை தம் நெஞ்சிலே மிக்க வீரர்க்குத் தலைவனே.

காழெஃகம் : மதுரைக். 739 ; மலைபடு. 129 ; புறநா. 354 : 2.

40. உயர்ந்த பெரிய சிறப்பினையுடைய, மற்ற அரசரினும் மேம்பட்ட புகழை யுடையோய். 41. உழவர் தண்ணுமை : அகநா. 40 : 13-4, 204 : 10 ; புறநா. 348 : 1.

41 - 2. வயலிலுள்ள உழவர் தண்ணுமைப்பறையை வாசித்தால், பழனத்திலுள்ள மயில் அதனோசையை மேகத்தின் ஓசையென்று எண்ணி ஆடும். ஆடும் (42) நாடு (47) என இயையும்.

43 - 4. குளிர்ந்த நீரில் ஆடுவோரது முழக்கத்தோடு கலந்து, கொடிய போரைச் செய்யும் வீரரது தெளிந்த தடாரிப்பறை ஒலிப்ப.

45. சோற்றையுடைய நல்ல வீடுகளில் ஏறுகள் ஒன்றோடு ஒன்று மாறாக முழங்க (மதுரைக். 672.)

46 - 7. செழுமையான பலவாக இருந்த கொழுவிய பல குளிர்ந்த வயல்களையுடைய காவிரிப்பக்கத்தையுடைய நல்ல சோழநாட்டைப்போன்ற.

49. ஆறிய கற்பு : ‘ஆறிய கற்பும் சீறிய கற்புமெனக் கற்பு இரு வகை’ (சிலப். பதிகம், 38 - 54, அடியார்.) “ஆறிய கற்பினடங்கிய சாயல்” (பதிற், 16 : 10.) 50. ஒண்டொடி கணவ : பதிற். 14 : 15, உரை.

48 - 50. தொழில்வளம் பொருந்திய சிலம்பினையும், அடங்கிய கொள்கையையும், அறக்கற்பினையும், தெளிவாக அறியப்பட்ட நல்ல புகழையும், வண்டுகள் ஒலிக்கும் கூந்தலையும் உடைய ஒள்ளிய தொடியை அணிந்தோளுடைய கணவனே.

51. நின் வாழ்நாட்கள் மாதத்தைப்போன்றனவாகுக.

51 - 2. மாதங்கள் ஆண்டைப்போன்று ஒரு தன்மையவாக.

52 - 3. ஆண்டுகள் ஊழிபோன்றனவாகுக.

53 - 4. “ஊழியோர் பகலா யோதும் யாண்டெலா முலக மேழும், ஏழும்வீ வுற்ற ஞான்று மின்றென விருத்தி யென்றாள்” (கம்ப. உருக் காட்டு. 72) ; ஐங்குறு. 281 : 1.

53 - 5. ஊழிகள் வெள்ளமென்னும் பேரெண்ணின் எல்லையை யுடையனவாகுக என நினைத்து, யான் நின்னைக் காண்பேன் வந்தேன்.

57. இறைகிழவோய் : பதிற். 54 : 17.

55 - 7. போர்க்களத்தில் மேற்பட்டு, இடியைப்போல முழங்கும் முரசினையும், பெரிய நல்ல யானைகளையும் உடைய இறையாதற்றன்மை யை யுடையோய்.

(பி - ம்.) 27. திணிதோள். 28. இலங்குநீர்ப். 29. மயங்கிய. 34. வான்று புனைந்தன்ன. 37. காழ்மூழ்கப். (௧௦)

---

இதன்பதிகத்து விச்சி (4) என்பான் ஒரு குறுநிலமன்னன். வஞ்சி மூதூர்த் தந்து (9) என்றது அவர்களை வென்றுகொண்ட பொருள்களை ; பசுவும் எருமையும் ஆடுமென்பாரும் உளர்.

11 - 2. அமைச்சியல் மையூர்கிழானைப் புரோசுமயக்கி என்றது தன் மந்திரியாகிய மையூர்கிழானைப் புரோகிதனிலும் அறநெறி அறிவானாகப் பண்ணி யென்றவாறு.

## (பதிகம்)

குட்டுவ னிரும்பொறைக்கு மையூர் கிழாஅன்
வேண்மா ளந்துவஞ் செள்ளை யீன்றமகன்
வெருவரு தானையொடு வெய்துறச் செய்துசென்
றிருபெரு வேந்தரும் விச்சியும் வீழ
அருமிளைக் கல்லகத் தைந்தெயி லெறிந்து
பொத்தி யாண்ட பெருஞ்சோ ழனையும்
வித்தை யாண்ட விளம் பழையன் மாறனையும்
வைத்த வஞ்சினம் வாய்ப்ப வென்று
வஞ்சி மூதூர்த் தந்துபிறர்க் குதவி
மந்திர மரபிற் றெய்வம் பேணி

மெய்யூ ரமைச்சியன் மையூர் கிழானைப்
புரையறு வேள்விப் புரோசு மயக்கி
அருந்திறன் மரபிற் பெருஞ்சதுக் கமர்ந்த
வெந்திறற் பூதரைத் தந்திவ ணிறீஇ
ஆய்ந்த மரபிற் சாந்தி வேட்டு
மன்னுயிர் காத்த மறுவில் செங்கோல்
இன்னிசை முரசி **னிளஞ்சேர லிரும்பொறையைப்**
**பெருங்குன்றூர்கிழார்** பாடினார் பத்துப்பாட்டு.

அவைதாம் : நிழல்விடு கட்டி, வினை நவில் யானை, பஃறோற்றொழுதி, தொழினவில்யானை, நாடுகாணெடுவரை, வெந்திறற்றடக்கை, வெண்டலைச் செம்புனல், கல்கால்கவணை, துவராக்கூந்தல், வலிகெழு தடக்கை ; இவை பாட்டின் பதிகம்.

பாடிப் பெற்ற பரிசில் : * மருளில் லார்க்கு † மருளக் கொடுக்க வென்று உவகையின் முப்பத்தீராயிரம் காணங்கொடுத்து அவர் அறியாமை ஊரும் மனையும் வளமிகப் படைத்து ஏரும் இன்பமும் இயல்வரப் பரப்பி எண்ணற்கு ஆகா ‡ அருங்கல வெறுக்கையொடு பன்னூறாயிரம் பாற்பட வகுத்துக் § காப்புமறம் தான்விட்டான் அக்கோ $.

குடக்கோ இளஞ்சேரலிரும்பொறை பதினாறாண்டு வீற்றிருந்தான்.

**(கு - ரை.)** 3. பகைவர் அஞ்சுதல் வருகின்ற சேனையோடு கொடுமை யுறச்செய்து புறப்பட்டு.

4. சோழனும் பாண்டியனுமாகிய இரண்டு பெரிய அரசரோடு விச்சி என்னும் குறுநில மன்னன் இறக்கும்படி ; விச்சி - ஒருமலை ; அதனையுடைய தலைவனுக்கு ஆயிற்று ; “ வில்கெழு தானை விச்சியர் பெருமகன், வேந்தரொடு பொருத ஞான்றை ” (**குறுந்.** 328 : 5 - 6) என்பதிற் குறிக்கப்பட்டது இப்போர்போலும். விச்சி : “ விளங்குமணிக் கொடும்பூண் விச்சிக்கோவே ” (**புறநா.** 200 : 8.) 5. பகைவர் புகுதற்கு அரிய காவற்காட்டையுடைய மலையிடத்தமைந்த ஐந்து மதில்களை அழித்து.

6. பொத்தி என்னும் புலவரை ஆண்ட கோப்பெருஞ் சோழனையும் ; “ கோழியோனே கோப்பெருஞ் சோழன், பொத்தினண்பிற் பொத்தியொடு கெழீஇ, வாயார் பெருநகை வைகலு நக்கே ” (**புறநா.** 212 : 8 - 10.)

7. வித்தையென்னும் புலவரை ஆண்ட இளம்பழையன் மாறனையும்; வித்தை : ஒரு புலவரது பெயர்போலும் ; கல்வியுமாம்.

8. தான்கூறிய சபதம் நிறைவேறும்படி வென்று ; வைத்த வஞ்சின மென்பது, “ இன்னது பிழைப்பினிதுவா கியரெனத், துன்னருஞ் சிறப்பின் வஞ்சினம் ” (**தொல்.** புறத். 24) என்பதனாலும், ‘ தான் செய்யக்கருதியது

---

* மருள் - மயக்கம். † மருள - ஆச்சரியமடையும்படி. ‡ அருங்கல வெறுக்கை - அரிய ஆபரணமாகிய செல்வம்.

§ காப்புப்புறமென்றிருப்பிற் சிறக்கும். புறம் - கொடை ; ‘ சிறுபுற மென்றது சிறுகொடையை ’ (7-ஆம் பதிகம் உரை.) காப்புப்புறம் - காத்தற் குரிய கொடை. $ கண்ணபிரான் குசேலருக்குச் செய்த உதவி இங்கே நினைவிற்கு வருகின்றது.

பொய்த்துத் தனக்கு வருங் குற்றத்தால் உயிர் முதலியன துறப்பனென்றல்' என்னும் அதன் உரையாலும் அறியப்படும்.

9. வஞ்சியென்னும் பெயரையுடைய பழமையான ஊரிலே அவர்களை வென்று கைக்கொண்ட பொருள்களைக் கொண்டுவந்து அவற்றைப் பிறர்க்குக்கொடுத்து. 10. மந்திரங்களால் வழிபட வேண்டிய முறைப்படியே தெய்வங்களை வழிபட்டு.

11. மெய்ம்மை பரவிய அமைச்சர்க்குரிய இயல்புகளையுடைய மையூர் கிழானென்னும் அமைச்சனை. கிழானென்பதனல் இவர் வேளாளரென்பது அறியப்படும்.

12. குற்றம் நீங்கிய கேள்விச் செல்வத்தையுடைய தன் புரோகிதனைக் காட்டிலும் அறநெறியை அறிபவனுகச் செய்து. புரோசு மயக்கி: பதிற். 7-ஆம் பதிகம்.

13 - 4. அரிய திறலையுடைய இயல்பினைப்பெற்ற பெரிய நாற்சந்தியில் விரும்பி இருக்கும் கொடிய திறலையுடைய பூதங்களை இவ்வுலகத்தே கொண்டுவந்து நிறுத்தி. சதுக்கமர்ந்த பூதமென்றது அமராபதியிலுள்ள பூதங்களை. சதுக்கு - சதுக்கம்; நாற்சந்தி.

15. நூல்களில் ஆராயப்பட்ட இயல்பினையுடைய களவேள்வியாற் சாந்தியைச் செய்து. சாந்தி வேட்டு: 'களவேள்வியாற் சாந்திசெய்து விழவெடுத்தலானே' (சிலப். உரைபெறுகட்டுரை: அடியார்.)

14 - 5. "சதுக்கப் பூதரை வஞ்சியுட் டந்து, மதுக்கொள் வேள்வி வேட்டோ னாயினும்" (சிலப். 28 : 147 - 8.)

16 - 7. நிலைபெற்ற உயிர்களைக் காப்பாற்றிய குற்றம் இல்லாத செங்கோலையும், இனிய ஓசையையுடைய முரசினையும் உடைய இளஞ்சேரலிரும்பொறையை.

(பி - ம்.) 1. வம்மையூர்கிழான், மேயூர்கிழான்.

ஒன்பதாம் பத்து முற்றிற்று.

## பதிற்றுப்பத்தில் விட்டுப்போன *பகுதிகள் சில.

(க) இருங்கண் யானையொ டருங்கலந் துறுத்துப்
பணிந்துவழி மொழித லல்லது பகைவர்
வணங்கா ராதல் யாவதோ மற்றே
உருமுடன்று சிலைத்தலின் விசும்பதிர்ந் தாங்குக்
கண்ணதிர்பு முழங்குங் கடுங்குரன் முரசமொடு
கால்கிளர்ந் தன்ன வூர்திக் கான்முளை
எரிநிகழ்ந் தன்ன நிறையருஞ் சீற்றத்து
நளியிரும் பரப்பின் மாக்கடன் முன்னி
நீர்துணைந் தன்ன செலவின்
நிலந்திரைப் பன்ன தானையோய் நினக்கே.

[புறத்திரட்டு, பகைவயிற்சேறல், 8 ; தொல். புறத். 6, இளம். 8 ; ந. மேற். அடி, க : சீவக. 339, ந. மேற்.]

(உ) இலங்கு தொடி மருப்பிற்கடாஅம் வார்ந்து
நிலம்புடையூ வெழுதரும் வலம்படு குஞ்சரம்
எரியவிழ்ந் தன்ன விரியுளை சூட்டிக்
கால்கிளர்ந் தன்ன கடுஞ்செல லிவுளி
கோன்முனைக் கொடியினம் விரவா வல்லோ
டூன்வினை கடுக்குந் தோன்றல பெரிதெழுந்
தருவியி னொலிக்கும் வரிபுனை நெடுந்தேர்
கண்வேட் டனவே முரசங் கண்ணுற்றுக்
கதித்தெழு மாதிரங் கல்லென வொலிப்பக்
கறங்கிசை வயிரொடு வலம்புரி யார்ப்ப
நெடுமதி னிரைஞாயிற்
கடிமிளைக் குண்டுகிடங்கின்
மீப்புடை யாரரண் காப்புடைத் தேஎம்
நெஞ்சுபுக லழிந்து நிலைதளர் பொரீஇ
ஒல்லா மன்னர் நடுங்க
நல்ல மன்றவிவண் வீங்கிய செலவே.

[தொல். புறத். 12, 25, ந. மேற்.]

* முதற்பத்தையோ பத்தாம் பத்தையோ சார்ந்த இவை தொல்காப்பிய உரைகளாலும் புறத்திரட்டாலும் தெரிய வந்தனவாகும்.

(ங) பேணுதகு சிறப்பிற் பெண்ணியல் பாயினும்
என்னொடு புரையுந ளல்லள்
தன்னொடு புரையுநர்த் தானறி குநளே.

[தொல். கற்பு. 39, ந. மேற்.]

(ச) வந்தனென் பெரும கண்டனென் செலற்கே
களிறு கலிமான் றேரொடு சுரந்து
நன்கல னீயு நகைசா லிருக்கை
மாரி யென்னாய் பனியென மடியாய்
பகைவெம் மையி னசையா வூக்கலை
வேறுபுலத் திறுத்த விறல்வெந் தானையொடு
மாறா மைந்தர் மாறுநிலை தேய
மைந்துமலி யூக்கத்த கந்துகால் கீழ்ந்து
கடாஅ யானை முழங்கும்
இடாஅ வேணிநின் பாசறை யானே.

[புறத்திரட்டு, பாசறை. 8.]

(ரு) 'விசயந் தப்பிய' என்னும் பதிற்றுப்பத்து ஈகை கூறிற்று [தொல். புறத். 20, ந. மேற்.]

# செய்யுள் முதற்குறிப்பகராதி

[எண் - செய்யுளின் எண்]

# *அரும்பத முதலியவற்றின் அகராதி

[எண் - செய்யுளின் எண்]



* பதிற்றுப்பத்தின் மூலம், பழையவுரை முதலியவற்றிலுள்ள அரும் பதங்களும் அருந்தொடர்கள் முதலியனவும் இதிற் காணப்படும்.

